# சங்க இலக்கியத்தில் ஆடவரின் மன உணர்வு ஓட்டங்கள்

முனைவர் பட்டப்பேற்றிற்காகச்
சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு
அளிக்கப்பெற்ற ஆய்வேடு


ஆய்வாளர்
**தே. தேன்மொழி**, எம்.ஏ., எம்.ஃபில்.,

நெறியாளர்
முனைவர் (திருமதி) **அ. இராசேசுவரி**,
எம்.ஏ., எம்.ஃபில்., எம்.எட்., பிஎச்.டி.,






**தமிழ்த்துறை**
இராணி மேரி கல்லூரி,
சென்னை – 600 004.


**டிசம்பர் - 2013**

**முனைவர் அ. இராசேசுவரி**
இணைப்பேராசிரியர் & நெறியாளர்
தமிழ்த்துறை
இராணிமேரி கல்லூரி,
சென்னை – 600 004.

# நெறியாளர் சான்றிதழ்

**சங்க இலக்கியத்தில் ஆடவரின் மன உணர்வு ஓட்டங்கள்** என்னும் தலைப்பிலான இவ்வாய்வேடு இராணிமேரி கல்லூரி தமிழ்த்துறையில் முனைவர் பட்டப்பேற்றிற்காக முழுநேர ஆய்வாளர் **தே. தேன்மொழி** அவர்கள் 2009–2013ஆம் கல்வியாண்டில் ஆய்வு நிகழ்த்தி வழங்கியதாகும். இவ்வாய்வேடு இதற்கு முன் வேறு ஆய்வுப்பட்டத்திற்கோ, ஆய்வரங்கிற்கோ அனுப்பப்பெறவில்லை என்றும் இந்த ஆய்வு அவர்தம் சொந்த முயற்சியால் உருவானது என்றும் சான்றளிக்கின்றேன்.

ஒ/- இரா...

இடம்: சென்னை
நாள்: 19-12-2013

(அ. இராசேசுவரி)
நெறியாளர்

DR. (Mrs.) A. RAJESWARI
M.A., M.Phil., M.Ed., Ph.D
Associate Professor
Department of Tamil
Queen Mary's College (Autonomous)
Mylapore, Chennai-600 004

## இயல் ஒன்று



# எட்டுத்தொகையில் ஆடவர்

அ. நூற்குறிப்பும் சிறப்பும்

ஆ. சங்க காலச் சமுதாய அமைப்பு

இ. ஆடவர் பொருள் விளக்கமும் பரிமாணங்களும்



### இயல் ஒன்று

# எட்டுத்தொகையில் ஆடவர்

சங்க இலக்கிய நூல்களான பத்துப்பாட்டும் எட்டுத்தொகையும் கடைச்சங்க நூல்கள் ஆகும். எட்டு நூல்கள் கொண்ட ஒரு தொகுப்புக்கு எட்டுத்தொகையென்று பெயர். 'எட்டுத்தொகையில் ஆடவர்' என்ற இயலில் முதன்மையாக எட்டுத் தொகை நூல்களின் குறிப்பு, அமைப்பு, சிறப்பு குறித்து விளக்கப்படுகிறது. மேலும் திணை – பொருள் விளக்கம், திணைப்பாடல்கள், திணை மாந்தர்கள், ஆடவர் – பொருள் விளக்கம், மற்றும் எட்டுத் தொகை காட்டும் ஆடவரின் பல்வேறு பரிமாணங்கள் குறித்தும் ஆராயப்படுகிறது.

### அ. நூற்குறிப்பும் சிறப்பும்

எட்டுத்தொகை நூல்களாவன நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல், கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்பவையாகும்.

இதனை,

> **"நற்றிணை நல்லகுறுந்தொகை ஐங்குறுநூறு**
> **ஒத்த பதிற்றுப்பத்து ஓங்கு பரிபாடல்**
> **கற்றறிந்தார் ஏத்தும் கலியோடு அகம்புறமென்று**
> **இத்திறத்த எட்டுத் தொகை"**

என்ற பழைய வெண்பா மூலம் அறியலாம்.

எட்டுத் தொகை நூல்கள் அகப்பொருட் செய்திகளைப் பற்றியும் புறட்பொருட் செய்திகளைப் பற்றியும் கூறுகின்றன. நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, அகநானூறு, கலித்தொகை ஆகிய ஐந்து நூல்களும் அகப்பொருள் பற்றியவை. பதிற்றுப்பத்து, புறநானூறு இரண்டும் புறப்பொருள் பற்றியவை. பரிபாடல் அகமும் புறமும் பற்றியது.

அகப்பொருளைப் பற்றிக்கூறும் நூல்களில் பண்டைத் தமிழ் மக்களின் மணவாழ்வு, சமுதாய வாழ்வு அவர்களின் நம்பிக்கை, பழக்க வழக்கங்கள் பற்றி அறிய முடிகிறது.

புறப்பொருளைப் பற்றிக் கூறும் நூல்களில் பண்டைத் தமிழர்களின் அரசாட்சி, நீதிமுறை, போர்ச் செய்திகள், வாணிகம், தொழில்கள், கலைகள் போன்ற செய்திகளைக் காணமுடிகிறது.

**நற்றிணை**

நல்+திணை= நற்றிணை ஆகும். திணை என்பது ஒழுக்கம். நல்ல ஒழுக்கத்தினை நாடி உரைக்கும் நல்லதிணை நற்றிணையாகிறது. எட்டுத் தொகை நூல்களில் முதலாவதாக இடம் பெற்றிருப்பது நற்றிணையாகும். நற்றிணை ஒருவரால் பாடப்பட்டதன்று. பலரால் பாடப்பட்ட பாடல்களின் தொகுப்பாகும். குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதம் ஆகிய ஐந்திணை ஒழுக்கங்களைப் பற்றி நானூறு பாடல்கள் உள்ளன. பாரதம் பாடிய பெருந்தேவனார் பாடிய கடவுள் வாழ்த்துப் பாடல் ஒன்று. ஆசிரியர் பெயர் தெரியாத பாடல்கள் ஐம்பத்தொன்று. 175 புலவர்களின் பாடல்கள் இந்நூலில் அடங்கியுள்ளன.

நற்றிணைப் பாடல்கள் ஒன்பது அடி முதல் பன்னிரண்டு அடிகள் வரை பாடப்பட்டுள்ளது. இந்நானூறு பாடல்களையும் ஒன்றாகத் தொகுத்தவர் 'பன்னாடு தந்த மாறன் வழுதி' என்னும் பாண்டிய மன்னன் ஆவார்.

நற்றிணையில், ஐவகை நிலங்களில் வாழ்ந்த தமிழ் மக்களின் சிறந்த ஒழுக்கங்கள், தமிழர்களின் சிறந்த பண்பாடு, தமிழ்ப் பெண்களின் கற்பொழுக்கம், ஆண்களின் அசையாத அன்பு, தமிழர்களின் சிறந்த குடும்ப வாழ்க்கை, தமிழ்ப்புலவர்களின் சிறந்த இயற்கையான கற்பனை, கவியின்பம் இவற்றை மிகுதியாகக் காணலாம்.

எல்லா உயிர்களிடமும் இரக்கங்காட்டுவது பண்டைத் தமிழர்களின் குணம். காரணமில்லாமல் எவ்வுயிர்க்கும் இன்னலிழைக்க மாட்டார்கள். இந்த உண்மையை,

**"புணரி பொருத பூமணல் அடைகரை**
**ஆழி மருங்கின் அலவன் ஓம்பி**
**வலவன் வார்பு ஆய்ந்து ஊர**
**நிலவு விரிந்தன்றால் கானலானே"** (நற். ப. 15)

என்ற பாடலில் தலைவன், நண்டுகள் மேயும் கடற்கரையின் வழியே தேரில் வந்து கொண்டிருக்கும் போது, தேர்ப்பாகனிடம் அந்நண்டுகள் தேர்ச் சக்கரத்தில் அகப்பட்டு நசுங்காதபடி தேரினைச் செலுத்தச் சொல்கிறான். இந்நிகழ்வு தலைவனின் உயிரிரக்க உணர்வை வெளிப்படுத்தும் வகையில் உள்ளதை அறியலாம். இந்த உயிரிரக்க உணர்வை சிறந்த அழியாத செல்வமாகக் காட்டும் நற்றிணை,

**"நெடிய மொழிதலும், கடிய ஊர்தலும்**
**செல்வம் அன்று: தம்செய் வினைப் பயனே**
**சான்றோர் செல்வம் என்பது: சேர்ந்தோர்**
**புன்கண் அஞ்சும் பண்பின்**
**மென்கண் செல்வம் என்பதுவே"** (நற். 210, ப. 284)

என்ற இப்பாடலடிகள் புலப்படுத்துகிறது. விருந்தோம்பல் என்னும் தமிழர் பண்பினைக் காட்டும் கண்ணாடியாக நற்றிணை விளங்குகின்றது. விருந்தினரைக் கண்டால் முகமலர்ந்து வரவேற்கும் தன்மையினை,

**"எமக்கே வருகதில் விருந்தே: சிவப்பு ஆன்று**
**சிறிய முள் எயிறு தோன்ற**
**முறுவல் கொண்ட முகம் காண்கம்மே"** (நற். 120 ப. 157)

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம். பழமையான நட்பு கொண்டவர்கள் நஞ்சினைக் கொடுத்தாலும் அதனை உண்ணும் நாகரிக உணர்வைப் பெற்றவர்களாக வாழ்ந்தனர். இதனை,

**"முந்தை யிருந்து நட்டோர் கொடுப்பின்**
**நஞ்சும் உண்பர் நனி நாகரிகர்"** (நற். 355, ப. 474)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இத்தகைய பாடல்கள் மூலம் நற்றிணையில் இடம்பெற்றுள்ள ஆடவர், கடமையில் சிறந்தும், குடும்பப் பொறுப்புணர்ச்சியுடனும், நாடுகாக்கும் மாண்பும், கடமை தவறாத உணர்வும் கொண்டவராக விளங்கியதை அறியலாம். இயற்கை நிகழ்வுகள் மனிதனின் எண்ணங்களைத் தூண்டிப் புத்துணர்வு பெறச் செய்கின்றன. இத்தகைய புத்துணர்வு ஆடவர் மனதிற்குள் உள்ள தனிப்பட்ட குணங்கள், நாட்டுப்பற்று, சமுதாயக் கடமைகள் அனைத்திலும் முன்னின்று அவரை வழிநடத்தியதை நற்றிணை முழுவதிலும் காணமுடிகின்றது.

**குறுந்தொகை**

குறுகிய பாடல்களின் தொகுப்பு குறுந்தொகை. நாலடி முதல் எட்டடி வரையுள்ள பாடல்கள் இந்நூலில் தொகுக்கப்பட்டுள்ளன. 402 பாடல்களைக் கொண்டது. கடவுள் வாழ்த்துப் பாடல் ஒன்றும் உள்ளது. குறுந்தொகைப் பாடல்கள் இருநூற்றைந்து புலவர்களால் பாடப்பட்டவை. ஆசிரியர் பெயர் காணாதப் பாடல்கள் பத்து. இத்தொகை நூலைத் தொகுப்பித்தவர் பூரிக்கோ ஆவார்.

இந்நூல் அகப்பொருளைப் பற்றிக் கூறுவதாகும். குறிஞ்சி, முல்லை, பாலை, நெய்தல், மருதம் என்னும் ஐந்திணையொழுக்கம் பற்றிய பாடல்கள் தொகுக்கப்பட்டுள்ளன.

அகப்பொருள் பற்றிக் கூறும் நூல்கள் அனைத்தும் இல்லறத்தைப் போற்றும் பண்புடையவை. இத்தகைய இல்லற வாழ்வைத் திறமையுடன் நடத்த வேண்டிய முறைப்படி நடத்தினால் அதைவிட இனிய வாழ்வு வேறில்லை என்பதனை,

**"மனையுறை வாழ்க்கை வல்லியாங்கு மருவின்**
**இனியவும் உளவோ!"** (குறுந். 322, ப. 382)

என்ற குறுந்தொகைப் பாடலடிகள் உணர்த்துகின்றன. இல்லறம் சிறப்பாக நடைபெற வேண்டுமானால் தலைவனும் தலைவியும் கருத்தொருமித்துத் தங்கள் கடமையை உணர்ந்து செயல்படவேண்டும் என்பதை,

**“வினையே ஆடவர்க்கு உயிரே: வாணுதல்**
**மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்”** (குறுந். 135, ப. 176)

என்ற பாடலடிகள் தொழில் செய்து பொருளீட்டும் ஆடவர்க்குத் தம் வினையே உயிர். அவ்வுயிர்க்கு உரமூட்டுபவளாகத் தலைவி திகழ்கிறாள். இல்லத்திலிருந்து கடமையைச் செய்யும் தலைவிக்குத் தலைவனே உயிராகக் கருதப்படுகிறான். இதனை உணர்ந்து செயல்படும்போது இல்லறம் சிறக்கிறது என்ற அரிய கருத்தை உணரலாம்.

குறுந்தொகைப் பாடலொன்று காதலரின் நெஞ்சம் இணையும் நிலையினை அழகுறக் காட்டுகிறது.

**“செம்புலப் பெயல் நீர்போல**
**அன்புடை நெஞ்சம் தாம் கலந்தனவே”** (குறுந். 40, ப. 70)

என்ற பாடல் அடிகள் செம்மையான நிலத்தில் பெய்த மழைநீரும் செம்மை நிறமும் கலந்து பிரிக்கமுடியாமல் இருப்பதைப் போல தலைவனும் தலைவியும் ஒன்றாக இணைந்த நெஞ்சத்துடன் ஒத்த உணர்வுடன் காணப்பட்டனர் என்பதை விளக்குகின்றது. பொருளீட்டச் சென்ற தலைவன் தன் காரியத்தில் வெற்றி பெற்று வந்தபின் தன் மனைவியுடன் கூடி மகிழ்ந்ததை,

**“செய்வினை முடித்த செம்மல் உள்ளமொடு**
**இவளின் மேவல மாகிக், குவளைக்**
**குறுந்தாள் நாள் மலர் நாறும்**
**நறுமென் கூந்தல் மெல் அணையேமே”** (குறுந். 270, ப. 320)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

பொருளில்லாத வறியவன் இன்பத்தை அடைய ஆசைப்பட்டதைப் போல, பிறருக்குக் கொடுத்து மகிழும் இன்பமும், தாமே அனுபவித்து மகிழும் இன்பமும் செல்வமற்றவர்களுக்கு இல்லை என்பதை,

**“இல்லோன் இன்பம் காமுற்றா அங்கு**
**அரிது வேட்டனையால் நெஞ்சே”** (குறுந். 120, ப. 160)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. அகவாழ்க்கை மற்றும் நீக்கமற நிற்கும் புறவாழ்க்கையில் ஆடவரின் மன உணர்வுகள் அவர்தம் மனையறம் சிறக்கவும், மாநிலம் தழைக்கவும் துணைபுரியும் வகையில் அமைந்துள்ளமை இந்நூல் முழுவதும் விரவி நிற்கின்றது.

**ஐங்குறுநூறு**

ஐங்குறுநூறு தன்னுடைய பெயருக்கேற்ப ஐந்நூறு பாடல்களும் சிதையாமல், அழியாமல் கிடைத்துள்ளன. கடவுள் வாழ்த்துப் பாடல் ஒன்றும் உள்ளது. இந்நூல் நூறு நூறு பாடல்களாக ஐந்து பகுதிகளைக் கொண்டது. மூன்றடி முதல் ஆறடி வரை குறுகிய பாடல்களைக் கொண்டது. இந்நூலின் ஐந்து பகுதிகளும் தனித்தனியே ஐந்து புலவர்களால் பாடப்பட்டவை. முதல் நூறு மருதத்திணை, இரண்டாவது நூறு நெய்தல் திணை, மூன்றாவது நூறு குறிஞ்சித்திணை, நான்காவது நூறு பாலைத் திணை, ஐந்தாவது நூறு முல்லைத்திணையைப் பற்றி மொழிவதாகும். ஒவ்வொரு நூறும் பத்துப்பத்துப் பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளன.

இந்நூலைத் தொகுத்தவர் புலத்துறை முற்றிய கூடலூர் கிழார் ஆவார். தொகுப்பித்தவன் "யானைக் கட்சேய் மாந்தரஞ்சேரல் இரும்பொறை" என்னும் சேர மன்னன் ஆவான். இந்நூல் அகப்பொருட் செய்திகளைக் கூறுகின்றது.

பொருள் காரணமாக, சொல் காரணமாக ஒன்றிற்கொன்று தொடர்பு உடையனவாகப் புனையப்படும் செய்யுள் தொடர்நிலைச் செய்யுள் ஆகும். ஐங்குறுநூறும், கலித்தொகையும் தொடர்நிலைச் செய்யுள் வகையைச் சார்ந்த நூல்கள் என்று சான்றோர் குறிப்பிடுவர்.

ஐங்குறுநூற்றுச் செய்யுள்கள் அனைத்தும் அம்மை, அழகு எனும் வனப்புகளைக் கொண்டு புனையப்பட்ட செய்யுள்கள் என்பர். மூன்று முதல் ஆறு அடிகள் வரை அமைந்துள்ள பாக்களில் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் மூன்றினையும் தன்னகத்தே கொண்ட இலக்கிய நயத்தினை நயம்பட புலப்படுத்தியுள்ள செய்யுள்கள் ஐங்குறுநூற்றின் தனிச்சிறப்பை விளக்குவதாகும்.

நீர்வளமும் நிலவளமும் உள்ள இடத்தில் தான், நாகரிகம் வளர்ச்சியடையும். ஒவ்வொரு குடும்பமும் வறுமையின்றி உணவுப் பொருள்களும் ஏனைய செல்வங்களும் பெற்று இல்லற தர்மம் செய்து இன்புற்று வாழ வேண்டும் என்பது தமிழரின் கொள்கை. இக்கொள்கையை,

**"நெற்பல பொலிக; பொன்பெரிது சிறக்க"** (ஐங். 1, ப. 12)
**"விளைக வயலே; வருக இரவலர்"** (ஐங். 2, ப. 13)
**"பால்பல ஊறுக; பகடுபல சிறக்க'** (ஐங். 3, ப. 14)
**"பசியில் லாகுக; பிணிசேண் நீங்க"** (ஐங். 5, ப. 17)
**"மாரி வாய்க்க; வளம்பல சிறக்க"** (ஐங். 10, ப. 22)

என்ற ஐங்குறுநூற்றுப் பாடலடிகள் உணர்த்துகின்றன. ஆண்கள், பரத்தையர் வீடுகளுக்குப் போகும் குணமுடையவர்களாயிருந்தாலும் இல்லாள் அவனை ஏற்கும் அன்புடையவளாக இருந்துள்ளாள் என்பதை,

**"...... ........ யான் இன்று**
**அறன் இலாளன் கண்ட பொழுதில்**
**சினவுவென் தகைக்குவென் சென்றெனென்;**
**பின்நினைந்து இரங்கிப் பெயர் தந்தனனே"** (ஐங். 118, ப. 155)

என்ற பாடலடிகள் மூலம் தலைவியின் கூற்றிலிருந்து அறிய இயலுகிறது.

**பதிற்றுப்பத்து**

பத்துப்பத்து பாடல்கள் அடங்கிய நூல்களின் தொகுதியைப் பதிற்றுப்பத்து என்பர். இது நூறு பாடல்களைக் கொண்டது. இந்நூலின் முதல் பத்தும் இறுதிப் பத்தும் இல்லை. இரண்டாம் பத்து முதல் ஒன்பதாம் பத்து வரையுள்ள எண்பது பாடல்களைக் கொண்டது இந்நூல். ஒவ்வொரு பத்தும் ஒவ்வொரு சேரமன்னனைப் பற்றிப் பாடப்பட்டது. இந்த எண்பது பாடல்களும் எட்டு புலவர்களால் பாடப்பட்டவை.

ஒவ்வொரு பத்தின் இறுதியிலும் பத்துப் பாடல்களின் தலைவனாகிய சேரமன்னனின் பெருமையும் வரலாறும் பதிகத்தின் வாயிலாகத் தொகுத்துச் சொல்லப்பட்டிருக்கின்றது. இது புறப்பொருள் பற்றிய நூல். சேர மன்னர்களின் வீரம், பெருமை, கொடை, அரசியல், நேர்மை போன்றவை இந்நூலில் பாடப்பட்டுள்ளன.

பதிற்றுப்பத்து காட்டும் செய்திகளைக் கொண்டு பழந்தமிழ் நாட்டின் வரலாற்றை அறிய முடிகிறது. பொதுவாகச் சேரநாடு நிலவளமும் நீர்வளமும் பெற்ற நாடாக இருந்தது. அந்நாட்டில் நெய்தல், குறிஞ்சி, முல்லை, மருதம் ஆகிய நான்கு நிலத்துப் பொருள்களும் ஒருங்கே விளைந்து மலிந்திருந்த செய்தியை அறிய முடிகிறது. இதனை,

**"கடலவுங் கல்லவும் யாற்றவும் பிறவும்**
**வளம்பல நிகழ்தரு நனந்தலை நன்னாட்டு"** (பதிற்று. 15:16-17, ப. 36)

என்ற பாடல் அடிகள் மூலம் அறியலாம். அந்நாட்டு மக்கள் பிறர்க்குரிய பொருளை விழையாதவர்களாகவும், குற்றமில்லாத அறிவுடையவர்களாகவும், செந்நெறியினின்றும் பிறழாதவர்களாகவும், அன்பு நெறியைக் கடைபிடிப்பவர்களாகவும் விளங்கினர் என்பதை இப்பாடல் உணர்த்துகின்றது.

தமக்கு கிடைத்த பொருளைப் பலரொடும் பகுத்துண்ணும் பண்பாளராகவும் கூறப்பட்டுள்ளனர். பணியாற்றாமல் வீணே மூத்துப் போன யாக்கையினையும் நோயினையும் பெறாதவர்களாகக் காணப்படுகின்றனர்.

இரண்டாம் பத்தில் இமயவரம்பன் நெடுஞ்சேரலாதன் பெருமை பாடப்பெற்றுள்ளது. இமயமலை வரை படையொடு சென்று, வென்று அதில் தனது வில் இலச்சினையைப் பொறித்தமை, எதிர்த்த ஆரிய அரசை வென்று அடிமைப்படுத்தியமை, அவர்களிடமிருந்து அணிகள் வைரங்களைத் தண்டமாகப் பெற்று பிறர்க்கு வழங்கியமை, பகைவருடன்

போரிட்டு அவர்தம் காவல் மரமான கடம்பினை வெட்டி தனக்கு முரசு செய்து கொண்டமை போன்றவற்றைப் பற்றி அறியலாம். பல்யானைச் செங்குட்டுவன் அந்தணரிடம் அன்புடையவன், அவர்களுக்கு வேண்டுவன கொடுத்து அவர்சொற்படி நடந்து வேத ஒழுக்கங்களைக் கடைபிடித்து வாழ்ந்தவன். இதனை,

**"ஓதல் வேட்டல், அவை பிறர்ச் செய்தல்,**
**ஈதல், ஏற்றல் என்று ஆறுபுரிந்து ஒழுகும்**
**அறம்புரி அந்தணர்வழி மொழிந்து ஒழுகி"** (பதிற்று. 24:6-9, ப. 74)

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம். கடல் பிறக்கோட்டிய செங்குட்டுவன் ஒப்பற்ற வீரனாய் தன்னை எதிர்த்த மன்னர்களின் நாடுகளையெல்லாம் அழித்த உண்மையை,

**"பௌவம் கலங்க வேலிட்டு**
**உடைதிரைப் பரப்பின் படுகடல் ஓட்டிய**
**வெல்புகழ்க் குட்டுவன்"** (பதிற்று. 46:11-14 ப. 157)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. ஆடுகோட்பாட்டுச் சேரலாதன், இரவலர்கள் தன்னைத் தேடி வராவிட்டாலும் அவர்களைத் தேடிச் சென்று, உள்ளன்பு நிறைந்த சொற்கள் கூறி இன்சுவை உணவளித்து ஈகையுணர்வுடன் திகழ்ந்ததை,

**"வாரார் ஆயினும், இரவலர் வேண்டித்**
**தேரில் தந்து, அவர்க்கு ஆர்பதன் நல்கும்**
**நசைசால் வாய்மொழி இசைசால் தோன்றல்"** (பதிற்று. 55:10-12, ப. 193)

என்ற பாடலடிகள் மூலம், அறியலாம். இது போன்று சேர மன்னர்களின் வீரம், கொடை, சிறந்த குணம் போன்றவற்றை வெளிப்படுத்தும் வண்ணம் பதிற்றுப்பத்துப் பாடல்கள் சிறப்பு பெற்றுள்ளன.

**"நிலம் திறம் பெயரும் காலை யாயினும்**
**கிளந்த சொல் நீ பொய்ப்பு அறியலையே"** (பதிற்று. 63:6-7, ப. 219)

என்ற பாடலடிகள் சேர மன்னர்கள் தனது வலிமை குன்றும் காலத்தில் கூட சொல்லிய சொல்லுக்கு மாறாக நடக்கும் பொய்யொழுக்கம் மேற்கொள்ளாதவராய் வாழ்ந்தனர் என்பதை விளக்குகின்றது.

பதிற்றுப்பத்தின் பாடல்கள் சேரமன்னர்களின் வாழ்வு, வீரம், கொடை, அரசியல், நேர்மை போன்றவற்றை வெளிப்படுத்துகின்றன. பண்டைத் தமிழரின் கொள்கை, நாகரிகம் போன்றவற்றில் வெளிப்படும் ஆடவரின் உணர்வுகள், இரக்க உணர்வு, உறவினரைக் காக்கும் பண்பு, சிறந்த ஒழுக்கமாகிய அறஉணர்வு போன்றவை பதிற்றுப்பத்தில் பரக்கக் காணப்படுகின்றன. சிறந்த பக்தி, நாடு காக்கும் உணர்வு, போர் புரியும் வீர உணர்வு போன்ற பல்வேறு உணர்வுகள் கொண்ட சேர மன்னர்களின் தன்னலமற்ற வாழ்வினைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாகப் பதிற்றுப்பத்துப் பாடல்கள் விளங்குகின்றன.

**பரிபாடல்**

ஆசிரியப்பா, வஞ்சிப்பா, வெண்பா, கலிப்பா ஆகிய நால்வகைப் பாடல்களும் கலந்த ஒருவகைப் பாடலே பரிபாடல் ஆகும். இருபத்தைந்து அடிகள் முதல் நானூறு அடிகள் வரை இப்பாடல்கள் பாடப்பட்டுள்ளன. பரிபாடலில் அகப்புறச் செய்திகள் காணப்படுகின்றன. பரிபாடல்கள் அனைத்தும் இசைப்பாடல்கள் ஆகும். பாலையாழ், நோதிறம், காந்தாரம் என்ற பண்கள் பரிபாடலில் காணப்படுகின்றன. பரிபாடலின் மூலம் அக்கால மக்களின் பழக்க வழக்கங்கள், பண்பாடுகள் குறித்து அறியலாம்.

பரிபாடல் எழுபது பாடல்களைக் கொண்டது. திருமாலைப் பற்றி எட்டு, முருகனைப் பற்றி முப்பத்தொன்று, காடுகிழானைப் பற்றி ஒன்று, வையையாறு பற்றி இருபத்தாறு, மதுரையைப் பற்றி நான்கு ஆக எழுபது பாடல்கள் பாடப்பட்டுள்ளன.

*"அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கில் இன்பத்தையே பொருளாகக் கொண்டு கடவுள் வாழ்த்து, மலை விளையாட்டு, நீர் விளையாட்டு என்னும் பொருள்களைப் பற்றிக் கூறுவது பரிபாடல்"*[1]

என்று பேராசிரியர் குறிப்பிட்டுள்ளார். திருமாலே முதற்பெருங் கடவுள் எங்கும் நிறைந்தவர். எல்லாமாயிருப்பவர் என்று திருமாலின் பெருமையை ஐந்து பாடல்கள் விளக்குகின்றன,[2]

**"அமல்புரை குழை, கொழுநிழல்தரும் பலசினை**
**ஆலமும், கடம்பும், நல்யாற்று நடுவும்**
**கால்வழக்கு அறுநிலைக் குன்றமும், பிறவும்**
**அவ்வவை மேய வேறு வேறு பெயரொடு**
**எவ்வயினோயும் நீயே"** (பரி. 4:66-70, ப. 83)

என்று திருமாலின் பெருமை குறிப்பிடப்பட்டுள்ளது. இதுபோன்று முருகனைப் பற்றியும் பாடல்கள்[3] உள்ளன. மலையிலே பிறந்து வரும் வையை ஆற்றின் சிறப்பை,[4]

**"கரையே**
**கைவண் தோன்றல் ஈகைபோன்ம் என;**
**மைபடு சிலம்பிற் கறியொடும் சாந்தொடும்;**
**நெய் குடைதயிரின் நுரையொடும், பிறவொடும்**
**எவ்வயினானும் மீது மீது அழியும்"** (பரி. 16:1-4, ப. 225)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. அந்தணர்களின் அரிய வேதங்களிலே கூறப்படும்,

**"வாய்மை, வயங்கிய வைகல்; சிறந்த**
**நோன்மை, நாடின் இருநிலம், யாவர்க்கும்**
**சாயல் நினது வான்நிறை என்னும்**
**நாவல் அந்தணர் நான்மறைப் பொருள்"** (பரி. 2:54-57, ப. 57)

என்ற நான்மறைப் பொருளைத் தமிழ்ப் புலவர்கள் தங்கள் பாடலில் அமைத்துப் பாடியுள்ளனர்.

*“ஒருவன் தான் காதலித்த பெண்ணைச் சமாதான முறையில் அடைய முடியாவிட்டால் படைதிரட்டிக்கொண்டு போய் அப்பெண்ணைச் சிறையெடுத்துச் செல்வான். பெண்ணின் சுற்றத்தார் இதனையறிந்து அவர்களும் படைதிரட்டிச் சென்று இடையில் வழிமறித்துச் சண்டையிடும் செய்தி”* [5]

போன்றவை பரிபாடல் மூலம் அறியவரும் செய்திகளாகும். திருமாலின் இயல்பு, பெருமை, வையை ஆற்றின் தன்மை, புனலாடும் தலைவன் தலைவியின் உணர்வுகள், அந்தணர்களின் ஆசாரம், இசை, நாட்டியம், ஓவியம் போன்ற கலைகள் மூலம் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வு ஓட்டங்கள் பரிபாடலில் நிறைந்து காணப்படுகின்றன.

**கலித்தொகை**

கலித்தொகை, கலிப்பாக்களின் தொகுப்பாகும். இந்நூல் பாலைக்கலி, குறிஞ்சிக்கலி, மருதக்கலி, முல்லைக்கலி, நெய்தற்கலி என்ற ஐந்து பகுதிகளைக் கொண்டது. ஐந்தும் ஐந்து தனித்தனிப் புலவர்களால் பாடப்பட்டன.

ஐவகைத் திணையின் காதல் வாழ்வு ஒழுக்கத்தைப் பற்றிக் கூறுவது கலித்தொகையாகும். இவற்றுடன் கைக்கிளை, பெருந்திணைப் பாடல்கள் சிலவும் காணப்படுகின்றன. பாலைக்கலி முப்பத்தைந்து பாடல்கள், குறிஞ்சிக்கலி 29 பாடல்கள், மருதக்கலி 35 பாடல்கள், முல்லைக்கலி 17 பாடல்கள், நெய்தற்கலி 33 பாடல்கள் மொத்தம் நூற்று நாற்பத்து ஒன்பது பாடல்கள் இடம்பெற்றுள்ளன. கலித்தொகையைத் தொகுத்தவர் நல்லந்துவனார் ஆவார்.

தமிழ் மக்களின் நம்பிக்கை, பழக்க வழக்கங்கள், அரசியல் முறைகள், சிறந்த அறிவுரைகள் செல்வச் சிறப்பு, மகாபாரத – இராமாயண வரலாறுகள், புராண கதைகள் போன்றவை இடம்பெற்றுள்ளன. இதன் சிறப்பைக் கருதி “கற்றறிந்தோர் ஏத்தும் கலி” என்ற பாராட்டினைப் பெற்றுள்ளது.

கலித்தொகைப் பாடல்கள் ஒவ்வொன்றும் ஒவ்வொரு சிறுகதையைப் போல அமைந்திருக்கின்றன. காதலன் – காதலி, தலைமகள் – தோழி, தோழி – நற்றாய், தலைவன் – தோழன், தோழி – தலைவி இவர்களுக்கு இடையேயான உரையாடல்கள் மிகவும் சுவை தரக்கூடியவை. கைக்கிளை, பெருந்திணைப் பாடல்களில் நகைச்சுவையும் இடம்பெற்றுள்ளன.

பாலைவனக் காட்சி, அங்கே வாழ்வோரின் வாழ்க்கை நிலை, மலைக்காட்சி, அங்கு வாழும் மக்களின் செயல்கள், மருத நிலத்தின் இயற்கை வளம் அங்குள்ள மக்களின் நாகரிகம், அவர்களுடைய உயர்தரமான இல்லறவாழ்க்கை, முல்லைநிலத்து மக்களின் பொழுதுபோக்கு, அவர்களுடைய வாழ்க்கை, அந்நிலத்தின் இயற்கைக் காட்சி, நெய்தல் நிலத்தின் தோற்றம், அந்நில மக்களின் வாழ்க்கை, இவைகளை எல்லாம் படிப்போர் உள்ளத்திலே பதியும்படிக் கூறுவதிலே கலித்தொகைப் பாடல்களுக்கு இணையாக வேறுபாடலைக் காணமுடியாது.

பாடல்களைப் படிப்பவர் உள்ளத்திலே உணர்வுகளைப் பதியும்படிச் சொல்லுவதிலே கலித்தொகை ஆசிரியர்கள் மிகச் சிறந்து விளங்கினர் என்பதை,

**"கடைக் கண்ணால் கொல்வான்போல் நோக்கி நகைக்கூட்டம்**
**செய்தான் அக்கள்வன் மகன்"** (கலி. 51, ப. 189)

என்ற இப்பாடல் வரிகளில் தலைவி மாட்டு தலைவன் கொண்ட அன்புணர்வை அறியலாம். கலித்தொகைப் பாடல்கள் பலவற்றில் செங்கோல் ஆட்சிச் சிறப்பையும் கொடுங்கோலாட்சியின் கொடுமையும் விளக்கப்படுகிறது.

**"அலவுற்றுக் குடி கூவ, ஆறுஇன்றிப் பொருள் வெஃகிக்**
**கொலை அஞ்சா வினைவரால் கோல் கோடியவன்நிழல்**
**உலகுபோல்"** (கலி. 10:5-7, ப. 41)

என்ற பாடலில் குடிமக்கள் துன்புற்று அலறும்படி அறமற்ற வழியிலே கொலைக்கஞ்சாமல் ஆளும் அதிகாரிகளைக் கொண்டு ஆட்சிபுரியும் மன்னனின் கொடுங்கோலாட்சி உணர்த்தப்படுகிறது.

**"தன்னுயிர் போலத் தழீஇ உலகத்து**
**மன்னுயிர் காக்கும் இம்மன்னனும்"** (கலி. 143:52-53, ப. 560)

இவ்வரிகளில் தனது நாட்டில் வாழும் உயிர்களையெல்லாம், தன்னுயிரைப் போல எண்ணிப் பாதுகாப்பவனே மக்களால் மதிக்கப்படுவான் என்ற உண்மையைக் காக்கும் பண்புணர்வுடன் விளங்கினர். சோம்பல் இல்லாதவனிடம் செல்வம் பெருகியிருப்பதை,

**"மடியிலான் செல்வம் போல் மரம்நந்த"** (கலி. 35:1, ப. 117)

என்ற பாடல்வரி உணர்த்துகின்றது. வாழ்க்கையில் பின்பற்ற வேண்டிய அறிவுரைகளை,

**"ஆற்றுதல் என்பது ஒன்று அலந்தவர்க்கு உதவுதல்;**
**போற்றுதல் என்பது புணர்ந்தாரைப் பிரியாமை;**
**பண்பெனப் படுவது பாடறிந்து ஒழுகுதல்;**
**அன்பெனப்படுவது தன்கிளைச் செறாஅமை;**
.......... .......... ...........
**பொறையெனப்படுவது போற்றாரைப் பொறுத்தல்"**
(கலி. 133:6-14, ப. 522)

என்ற கலித்தொகைப் பாடல் உணர்த்துகின்றது.

இத்தகைய அரிய அறிவுரைகளையும் சிறப்பினையும் பெற்று உயர்வுடன் கலித்தொகை விளங்குகிறது. இத்தகைய கலித்தொகைப் பாடல்களில் ஐந்திணை ஒழுக்க நெறிமுறைகள், அதில் வெளிப்படும் ஆடவரின் உணர்வுகள், சமுதாயத்தில் ஆடவரின் செயல்பாடுகள், அவர்களின் மேன்மை போன்றவை கலித்தொகை முழுவதிலும் விரவிக் காணப்படுகின்றன.

**அகநானூறு**

அகப்பொருள் பற்றி நானூறு பாடல்களால் ஆனது அகநானூறு ஆகும். இது ஐந்திணை ஒழுக்கங்களை விரிவாக எடுத்துரைக்கின்றது. இந்நூலுக்கு 'நெடுந்தொகை' என்ற பெயரும் உண்டு. அகநானூறு பதின்மூன்று அடிக்கு குறையாமலும் முப்பத்தொரு அடிக்கு மேற்படாமலும் இருக்கும் நூலாகும். அகநானூறு, நாற்பத்தைந்து புலவர்களால் பாடப்பட்டது.

நானூறு பாடல்களில் 200 பாடல்கள் பாலைத் திணை, 80 பாடல்கள் குறிஞ்சித் திணை, 40 பாடல்கள் மருதத்திணை, 40 பாடல்கள் முல்லைத்திணை, 40 பாடல்கள் நெய்தல் திணை பற்றியவை. இந்நூல் மூன்று பகுதியாக அமைந்திருக்கின்றது. முதற் பகுதி 120 பாடல்கள் களிற்றியானை நிரை, இரண்டாம் பகுதி 180 பாடல்கள் மணிமிடைப்பவளம், மூன்றாம் பகுதி 100 பாடல்கள் நித்திலக்கோவை ஆகும்.

இந்நூலைத் தொகுத்தவர் உருத்திரசன்மன் ஆவார். இந்நூலில் ஐவகை நிலங்களின் தன்மை, அங்கே நடக்கும் நிகழ்ச்சிகள், நிலங்களின் இயற்கைத் தோற்றம் போன்றவை பற்றிப் பாடப்பட்டுள்ளது.

அகநானூறு பாடல்கள் ஐவகை நிலங்களின் இயற்கைத் தோற்றங்களை அழகுற எடுத்துக்காட்டுகின்றன. ஐவகை நிலத்து மக்களின் ஒழுக்கங்களைப் படிப்போர் உள்ளத்தில் பதியும்படிச் சுவையுடன் கூறப்பட்டுள்ளது. பழைய வரலாறுகளையும் எடுத்துக் காட்டுகின்றது.

மூவேந்தர்களின் வாழ்க்கை வரலாறுகள், அவர்களுடைய வீரச்செயல், அவர்களுடைய படைத் தலைவர்களின் பெருமைகள் பேசப்படுகின்றன. தமிழ்நாட்டிலே வாழ்ந்த வள்ளல்களிலே சிலருடைய பெயர்கள், பெருமைகள், புரிந்த போர்கள் போன்றன கூறப்பட்டுள்ளன.

அகநானூற்றுத் தலைவன் தன் தலைவியுடன் ஒன்றுபட்டு இன்புற்று வாழ்கிறான். அந்நிலையில் பொருள் தேடப் புறப்பட ஆயத்தமானபோது தலைவியின் தோற்றத்தைக் கண்டு அவள் மீது அன்புணர்வு கொண்டு பொருள் தேடச் செல்லும் செயலை நிறுத்தினான். இதனை,

**"முன்னம் காட்டி முகத்தின் உரையா**
**ஓவச் செய்தியின் ஒன்றுநினைந்து ஒற்றிப்**
**பாவை மாய்த்த பனிநீர் நோக்கமொடு**
**ஆகத்து ஒடுக்கிய புதல்வன் புன்தலைத்**
**தூநீர் பயந்த துணையமை பிணையல்**
**மோயினள் உயிர்த்த காலை, மாமலர்**
**மணியுரு விழந்த அணியழி தோற்றம்**
**கண்டே கடிந்தனம் செலவே"** (அகம். 5:19-26, ப. 14)

என்று தலைவன் தன் நெஞ்சுக்குள் கூறியதாக இடம்பெற்ற பாடல் மூலம் அறியலாம்.

அகநானூற்றில் இராமாயணத்தைப் பற்றியும் பாரதத்தைப் பற்றியும் குறிப்பு காணப்படுகின்றது. இராமன் இலங்கைக்குப் போகும் போது தனுஷ்கோடியில் ஒரு ஆலமரத்தின்கீழ் தங்கினான். வானர வீரர்களுடன் அமர்ந்து இலங்கையைப் பற்றிய செய்திகளை ஆலோசித்துக் கொண்டிருந்ததை,

**"வென்வேல் கவுரியர் தொன்முது கோடி**
**முழங்கு இரும் பௌவம் இரங்கும் முன்துறை**
**வெல்போர் இராமன் அருமறைக்கு அவித்த**
**பல்வீழ் ஆலம்"** (அகம். 70:13-16, ப. 158)

என்ற பாடல் உணர்த்துகின்றது. தம் முன்னோரின் வீரத்தையும், கொடையையும் பேணிப் பாதுகாத்த உதியஞ்சேரலாதன், பாரத யுத்தத்திலே இருபக்கத்துப் படைகளுக்கும் உணவு அளித்த நிகழ்வினை,

**"முதியவர்ப் பேணிய உதியஞ் சேரல்**
**பெருஞ்சோறு கொடுத்த ஞான்றை"** (அகம். 233, ப. 14)

என்ற பாடல் மூலம் அறியலாம். இதுபோன்ற பல அரிய கருத்துகளையும் சிறப்பினையும் அகநானூறு பெற்றுள்ளது.

அகநானூற்றுப் பாடல்களில் ஐந்திணை ஒழுக்கமும், கற்பு, களவுக் காலங்களில் தலைவன், தலைவியரிடையே எழும் மன உணர்வுகள், காதல் உணர்வு, இல்லற வாழ்வில் கடைபிடிக்கும் ஒழுக்கம், திருமணம் போன்ற சடங்குகள், புத்திரப் பேறு, செல்வச் சிறப்பு மிக்க வாழ்வில் வெளிப்படும் இன்ப துன்ப உணர்வுகள் அகநானூற்றில் மேலோங்கிப் காணப்படுகின்றன.

**புறநானூறு**

புறப்பொருளைப் பற்றிப் புகலும் நானூறு பாடல்களைக் கொண்டது புறநானூறு. இந்நூலில் அரசியல், வாணிகம், வரலாறுகள், அறவுரைகள், போர் நிகழ்ச்சிகள், சமுதாயப் பழக்கவழக்கங்கள் போன்றவைப் பற்றிப் பாடப்பட்டுள்ளன.

புறநானூற்றில் கடவுள் வாழ்த்தைச் சேர்த்து 398 பாடல்கள் உள்ளன. ஒரு பாடல் மறைந்துவிட்டது. 267, 268 இரு பாடல்கள் கிடைக்கப்பெறவில்லை. புறநானூறு பல புலவர்களின் பாடல்களைத் தொகுத்து அமைக்கப்பட்ட நூலாகும். புறநானூற்றுப் பாடல்களைப் பாடிய புலவர்கள் 157க்கும் மேற்பட்டவர்கள். 123 பேர் பாட்டுடைத் தலைவர்கள். 14 பாடல்களின் ஆசிரியர் தெரியவில்லை. இப்பாடல்களைத் தொகுத்தவர், தொகுப்பித்தவர் பெயர்கள் தெரியவில்லை.

பண்டைத் தமிழர்களின் பண்பாட்டுக் கருவூலமாகப் புறநானூறு விளங்குகின்றது. இந்நூலின் மூலம் தமிழர் பெருமை, வரலாறு, பண்பாட்டை அறியலாம். இந்நூற் பாடல்கள்

பெரும்பாலானவை வறுமையையே வாழ்க்கையாகக் கொண்ட பல புலவர்களால் பாடப்பட்டவை. தங்கள் வறுமை தீர்க்கும் வள்ளல்களைப் பாராட்டிப் பாடப்பட்டவை. ஆகையால் அவர்களுடைய பாடல்களில் பல உண்மைகளையும் மக்கட் பண்புகளையும் காணலாம்.

தமிழர்களின் சிறந்த சமுதாய வாழ்வு, விருந்தோம்பல் சிறப்பு, உயர்ந்த ஒழுக்கம், உறுதியான கொள்கை, தன்னலமற்ற தியாகம், தலைநிமிர்ந்த தன்மான உணர்வு, வீரவாழ்வு இவைகளை இந்நூல் மூலம் அறியலாம்.

தமிழ்நாட்டுப் பெண்களின் பண்பாடு, வீரம், புலமை, இவைகளைப் பற்றியும் புறநானூற்றுப் பாடல்கள் குறிப்பிட்டுள்ளன.

**"யாதும் ஊரே, யாவரும் கேளிர்**
**தீதும் நன்றும் பிறர்தர வாரா**
**நோதலும் தணிதலும் அவற்றோர் அன்ன"** (புறம். 192:1-3, ப. 321)

என்ற பாடல் மூலம் தமிழர்களின் தனித்த பண்பாட்டை அறியலாம்.

இத்தகைய சிறப்புத் தன்மை பொருந்திய எட்டுத் தொகை நூல்கள் போற்றத்தக்கன. பாதுகாக்கப்பட வேண்டியவை. இதனைப் போற்றி அதன் வழிச் செயல்பட்டால் பல்வேறு சூழல்களிலும் இன்னல்களில் சிக்கித் தவிக்காமல் மீண்டுவரும் திண்மையை மக்கள் பெறுவர்.

நல்ல அரசியல் இல்லாவிட்டால் எந்த நாடும் முன்னேற்றம் அடைய முடியாது. நல்ல அரசியல் அமைப்புள்ள நாட்டில் மக்கள் ஒன்றுபட்டு வாழ்வார்கள். மக்களுடைய வாழ்க்கைத் தரமும் உயர்ந்திருக்கும். இவ்வுண்மையை இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உணர்ந்த தமிழர்கள், உலகத்திற்கு நெல்லும், நீரும் உயிரன்று; மன்னனே உயிர். எனவே இம்மண்ணை ஆளும் மன்னன் தான் உலகிற்கு உயிர் என்பதனை உணர்ந்து செயல்படுவது அரசனின் கடமையாகும் என்பதை,

**"நெல்லும் உயிர் அன்றே, நீரும் உயிரன்றே**
**மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்;**
**அதனால், யான் உயிர் என்பது அறிகை**
**வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே"** (புறம். 186, ப. 316)

என்ற புறநானூற்றுப் பாடலடிகள் உணர்த்துகின்றன. அரசாட்சியின் வெற்றி, சிறந்த அறநெறியைப் பின்பற்றுவதில்தான் உள்ளது.

இவ்வுலகில் வாழும் அனைவரும் இன்புற்று வாழ்வதற்கான செல்வங்கள் நிறைந்திருக்க வேண்டும். இரப்போர், ஈவோர் என்ற பாகுபாடு மறையவேண்டும். கொடுப்போரும், கொள்வோருமற்ற சமுதாய அமைப்புள்ள உலகில்தான் மக்கள் இன்ப வாழ்வினை மேற்கொள்வர். இவ்வுண்மையை,

**"ஈயென இரத்தல் இழிந்தன்று; அதன்எதிர்**
**ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று**
**கொள் எனக் கொடுத்தல் உயர்ந்தன்று; அதனெதிர்**
**கொள்ளேன் என்றல் அதனினும் உயர்ந்தன்று" (புறம். 204:1-4, ப. 337)**

என்ற புறப்பாடல் மூலம் அறியலாம். பிறர்க்கு நன்மை செய்யாவிடிலும் தீமை செய்வதை நிறுத்துங்கள் என்ற கருத்தை,

**"நல்லது செய்தல் ஆற்றீராயினும்**
**அல்லது செய்தல் ஓம்புமின்; அதுதான்**
**எல்லோரும் உவப்பது அன்றியும்**
**நல்லாற்றுப் படூஉம் நெறியு மாரதுவே" (புறம். 195:6-9, ப. 324)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இத்தகைய சிறப்பினைக் கொண்டது புறநானூறு ஆகும். இதில் ஆடவரின் புறவாழ்வின் செயல்பாடுகளில் வெளிப்படும் உணர்வுகளும் இவற்றிற்கெல்லாம் அடிநாதமாக விளங்கக்கூடிய மன உணர்வோட்டத்தினையும் காணலாம்.

**ஆ. சங்ககாலச் சமுதாய அமைப்பு**

**1. தாய்வழிச் சமுதாயம்**

*"தாய்வழிச் சமூக சமுதாய அமைப்பின் கூறுகளில் சில வலுவிழந்தும் சில தந்தைவழிச் சமூகக் கூறுகளை நோக்கி மாற்றம் பெற்று தந்தைவழிச் சமுதாயம் மேலாதிக்கம் பெறத் தொடங்கிய சங்க காலத்தில் தாய்த் தலைமைச் சமுதாய எச்சங்களும் இருந்துள்ளன. குறிப்பாகச் சொத்துரிமை தாய்வழிப்பட்டதாக இருந்துள்ளமையை அறியலாம்"* [6]

என்பர் பெ. மாதையன்.

**"இழையணி பணைத்தோள் ஐயை தந்தை**
**மழைவளந் தரூஉ மாவண் தித்தன்**
**பிண்ட நெல்லின் உறந்தை" (அகம். 6:3-5, ப. 16)**

எனும் பாடலில் வரும் தித்தன், உறந்தையை ஆண்ட முற்காலச் சோழ மன்னன். இவன் மகளே ஐயை. இம்மன்னன் ஐயை தந்தை என மகளை முன்னிறுத்தி அழைக்கப்பட்டுள்ளான். இது ஒரு பழங்கால மரபாக பாடலில் இடம்பெற்றுள்ளது. இதே பாடலில் "மாசில் கற்பின் புதல்வன் தாய்"[7] என மகன் வழி தாய் குறிப்பிட்டுள்ள நிலையும் இடம்பெற்றுள்ளது.

"அஃதை தந்தை அண்ணல் யானை அடுபோர்ச் சோழர்"[8] என்பதிலும், "கொடிச்சியர் தந்தை",[9] என திணைநிலை வாழ்வில் இடம்பெற்ற தந்தையரும் மகள் வழி அழைக்கப்பட்டுள்ளனர். இவ்வாறு பெண் வழி ஆண் அழைக்கப்படுவது ஒரு பழம் மரபாகத் தாய்வழிச் சமூகத்தின் எச்சமாக உள்ளதை அறிய முடிகிறது.

*"புறநானூற்றில் இடம் பெற்றுள்ள பாடல்கள் **(248 – 357)** அச்சமூட்டுவதல்லாத நடப்பியல் சார்ந்த சில வீரப் போர்க் காட்சிகளையும் இறப்புக் காட்சிகளையும் சித்தரிக்கிறது. பெயர் அறியப்படாத அடையாளம் தெரியப்படாத இப்போர் வீரர்களின் மிகச் சிறந்த ஆற்றலும் வீரமும் வீரச் சமூகத்தை வீர வாழ்க்கையைக் காண ஒரு தனித்தன்மையுடைய உள்நோக்கை அளிக்கின்றன. தொகையின் இப்பகுதி தமிழ் வீரநிலைப் பாடல்களின் முற்பட்ட உட்கூறு கொண்டது என்பது உண்மையாகக் கூடியதாகும்."*[10]

எனக்கூறும் க. கைலாசபதி காட்டும் புறப்பாடல்கள் தாய்வழி உரிமைகள் நிலவிய சமுதாயமாக இருப்பதற்கான சான்றுகளைக் கொண்டனவாகத் திகழ்கின்றன.

**"நறுவிரை துறந்த நரைவெண் கூந்தல்**
**இரங்குகா ழன்ன திரங்குகண் வறுமுலைச்**
**செம்முது பெண்டின் காதல்அஞ் சிறான்"** (புறம். 276:1-3, ப. 417)
**"மீனுண் கொக்கின் தூவி யன்ன**
**வானரைக் கூந்தல் முதியோள் சிறுவன்"** (புறம். 277:1-2, ப. 418)

**"நரம்பெழுந் துலறிய நிரம்பா மென்தோள்**
**முளரி மருங்கின் முதியோள் சிறுவன்"** (புறம். 278:1-2, ப. 418)

எனத் தாயை முதன்மைப்படுத்தி மகன் குறிப்பிடப்பட்டுள்ளான்.

"மூதில்குடி சார்ந்த பெண்டிர் இளஞ்சிறுவனைப் போருக்கு அனுப்புவோராகவும்",[11] "புறமுதுகிடாமல் போர்க்களத்தில் மாண்ட மகனைக் கண்டு ஈன்ற பொழுதினும் பெரிதும் உவப்பவளாகவும்",[12] "போர்க்களத்தில் சிதைந்து கிடந்த மகனின் வீரமாண்பைக் கண்டு வாடுமுலை ஊறிச் சுரந்தவர்களாகவும்"[13] காட்டப்பட்டுள்ளனர்.

இத்தகைய மகளிர் வீரமும் அவர்தம் போர்க்கள நுழைவும் பற்றிய இப்பாடல்கள் அக்காலத் தாய்வழிச் சமுதாயத்தின் வெளிப்பாடுகளாகப் புறநானூற்றில் இடம்பெற்றுள்ளன. "தலைவி வீடு தாய்மனை",[14] "தாயுடை நெடுநகர்"[15] என்றெல்லாம் அழைக்கப்படுவதும் தாய்வழிச் சமுதாயத்தின் எச்ச வெளிப்பாடாகவே உள்ளது.

### 2. தந்தை வழிச் சமுதாயம்

"வினையே ஆடவர்க்கு உயிரே வாள் நுதல் மனையுறை மகளிர்க்கு ஆடவர் உயிர்"[16] என மகளிர் மனையுறை மகளிராகிப் போன நிலையில் ஆண்கள் வினைஞர்களாக வினைவழி வந்த பொருட் செல்வத்தின் உடைமையாளர்களாக மாறிய நிலையில் மேற்கண்ட தாய்வழி உரிமைகள் தூக்கியெறியப்பட்டுள்ளன. இந்நிலையில் ஆண்வழிச் சமுதாயம் கட்டமைக்கப்பட்டுள்ளது. "புதல்வன் தாய்"[17] எனத் தாயார் மகனை முன்னிறுத்தி மகன் வழியே குறிப்பிடப்பட்டுள்ளனர். இதைப்போலவே,

**"புன்புல நாடன் மடமகள்"** (ஐங். 421:3, ப. 471)

**"புறவணி நாடன் காதல் மடமகள்" (ஐங். 424:1, ப. 474)**

**"கான்கெழு நாடன் மகள்" (ஐங். 430:3 ப. 480)**

**"தண்டலை யுழவர் தனிமட மகளே" (நற். 97:9, ப. 127)**

என முல்லைநிலப் பெண்டிரும்,

**"குன்றக் குறவன் காதல் மடமகள்" (ஐங். 255:1, ப. )**

**"வன்கட் கானவன் மென்சொல் மடமகள்" (ஐங். 283:1, ப. 332)**

**"நன்மலை குறவர் மறமகள்" (நற். 44:12, ப. 57)**

**"கானக் குறவர் மறமகள்" (நற். 102:8, ப. 133)**

என குறிஞ்சிநிலப் பெண்டிரும்,

**"கழனி ஊரன் மகள்" (ஐங். 91:3 ப. 123)**

**"பொய்கை ஊரன் மகள்" (ஐங். 97:3 ப. 130)**

**"பூக்கஞல் ஊரன் மகள்" (ஐங். 99:3, ப. 133)**

**"யாணர் ஊரன் மகள்" (ஐங். 100:3, ப. 134)**

என மருதநிலப் பெண்டிரும்,

**"மீனெறி பரதவர் மகள்" (நற். 45:3, ப. 59)**

**"நுண்வலைப் பரதவர் மடமகள்" (குறுந். 184:6 ப. 228)**

**"உமணர் காதல் மடமகள்" (அகம். 140:5, ப. 45)**

**"கடல்கெழு கொண்கன் காதல் மடமகள்" (ஐங். 195:2, ப. 233)**

என நெய்தல்நிலப் பெண்டிரும் தந்தையை முன்னிறுத்தியே குறிப்பிடப்பட்டுள்ளனர்.

"குறவர் மகளிரேம் குன்று கெழு கொடிச்சியேம்"[18] எனப் பெண்டிர் தம்மை ஆண்களை முன்னிலைப்படுத்தியே கூறும் நிலையை அறியலாம். புறநானூற்றில் வரும் மகட்பாற்காஞ்சிப் பாடல்களிலும் பெண்கள், "ஓர் எயில் மன்னன் ஒரு மடமகள்"[19] எனத் தந்தையை முதன்மைப்படுத்திக் குறிப்பிடப்பட்டுள்ளனர்.

> *"ஒரு கணத்தின் எந்த அங்கத்தினரையும் பாதிக்க வேண்டியதில்லை. எல்லா அங்கத்தினர்களும் முன் போலவே இருந்து வரமுடியும். இனிமேல் ஆண்களின் சந்ததிகள் கணத்துக்குள்ளேயே இருக்கவேண்டும். பெண்களின் சந்ததிகள் கணத்திலிருந்து விலக்கப்பட்டுத் தகப்பனின் கணத்துக்கு மாற்றப்படவேண்டும் என்று சர்வ சாதாரணமான தீர்மானம் செய்தால் போதும். பெண் வழியாக வம்சாவளியைக் கணக்கிடுவது, தாய் வழியாக வாரிசுரிமையைக் கணக்கிடுவது இரண்டும் அத்தோடு தூக்கி யெறியப்பட்டன **(1978 :90)**"*[20]

என எங்கெல்ஸ் குறிப்பிடுவதைப் போலத் தாய் வழி உரிமை விலக்கப்பட்டு ஆண்வழி மரபும் தந்தைவழி வாரிசுரிமையும் சங்க காலத்தில் நிறுவப்பட்டுள்ளன.

“புதல்வன் தாய்”[21] என மகன் வழி தாய் அழைக்கப்பட்டதைப் போலத் தொன்மச் சூழல் தனித் தெய்வங்களாக இருந்த கொற்றவையும்,[22] திருவும்,[23] முறையே சிவனையும் திருமாலையும் சார்ந்த நிலையில் தற்சார்பற்ற தெய்வங்களாக மாறிப் போவதும் ஆண்வழிச் சமுதாய ஆளுமையின் வெளிப்பாடே ஆகும். “ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே” எனும் ஒரு வரியே (ஆண்வழியும்) தந்தைவழியை நிலைநிறுத்தின என்பதை உணர்த்தவல்ல சான்றாக அமைகின்றது. புதல்வனைப் பெற்றுப் பாதுகாத்ததைத் தவிர வேறு எதுவும் தாய்க்கு இல்லாத சூழலும் சான்றோனாக்கும் (வீரனாக்கும்) உரிமையும் தந்தைக்கு மட்டுமே இருந்ததையும் பிற எல்லா சமுதாயச் செயல்பாடுகளும் ஆண்வழிப் பட்டதாகவே நிகழ்ந்ததையும் இப்பாடல் உணர்த்துகின்றது.

முதன் முதலாக ஆணாதிக்கச் சமூகம் முல்லை நிலத்தில் தான் கால் கொண்டிருக்கவேண்டும். இதனை முல்லைத்திணைப் பாடல்களில் கற்பு, மழை பற்றிய செய்திகள் மிகுதியாகக் காணப் பெறுவதிலிருந்து அறிந்துணர முடிகின்றது.

நற்றிணைப் பாடலொன்றில் தலைவனைப் பிரிந்திருந்த தலைவி தன் கூந்தலைப் புனைந்து கொள்ளவில்லை. தலைவன் வருகிறான் என்பதை அறிந்தவுடன் தலைவி தன் கூந்தலை அழகாகப் புனைந்து கொண்டாள் என்பதை,

**“இல்புக்கு அறியுளர் ஆக மெல்லென**
**மண்ணாக் கூந்தல் மாசறக் கழீஇச்**
**சில் போது கொண்டு பல்குரல் அழுந்திய**
**அந்நிலை புகுதலின் மெய்வருந் துறாஅ**
**அவிழ்பு முடியினாள் கவைஇய**
**மடமா அரிமை மகிழ்ந்தயர் நிலையே” (நற். 42:7-12, ப. 54)**

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. ஆக, ஆண் தலைமையிலான சமூகம் முதன் முதலாக முல்லை நிலத்தில்தான் கட்டமைக்கப்பெற்றுள்ளது. “சமூகத்தில் ஆண் தலைமை ஏற்றது போன்றே குடும்பத்திலும் அவனே தலைமைப் பொறுப்பில் இருந்துள்ளான்.”[24]

மானுட வரலாற்றில் ஆணாதிக்கச் சமூகத் தோற்றம் கண்ட பின்பு பெண்களுடைய நடவடிக்கைகள் யாவும் ஆண்களாலேயே தீர்மானிக்கப்பெற்றுள்ளன. சான்றாக வேலைப்பகிர்வு, குடும்பப் பொறுப்பு போன்றவை. இத்தகைய ஆணாதிக்கச் சூழலில் தோன்றிய சங்க இலக்கியங்களில் ஆண், பெண் இருவருக்குமான ஆளுமைப் பண்புகள் சுட்டப்பெற்றுள்ளன. எனினும் ஆண் ஆளுமைப் பண்புகளைக்குறிக்கும் அளவிற்குப் பெண் ஆளுமைப் பண்புகள் குறிக்கப்படவில்லை. வலிமை, ஆண்மை, அருள், கல்வி, அறிவு, ஊக்கம், ஈகை, புகழ் முதலான ஆளுமைப் பண்புகள் ஆண்களுக்குரியனவாகச் சுட்டப்பெற்றிருக்கின்ற சமூகத்தில் அச்சம், மடம், நாணம் என்பனவற்றோடு கூடிய கற்பு ஒன்றே பெண்களுக்குரிய ஆளுமைப் பண்பாகச் சுட்டப்பெற்றுள்ளது.

**இ. ஆடவர் பொருள் விளக்கமும், பரிமாணங்களும்**

ஆண் என்னும் சொல் சங்க இலக்கியத்தில் சிறுபான்மையாகவும் பிற்கால இலக்கியத்தில் பெரும்பான்மையாகவும் பயன்படுத்தப்பட்டுள்ளது. மதுரைத் தமிழ்ப் பேரகராதி, நர்மதா தமிழ் அகராதி, க்ரியா தற்காலத் தமிழ் அகராதி, மெய்யப்பன் தமிழ் அகராதி உள்ளிட்ட பல்வேறு தமிழ் அகராதிகள் ஆண், ஆடவர் என்ற சொற்களைக் குறிப்பிட்டிருக்கின்றன. அகராதிகளிலும், நிகண்டுகளிலும் ஆடவர் என்ற சொல் பெரும்பாலும் கையாளப்பட்டிருக்கின்றன.

"ஆண்" என்றால் ஒருமையையும், "ஆடவர்" என்றால் பன்மையையும் குறிப்பதாக அமைகிறது. ஆனால் ஆண், ஆடவர் என்ற இருசொல்லிற்குமான பொருள் விளக்கம் ஒரே குணத்தைச் சுட்டி நிற்பது குறிப்பிடத்தக்கது.

**"ஆடவர் எனும் பெயர் ஆண்பாற் பொதுவும்**
**இளைஞர் பெயரும் இயம்பப் பெறுமே" (வடமலை நிகண்டு, 1452, ப. 2)**

**"ஆடவர் - புருஷர் இளையர்" (அபிதான மணிமாலை, 595, ப. 1)**

**"ஆடவர் மயிரு முசவு மோரி" (சூடாமணி நிகண்டு, ப. 10)**

**"ஆண்பெய ரிளையோ ரென்றிவ ராடர்**
**ஆண்மக்கள், இளையோர்" (திவாகர நிகண்டு, ப. 161)**

**"ஆண்மக்கள், இளையோர், பிராயமுப்பத்திரண்**
**டிற்கும் நாற்பத்தெட்டிற்கும் இடைப்பட்டவர். இவர்**
**மன்னர், புருடர், மாந்தர், மானுடர், மனிதர், வீரர்**
**வென்றோர், ஆடுபவர்" (பொதிகை நிகண்டு, ப. 203)**

இவ்வாறு ஆடவர் என்ற சொல்லுக்கு நிகண்டுகளும் அகராதிகளும் பொருள் தருகின்றன.

**"ஆடவர், மைந்தர், காளை, குமரர், ஆடூஉ,**
**மாந்தர், மகன், புமான், மணாளன், கூடியவாண்**
**பெயர் ஆகக் கூறுவர்" (பிங்கல நிகண்டு, ப. 9)**

என்று திவாகர நிகண்டில் ஆண் குறித்து பொருள் குறிப்பிடப்பட்டுள்ளது.

**"ஆண்பாலெவையும் ஆண் எனப்படுமே**
**ஆண்பால் எல்லாவற்றிற்கும் உரித்தே" (மதுரைத் தமிழ் பேரகராதி, ப. 471)**

**"ஆடவர் காளைய ராடூஉ மகன் மைந்தனாளன் பூம**
**னீடு குமரனு மாண் பெயர்" (திவாகர நிகண்டு, 276, ப. 38)**

**"பொருவிலாக் காளைபூ மான் குமர னாடவன்**
**போற்று மகன் மைந்தானா டூஉ**

**புருடனாய் வாழ்வானோ டெட்டுமாண் பெயர்மாந்தர்**
**புகலிலாண் மக்கள் பொதுவாம்" (திவாகர நிகண்டு - 496, ப. 52)**

**"ஆண்புருடன் காளை மைந்த னாடவனா டூஉக் குமரன்**
**மாண்பு மான் பூமான் மகன்" (உரிச்சொல் நிகண்டு 112, ப. 548)**

என்ற பாடலில் ஆண், புருடன், காளை, மைந்தன், ஆடவன், ஆடூஉ, குமரன், பூமான், விடலை, மகன் என்று ஆணிற்குப் பொருள் விளக்கம் குறிப்பிட்டுள்ள நாமதீப நிகண்டு மூலம் அறியலாம்.[25] மேலும், "ஆண்பாற் பொது, ஆண்மகன், தலைமை, அழகு, அன்பு, ஆணம்"[26] என்று மதுரைத் தமிழ்ப் பேரகராதியும், "ஆணிற் சிறந்தோன், கணவன், மகன், மனிதன், பராக்கிரமசாலி"[27] என்றும் "ஆண்பாற் பொது, வீரியம், தலைமை, வீரன்"[28] "ஆண்சாதி, ஆண்பாலுள் ஒன்று"[29] என்று மெய்யப்பன் தமிழகராதியும் "ஆண் என்பது உயிரினத்தில் பெண் அல்லாத ஆண் எனும் பிரிவினரையே ஆண் என வழங்குவது உலக வழக்கு"[30] என்றும் ஆண் என்ற சொல்லுக்குப் பொருள் கொள்ளப்படுகிறது.

**ஆண்மை - ஆண்மகன்**

ஆண் என்ற சொல்லிலிருந்து ஆண்மை, ஆண்மகன், போன்ற சொற்கள் உருவாக்கப்பட்டிருக்கின்றன. ஆண்மை என்பதற்கு,

**"திண்ணியம் வீடிட மாண்மைவினர் மீனாம்"**

**(நாநார்த்த தீபிகை நிகண்டு)**

**"வீணைகிந் நரம்பின் னென்ப ஆண்மைவீரிய மாண்டன்மை"**

**(நாநார்த்த தீபிகை நிகண்டு)**

என்று நாநார்த்த தீபிகை நிகண்டும்,

**"வலியும் வென்றியும் வாய்மையு மாண்மை"**

**(பிங்கல நிகண்டு - 3127, ப.97)**

என்று பிங்கல நிகண்டும், "ஆளுந்தன்மை, வெற்றி, வலிமை, அகங்காரம், உடைமை, வாய்மை"[31] என்று மெய்யப்பன் அகராதியும், "ஆண்டன்மை, திடன், மனமுயற்சி, ஆள்வினை, அகங்காரம், மெய், வலி, பராக்கிரமம்"[32] என்று மதுரைத் தமிழ்ப் பேரகராதியும் பொருள் பகர்கின்றன. ஆண்மகன் என்பதற்கு,

**"ஆண்மகன் புருடன் ஆடூஉ மகன் புமான்**
**குமரன் நம்பி கோவோர் குருசில்**
**தோன்றல் காளை விடலை தொல்பெயரே"**

**(அபிதான மணிமாலை, ப. 586)**

என்று அபிதான மணிமாலையும், “ஆணிற் சிறந்தோன், கணவன், மகன், மனிதன், பராக்கிரமசாலி’ என மதுரைத் தமிழ்ப் பேரகராதியும் பொருள் தருகின்றன.

இங்ஙனம் ஆடவர், ஆண் என்ற சொற்களுக்கு அகராதிகளும், நிகண்டுகளும் தரும் பொருள் விளக்கமும். அவர்களின் பங்களிப்பையும் அறிய இப்பகுதி ஏதுவாக அமைகின்றது.

**1. தலைவனின் அகவாழ்வில் தொடர்புடைய ஆடவர்**

குடும்பம் என்பது கணவன் மனைவி என்ற இரு உறவுகளின் அடிப்படையில் அமைவது. இது காலப்போக்கில் இரத்த உறவுடைய உறுப்பினர்களான மகன், மகள் பேரன், பேத்தி எனும் நிலைகளில் விரிவடைகிறது. சங்க இலக்கியத்தில் அகத்திணைப் பாடல்களில் தலைவன் தலைவி/கணவன் மனைவியே முதன்மை உறுப்பினர்களாகப் பேசப்பட்டுள்ளனர். தலைவன் தலைவி எனும் இருவர் சார்ந்த இரண்டு குடும்பங்களின் இரு அலகுகளாகத் தந்தை, தாய், மகள்/ மகள் எனும் உறவுகளைக் காண்கின்றோம். இதை,

> **“யாயும் ஞாயும் யாரா கியரோ**
> **எந்தையும் நுந்தையும் எம்முறைக் கேளிர்”** (குறுந். 40:1-2, ப. 70)

எனும் குறுந்தொகைப் பாடல் காட்டுகின்றது. அகத்திணைப் பாடல்களிலும் புறத்திணைப் பாடல்களிலும் தமையன்மார் எனப் பொருள்படும் தன்னைமார்,[33] தன்னையர்[34] எனும் உறவுமுறைச் சொற்களும் ஆளப்பட்டுள்ளன.

**புதல்வன்-மகன்**

“தாயுடன் தந்தையைப் பரத்தையர் காரணமாக வரும் ஊடலை நீக்கி இணைவிக்கப் புதல்வன் வாயிலாகிறான்”[35]

சிறிது வளர்ந்த புதல்வன் தளிர்நடை நடக்கின்றான். பற்கள் முளைக்காத பொக்கை வாயைத் திறந்து அடிக்கடிச் சிரித்தபடி சிறுதேர் உருட்டுகின்றான்.[36] பார்ப்பனர்களின் சிறுகுழந்தைகளுக்கு முன்குடுமி வைக்கப்பட்டிருந்தது.”[37]

> *“மறியை நடுவில் கொண்ட ஆண்மானும் பெண் மானும் போலத் தந்தையும் தாயும் புதல்வனை நடுவில் கிடத்தித் துயில்வர்”*[38]

போன்றவை புதல்வன் எனும் சொல்லை முன்னிறுத்துகின்றன. தமையன்மார் உறவுமுறைகளுடன் மகன் பற்றிய குறிப்புகளும் ஆட்சிபெற்றுள்ளன.

> **“புதல்வன் நடுவண னாக நன்றும்**
> **இனிது மன்றவர் கிடக்கை”** (ஐங். 401:2-3, ப. 452)

> **“புல்வன் கவைஇய தாற்புறம் முயங்கி”** (ஐங். 402:1, ப. 453)

> **“வாணுதல் லரிவை மகன்முலை யூட்ட**
> **தானவள் சிறுபுறம் கசையினன்”** (ஐங். 404:1-2, ப. 454)

என மிகப் பெரும்பான்மையாக மகன் பற்றிய குறிப்புகளே இடம்பெற்றுள்ளன. பெண்மகவு பிறப்பு பற்றிய குறிப்பு மிகமிக அரிதாகவே இடம்பெற்றுள்ளது.

**"குன்றக் குறவன் கடவுட் பேணி**
**இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள்"** (ஐங். 257:1-2, ப. 303)

என குறவன் வரம்வேண்டிப் பெற்ற மகள் பற்றிய குறிப்பு இடம்பெற்றுள்ளது.

**"ஈன்று புறந்தருதல் என்தலைக்கடனே**
**சான்றோ னாக்குதல் தந்தைக்குக் கடனே"**(புறம். 312:1-2, ப. 452)

எனவும் இந்த உலகத்தில் புகழையும் இறப்புக்குப் பின் மறுமையுலகப் பேற்றையும் தரும் இயல்புடையது; பகைவரும் விரும்பும் புதல்வரைப் பெறுதலே செம்மையானது; (அகம். 66) எனவும் மகன் பிறப்பே முதன்மையாகப் பேசப்பட்ட சங்ககால வாழ்க்கையில் ஆண்குழந்தையே,

**"நள்ளென் கங்குற் கள்வன் போல**
**அகன்றுறை யூரனும் வந்தனன்**
**சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே"**(நற். 40:10:12, ப. 452)

எனப் பெயரன் எனவும் குறிப்பிடப்பட்டுள்ளான். இவனே,

**"அகன்பெருஞ் சிறப்பின் தந்தை பெயரன்"** (ஐங். 403:3, ப. 454)

எனவும் குறிப்பிடப்பட்டுள்ளான். இந்தப் பெயர் தந்தைவழிக் குடும்ப முறையை வெளிப்படுத்துவதை உணரலாம். பெண்கள் இவ்வாறு பெயர்த்தி என அழைக்கப்பட்டதற்குச் சான்றில்லை.

உன் தமையன் எனப் பொருள்படும் 'நும்முன்'[39] எனும் சொல்லும் அவன் தமையன் எனப்பொருள்படும் 'தமன்'[40] எனும் சொல்லும் இடம்பெற்றுள்ளன. இவற்றுடன் என்தமையன் எனப்பொருள்படும் எம்முன்[41] எனும் சொல்லும் வந்துள்ளது.

இவற்றுடன் 'தம்பி'[42] எனும் சொல்லும் வழக்குப் பெற்றுள்ளது. இதுபோன்று தங்கை எனும் சொல் 'கானவர் தங்கை'[43] கொலையில் எயினர் தங்கை[44] எயினர் தங்கை[45] எனவும் 'செல்வத் தங்கையர்'[46] போன்றவை தலைவியின் தமையனைக் குறிப்பிடும் தொடர்களாகும். இங்ஙனம் தலைவிக்குத் தமையன், தம்பி இருந்ததைக் குறிப்பிடும் சங்கப்பாடல்கள், தலைவனுக்குத் தங்கையோ, தமக்கையோ இருந்ததாகக் குறிப்பிடவில்லை என்பது அறியத்தக்கது.

தந்தை எனும் நிலையில் எட்டுத்தொகையில் இடம்பெற்றுள்ள இடங்கள், 'தந்தை',[47] 'நுந்தை',[48] எந்தை[49] என்பவையாகும். இவற்றுடன் கணவன் எனும் நிலையிலும் அமைந்துள்ளன. கணவன்[50] எனும் சொல் எட்டுத்தொகையில் பல்வேறு பாடல்களில் இடம்பெற்றுள்ளன. இவற்றுடன் மனைவி, மனையோள், மனையாள் என்ற சொற்களும்

மகன், மகள், பெயரன், தங்கை, தம்பி தொடர்பான சொற்களே இடம்பெற்றுள்ளன. ஒரே ஒரு இடத்தில் மட்டும் இவன் தந்தை தந்தை, நுந்தை தந்தை எனும் சொற்கள் இடம்பெற்றுள்ளன.[51] இவை தந்தையின் தந்தையாகிய பாட்டனை உணர்த்த ஆளப்பட்டுள்ளன. ஆகவே எட்டுத்தொகைப் பாடல்களில் பாட்டன், பாட்டி, தாய், தந்தை, மகன், மகள், தமையர், தந்தை, அக்கை எனும் இவர்களைக் கொண்ட மூன்று தலைமுறைகளை உடையதாகவும் அதிலும் குறிப்பாகத் தாய், தந்தை, மகன், மகள் எனும் இரண்டு தலைமுறைகளைப் பற்றியதாகவே உள்ளன. குறிப்பாக எட்டுத்தொகைப் பாடல்கள் தலைவன் தலைவி என்னும் இளந்தலைமுறை பற்றிய பாடல்களாகவே உள்ளன. எனவே மற்ற குடும்ப உறவுகள் பற்றிய விரிவான செய்திகள் இடம்பெறவில்லை.

சங்க காலக் குடும்பங்களில் இடம்பெறும் ஆடவர் தங்கள் குடும்பத்தினருடன் இருந்த நிலையை,

> **"வாள்தக வைகலு முழக்கும்**
> **மாட்சி யார் மற்றிவள் தன்னை மாரே"** (புறம். 342:14,15 ப. 486)
> **"அஞ்சுதகவு வுடையரிவன் தன்னைமாரே"** (புறம். 353:17, ப. 498)
> **"அடுமுரண் முன்பிற் றன்னையை ரேந்திய**
> **வடிவே லெஃகிற் சிவந்த வுண்கண்"** (புறம். 350:8-9, ப. 495)

என தமையன்மார், தாய் தந்தையருடன் இருந்த நிலை காட்டப்பட்டுள்ளது. மேலும்,

> **"நெருநை**
> **எம்முற் றப்பியோன் தம்பியொ டொராங்கு**
> **நாளைச் செய்குவென் அமரெனக் கூறி"** (புறம். 304:4-6, ப. 444)

என ஒரு குடும்பத்தில் வந்த அண்ணன் தம்பி இருவருடன் நடந்த அடுத்தடுத்தப் போர்ச் சூழல்கள் காட்டப்பட்டுள்ளன. ஒரு குடியைச் சார்ந்தவர் வழிவழியாக அரசர்களின் வழிவழியாக மரபிற்குப் பாதுகாவலாக இருந்து வந்துள்ளமையை,

> **"நுந்தை தந்தைக் கிவன்றந்தை தந்தை**
> **எடுத்தெறி ஞாட்பி னிமையான் தச்சன்**
> **அடுத்தெறி குறட்டி னின்றுமாய்ந் தனனே"** (புறம். 290:3-5 ப. 431)

என்று புறநானூற்றுப் பாடலடிகள் வழி அறியலாம். தன் தமையன், கணவன், இளமகன் எனும் மூவரையும் ஒரு தாய் போருக்கு அனுப்பிய சூழல் பாடப்பட்டுள்ளது. (புறம். 279) தாய், தந்தை, மகள், மகன் எனும் உறுப்பினர்களைச் சங்க இலக்கிய அகப்புறப்பாடல்கள் வெளிக்காட்டியுள்ளன. ஐங்குறுநூற்றின் முல்லைத்திணைப் பாடல்களில் தலைவன் தலைவி இருவரும் மகனுடன் இருந்த இருப்பு மட்டுமே காட்டப்பட்டுள்ளது.

ஐங்குறுநூற்றில் செவிலிக்கூற்றுப் பத்தில் இடம்பெற்ற கடிமனை சென்றுவந்த செவிலி உவந்த உள்ளத்தளாய் நற்றாய்க்குச் சொல்லியது எனும் கூற்றில் அமைந்த பத்துப் பாடல்களும் தாய், தந்தை, மகன் எனும் மூவரின் மகிழ்வான இருப்பைக் காட்டுவனவாக உள்ளன. இதனை,

**"மாத ருண்கண் மகன்விளை யாட**
**காதலித் தழீஇ யினிதிருந் தனனே**
**தாதார் பிரசம் ஊதும்**
**போதார் புறவின் நாடுகிழ வோனே" (ஐங். 406, ப. 456)**

என சான்று பகிர்கின்றது. இதைப்போன்று விரவுப்பத்தில் வரும்,

**"புறவணி நாடன் காதல் மடமகள்**
**ஒண்ணுதல் பசப்ப நீசெலின் தெண்ணீர்**
**போதவிழ் தாமரை யன்னநின்**
**காதலம் புதல்வன் அழுமினி முலைக்கே" (ஐங். 424, ப. 474)**

எனும் செலவழுங்குவித்த பாடலும் தாய், தந்தை, மகன் எனும் மூவரின் இருப்பைட் காட்டுவதாக உள்ளது. இங்கே தந்தையாக மகனாக 'ஆடவர்' விளங்கும் பரிமாணத்தைக் காணமுடிகின்றது.

குறுந்தொகையில் வரும், "முளிதயிர் பிசைந்த காந்தள் மெல்விரல்"[52] எனும் பாடலில் தலைவன் தலைவி இருவரும் தனியே உறையும் வாழ்க்கை காட்டப்பட்டுள்ளது.

சங்க இலக்கியத்தில் தனிக்குடும்ப நிலையே அதிக அளவில் சுட்டப்பட்டுள்ளது. கூட்டுக்குடும்ப நிலை சங்க இலக்கியத்தில் இல்லாத ஒரு நிலை இது மேலாய்விற்குரியது.

பாணர் முல்லைப்பண்களைப் பாட மனைவி முல்லைமலர் மாலைச்சூட, தலைவன் தன் மகனுடன் மகிழ்ந்திருந்ததை,

**"பாணர் முல்லை பாடச் சுடரிழை**
**வாணுதல் அரிவை முல்லை மலைய**
**இனிதிருந்தனனே நெடுந்தகை**
**துனிநீர் கொள்கைத் தன் புதல்வனொடு பொலிந்தே" (ஐங். 408, ப. 458)**

என்னும் ஐங்குறுநூற்றுப் பாடல் வழி அறியலாம். "மறி இடைப் பருத்த மான் பிணை போலத் தலைவனும் தலைவியும் மகனை நடுவனாகக் கொண்டு இன்பவாழ்வு வாழ்கின்றனர்"[53] என்பர் சங்கப் புலவர் பேயனார்.

"தலைவனின் அகவாழ்வு சிறக்க பார்ப்பான், பாங்கன், பாணன், இளையர், விருந்தினர், அறிவர்"[54] கண்டோர் என்ற ஆடவர் இடம்பெறுவதைத் தொல்காப்பியம் வழி அறிகிறோம்.

**பார்ப்பான்**

பார்ப்போர் காமநிலை உரைத்தல், நிமித்தங் கூறல், போருக்குச் செல்லலாம் அல்லது செல்லக்கூடாது என்பதை ஆராய்ந்து கூறுதல், தலைவன் குறிப்பினைத் தலைவிக்கு விளங்கக்கூறுதல், பசுவோடு தொடர்புடைய நிமித்தம் கூறுதல் ஆகிய செயல்களின் மூலம் குடும்பத்தில் பங்கேற்பர்.''[55]

சங்க காலத்தில் குடும்பத்தில் மட்டுமன்றி அரசியலிலும் பார்ப்பனர் பெருஞ்செல்வாக்கு பெற்றிருந்தனர். பெரும் போர்கள் நிகழ்ந்த காலத்துப் போர் நிறுத்தம் வேண்டிச் சமாதானத் தூதுவர்களாக அனுப்பப்பட்டனர் என்பதை,

**“வயலைக் கொடியின் வாடிய மருங்குல்**
**உயவல் ஊர்திப் பயலைப் பார்ப்பான்**
**எல்லி வந்து நில்லாது புக்குச்**
**சொல்லிய சொல்லோ சிலவே; அதற்கே**
**ஏணியும் சீப்பும் மாற்றி**
**மாண்வினை யானையும் மணிகளைந்தனவே” (புறம். 305, ப. 445)**

என்ற பாடல் மூலம் அறியலாம்.

**பாங்கன்**

பாங்கன் என்ற சொல் தோழன் என்று பொருள்படும். ஒரு குடும்பத்தலைவனுக்கு நண்பர்களின் தொடர்பு, தகுந்த நன்மையைத் தந்த நிலையைச் சங்க இலக்கியப் பாடல்கள் பகர்கின்றன.

தலைவன் சரியான வழியில் செல்லாவிட்டால் இடித்துத் திருத்துவது தோழனின் கடமையாக இருந்தது. தலைவனைக் களவொழுக்கக் காலத்து மறுத்துரைத்தலும், கற்பொழுக்கக் காலத்துப் பரத்தையர் பிரிவுக்கு உடன்படாது கூறலும் பாங்கன் கடமை என்பதை,

**“மொழி எதிர் மொழிதல் பாங்கற் குறித்தே” (தொல். கற். 41, ப. 89)**

என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

**பாணன்**

பாணன் என்பான் சங்க காலத்தில் பாணர் குலத்தில் பிறந்து தலைவனோடு தோழமை பூண்டிருப்பவன். யாழில் வல்லவனாக விளங்கும் இப்பாணன் நெய்தல் நிலக்குடிமகனாவான். “வலைவல் பாண் மகன்”[56] என்ற தொடரால் இவன் மீன்பிடித்தல் தொழிலிலும் வல்லவன் என்பதை அறிய முடிகிறது.

அக இலக்கியத்தில் தலைவன் தலைவியரிடையே பாணன் கொண்டுள்ள தொடர்பு மிகுதியும் பேசப்படுகிறது. பரத்தையினின்றும் மீண்ட தலைவனுக்காகத் தலைவிபால் சென்று குறை நயந்து வாயில் வேண்டுவது, தலைவன் தலைவியைப் பிரிந்து சேட்புலத்து உறையும் போது தலைவிபால் திரும்ப வேண்டும் என்பதை நினைவூட்டுவது தலைவன் வருகையைத் தலைவிக்கு உணர்த்துதல் போன்றவை பாணனின் செயல்களாகும்.

**இளையர்**

இளையர் என்ற சொல் குடும்பத்தில் ஏவல் வேலைகளைச் செய்வாரைக் குறிக்கும்.

**"யான் கண்டனையர் என் இளையரும்" (புறம். 191:4 ப. 321)**

என்ற பிசிராந்தையார் கூற்றால் இதனை அறியலாம். குறுந்தொழிலுக்கும் காப்பிற்கும் உரியர் இளையோர் என்பர் தொல்காப்பியர். இதனை,

**"உழைக்குறுந் தொழிலும் காப்பும் உயர்ந்தோர்க்கு**
**நடக்கை எல்லாம் அவர்கட் படுமே" (தொல். கற். 30, ப. 87)**

என்று இந்நூற்பா உணர்த்துகின்றது. இற்றை நாளில் சில உயர்நிலை மாந்தர்க்கு மெய்க்காப்பாளரை நியமிக்கின்றனர். இம்மெய்க்காப்பாளராக அக்காலத்தில் நியமிக்கப் பெற்றவர் இளையோர் எனப்பட்டனர்."[57]

தலைவனும் தலைவியும் உடன்போக்கில் செல்ல உறுதிசெய்தவிடத்து அவர்கள் செல்லும் வழி எத்தகையது எனக்கூறல், ஒன்றாகச் சென்று வந்த காரியத்தை முடித்ததையும், இன்னவிடத்து இன்னது செய்க என்று ஏவியவிடத்து அதனை முடித்து வந்தமை கூறல், தலைவனது ஏவலைத் தாம் கேட்டல், தலைவன் வினவாத போதும் தலைவியின் நலம் கருதி அவனுக்கு அறிவுரை கூறுதல், சுரத்தில் கண்ட நிமித்தம் முதலியவற்றைத் தலைவனுக்கும் தலைவிக்கும் உறுதிபயக்குமாறு எடுத்துக் கூறல், போன்றவை இளையர்க்குரிய செயல்கள்"[58] எனத் தொல்காப்பியம் குறிப்பிடுகின்றது.

**விருந்தினர்**

விருந்து என்பது புதுமை எனப் பொருள்படும். நாள்தோறும் புதியவராக வீட்டிற்கு வருவோர் விருந்தினர் எனப்பட்டனர். முன்பின் அறியாத அவர்களை அன்புடன் வரவேற்று உணவிட்டு உபசரிப்பது இல்லறத்தானின் கடமையாகக் கருதப்பட்டது. இத்தகைய விருந்தினர் வரவு தலைவன் தலைவி இடையேயான ஊடலைத் தீர்க்கும் வாயிலாக விளங்கியது. இத்தகைய அனைவரும் குடும்பத்துடன் தொடர்புடைய உறவு முறைகள் ஆவர்.

நானில மக்களைப் போன்றே அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் எனும் தொழில் முறையால் வேறுபட்ட ஆடவரும் எட்டுத்தொகையில் இடம் பெற்றிருக்கும் தன்மையினைக் காண்போம்.

**தலைவனின் புறவாழ்வில் தொடர்புடைய ஆடவர்**

**அந்தணர்**

அந்தணர் வேதம் ஓதி, அறுதொழில் புரிந்து, முக்திபேணி, அரசர் பொருட்டாகவும் பிறர் பொருட்டாகவும் வேள்வி முதலியன செய்து எல்லாருடைய போற்றுதலுக்கும், உரியராய் வாழ்ந்தனர். இவர்களைக் கொண்டு பேரரசர்கள், குறுநில மன்னர்களும் செல்வர்களும் யாகங்களைச் செய்வித்தனர். இவர்களுக்கு நிலமும் பொன்னும் பிற பொருள்களையும் தானமாக அளிக்கப்பெற்றன. நிலப்பகுதிகளும் மானியமாகத் தரப்பட்டன[59] என்கிறது, புறநானூறு.

பொதுவாக அந்தணர்கள் சமூகத்தில் சிறந்த ஒழுக்கம் உடையராக மதிக்கப்பட்டனர். இவர்கள் வருந்தும்படியான எச்செயலையும் மன்னர்கள் செய்வதில்லை.''[60] "இறைஞ்சுக பெரும நின் சென்னி, சிறந்த நான்மறை முனிவர் ஏந்துகை எதிரே''[61] என்று பாண்டியன் பல்யாக சாலை முதுகுடுமிபெருவழுதிக்கு அறிவுரை வழங்குவதிலிருந்து மன்னர்கள் அந்தணர்களைப் பணிந்து போற்றும் உணர்வு கொண்டவர்கள் என்பதை அறிய முடிகிறது.

**அரசர்**

> **"படையும் கொடியும் முரசும்**
> **நடைநவில் புரவியும் களிறும் தேரும்**
> **தாரும் முடியும் நேர்வன பிறவும்**
> **தெரிவுகொள் செங்கோல் அரசர்க்கு உரிய"** **(தொல். மர. 72, ப. 222)**

என்று தொல்காப்பியர், அரசனுக்கு கொடி, குடை, முரசு, பூ, வாள் முதலியனவும் நால்வகைப் படையும் பெற்று வந்தனர் என்று குறிப்பிட்டுள்ளார்.

கல்வி கற்றல், கற்றோரை ஆதரித்தல், குடிகளைப் பாதுகாத்தல், தீயவரை ஒறுத்தல், வேள்வி செய்தல் என்பன அரசனுக்குக் கடமைகளாகத் தொல்காப்பியம் கூறுகின்றது. இதனை, 186ஆம் புறப்பாடல் உணர்த்துகின்றது. குடிமக்களின் உயிரையும் உடைமையையும் பாதுகாப்பது அறம் எனப்பட்டது. அறத்தைப் பாதுகாப்பது அரசனது கடமை. அக்கடமை சமுதாய ஒழுங்கு எனப்பட்டது. அரசனது செங்கோல் ஆட்சி சமுதாய ஒழுங்கை நிலைநாட்டியது.

அரசன் பல்வேறு யாகங்களைச் செய்யும் பொழுதும், தன் பிறந்தநாள் விழாவிலும், பிற சிறந்த நாட்களிலும் பலவகைத் தானங்களைச் செய்வது வழக்கம். நாட்டு நலத்திற்கும், குடிமக்கள் நலத்திற்கும், இவ்வாறு தானம் செய்தல் அரசனது கடமை எனக் கருதப்பட்டது. இத்தகைய தானங்கள் மகாதானங்கள் எனப்பட்டன.

அரசனின் ஆட்சி வெற்றி பெறுவது, சிறந்த அறநெறியை அடிப்படையாகக் கொண்டது. இதனை,

**"கடுஞ்சினத்த கொல்களிறும், கதழ்பரிய கலிமாவும்,**
**நெடுங்கொடிய நிமிர்தேரும், நெஞ்சுடைய புகல்மறவரும் என**
**நான்குடன் மாண்டது ஆயினும் மாண்ட**
**அறநெறி முதற்றே அரசின் கொற்றம்"** (புறம். 55:7-10, ப. 159)

என்ற புறப்பாடல் மூலம் அறியலாம். அரசர்கள் சிறந்த வீரத்துடன் வாழ்ந்தனர். இதனை,

**"உறுதுப்பு அஞ்சாது உடல்சினம் செருக்கிச்**
**சிறுசொற் சொல்லிய சினங்கெழு வேந்தரை**
**அரும்சமம் சிதையத் தாக்கி, முரசமொடு**
**ஒருங்கு அகப்படேனாயின், பொருந்திய**
........ .............. ................ ..............
**இரப்போர்க்கு ஈயா இன்மையான உறவே"** (புறம். 72:6-9, ப. 183)

என்ற பாடலில் நெடுஞ்செழியனுடைய வீரமும், நேர்மையும் புலவர்களுடைய பெருமையும் காணப்படுகின்றன. மேலும்,

**"ஒன்னார்**
**ஆர் எயில் அவர்கட்கு ஆகவும் நுமது எனப்**
**பாண் கடன் இறுக்கும் வள்ளியோய்!"** (புறம். 203:10-11, ப. 337)

என்ற பாடலடிகள் இளஞ்சேட் சென்னியின் வீரத்தை விளக்கும். இத்தகைய தன்னலமற்ற ஆண்மையும், வீரமும், வள்ளல் தன்மையும், புலவர்களைப் போற்றும் தன்மையிலும் அரசர்கள் சிறந்து விளங்கினர் என்பதையும் அறநெறியோடு ஆட்சி புரிந்தனர் என்பதையும் சங்கப் பாக்களில் காண முடிகிறது.

**வணிகர்**

பல்வகைத் தொழில்களுள் ஒன்றாக அமையும் வணிகம், வாணிகம் என்பன ஒருபொருள் குறித்த சொற்களாகின்றன. "இலாப நோக்கில் பொருட்களை வாங்கி விற்கும் தொழில் வணிகம் என்று க்ரியாவின் தற்காலத் தமிழகராதி"[62] இதற்கு விளக்கமளிக்கிறது. வாணிகம் என்ற சொல் தொல்காப்பியத்திலும்[63] இடம்பெற்றுள்ளது. "அறவிலை வணிகன்",[64] புண்ணிய வணிகர்"[65] என்பனவற்றால் வணிகம் என்ற சொல்லும் வழக்கில் இருந்ததை அறியலாம்.

தொழிலைச் செய்வோர் வணிகர், வாணிகர் என்றழைக்கப்பட்டதுடன் விலைகூறி விற்பதால் விலைஞர்"[66] என்றும் தன்னிடம் உள்ள பொருள் இன்னது என இயம்பி விற்பதால் பகர்வர்",[67] பகர்நர்"[68] எனவும் அழைக்கப்பட்டனர். வணிகருடைய முக்கிய தொழில் வணிகம். இவர்கள் வாழ்ந்த இல்லங்கள் மலைபோன்று உயர்ந்து விளங்கின. இவற்றின் கூரைகளில் பறவைகள் தங்கி இளைப்பாறி மேலே பறக்குமாம். அறனெறி சிறிதும்

பிழையாது இல்லறத்திற்குரிய வழிகளில் வாழ்க்கை நடத்தினர். மலை, நிலம், நீர் இவைகளிலிருந்து கிடைத்தப் பல்வகைப் பண்டங்களையும் விற்றனர். நான்மறையோர்க்குத் தானம் முதலியன கொடுத்து, வாழ்கின்றனர் கொள்வதில் கூடுதல் குறைவின்றியும் கொடுப்பதில் நேர்மையாகவும் வாணிகத்தைப் போற்றினர். இவர்கள் வாழ்ந்த தெருவினை,

> **"ஆங்கு ஓர்சார் உண்ணுவ, பூசுவ, பூண்ப, உடுப்பவை**
> **மண்ணுவ, மணி, பொன் மலையகடல்**
> **பண்ணியம், மாசு அறு பயம்தரு, கருகப்**
> **புண்ணிய வணிகர் புனைமறுகு ஒருசார்"** (பரி. 1:2-25, ப. 47)

என பரிபாடல் இயம்புகிறது. வணிகம் செய்யச் செல்வோர் தமக்கும் தம் பொருளுக்கும் பாதுகாப்புக் கருதி கூட்டமாகச் செல்வர். ஆறலைக் கள்வரால் வணிகர் பாதிக்கப்பட்டதை,

> **"சாத்து எறிந்து**
> **அதர் கூட்டுண்ணும் அணங்குடைப் பகழிக்**
> **கொடுவில் ஆடவர் படுபகை வெரீஇ"** (அகம். 167:7-9, ப. 200)

என்ற பாடல் வழி அறியமுடிகிறது. எனவே வணிகர் படைக்கலங்களுடன் சென்றதை அகம் "பொறைமலி கழுதை நெடுநிரை தழீஇய திருந்துவாள் வயவர்'[69] எனக் காட்டுகிறது. வணிகர் தமது தொழில் தொடங்குமுன் இரவலர்க்குத் தன் விற்பனைப் பொருளைக் கொடுத்து உதவினர். இதனை, "இரந்தோர் வறுங்கலம் மல்க வீசி"[70] என்ற பாடலடிகள் வணிகரின் ஈகையுணர்வை வெளிக்காட்டுகிறது.

பொருள் ஈட்டலைத் தொழிலாகக் கொண்ட இவர்கள் அறவாழ்க்கையில் ஆர்வம் காட்டி உயிர்க்கொலைத் தவிர்த்தனர். பிறர் பொருளைத் தம் பொருளாக்கும் களவு ஒழித்தனர். எருதுகளை, பசுக்களைக் காத்து வேள்விகளைச் செய்தனர். எனவே இவர்தம் வாழ்க்கை, பகை ஒழித்து சுற்றம் பேணிய சீரார்ந்த வாழ்வாக நெறிப்படுத்தப்பட்டுள்ளது. வணிகர் கல்வியிலும் சிறந்தோங்கி இலக்கியம் படைக்கும் புலமையாளராய் விளங்கியதை, பொன் வணிகனார் நப்பூதனார், மதுரை அறுவை வணிகன் இளம் வேட்டனார், சீத்தலைச் சாத்தனார், மதுரைப் பண்டவாணிகன் இளந்தேவனார் என்பவர்களைக் கொண்டு அறியலாம்.

**வேளாளர்**

உழவுத் தொழில் புரியும் உழவர்களே வேளாளர் எனப்பட்டனர். உழவுத் தொழிலால் நெல் முதலிய பொருள்களை விளைவிக்கும் உழவர், நாட்டின் உயிர்நாடியாகக் கருதப்பட்டனர். மென்புலத்துத் தாம் விளைவிக்கும் உணவுப்பொருள்களை வன்புலத்து வாழும் ஏனைய மக்களுக்குக் கொடுத்து உதவினர். "விளைக வயலே, வருக இரவலர்"[71] எனும் கோட்பாட்டோடு வருவார்க்கு வரையாது வழங்கும் கொடையுணர்வு கொண்டவராகத்

திகழ்ந்தனர். கதிர் அரிவாள் கீழ்மடையில் கொண்ட மீனையும், உழவர் உருபடையால் வெளிப்பட்ட ஆமையும், கரும்பில் இருந்து எடுத்த தேனையும் சேர்த்து மகளிர் பறித்து வந்த பூக்களோடு வரும் விருந்தினர்களை ஓம்பும்"[72] மன உணர்வினைப் பெற்று வாழ்ந்தனர்.

**"உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரே**
**உண்டி முதற்றே உணவின் பிண்டம்"** (புறம். 18:19-20, ப. 102)

என்றபடி உணவுப் பொருள்களை உலகிற்கு வழங்கியிருப்பவர்கள் இவ்வேளாளர்களே ஆவர். அரசர்கள் வெற்றி மாலை சூடுவதும் இவர் செய்யும் பெருந்தொழிலினால் தான் என்பதை,

**"பொருபடை தரூஉம் கொற்றமும் உழுபடை**
**ஊன்றுகால் மருங்கின் ஈன்றதன் பயனே"** (புறம். 35:25-26 ப. 131)

என வெள்ளிக்குடி நாகனார், கிள்ளி வளவனுக்கு எடுத்து மொழிவதிலிருந்து வேளாளர்களின் பெருமை நன்கு புலனாகின்றது.

**கொல்லர்**

கொல்லர் இரும்புக் கருவிகளைச் செய்பவர். இவரது உலைக் கூடத்தில் இரும்பைக் காய்ச்சி அடிப்பர். சூடான பொருளைப் பற்றி எடுப்பதற்குரிய கொடிறு (இடிக்கி), இரும்பை அடித்தற்குரிய பட்டடை, வெம்மையை ஆற்றும் நீர்த்தொட்டி போன்றவை அமைந்திருக்கும்."[73]

கொல்லர்கள் பயன்படுத்திய உலைகள் மிதித்தும், ஊதியும் இயக்கப்பட்டன.[74] உலையிலிருந்து வெளிவரும் பெருங்காற்று, துன்பத்திலிருப்பவர் வெளிவிடும் பெரும் மூச்சுக்கு ஒப்பாகும்.[75] போருக்குரிய கருவிகளை வடித்துத் தருவதும், களிறுகளின் கொம்புகளுக்குப் பூண் அமைப்பதும், யானைகளைக் கட்டுவதற்குரிய சங்கிலிகளைச் செய்வதும் இவர்களுடைய பணியாகும்.[76]

கொல்லர்கள் சிறந்த வலிமையுடனும், போருக்குத் துணைபுரியும் நாட்டுப்பற்றுணர்வும் பெற்றுத் திகழ்ந்தனர் என்பதை மேற்கண்ட பாடல்கள் மூலம் பெறப்படுகிறது.

**பொன்செய் கம்மியர்**

இவர்கள் பொன்னை நெருப்பில் உருக்கி ஆபரணங்கள் செய்து தருபவர். வேங்கையின் பூ இவர்கள் செய்யும் பொன் அணிகளைப் போல அழகுற்று விளங்குகிறது.[77] தாது அளைந்து வரும் வண்டின் தோற்றம் பொன்னுரைகல் போல் உள்ளது[78] என்பர். ஆபரணம் செய்யும் தட்டாரோடு பொன்னுரைகாண் தட்டாரும், பணித்தட்டாரும் வெவ்வேறு பணிகளைச் செய்தனர்.[79]

கிளி தன் வாயிற்கொண்ட வேப்ப ஒண்பழம் போலும் பொன்மணி கம்பியாக ஆக்கப்படுமுன் பொற்கொல்லரால் விரல்களுக்கிடையிற் பற்றப்படுகிறது''[80] கருங்குயிலின் சிறகுகளில் பளபளக்கும் மாமரத்தின் பூந்தாதுக்களைப் போலப் பொற்கொல்லரின் உரைகல் பொன் தாதுக்களால் மின்னுகிறது.[81] இவர்கள் எட்டுத்தொகையில் இடம்பெறும் ஆடவர், பெண்டிர்க்கு அழகு சேர்க்கும் அணிகளைச் செய்து கொடுக்கும் கலையுணர்வு கொண்டவராக விளங்கினர்.

**செம்பு, முத்துமணி செய் கம்மியர்**

செம்பை நிறுத்து வாங்கி, பானை முதலிய கலங்களைச் செய்வதற்கு மண்ணால் உருசெய்து, செம்பை வார்த்து அமைப்பர்.[82] உலோகத்தில் செய்த பாத்திரங்களைக் கடைந்து அழுத்தம் கொடுப்பர்.[83]

முத்தையும் மணியையும் மூடியிருக்கும் மாசினைப் போக்கி ஒளிபெறச் செய்து துளை முதலியன இடும் பணி செய்யும் ஒருவகைக் கம்மியர் ஆவர்.[84] தமிழகத்தில் மேற்கு மலையில் காவிரி தோன்றும் இடத்தையடுத்தும், கொன்கானம் நாட்டிலும் [85] பந்தர் என்ற ஊரிலும் கிடைத்த பொன், முத்துகளைக் கொண்டு [86] விலை மதிப்புடைய ஆபரணங்களைச் செய்யும் கலையுணர்வு கொண்டு விளங்கினர்.

**சங்கு அறுப்போர்**

இத்தொழில் வேளாளப் பார்ப்பார்க்கு உரியதாகும். வாள் அரத்தினாலே சங்குகளை அறுத்துச் சுத்தம் செய்வார் [87] சங்கிலிருந்து வளையல்களும் செய்வர்.[88] சங்கு வளையல் செய்வோரைக் கோடு போழ் கடையினர்'' என மதுரைக்காஞ்சி குறிப்பிடுகிறது.[89] இவர்கள் சங்கிலிருந்து ஆபரணங்கள் செய்யும் கலை உணர்வு பெற்றவராவர்.

**தச்சர்**

மரத்தொழில் செய்வோர் தச்சர் ஆவர். மரங்களில் தேர், கோடரி கைப்பிடி போன்றவைகளும் மர வேலைப்பாடுகளுடன் கூடிய கதவு முதலிய பொருட்களையும் செய்பவர். வீரன் ஒருவன் உடம்பில் தைத்திருக்கும் வேல்கள், தச்சரால் வண்டிச் சக்கரக் குடத்திற் பொருத்தப்படும் ஆரக்கால்கள் போல உள்ளன [90] என்பர். போரில் அதியமான், திங்கள் முழுவதும் கடுமையாகத் தச்சன் ஒருவன் செய்த கடுந்தேர்க்கு உவமையாகப்படுகிறான்.[91] இதன் மூலம் கடுமையான உழைப்பும் கலையுணர்வும் பெற்றவர் தச்சர் என்பதை அறிய முடிகிறது.

தச்சரின் கைத்தொழிலில் வல்ல சிறுவர் கோடரியோடு காட்டுக்குள் செல்வோர்க்குத் தமக்குரிய மரங்கள் கிடைக்காமற் போவதில்லை; அதுபோல கற்ற புலவர்கள் எத்திசைச் செல்லினும் அங்கு அவர்களுக்குச் சோறு கிடைக்காமற் போகாது[92] என்பதிலிருந்து

தச்சரின் பணி சிறப்பு வாய்ந்தது என்பதை அறியலாம். தேர்ப்படையினருக்குத் தேவையான தேர்கள் தச்சரால் உருவாக்கப்பட்டன. "புலம் தோறும் பரப்பியதேர்"[93] "நற்றேர்க் குழுவினர்"[94] என்ற பாடலடிகள் இதனை உணர்த்துகின்றன.

**குயவர்**

குயவர் "கலம் செய்கோ" "வேட்கோ" என்று அழைக்கப்பெறுவர்.[95] மண்ணைக் கொண்டு வலக்கைக் கலங்களைச் செய்து சூளையில் சுட்டு மண்பாண்டங்களை மக்களுக்கு வழங்குவர். கலங்களை வளைவதற்குத் திகிரி என்னும் கருவியில் மண்ணை வைத்துத் தங்கள் கை வண்ணத்தினால் நினைக்கும் உருக்களெல்லாம் செய்வதுபோல் தன் அரசில் தான் நினைத்ததெல்லாம் கைகூடும் பெற்றியனாக அரசன் நலங்கிள்ளித் திகழ்ந்தான் என்பர்.[96] இக்குயவர் நொச்சி மாலை அணிந்து தெருக்களில் சென்று ஊரில் நிகழும் விழாக்களை அறிவிக்கும் பணியையும் விழாவிற்காக மன்றத்தில் கள் மற்றும் பலிகளை அளித்தலும் இவர்களுடைய உரிமைத் தொழிலாக அமைந்தது[97] இத்தகையோர் எதையும் சிறந்த வகையில் மாற்றும் திறனுடையோர் ஆவர்.

**ஆடை நெய்வோர்**

வன்புலத்துக் காடுகளில் இல்லங்களையடுத்து, வேலிபோல், பருத்தி பயிரிட்டனர். "பருத்தி வேலிச் சீறூர்"[98] "பருத்தி வேலிக் கருப்பை பார்க்கும், புன்புலம் தழீஇய அங்குடிச் சீறூர்"[99] எனும் பாடலடிகள் மூலம் அறியலாம். "முதிர்ந்து வெடித்த பருத்திக் காயிலிருந்து கிடைக்கும் பஞ்சை வில்லால் அடித்துச் சுத்தம் செய்வர்"[100] இவர்கள் நெய்த ஆடைகளைத் தெருவில் கொண்டு சென்று விற்பவர்களும், பட்டினால் நெசவு செய்பவர்களும் இருந்தனர்.

**பழங்குடியினர்**

துடியன், பாணன், பறையன், கடம்பன் என்னும் நால்வரையும் பழங்குடியினராகப் புறநானூறு சுட்டுவதை

> **"துடியன், பாணன், பறையன், கடம்பனென்று**
> **இந்நான்கல்லது குடியும் இல்லை"** (புறம். 335:7-8, ப. 477)

என்ற புறப்பாடல் மூலம் அறியலாம். இவர்களுள் பாணன் என்பான் யாழிசையில் வல்லவனாய்ச் செல்வர்களின் போற்றுதலுக்கு உரியவனாகிறான். தலைமகனுக்கு வாயிலாகத் தலைவிபால் தூது செல்லும் தொழிலும் இவனுக்கு உண்டு.[101] துடியன், பறையன் என்னும் பெயர்கள் "துடி" "பறை" என்னும் கருவிகளை இயக்குதலால் உண்டான பெயர்கள் ஆகும். இந்நால்வரும் "இழிபிறப்பாளார்" என்றும் "இழிசினர்" என்றும் கூறப்படுகின்றனர். "புலையன்" என்றும் இவர்களைக் குறிப்பதுண்டு.[102]

போர்ப்படையில் இவர்கள் துடிமுழக்கியும் வீரர்களுக்கு ஆயுதம் முதலியன கொடுத்தும் உதவினர். போருக்குப் பூக்கொள்ளுமாறு வீரர்களை அழைத்துப் பறையறையும் தொழிலும் இவர்களுக்கு உண்டு. இதனை,

**"பூக்கோள் இன்று என்று அறையும் மடிவாய் தண்ணுமை**
**இழிசினன் குரலே"** (புறம். 289:8-10, ப. 430)

**"வில்லுழுது உண்மார் நாப்பண் ஒல்லென**
**இழிபிறப்பாளன் கருங்கை சிவப்ப,**
**வலிதுரந்து சிலைக்கும் வன்கண் கடுந்துடி"** (புறம். 70:4-7, ப. 179)

**"மலையன் மாஊர்ந்து போகி புலையன்**
**பெருந்துடி கறங்கப் பிறநலம் புக்கு"** (நற். 77:1-2, ப. 101)

என்ற பாடலடிகள் மூலம் போர்ப்பறை கொட்டி ஆடவரின் வீரவுணர்வைத் தட்டியெழுப்பி போருக்குத் தயார் செய்பவராக இவர்கள் உள்ளனர் என்பதை அறியலாம். மேலும்,

**"துடியன் கையது வேலே அடிபுணர்**
**வாங்கிரு பருப்பிற் றீந்தொடைச் சீறியாழ்ப்**
**பாணன் கையது தோலே"** (புறம். 285:2-4, ப. 426)

என்ற புறப்பாடல் மூலம் துடியன் போரில் வீரர்களுக்கு வேல் வழங்கியமையும், பாணன் வீரர்களுக்குத் "தோல்" எனும் படையை வழங்கியதையும் அறிய முடிகிறது. இவர்கள் தழைமாலை, பூமாலை முதலியவற்றை அணிந்து கொள்வர்"[103] பாணர்களுக்கு மீன்பிடித்தல் தொழிலும், மீனைச் சீவி பக்குவம் செய்யும் தொழிலும் உண்டு."[104] என்பதையும் காணலாம்.

**யவனர்**

யவனர், தமிழ் வாணிகத்தின் பொருட்டு வேங்கடத்திற்கு அப்பால் உள்ள பிறமொழி வழங்கும் தேசங்களுக்கும் கடல் கடந்த தமிழகத்து வருவாராயினர்.[105] யவனர் எனப்படும் மேலை நாட்டினர் வணிக நிமித்தம் வந்ததோடு தமிழக மன்னருடைய காவற்படையிலும் கலந்து பணியாற்றினர்"[106] என்பதை அறிய முடிகிறது. இதனை,

**"பல்நூறு அடுக்கிய வேறுபடு பைஞ்ஞிலம்**
**இடம்கெட ஈண்டிய வியன்கண் பாசறை**
**களம் கொளற்கு உரியோர் இன்றித் தெறுவர**
**உடன் வீழ்ந்தன்றால் அமரே"** (புறம். 62:10-13, ப. 169)

என்ற பாடலடிகள் மூலம் உணரலாம். மேலும் யவனர் என்னும் பெயர் அகத்திலும்,[107] பதிற்றுப்பத்திலும்[108] இடம் பெற்றுள்ளது. யவனர்கள் வியாபார நோக்கோடு வந்து பொன்னுக்கு ஈடாக மிளகினைப் பெற்று சென்றதை,

**“சுள்ளிஅம் பேரியாற்று வெண்நுரை கலங்க**
**யவனர் தந்த வினைமான் நன்கலம்**
**பொன்னொடு வந்து கறியொடு பெயரும்**
**வளம் கொழு முசிறி” (அகம். 149:7-11, ப. 129)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. யவனர் தம் வாணிகத்தில் முசிறி நகரம் செல்வச் செழிப்புடன் விளங்கியதை,

**“மனைக்குவை இயகூறிமூடையால்**
**கலிச் சும்மைய கரைக்கலிக் குந்து**
**கலம் தந்த பொற் பரிசம்**
**கழித் தோணியான் கரைசேர்க்குந்து**
**...... ....... .................**
**நலஞ்சால் விழுப் பொருள்” (புறம். 343:3-11 ப. 487)**

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம்.

**வீரர்கள்**

வீரனாகிய ஆடவன் பொருள் ஈட்டுவதில் தன் காலத்தைச் செலவிடுபவனாக இல்லை. அவனுடைய தலைமையான நோக்கம் போர் செய்தல், போரில் கொள்ளையிடுதல், நாட்டுப் பற்றுணர்வு கொண்டு வீரத்துடன் செயல்பட்டு அரசனுக்குத் துணை செய்தல் ஆகும். போரில் வீரமரணம் எய்துவதைப் பெருமையாகக் கருதினர். வீரயுகமாகிய சங்க காலத்தில் வீரர்கள், வீரத்திலும், நாட்டுப்பற்றிலும், கடமையிலும் உணர்வு மேலோங்கிய வண்ணம் செயல்பட்டனர்.

வீரர்கள் போர்புரிந்த நேரம் போக எஞ்சிய நேரத்தில் வேட்டையிலும், வீர விளையாட்டிலும் ஈடுபட்டனர். குறுநிலத் தலைவனான ஓரி தன் பரிவாரங்களோடு வேட்டையில் ஈடுபட்டமை[109] காணமுடிகிறது. வீரர்கள் ஈடுபட்ட விளையாட்டுகளில் மற்போர் முதலிடம் பெறுகின்றது. சோழ இளவரசன் போர்வைக் கோப்பெருநற்கிள்ளி ஆமூரிலிருந்து வந்த வலிமல்லனைத் தோல்வியுறச் செய்தது மூலம் இதனை அறியலாம்.[110] இவ்விளையாட்டு உடல்வலிமையைப் பெருக்கிக் கொள்வதற்காக வீரர்களுக்கு அளிக்கப்பட்ட வீரபயிற்சியாகும். போர்க் குடும்பங்களைச் சேர்ந்த இளைஞர்கள் தம் வலிமையைக் காட்டும் களமாகப் படைக்கலன்களைப் பயன்படுத்துதல் குறித்து அகப்பாடலில் காணலாம்.[111]

**ஒற்றர், தூதுவர்**

அரசரின் போர்த்தொழிலில் நேரிடையாகப் பங்கு கொள்வோர் தவிர புறநிலையிலும் பலர் பங்கேற்றுள்ளதை, ஒற்றர் தூதுவர் என்னும் பெயரில் பணிபுரிந்தவரைக் கொண்டு

அறியலாம். பகைவரின் நிலையறிந்து போர் மேற்கொள்வதற்கு இவர்தம் பணி பெருந்துணையாகின்றது. ஒற்றர், பகைநாட்டவரின் எண்ணம், படைவலிமை குறித்த உண்மைநிலை முதலானவற்றை அவருடன் கலந்திருந்து மறைவாகச் செயல்பட்டுக் கண்டறிதல் ஆகும். அரசனின் வெற்றி இவர்தம் செய்திகளின் அடிப்படையில் அமைவதனால் அரசியலில் வெகுவாகப் பாராட்டப்படுகின்றனர். “புடைகெட ஒற்றின் ஆகிய வேய்”[112] என்பதைத் தொல்காப்பியம் துறையமைத்து இதனைச் சிறப்பிக்கிறது. கூடுமானவரை போரைத் தவிர்ப்பதற்கும் அரசர் முனைந்துள்ளனர் என்பதைத் தூது பணி உணர்த்துகிறது. இத்தகைய தூதிற்கு ஔவையின் புறப்பாடல்[113] சான்றாகிறது.

**புலவர்கள்**

ஞானம், அறிவு, கல்வி ஆகியன நிறைந்து காணப்படுபவர் புலவர் எனப்பட்டனர். “சங்கப் பனுவலின் தலைமைப் புலவ”[114] என்று சங்க இலக்கியப் பாடல்களை எழுதிய புலவர்களை உ.வே.சா குறிப்பிட்டுள்ளார். புலவர்கள் திறமையான அறிவும், கல்வியும், நுண்ணாய்வுத்திறனும் பெற்று விளங்கினர். புலவர்கள் அரசர், செல்வந்தர் போன்றோரைப் புகழ்ந்து பாடுவர். இவரின் புகழுரைகள் வெறும் பாராட்டாக அமையாது. கற்றறிந்தவனின் பாராட்டை, “புலவரால் புகழப்படுவோர் தம் வாழ்நாள் முடிவில் வலவன் இயங்கும், வான ஊர்தியிற் செல்லும் பெருமையுடையவர்”[115] என்ற பாடலில் சோழ வேந்தன் நலங்கிள்ளியைப் பாராட்டியதிலிருந்து அறியலாம். இத்தகைய புலவர்களின் பாராட்டைப் போற்றிப் பேணியதை அரசன் நெடுஞ்செழியன், “என் வஞ்சினத்தை நான் நிறைவேற்றத் தவறினால் மாங்குடி மருதன் தலைவனாக உலகம் புகழும் புலவர்கள் தங்கள் பாடல்களுக்கு நான் உரியவன் அல்லன் என்று கூறி என் நில எல்லையை நீங்குவாராக”[116] என்று பாடிய பாடற்கருத்தின் மூலம் அறியலாம்.

புலவர் ஒருவர் கோமக்களைக் கண்டிக்கும் துணிவு பெற்றிருந்தமையும்,[117] புகழ்பெற்ற தலைவனை இடித்துரைக்கும் நிலையையும் அறிய முடிகிறது. “நான் பொருளுக்காகப் பாடும் புலவன் அல்லன்; நான் பொருளுக்காகக் கலையை விற்பவன் அல்லன்”[118] என்றும் கூறப்பட்டதை அறியலாம். புலவர்களின் பாடல்கள் ஒழுக்க நெறியும் தத்துவப் பாங்குமான மனநிலையும் அதன் ஊடே ஓடுமாறு அமைந்த நிலை காணப்படுகிறது.

புலவர்களின் கல்வியை, “ஓங்கிய சிறப்பின் உயர்ந்த வேள்வி மாங்குடி மருதன்”[119] என்று உயர்த்தி நெடுஞ்செழியன் குறிப்பிட்டுள்ளார்.

எட்டுத்தொகை நூல்களில் ஆடவரின் பங்களிப்பு என்ற பகுதியின் மூலம், புறவாழ்க்கையில் ஆடவர் பின்வரும் உணர்வுகளைப் பெற்றவராய்த் திகழ்ந்தனர் என்று அறிய முடிகிறது.

- வேள்வி செய்தவன் மூலம் எல்லா உயிர்கள் பொருட்டும் இறைவனிடம் வேண்டும் உணர்வினர். (அந்தணர்)

- அறவுணர்வும், வீர உணர்வும், அருள் உணர்வும் கொண்டவர். (அரசர்)
- நடுவு நிலைமை, ஈகை உணர்வினர். (வணிகர்)
- உண்டி கொடுத்தோர் உயிர்கொடுத்தோர் என்பதற்கிணங்க வரையாது வழங்கும் கொடை உணர்வு கொண்டவர். (வேளாளர்)
- நாட்டுப் பற்றுணர்வோடு, போர்க்கருவிகளைச் செய்து தருபவர்.
- பொன், செம்பு, முத்து செய் கம்மியர், சங்கு அறுப்போர் சிறந்த அழகுணர்வு கொண்டோராய் மகளிர்க்குரிய ஆபரணங்களைச் செய்து உதவினர். (கொல்லர், பொன் செய் கம்மியர்)
- தச்சர், குயவர், ஆடை நெய்வோர் போன்ற தொழில்களில் ஈடுபட்ட ஆடவர் சமுதாயத்திற்குத் தேவையான மரச் சாமான்களையும் மண்பாண்டங்களையும் பருத்தி மற்றும் பட்டாடைகளை நெய்து கொடுக்கும் கடமையுணர்வினர்.
- சமுதாய இயக்கம் இடையறாமல் நடக்க பெரும் துணையாராக விளங்கினர்.
- துடியன், பாணன், பறையன், கடம்பன் என்னும் பழங்குடியினர் போர்ப்படையில் வீரர்களுக்குப் பூக்களை அளித்தும், போர்ப்பறை முழக்கி வீரர்களைப் போரில் ஊக்குவிக்கும் உணர்வினர். (தச்சர், குயவர், ஆடை நெய்வோர்)
- வீரர்கள் சிறந்த நாட்டுப்பற்று கொண்டு விளங்கினர்.
- பல்வேறு விளையாட்டுகளில் ஈடுபட்டு மகிழும் உணர்வு கொண்டவர். (வீரர்கள்)

இங்ஙனம் எட்டுத்தொகையில் ஆடவர் எனும் இவ்வியலில் எட்டுத்தொகை நூல்களின் குறிப்பும் சிறப்பும் மற்றும் திணை – பொருள் விளக்கம், அகப்புறப்பாடல்களில் ஆடவர் பெற்றிருந்த இடத்தினையும் எட்டுத்தொகைப் பாடல்களில் ஆடவரின் பல்வேறு பரிமாணங்கள் குறித்தும் இவ்வியலில் ஆராயப்பட்டது.

**தொகுப்புரை**

- எட்டுத்தொகையில் ஆடவர் எனும் இப்பகுதியில் எட்டுத்தொகை நூல்களின் அமைப்பு, சிறப்பு குறித்து விளக்கப்பட்டுள்ளது.
- நற்றிணையில் இடம்பெற்றுள்ள ஆடவர் கடமையில் சிறந்தும், குடும்பப் பொறுப்புணர்ச்சியுடனும், நாடுகாக்கும் மாண்பும், கடமை தவறாத உணர்வும் கொண்டவராகக் காணப்படுகின்றனர். இயற்கை நிகழ்வுகள் மனிதரின் எண்ணங்களைத் தூண்டி புத்துணர்வு பெறச் செய்கின்றன. அப்புத்துணர்வு ஆடவர் மனதிற்குள் உள்ள தனிப்பட்ட குணங்கள், நாட்டுப்பற்று, சமுதாயக் கடமைகள் அனைத்திலும் முன்னின்று அவரை வழிநடத்தியதை நற்றிணைப் பாடல்வழி அறியமுடிகிறது.
- குறுந்தொகையில் அரசாட்சி, நீதிமுறை போர்ச்செய்திகள், தலைவியை விட்டுப் பிரிய மனமில்லாத தலைவனின் உணர்வுகளைப் பிரதிபலிக்கும் கண்ணாடியாக விளங்கியதை அறியமுடிகிறது.
- ஐங்குறுநூறு, பாடல்களில் தலைவனின் உள்ளம் காதல் உணர்வாலும், கடமையுணர்வாலும் நிரம்பியிருந்ததைப் பாடல்களின் வழி அறியமுடிகிறது.
- பதிற்றுப் பத்துப் பாடல்கள், இரக்க உணர்வு, உறவினரைக் காக்கும் பொறுப்புணர்வு, சிறந்த ஒழுக்கமாகிய அற உணர்வு, நாடுகாக்கும் உணர்வு, போர்புரியும் உணர்வு போன்ற பல்வேறு உணர்வுகளைப் பதிற்றுப் பத்து பாடல்கள் வழி அறிய முடிகிறது.
- பரிபாடலில் திருமாலின் இயல்பு, பெருமை, வையையாற்றின் தன்மை மற்றும் பரிபாடலில் புலனாகும் தலைவனின் மன உணர்வுகள் பாடல்கள்வழி கண்டறியப்பட்டுள்ளது.
- கலித்தொகைப் பாடல்கள், ஐந்திணை ஒழுக்க நெறிமுறைகள், அதில் வெளிப்படும் ஆடவரின் உணர்வுகள், சமுதாயத்தில் ஆடவரின் செயல்பாடுகள், போன்றவை, பாடல்கள் வழி அறியமுடிகிறது.
- அகநானூறு பாடல்கள் மூலம் மூவேந்தரின் வாழ்க்கை வரலாறுகள், வீரச்செயல், வள்ளல் தன்மை போன்றவற்றை அறியமுடிகிறது.
- தாய்வழிச் சமுதாயம் தந்தைவழியாக மாறிய நிலையும், ஆடவர் பொருள் விளக்கமும்அவரது பரிமாண வளர்ச்சியும், குறித்துப் பாடல்கள் வழி அறியமுடிகிறது.



**அடிக்குறிப்புகள்**

1. சாமி சிதம்பரனார், எட்டுத் தொகையும் பண்பாடும், ப. 154.
2. சாரங்கபாணி, இரா., பரிபாடல்–1,2,3,4,13, கோவிலூர் மடாலயப் பதிப்பு.
3. மேலது., 5,8,9,14,17,18,19,21
4. மேலது., 6,7,10,11,16,20,22,24
5. மேலது., 11
6. மாதையன், பெ., சங்க இலக்கியத்தில் குடும்பம், ப. 69.
7. நா. மீனவன், முருகசாமி, தெ., அகநானூறு–6:13, களிற்றி யானைநிரை, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 16.
8. மேலது., 96:12–13, ப. 214.
9. மேலது., 58:5, ப. 131.
10. மாதையன், பெ., சங்க இலக்கியத்தில் குடும்பம், ப. 70.
11. இளங்குமரன், இரா., புறநானூறு–279, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 419.
12. மேலது., 278, ப. 418.
13. மேலது., 295, ப. 436.
14. மகாதேவன், கதிர்., நற்றிணை–26, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 33.
15. தமிழண்ணல், மீனவன், நா., அகநானூறு–310, நித்திலக்கோவை, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 35.
16. தமிழண்ணல், குறுந்தொகை–135, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 176.
17. மேலது., 90:4, 405:4, 409:2, 442:5.
18. மகாதேவன், கதிர்., நற்றிணை–276:4, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 369.
19. இளங்குமரன், இரா., புறநானூறு–338:12, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 481.
20. மாதையன், பெ., சங்க இலக்கியத்தில் குடும்பம், ப. 73.
21. மீனவன், நா., முருகசாமி, தெ., அகநானூறு–6:13, களிற்றியானை நிரை, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 16.
22. பரிமணம், அ.மா., பதிற்றுப்பத்து–76:16–19, 88:12, 90:19, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 279.
23. மேலது., 14:11, ப.32.
24. செல்வராசு. அ., ஆண் ஆளுமையில் பெண் கற்பு, ப. 10.
25. நாமதீப நிகண்டு, ப. 119.
26. மதுரைத் தமிழ் பேரகராதி
27. மேலது.,
28. மெய்யப்பன் தமிழ் அகராதி
29. மேலது.,
30. நர்மதாவின் தமிழ் அகராதி
31. மெய்யப்பன் தமிழ் அகராதி
32. மதுரைத் தமிழ் பேரகராதி

33. இளங்குமரன், இரா. புறநானூறு–342:11, 345:12, 355:17, கோவிலூர் மடாலயப் பதிப்பு, பக். 486, 489, 500.
34. குறுந்தொகை–272:4, ஐங்–365:1, புறம். 337:16, 350:8.
35. அண்ணாமலை, சுப. கலித்தொகை–86, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 317.
36. சிங்காரவேலன், அர., ஐங்குறுநூறு–406,410,66,403. கோவிலூர் மடாலயப் பதிப்பு
37. மேலது., 202, ப. 242.
38. மேலது., 217 ப. 260.
39. இளங்குமரன், இரா., புறநானூறு–174:18, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 301.
40. சாரங்கபாணி, இரா., பரிபாடல்–15:19, அண்ணாமலை, சுப., கலித்தொகை–94:34, கோவிலூர் மடாலயப் பதிப்பு, பக். 216, 352.
41. இளங்குமரன், இரா. புறநானூறு–304:5, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 444.
42. மேலது., 43:10,300:3, 304:5.
43. தமிழண்ணல், குறுந்தொகை–392:5 ப. 456, அகநானூறு–132:5 ப.26, மீனவன், அண்ணாமலை, நா., மணிமிடைப் பவளம், சுப., கோவிலூர் மடாலயப் பதிப்பு.
44. சிங்காரவேலன், அர. ஐங்குறுநூறு–363:2, கோவிலூர் மடாலயப் பதிப்பு ப. 412.
45. மேலது., 364:1, ப. 413.
46. தமிழண்ணல், மீனவன், நா., அகநானூறு–320:3, நித்திலக்கோவை, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 57.
47. நற்றிணை–8:4, 110:11, குறுந்தொகை–26:7, ஐங்குறுநூறு–60:41 அகம்–2:13, புறம்–78:11.
48. நற்றிணை–134:61, குறுந்தொகை–40:2, ஐங்குறுநூறு–92:2. கலி–41:42, அகம்–99:11, புறம்–160:23
49. நற்றிணை–98:8, 206:6, குறுந்தொகை–40:2, ஐங்குறுநூறு–6:6, பரிபாடல்–20:76, கலி–61:27. அகம் 12:2, புறம்–19:13.
50. அகம்–160:8, ஐங்–274:1, குறுந்–14:5, 49:4, 151:2, 167:5, நற்–103:7, பதிற்று–61:4, புறம்–138:8, 246:13, 314:1, 320:7.
51. இளங்குமரன், இரா., புறநானூறு–290:3, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 431.
52. தமிழண்ணல், குறுந்தொகை–167, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 458.
53. சிங்கார வடிவேலன், அர., ஐங்குறுநூறு–401, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 452.
54. கருணாநிதி, ந., தொல்காப்பியம், பொருளதிகாரம், கற்பியல் நூற்பா–52, வசந்தா பதிப்பகம், ப. 91.
55. மேலது., நூற்பா–36, ப. 88.
56. சிங்காரவேலன், அர., ஐங்குறுநூறு–48, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 71.
57. அண்ணா, சோம., சங்க இலக்கியத்தில் குடும்பம், ப. 130.
58. கருணாநிதி, ந., தொல்காப்பியம் பொருளதிகாரம், கற்பியல் நூற்பா 29, வசந்தா பதிப்பகம், ப. 87.
59. இளங்குமரன், இரா., புறநானூறு–122:1–3,367:4–6, பதிற்று–64:3–6, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 233.
60. மேலது., 43:13–15, ப. 144.

61. இளங்குமரன், இரா., புறநானூறு–6:19–20, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 83.
62. க்ரியாவின் தற்காலத் தமிழகராதி, ப. 938.
63. சுப்பிரமணியன், ச.வே., தொல்காப்பியம், நூற்பா–1578, மணிவாசகர் பதிப்பகம்.
64. இளங்குமரன், இரா., புறநானூறு – 134:2, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 245.
65. சாரங்கபாணி, இரா., பரிபாடல்–1:22, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 47.
66. தமிழண்ணல், குறுந்தொகை–117:6, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 157.
67. சிங்கார வடிவேலன், அர., ஐங்குறுநூறு – 271:1, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 319.
68. மதுரைக்காஞ்சி–506, கோவிலூர் மடாலயப் பதிப்பு. ப. 250.
69. மீனவன், நா., முருகசாமி, தெ., அகநானூறு–89:12–13, களிற்றியானை நிரை, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 105.
70. மேலது–30:9, ப. 69.
71. சிங்கார வடிவேலன், அர., ஐங்குறுநூறு–2, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 13.
72. இளங்குமரன், இரா., புறநானூறு–42:12–18, மடாலயப் பதிப்பு, ப. 142.
73. மகாதேவன், கதிர்., நற்றிணை–133:9–11, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 175.
74. மகாதேவன், கதிர்., நற்றிணை–125:3–4, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 164.
75. மீனவன், நா., அண்ணாமலை, சுப., அகநானூறு–224:2–3, மணிமிடைப்பவளம், கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 238.
76. இளங்குமரன், இரா., புறநானூறு–312:3, 95:4–5, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 452.
77. மகாதேவன், கதிர். நற்றிணை–313:1–3, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 418.
78. மேலது., 25:3–4, ப. 32.
79. மேலது., 25:3–4, ப. 32.
80. தமிழண்ணல், குறுந்தொகை–67:1–4, மடாலயப் பதிப்பு, ப. 102.
81. மேலது., 192:3–5, ப. 236.
82. மகாதேவன், கதிர்., நற்றிணை –363:4–6, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 485.
83. மேலது., 153:2–3, ப. 204.
84. மேலது., 94:4–6, ப. 123.
85. இளங்குமரன், இரா., புறநானூறு–166:27–28, (நற்றிணை–331:6–8), கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 289.
86. பரிமணம், அ.மா., பதிற்றுப்பத்து–67:2–4, 74:6, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 234.
87. மீனவன், நா., அண்ணாமலை, சுப., அகநானூறு –241:1–2, மணிமிடைப்பவளம், கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 275.
88. மேலது., 241:1–2, ப. 275.
89. மதுரைக்காஞ்சி, கோவிலூர் மடாலயப் பதிப்பு. ப. 26.
90. இளங்குமரன், இரா., புறநானூறு–290:4–5, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 431.
91. மேலது., 87:2–4, ப. 197.
92. மேலது., 206:11–13, ப. 340.
93. மேலது., 109:13, ப. 220.

94. மேலது., 377:26, ப. 534.
95. மேலது., 228:1, 256:1, 32:3
96. மேலது., 32:7–10, ப. 125.
97. மகாதேவன், கதிர்., நற்றிணை–200:3–4, 293:1–4. கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 270.
98. இளங்குமரன், இரா., புறநானூறு–299:1, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 439.
99. மேலது., 324:7–8, ப. 464.
100. மகாதேவன், கதிர்., நற்றிணை–299:7–8, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 399
101. கலித்தொகை–85:22–23,95:10–11, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 313.
102. சங்கத் தமிழர் வாழ்வியல், ப. 90.
103. இளங்குமரன், இரா., புறநானூறு–242,269:6–8, கோவிலூர் மடாலயப் பதிப்பு ப. 410.
104. மேலது., 348:3–4, ப. 493.
105. குறுந்தொகை–11, அகநானூறு–31:15, 67:12, 211:8, 295:17, 69:10–12, 251:10–11, 281:8–12.
106. முல்லைப்பாட்டு – 64–65, நெடுநல்வாடை–29–35.
107. மீனவன், நா., முருகசாமி, தெ., அகநானூறு–57,149, களிற்றியானை நிரை, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 129.
108. பரிமணம், அ.மா., பதிற்றுப்பத்துப் பதிகம்–2, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 58.
109. இளங்குமரன், இரா., புறநானூறு–152, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 268.
110. மேலது., 80,82,83,85.
111. அகநானூறு–187:7–8, மணிமிடைப் பவளம், கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 150.
112. சுப்ரமணியன், ச. வே., தொல்காப்பியம், நூற்பா–1004. மணிவாசகர் பதிப்பகம்.
113. இளங்குமரன், இரா., புறநானூறு–95, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 205.
114. குறுந்தொகை, உ.வே.சா உரை, முன்னுரை, ப. XI.
115. இளங்குமரன், இரா., புறநானூறு–27:7–9, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 118.
116. மேலது., 72:13–16, ப. 183.
117. மேலது., 162 ப. 285.
118. மேலது., 208:7–8, ப. 343.
119. மேலது., 53:12, ப. 156.

**தே. தேன்மொழி**
ஆய்வாளர்
தமிழ்த்துறை
இராணி மேரி கல்லூரி
சென்னை – **600 004.**

# ஆய்வாளர் உறுதிமொழி

**சங்க இலக்கியத்தில் ஆடவரின் மன உணர்வு ஓட்டங்கள்** என்னும் தலைப்பில் முனைவர் பட்டப்பேற்றிற்காகத் தமிழ்த்துறையில் **முனைவர் அ. இராசேசுவரி** அவர்களின் நெறியாள்கையின்கீழ் செய்யப்பட்ட இவ்வாய்வு எனது சொந்த முயற்சியில் உருவானதாகும். இதற்கு முன் வேறு எந்த ஆய்வுப்பட்டத்திற்கும் இவ்வாய்வேடு அளிக்கப்பெறவில்லை என்றும் இத்தலைப்பில் வேறு எவரும் ஆய்வு நிகழ்த்தவில்லை என்றும் உறுதியளிக்கின்றேன்.

தே. தேன்மொழி

இடம்: சென்னை
நாள்: 19-12-2013

**(தே. தேன்மொழி)**
ஆய்வாளர்

# நன்றியுரை

இராணிமேரி கல்லூரி தமிழ்த்துறையில் முனைவர் பட்ட ஆய்வு நிகழ்த்த அனுமதியளித்த சென்னைப் பல்கலைக்கழகத் துணை வேந்தர் அவர்களுக்கும், பதிவாளர் அவர்களுக்கும் என் மனமார்ந்த நன்றி!

இராணிமேரி கல்லூரி, தமிழ்த்துறையில் முனைவர் பட்ட ஆய்வினை மேற்கொள்ள வாய்ப்பளித்த கல்லூரி முதல்வர் முனைவர் (திருமதி.) வி. காந்திமதி. M.Sc., M.Phil., Ph.D., அவர்களுக்கும், தமிழ்த்துறைத்தலைவர், இணைப்பேராசிரியர் முனைவர் (திருமதி. ஈ. அன்னக்கிளி, M.A., M.Phil., Ph.D., அவர்களுக்கும் என் உள்ளங்கனிந்த நன்றி!

இராணிமேரி கல்லூரி தமிழ்த்துறையில் முழுநேர முனைவர் பட்ட ஆய்வாளராகச் சேர்ந்து பயில இசைவளித்து, இவ்வாய்வு முழுமை பெறுவதற்கு எல்லாநிலைகளிலும் உதவிபுரிந்து, ஆய்வு நெறிமுறைகளைக் கற்பித்தும், கட்டுரைகளைத் திருத்தம் செய்தும் ஆய்வை நெறிப்படுத்தியும் என் மீது அக்கறையுடன் அன்புகாட்டி வழிநடத்திய தமிழ்த்துறை இணைப் பேராசிரியர் முனைவர் (திருமதி) அ. இராசேசுவரி, M.A., M.Phil., M.Ed., Ph.D., அவர்களுக்கும், அவர் குடும்பத்தார்க்கும் இதயங்கனிந்த நன்றி!

ஆய்வுப் பணி தொடங்க தூண்டுகோலாகவும் தூணாகவும் இருந்த முனைவர் க. பாலசுந்தரம் பேராசிரியர் மற்றும் தமிழ்த்துறைத் தலைவர், எஸ்.ஐ.வி.இ.டி. கல்லூரி, அவர்களுக்கும், முனைவர் அர்த்தனாரீஸ்வரர் பேராசிரியர், மாநிலக் கல்லூரி, அவர்களுக்கும், முனைவர். மு. மாலதி, இணைப் பேராசிரியர் இராணி மேரி கல்லூரி, அவர்களுக்கும் என் நெஞ்சார்ந்த நன்றி!

ஆய்வின் போது ஊக்கமும் உற்சாகமும் அளித்த இராணி மேரி கல்லூரி தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் மனமார்ந்த நன்றி.

ஆய்விற்குத் தேவையான நூல்களைக் கொடுத்து உதவிய இராணிமேரி கல்லூரி நூலகம், சென்னைப் பல்கலைக் கழகப் பரிதிமாற் கலைஞர் வளாக நூலகம், கன்னிமாரா நூலகம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவன நூலகம், மறைமலை அடிகளார் நூலகம், உ.வே. சாமிநாதைய்யர் நூலகம், தொல்லியல்துறை நூலகம், அம்பத்தூர் பொது நூலகம் மற்றும் நூலகர்களுக்கும் மனமார்ந்த நன்றி!

அன்போடும் அரவணைப்போடும் ஊக்கமூட்டிய எனதருமைப் பெற்றோர்களுக்கும், பல்லாற்றானும் ஊக்கமும் உற்சாகமும் வழங்கிய என் அன்புக் கணவர் திரு. ஆ.ந. தேவேந்திரபாபு அவர்களுக்கும், உறுதுணையாயிருந்த பாசமிகு மகன்கள் தே. இன்ப எழிலன், தே. இன்ப இளவல் அவர்களுக்கும், தங்கை செ. கனிமொழி அவர்களுக்கும், என் குடும்பத்தார்க்கும் என் இதயங்கனிந்த நன்றி!!

ஆய்வுப் படிப்பில் என்னுடன் இருந்து ஊக்கமளித்த தோழிகள் மு.க. அனிதா, து. கவிதா, வீ. மாதவி, கே.சி. லஷ்மி, ம. ஷியாமளா, க. கங்கை அரசு ஆகியோர்க்கு என் மனமார்ந்த நன்றி! ஆய்வேட்டினைக் குறிப்பிட்ட காலத்தில் கணினி வாயிலாக தட்டச்சு செய்து செம்மையாக வடிவமைத்து கொடுத்த அர்ஜுன் செல்லம் வரைகலை திரு. அ. சுபாஷ் அவர்களுக்கும் மனமார்ந்த நன்றி!

உலக மாந்தர் அனைவரும் தெய்வீக வாழ்வைப் பெற வேண்டும் என்பதற்காகத் தியானம் புரிந்தவர்களும், என் உள் நின்று வழிகாட்டி அருள் வழங்குபவர்களுமாகிய ஸ்ரீ அரவிந்தர், ஸ்ரீ அன்னை அவர்களின் பாதக்கமலங்களில் இந்த ஆய்வேட்டினை உள்ளங்கனிந்த நன்றியுடன் சமர்ப்பிக்கிறேன்.

# சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| சங். இலக். | – | சங்க இலக்கியம் |
| தொல். | – | தொல்காப்பியம் |
| தொல். பொ. | – | தொல்காப்பியம் பொருளதிகாரம் |
| தொல். கற். | – | தொல்காப்பியம் கற்பியல் |
| தொல். கள. | – | தொல்காப்பியம் களவியல் |
| அகத். | – | அகத்திணையியல் |
| புறத். | – | புறத்திணையியல் |
| மெய்ப். | – | மெய்ப்பாட்டியல் |
| நற். | – | நற்றிணை |
| குறுந். | – | குறுந்தொகை |
| ஐங். | – | ஐங்குறுநூறு |
| கலி. | – | கலித்தொகை |
| அகம். | – | அகநானூறு |
| புறம். | – | புறநானூறு |
| பதிற்று. | – | பதிற்றுப்பத்து |
| பரி. | – | பரிபாடல் |
| நூற். | – | நூற்பா |
| ப. | – | பக்கம் |
| பக். | – | பக்கங்கள். |

# பொருளடக்கம்

# முன்னுரை

நம் வாழ்விலிருந்து முகிழ்ப்பதும், வாழ்க்கைக்குத் தேவையானதுமான இலக்கியத்தின் வழியாகச் சமுதாய வரலாற்றை இனங்காணவும், சமுதாயத்தைக் கட்டமைக்கவும் முடியும். ஆகவே இலக்கியம் சமுதாய உருவாக்கத்தின் அங்கமாகக் கருதப்படுகின்றது. இலக்கிய உருவாக்கம் இல்லாத சமுதாய உருவாக்கம் முழுமையானதாகக் கருதப்படுவதில்லை.

தமிழின் முதல் இலக்கியமும் முதன்மை இலக்கியமுமான சங்க இலக்கியம், சங்ககால சமுதாய அரசியல், பொருளாதாரம், வரலாறு, பண்பாடு ஆகியவற்றின் ஆவணமாக இருந்து சங்க கால சமுதாயத்தை நம்முன் நிறுத்துகின்றது.

இத்தகைய சங்க இலக்கியத்தில் தொகை நூல்களான எட்டுத் தொகை நூல்கள் வழியாக வெளிப்படும் ஆண் (ஆடவர்) எனும் சமுதாய அடிப்படைக் கூறின் இயல்பை, பல்வேறுபட்ட திணைசார் பரிமாணங்களை, வளர்ச்சிப் போக்குகளை, அரசியல் சார்புகளை, மாந்தர்களின் இருப்புகளை, அவர்தம் இயல்புகளை, மன உணர்வுகளை ஐந்திணை மற்றும் புறத்திணை சார்ந்த பாடல்களின் துணை கொண்டு இனங்காணும் நிலையில் இவ்வாய்வு அமைகின்றது.

எட்டுத் தொகை நூல்களில் ஆடவர், இவர் பெறும் இடங்கள், அவர்தம் இயல்புகள், சமுதாயத்தில், அக, புற வாழ்வில் அவர்களுக்குரிய பங்குகள் அச்சூழல்களில் வெளிப்படும் அன்னார் தம் மன உணர்வோட்டங்கள் பற்றியும் இவ்வாய்வு ஆராய்கின்றது.

பல்வேறு சூழல்களில் சங்ககால ஆடவர் பின்பற்றிய வாழ்வியல் நெறிமுறைகள் இக்காலச் சமுதாயத்தவர்க்கு ஒரு முன்மாதிரியாக விளங்கும் என்ற ஆய்வாளரின் உள்ளார்ந்த எண்ணத்தின் வெளிப்பாடே ஆய்வாளர் இத்தலைப்பைத் தேர்ந்தெடுத்ததற்கான காரணமாகும்.

மாற்றம் என்பது மானிடத் தத்துவம் என்கிறார் கவிஞர் கண்ணதாசன், மாறிடக் கூடிய சமுதாயத்தில் வாழும் மக்களின் மன உணர்வுகளும் மாற்றங்களுக்கு உட்பட்டவை. இந்த மாற்றம் புறப்பொருட்களில் எந்த அளவிற்கு மாற்றத்தை ஏற்படுத்துகின்றதோ அதே போன்று அவர்தம் அக உணர்வுகளிலும் மாற்றம் ஏற்படுவது இயற்கை. அதனை இனங்காணும் வகையில் ஆய்வு அமைகின்றது.

சங்ககாலச் சமுதாயம் திணை வழிபட்ட சமுதாயம் இன்றைய சமுதாயம் போன்றதன்று. வாழ்வியல் ஆதாரங்கள், நிலவழிப்பட்ட நெறிமுறை, பொருளாதாரப்பின்புலம், உற்பத்திக் கருவிகள், உற்பத்தி, உற்பத்திப் பெருக்கம், உற்பத்தி உறவு முறை, சமுதாயத் தலைமை, இலக்கிய உருவாக்கம் எனும் பல்வேறு நிலைகளிலும் சங்க காலச் சமுதாயம் இன்றையச் சமுதாயத்தினின்று வேறுபட்டதாகவே இருந்துள்ளது.

தமிழ் பேசிய ஒட்டுமொத்தச் சமுதாயம் எனும் நிலையில் பொதுவான பழக்க வழக்கங்களையும் பண்பாட்டையும் நாகரிகத்தையும் கொண்டனவாகத் திணைநிலைச் சமுதாயங்கள் இருந்துள்ளன. திணைச் சமுதாயங்களுள் ஒரு பொதுத் தன்மை, பொது ஒழுக்கம், பொதுப் பண்பாடு நிலவியிருந்தது. அகவாழ்வு களவு, கற்பு எனும் இருவகை ஒழுக்கங்களின் அடிப்படையில் அமைந்தது.

புலனெறி வழக்கில் அமைந்த சங்க இலக்கியங்கள் வரலாறு, உளவியல், மானிடவியல், சமூகவியல், இயற்கையியல் போன்ற பல்வேறு துறைகளோடு நெருங்கியத் தொடர்புடையன. மக்களின் ஒழுகலாற்றை அடிப்படையாகக் கொண்ட அகத்திணைப் புறத்திணைப் பாடல்கள் உணர்வுகளுக்கு உருவம் கொடுக்கின்றன. அவை அந்தந்த நிலத்தின் சுற்றுச் சார்புகளை இயல்பாகக் கொண்டிருக்கின்றன. நிலவகையில் அமைந்த உரிப்பொருளை மையமாகக் கொண்டு அகவுணர்வுகள் வெளிக்காட்டப்படுகின்றன. சமுதாயத்தின் நிகழ்வுகளையும் அக, புற மாந்தர்களின் உளவியலையும் ஒருங்கே கொண்ட சங்கப் பாடல்கள் பற்றிப் பல்வேறு அறிஞர்கள் ஆராய்ந்துள்ளனர். அவர்கள் காட்டிய வழியில் ஆடவரின் மன உணர்வு ஓட்டத்தினை இவ்வாய்வு ஆராய முற்படுகின்றது.

இலக்கியப் படைப்புகளில் காணப்படும் மனித வேட்கைகள் (Desires) அச்சங்கள் (Fears) போன்றவையே, 'மன உணர்வினை' ஆராய அடிப்படையாகத் திகழ்கின்றன.

இத்தகைய உணர்வுகளைக் கொண்ட மனித இனம் அளப்பரிய ஆற்றலையும், கற்பனைகளையும், எண்ண வடிவங்களையும், தன்னகத்தே கொண்டுள்ளது. மனம் நினைக்கின்ற எண்ணச் செயல்பாடுகள், கூற்றாக வெளிப்பட்டு மனித உணர்வுகளைக் காட்டுகின்றன. அகம், புறம் பற்றிய செய்திகளைப் பகுத்தும் வகுத்தும் பாடப்பட்டுள்ள எட்டுத்தொகைப் பாடல்கள் வழி வெளிப்படும் ஆடவரின் உணர்வுகளை, உணர்வு ஓட்டங்களை இவ்வாய்வு ஆராய முற்படுகின்றது.

தொல்காப்பியர், தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் உலகத் தோற்றம் உயிர்களின் வகைப்பாடு, இளமைப் பெயர்கள், வளர்ச்சியடைந்த பிறகு மக்கள் வாழும் வாழ்க்கை முறைகள், அவற்றுள் வீட்டில் வாழும் அகவாழ்க்கை நெறிகள், சமுதாயத்தில் நாட்டாரொடு பொருந்தி வாழும் புறவாழ்க்கை நெறிகள் பற்றியும் ஆடவர்க்குரிய பண்புகள், பெண்டிர்க்குரிய பண்புகள், இருவருக்கும் உரிய குணநலன்கள் மக்களினத்திற்குத் தேவையற்ற செயல்கள் போன்றவற்றையும் தொகுத்துக் கூறியுள்ளார்.

உடலிலும் உள்ளத்திலும் ஏற்படும் நிகழ்வுகளைப் பற்றி மெய்ப்பாட்டியலிலும், அகவாழ்க்கைச் செய்திகளை அகத்திணையியலிலும், நாட்டு வாழ்க்கை பற்றிய செய்திகளைப் புறத்திணையியலிலும் கூறுகிறார். அன்பு வாழ்க்கையின் தொடக்கமான இல்வாழ்க்கை பற்றிக் களவியலிலும், கற்பியலிலும் குறிப்பிட்டுள்ளார். இவ்வாய்வில் எட்டுத்தொகைப்பாடல்களில் புலனாகும் ஆடவரின் மன உணர்வோட்டங்களை ஆராயத் தொல்காப்பியம் துணை நிற்கின்றது.

**ஆய்வுத் தலைப்பு**

சங்க இலக்கிய நூல்கள் பல்வேறு கோணங்களில் ஆய்வுக்கு உட்பட்டு வருகின்றன. சங்க இலக்கியக் கூறுகளை, இலக்கியத்தில் இடம் பெற்றிருக்கும் நுண்ணியக் கருத்துக்களை, சமுதாயச் சூழலை, குடும்பம், மாந்தர், இயற்கை, உயிரினங்கள் போன்ற பல்வேறு தளங்களில் ஆய்வு செய்து சங்க இலக்கியம் இன்று பட்டிதொட்டிகளுக்கும் சென்று சேரும்நிலை ஏற்பட்டுள்ளது. அத்தகைய ஆய்வுகளின் தொடர்ச்சியாக சங்க இலக்கியத்தில் இடம் பெற்றுள்ள பெண்டிரின் பல்வேறு பரிமாணங்கள், சமுதாயத்தில் அவர்களின் நிலை என்ற கோணங்களில் ஆய்வுகள் நிகழ்ந்துள்ளன. சங்க இலக்கியத்தில் உள்ள ஆடவரின் சமுதாயப் பங்களிப்பு குடும்ப பொறுப்பு போன்றவற்றில் ஆடவர் எவ்வாறு ஈடுபட்டிருந்தனர் என்றும் அந்நிலைகளில் அவர்களின் உணர்வு ஓட்டங்கள் எங்ஙனம் அமைந்தன என்றும் ஆராய்ந்து அனைவரும் அறியுமாறு வெளிப்படுத்திக் காட்ட வேண்டும் என்ற எண்ணத்தின் வெளிப்பாடே, சங்க இலக்கியத்தில் ஆடவரின் மனஉணர்வு ஓட்டங்கள்" என்ற இந்த ஆய்வாகும்.

**ஆய்வுப் பரப்பும் ஆதாரங்களும்**

சங்க இலக்கியமான எட்டுத் தொகையில், இடம் பெறும் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, பரிபாடல், பதிற்றுப் பத்து, கலித்தொகை, அகநானூறு, புறநானூறு என்னும் எட்டுநூல்களும் ஆய்விற்கான பரப்பாக அமைகின்றன.

**ஆய்வு ஆதாரம்**

**முதன்மை ஆதாரம்**

சங்க இலக்கியம் (கோவிலூர் மடாலயப் பதிப்பு மற்றும் பிற பதிப்புகள்), எட்டுத் தொகை நூல்கள் இவ்வாய்விற்கு முதன்மை ஆதாரங்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**துணைமை ஆதாரம்**

தொல்காப்பியம், எட்டுத்தொகை குறித்த ஆய்வு நூல்கள், ஆய்வேடுகள், கட்டுரைகள், சங்க காலத்தைப் பற்றிய நூல்கள், உளவியல் தொடர்பான நூல்கள், ஆய்வேடுகள்,

கட்டுரைகள் போன்றவை ஆய்விற்குத் துணைமை ஆதாரங்களாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன.

**ஆய்வு அணுகுமுறை**

எட்டுத்தொகைப் பாடல்களில் தலைப்பு சார்ந்த கருத்துக்களை வெளிக்காட்டும் உணர்வுகளைக் கண்டறிந்து விளக்க முற்படுவதால் விளக்கமுறை ஆய்வு அணுகுமுறை பயன்படுத்தப்பட்டுள்ளது.

எட்டுத்தொகை நூல்களில் இடம்பெற்றுள்ள அக, புறப்பாடல்கள் திணை, துறை, கூற்றிற்குரியோர், கேட்போர் அடிப்படையில் பகுத்துத் தொகுப்பதில் பகுப்பாய்வு அணுகுமுறை கையாளப்பட்டுள்ளது. சங்க அகத்திணை, புறத்திணைப் பாடல்கள் அனைத்தும் அதில் இடம்பெற்றுள்ள மாந்தர்களின் உளப்பாங்குகளை உள்ளடக்கி இருப்பதால், அவற்றின் உளவியல் தன்மைகளை ஆராய, உளவியல் கருத்துகளும் பின்பற்றப்பட்டுள்ளன.

சங்கப் பாடல்கள், அக்காலச் சமுதாயத்தின் நிகழ்வோட்டங்களைப் படம் பிடித்துக் காட்டும் தன்மை கொண்டதால் சமூகவியல் நோக்கிலும் இவ்வாய்வு அமைகின்றது.

**ஆய்வின் நோக்கம்**

சங்க இலக்கியம் என்றாலே அதுவும் குறிப்பாக அகத்திணைப் பாடல்கள் என்றால் அதில் ஆடவரின் காதல் உணர்வுகள் மட்டுமே மேலோங்கிக் காணப்படுன்றன என்ற கண்ணோட்டத்திலிருந்து வேறுபட்டு ஆடவரின் உள்ளத்தில் ஏற்பட்ட பிற உணர்வுகளையும் வெளிப்படுத்துவதே இவ்வாய்வின் முதன்மை நோக்கம் ஆகும்.

சங்க இலக்கிய ஆடவர்தம் திறமைகள் நுண்ணறிவு, சிந்தனைத்திறன், அரசாட்சி, காதல், புகழ், வீரம், கொடை போன்றவற்றையும் அதன் மூலம் அவர்கள் பெற்ற உயர்வுகளையும் தாழ்வுகளையும் கண்டறிந்து, இக்கட்டான சூழல்களை மேற்கொள்ள ஆடவர் பின்பற்றிய உத்திகளை ஆராய்ந்து உலகறியச் செய்வதோடு, இக்காலச் சமுதாயத்தை நெறிப்படுத்த வேண்டும் என்பது இவ்வாய்வின் நோக்கமாக அமைகின்றது.

**ஆய்வுப் பயன்**

இதுகாறும் சங்க இலக்கியத்தில் மேற்கொள்ளப்பட்ட ஆய்வுகளில் பெறப்பட்ட கருத்துக்களும், படிப்பினைகளும், ஒரு துறைசார்ந்த நுண்ணறிவும், கடைபிடித்த சமுதாய ஒழுக்கங்களும் வளர்ந்துவரும் நாகரிகச் சமுதாயத்திற்குப் பயன்பட்டு வருகின்றன. இந்நிலையில் “சங்க இலக்கியத்தில் ஆடவரின் மன உணர்வு ஓட்டங்கள்” என்ற

இவ்வாய்வின் மூலம் பெறப்படும் கருத்துகள் ஆழ்ந்த நுண்ணறிவினைப் பெறும் போக்கினில் அமைகின்றன. அறிவியல் தொழில்நுட்ப வளர்ச்சி பெற்ற இன்றைய சூழலுக்கும் பொருந்தும் வகையில் – வழிகாட்டும் வகையில் அமையும் என்ற ஆய்வாளர் நம்புகிறார்.

**ஆய்வு முன்னோடிகள்**

சங்க இலக்கியத்தில் பல்வேறு கோணங்களில் ஆய்வுகள் சிறந்த அறிஞர்களால் மேற்கொள்ளப்பட்டுள்ளன. அதில் அக மாந்தர்களின் உளவியல் முறைமைகளைப் பற்றி ''அகத்திணை மாந்தர்கள் – ஓர் ஆய்வு'' என்று ஆய்வு செய்த டாக்டர் ஆ. இராமகிருட்டினன், ''ஓவச் செய்தி'' எனும் ஆய்வு நூலைத் தந்த டாக்டர் மு. வரதராசனார், பண்டைத் தமிழ் மக்களின் காதல் வாழ்வினை ஆராயும் ''தமிழ்க் காதல்'' என்னும் நூலை வழங்கிய டாக்டர். வ.சுப. மாணிக்கம், ''அகமும் புறமும்'' எழுதிய பேரா. அ.ச. ஞானசம்பந்தன், ''அகத்திணைக் கொள்கைகள்'' பற்றி ஆய்வு செய்த டாக்டர் ந. சுப்புரெட்டியார், ''சங்க இலக்கியம் காட்டும் மனித உறவுகள்'' என்ற தலைப்பில் ஆய்வு செய்த ச. ரேணுகா, ''சங்க இலக்கியத்தில் தோழி'' என்னும் நூலை வழங்கிய டாக்டர் சரளா இராசகோபாலன், ''சங்க இலக்கியத்தில் தலைவன்'' என்ற ஆய்வினை மேற்கொண்ட அ. செங்கோடமுதலி ''சங்க காலக் குடும்பம்'' என்னும் தலைப்பில் எழுதியுள்ள டாக்டர் பெ. மாதையன், சோம. அண்ணா போன்றோர் இவ்வாய்விற்கு வழிவகுத்த முன்னோடிகள் ஆவர்.

**கருதுகோள்கள்**

- ஆடவர் தம் உணர்வுகளை நேரடியாகவும், மறைமுகமாகவும் வெளிப்படுத்தியுள்ளனரா என ஆராய்தல்.
- ஆடவரின் உணர்வுகள் சமுதாயத்தால் மதிக்கப்பட்டதா, என ஆராய்தல்
- ஆடவர் மான உணர்வு மிக்கவரா என ஆராய்தல்.
- ஆடவர் கொடை உணர்வு கொண்டவரா என ஆராய்தல்.
- ஆடவர் மீது கடமைகளும் உரிமைகளும் திணிக்கப்பட்டதா அல்லது அவர்கள் விரும்பி ஏற்றனரா என ஆராய்தல்.
- ஆடவர் தம் உணர்வுகளுக்கு மட்டுமல்லாமல் பிறர் உணர்வுகளுக்கும் மதிப்பளித்தனரா என ஆராய்தல்.
- ஆடவர் குடும்பப் பொறுப்புணர்வு மிக்கவர்களாகத் திகழ்ந்தனரா என்பதை ஆராய்தல்.

- பிறன்மனை நோக்கா திண்ணிய உணர்வினர் என, கருத இடமுண்டா என ஆராய்தல்.
- ஆடவர் பிள்ளைப் பாச உணர்வு கொண்டவரா என ஆராய்தல்.
- ஆடவர், தம் முன்னோர் பெருமையைக் காக்கும் உணர்வினரா என்று ஆராய்தல்.
- காதலா கடமையா எனும்போது கடமை உணர்வு மிக்கவர் என்று கருத இடமுண்டா என்று ஆராய்தல்.
- நட்பை, புலவர்களைப் போற்றிய உள்ளத்தினரா என்று ஆராய்தல்.
- போரில் புறங்காட்டாத, உள்ளத்தினரா என்று ஆராய்தல் அறநெறிப்படி போர் புரியும் அறவுணர்வினரா என்று ஆராய்தல்.

மேற்குறிப்பிட்ட பல்வேறு கருதுகோள்களை மையமாகக் கொண்டு ஆடவரின் உணர்வோட்டத்தினை ஆராயும் வகையில் இவ்வாய்வு அமைகின்றது.

**ஆய்வேட்டின் கட்டமைப்பு**

"“சங்க இலக்கியத்தில் ஆடவரின் மன உணர்வு ஓட்டங்கள்” என்னும் தலைப்பில் அமைந்த இவ்வாய்வேடு முன்னுரை, முடிவுரை நீங்கலாகப் பின்வரும் நான்கு இயல்களைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது.

**சங்க இலக்கியத்தில் ஆடவரின் மன உணர்வு ஓட்டங்கள்**

**முன்னுரை**

**இயல் ஒன்று எட்டுத்தொகையில் ஆடவர்**

அ. நூற்குறிப்பும் சிறப்பும்.

ஆ. சங்க காலச் சமுதாய அமைப்பு.

இ. ஆடவர் பொருள் விளக்கமும் பரிமாணங்களும்.

**இயல் இரண்டு திணைகளும் உணர்வுகளும்**

அ. திணைவிளக்கமும் உணர்வுகளை வெளிப்படுத்தும் கருவிகளும்

ஆ. உளவியலும் உணர்வுகளும்.

இ. மெய்ப்பாடுகளும் உணர்வுகளும்.

ஈ. ஆடவரின் பருவநிலைகளும் உணர்வுகளும்.

**இயல் மூன்று அகத்திணைகளில் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வுகள்**

அ. அன்பின் ஐந்திணையில் வெளிப்படும் தலைவனின் மன உணர்வுகள்.

ஆ. அன்பின் ஐந்திணையில் வெளிப்படும் பிற ஆடவரின் மன உணர்வுகள்.

இ. கைக்கிளை, பெருந்திணையில் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வுகள்.

**இயல் நான்கு புறத்திணைகளில் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வுகள்**

**முடிவுரை**

**துணை நூற்பட்டியல்**

**பின்னிணைப்பு**

I. ஆண், ஆடவர், ஆண்மை போன்ற சொற்களுக்கு நிகண்டுகள் அகராதிகள் குறிப்பிடும் பொருள்.

II. ஆண்மகன் தொடர்பான உறவுப் பெயர்கள்.

III. ஆடவனைக் குறிக்கும் பல சொற்கள்.

IV. எட்டுத் தொகையில் ஆடவர் எனும் சொல் இடம் பெறும் பாடல்கள்.

V. அகத்திணைப் பாடல்களில் வெளிப்படும் ஆடவரின் பல்வேறு உணர்வுகள்.

VI. புறத்திணைப் பாடல்களில் வெளிப்படும் ஆடவரின் பல்வேறு உணர்வுகள்.

மேற்குறிப்பிட்டுள்ள கட்டமைப்பின்படி எட்டுத்தொகை நூல்களில் இடம்பெற்றுள்ள ஆடவரின் மன உணர்வுகள் ஆராயப்படுகிறது.

# இயல் இரண்டு



## திணைகளும் உணர்வுகளும்

அ. திணைவிளக்கமும் உணர்வுகளை வெளிப்படுத்தும் கருவிகளும்

ஆ. உளவியலும் உணர்வுகளும்

இ. மெய்ப்பாடுகளும் உணர்வுகளும்

ஈ. ஆடவரின் பருவநிலைகளும் உணர்வுகளும்



### இயல் இரண்டு

# திணைகளும் உணர்வுகளும்

திணை என்பது மனித வாழ்வில் நிகழும் நிகழ்வில் கடைபிடிக்கக்கூடிய ஒழுக்கமாகும். ஒழுக்கம் என்பது 'அகம், புறம் எனும் இருநிலைகளில் அமையப்பெறும். உள்ளத்தில் நிகழும் நிகழ்வுகளைச் சொற்களால் வெளிப்படையாக விளம்ப முடியாமல் உள்ளத்தால் சுவைத்து இன்புறுவது அக ஒழுக்கம் ஆகும். கண்ணால் கண்டு வாயால் விளக்கிச் சொல்லக்கூடிய செய்திகள், நிகழ்வுகள் அனைத்தும் புற ஒழுக்கம் ஆகும். இத்தகைய ஒழுக்க நெறியைத் திணை என்பர்.

இவ்வொழுக்க நெறி, எட்டுத்தொகைப் பாடல்களில் அகத்திணை, புறத்திணை என்று பகுக்கப்பட்டுள்ளது. அகத்திணைப் பாடல்களை நுவல்பொருள் அடிப்படையில் களவுப்பாடல்கள், கற்புப் பாடல்கள் என்று இரண்டாகவும் மக்கள் ஒழுகலாற்றின் அடிப்படையில் கைக்கிளை, குறிஞ்சி, முல்லை, பாலை, மருதம், நெய்தல், பெருந்திணை என ஏழாகவும் வகைப்படுத்தப் பட்டுள்ளது. புறத்திணைப் பாடல்களை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் எனும் ஏழாக வகைப்படுத்தப்பட்டுள்ளது.

இத்தகைய இருதிணைகளில் கூற்று நிகழ்த்திய மாந்தர்களின் வாயிலாக ஆடவரின் உணர்வுகளைக் கண்டறிந்து வெளிக்காட்டுவதே இவ்வியலின் நோக்கமாகும்.

## அ. அகப்புறத்திணைகள் விளக்கமும் உணர்வுகளை வெளிப்படுத்தும் கருவிகளும்

### திணை - சொற்பொருள் விளக்கம்

திணை என்ற சொல், வீடு, நிலம், திண்ணை, குடி (குலம்), ஒழுக்கம், பாடல், சூழலமைதி, ஐந்திணை ஆகிய பொருள்களில் தமிழ் இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளது. “மண் திணிந்த நிலனும்”,[1] “திணிமணல் அடைகரை”[2] போன்ற தொடர்களால் திணை என்ற சொல் நிலத்தைக் குறித்ததை எட்டுத்தொகை நூல்களில் காண முடிகின்றது.

தொல்காப்பியத்தில், “திணைதொறும் மரீஇய திணைநிலைப் பெயரே”[3] என்று பொதுவாக நிலத்தைச் சுட்டுகிறது. காலப்போக்கில் திணை என்னும் சொல் நிலத்திற் பிறந்த குலத்தினரையும் குடியினரையும் குறிக்கலாயிற்று. “வான்திணைப் புரையோர்”[4], “இத்திணைப் பிறத்தல்”[5], “விழுத்திணை”[6], “மூத்த விழுத்திணை”[7] “வசையில் விழுத்திணை”[8] என்னும் அடைமொழிகள் மூலம் திணை என்ற சொல், குலம், குடி பற்றிய பொருளில் இடம்பெற்றுள்ளது.

மேலும் திணை என்ற சொல் ''வீடு'' என்ற பொருளில், ''வலஞ்சுழி யுந்திய திணைபிரி முதல்வர்''[9] என்று பரிபாடலிலும், ''ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்திணை''[10] என்று அக நானூறிலும் வீடு என்ற பொருளில் இடம்பெறுகின்றது.

குடும்பம், கணம், குடியிருப்பு என்னும் பொருளைத் தரும் குடி என்னும் பெயர்ச்சொல்லைக் குறிக்கத் திணை என்னும் சொல் சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ளது.[11] எட்டுத்தொகை நூல்களில் திணை என்ற சொல் குடும்பம் அல்லது குடியிருப்பு என்ற பொருளில் கையாளப்பட்டுள்ளது.[12] எனவே, ஆதியில் குடியிருப்பைக் குறித்த இச்சொல் காலப்போக்கில் குடியிருப்பில் உள்ள மக்களின் ஒழுக்க வடிவங்களைச் சுட்டுவதாக மாறியுள்ளதை அறிய முடிகிறது.[13]

**அகத்திணைக் கூறுகள்**

அகத்திணைப் பாடல்கள் முதற்பொருள், கருப்பொருள், உரிப்பொருள் என்ற முக்கூறுகளைக் கொண்டு புலனெறி வழக்கில் அமையும் இயல்புடையவை. இவை கற்பு, களவு ஆகிய இரு அகத்திணை நெறிகளுக்கும் அடிப்படை நிலைக் களன்களாகும். இதனைத் தொல்காப்பியர்,

> **''முதல்கரு உரிப்பொருள் என்ற மூன்றே**
> **நுவலுங் காலை முறைசிறந் தனவே**
> **பாடலுள் பயின்றவை நாடுங் காலை'' (தொல். அகத். நூ. 3, ப. 6)**

என்று குறிப்பிடுகின்றார்.

**முதற்பொருள்**

அகப்பாடல் நிகழும் இடமும் (நிலமும்) பொழுதும் முதற்பொருள் எனப்படுகின்றது. ஒரு செயல் செம்மையாக நிகழுதற்குச் சரியான இடமும், காலமும், முதன்மையாதலின் இதனை,

> **''முதல் எனப் படுவது நிலம்பொழுது இரண்டின்**
> **இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே'' (தொல்.அகத்.நூ.3, ப. 7)**

என்று குறிப்பிட்டுள்ளார்.

**இடம்**

இடமாகிய நிலம், முல்லை, குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை என ஐந்து வகையாகப் பிரிக்கப்பட்டுள்ளது. இதனை,

> **''மாயோன் மேய காடுறை உலகமும்**
> **சேயோன் மேய மைவரை உலகமும்**
> **வேந்தன் மேய தீம்புனல் உலகமும்**

**வருணன் மேய பெருமணல் உலகமும்**
**முல்லை குறிஞ்சி மருதம் நெய்தல் எனச்**
**சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" (தொல். அகத். நூ.5, ப. 7)**

என்று தொல்காப்பியர் நானிலத்தை மட்டுமே குறிப்பிடுகின்றார். ஐந்தாவது நிலமாகிய பாலைக்கென்று தனி நிலமில்லை. ஆனால் குறிஞ்சியும் முல்லையும் திரிந்தால் அதுவே பாலை என்பதனை,

**"முல்லையும் குறிஞ்சியும் முறைமையின் திரிந்து**
**நல்லியல்பு இழந்து நடுங்குதுயர் உறுத்துப்**
**பாலை என்பதோர் படிவங்கொள்ளும்" (சிலப்பதிகாரம்)**

என்று இளங்கோவடிகள் குறிப்பிடுகின்றார்.

### பொழுது

காலத்தினை பெரும்பொழுது, சிறுபொழுது என்று இலக்கண நூலார் பகுத்துக்கூறுவர். ஒவ்வொரு பெரும் பொழுதும் இருதிங்கள் காலப்பகுதியாகும். கார்காலம் (ஆவணி, புரட்டாசி) கூதிர் காலம் (ஐப்பசி, கார்த்திகை), முன்பனிக் காலம் (மார்கழி, தை), பின்பனிக் காலம் (மாசி, பங்குனி) இளவேனிற் காலம் (சித்திரை, வைகாசி), முதுவேனிற் காலம் (ஆனி, ஆடி) என்பனவாகும்.

சிறுபொழுது என்பது ஒரு நாளினை ஆறு பகுதியாகப் பிரித்து, வைகறை (இரவுப்பொழுதின் பிற்கூறு), விடியல் (பகற்பொழுதின் முற்கூறு), எற்பாடு (பகற்பொழுதின் பிற்கூறு), நண்பகல் (பகற்பொழுதின் நடுக்கூறு), யாமம் (இரவின் நடுக்கூறு), மாலை (இரவின் முற்கூறு) என்று ஒவ்வொரு சிறுபொழுதும் பத்துப் பத்து நாழிகை மணிநேர அளவுடையதாகும். இத்தகைய நிலமும், பொழுதும் முதற்பொருளாகின்றன. இந்த நிலமும் பொழுதும் அகவொழுக்கங்கள் நிகழிடமாக / தளமாக அமைகின்றன. அவ்வொழுக்கங்கள் நிகழும் இடம், பொழுது ஆகியவற்றை அவ்வவற்றின் இயல்புகளோடு குறிப்பிடுவது புலனெறி வழக்கமாகும்.

### கருப்பொருள்

கருப்பொருள்கள் அகப்பாடல்களின் சூழ்நிலைகளை விளக்குவதற்குப் பெருந்துணைபுரிகின்றன. இவை இடமும் பொழுதுமாகிய முதற்பொருளிலிருந்தே தோன்றுகின்றன. இக்கருப்பொருள்களை,

**"தெய்வம் உணாவே மாமரம் புள்பறை**
**செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ**
**அன்னவை பிறவும் கருவென மொழிப" (தொல்.அகத்.நூ.18, ப. 10)**

என்று தொல்காப்பியர் சுட்டியுள்ளார்.

**உரிப்பொருள்**

உரிப்பொருள் என்பது ஐவகை நில மக்களுக்கும் உரிய ஒழுக்கத்தைக் குறிக்கும். ஒவ்வொரு நிலத்திலும் உள்ள மக்களின் சிறப்பான பண்பினையும் ஒழுகலாற்றையும் மையமிட்டு உரிப்பொருள் பாடப்பெறும். ஐந்திணைக்குரிய உரிப்பொருளை,

> **"புணர்தல் பிரிதல் இருத்தல் இரங்கல்**
> **ஊடல் அவற்றின் நிமித்தம் என்றிவை**
> **தேறுங் காலைத் திணைக்குரிப் பொருளே" (தொல்.அகத்.நூ.14, ப. 9)**

என்று தொல்காப்பியர் சுட்டுகின்றார். இவை முறையே குறிஞ்சி, பாலை, முல்லை, நெய்தல், மருதத் திணைகளுக்கு உரிய உரிப் பொருள்களாகும்.

ஒரு திணையில் வரும் முதற்பொருளும், கருப்பொருளும் வேறொரு திணையிலும் மாறிவருதற்கு வாய்ப்புண்டு. ஆனால் உரிப்பொருள் மாறாது. இதனை, "உரிப்பொருள் அல்லன மயங்கவும் பெறுமே"[14] என்ற தொல்காப்பியர் கூற்றால் அறியலாம்.

அகத்திணைக் கூறுகள் பற்றி "மானிட இனவியலின் படி ஆராயின், தமிழ்ச் சமுதாயம் தன்னைச் சூழ்ந்த இயற்கைக்கு ஏற்ற தனிக்கூறுகளைக் கொண்டு விளங்குவது. மிகத் தொல் பழங்காலத்திலேயே மனித வாழ்க்கையின் ஐவேறு நிலைகளை அறிந்திருப்பது, இவ்வறிவு பெற்ற சமுதாயம் வேறொன்றில்லை"[15] என்று இராமச்சந்திர தீட்சிதர் குறிப்பிட்டுள்ளார்.

மேலும், தமிழர் வகுத்த குறிஞ்சி முதலாம் ஒவ்வொரு திணையும் தன்னிறைவுடையது; தன்னகத்து வாழும் மக்களுக்கு வேண்டும் உணவு முதலான நுகர்ச்சிகளையும், யாழிசை முதலான நெறியுணர்வையும், தொழில் முதலான வினை வாய்ப்புகளையும் வழங்கக்கூடியது. வாழ்க்கைக்கு வேண்டும் கூறுகளெல்லாம் கொண்டிருத்தலின், திணை ஒவ்வொன்றும் தனியுலகம் என்று சொல்லத்தக்க அமைவுடையது என்கிறார்.

இதன் மூலம் நிலம், பொழுதின் அடிப்படையில் மனித வாழ்க்கை அமைவதோடு மனித உணர்வுகளும் வடிவமைக்கப்படுகின்றன என்றும் உணரலாம்.

**அகத்திணைப் பிரிவுகள்**

கைக்கிளை. குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல், பாலை, பெருந்திணை எனப்பட்ட ஏழும் அகத்திணைப் பாகுபாடாகும். இவற்றுள் குறிஞ்சி முதல் பாலை வரையிலான இடைநின்ற ஐந்தும் அன்பின் ஐந்திணை என்று வழங்கப்படும். கைக்கிளையாவது ஒருதலைக் காமம் என்றும், பெருந்திணையாவது ஒவ்வாக் காமம் என்பர்.

> **"மக்கள் நுதலிய அகனைந் திணையும்**
> **சுட்டி ஒருவர் பெயர்கொளப் பெறாஅர்" (தொல். அகத். நூ. 53, ப. 22)**

என்பது தொல்காப்பியம்.

"புறத்திணை மருங்கிற் பொருந்தி னல்லது
அகத்திணை மருங்கின் அளவுதல் இலவே" (தொல்.அகத்.நூ.55, ப.23)

என்று 'பெயர்' புறத்திணையில் வந்தாலும் வரலாம்; அகத்திணையில் வருதலாகாது என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

**அன்பின் ஐந்திணை**

எட்டுத்தொகையில் இடம்பெற்றுள்ள அன்பின் ஐந்திணைப் பாடல்களின் எண்ணிக்கை ந. சஞ்சீவி அவர்களின் சங்க இலக்கிய அட்டவணையின்படி இவ்வாய்வில் பின்பற்றப்பட்டுள்ளது.[16]

**I. குறிஞ்சித் திணை**

மலையும் மலைசார்ந்த இடத்தையும் குறிஞ்சி நிலம் என்கிறோம். கூதிர் காலத்தில் மழை வளத்தால், மலைவளம் சிறந்து காணப்படும். இச்சூழலில் நடுயாமத்தில் தலைமக்கள் சந்தித்து இன்பம் நுகரும் தனிமையை மிகுவிக்கின்றது. காதலர் இருவர் சந்தித்துக் கருத்திலே ஒன்றுபட்டு வெளிப்படையாக மணம் புரிந்து கொள்ளும் வரை இரவிலும் பகலிலும் குறித்த இடத்தில் கூடுவர். இந்த அடிப்படையில் "புணர்தலும், புணர்தல் நிமித்தமும்" குறிஞ்சிக்கு உரிப்பொருளாக அமைந்தது. குறிஞ்சி நிலத்திலுள்ள முருகக் கடவுளும், யானை, புலி, சிங்கம், குரங்குகளும், குறிஞ்சிப் பூவும், மலையருவிகளும், பலா மரங்களும், வண்டுகளும் புலனெறி வழக்கைப் பாடும் புலவர்களுக்குக் கருப்பொருளாக அமைந்து துணையாகின்றன.

எட்டுத்தொகை அகநூல்களில் குறிஞ்சித் திணை பற்றிய பாடல்கள் 487. இவற்றுள் தலைவன் கூற்றாக 83 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. பாங்கன் கூற்றாக இரண்டு பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

**II. பாலைத் திணை**

மணலும் மணல் சார்ந்த நிலப்பகுதி பாலை எனப்படும். குறிஞ்சியும் முல்லையும் முறைமையிற் திரிந்து பாலைநிலம் உருவாகிறது. இப்பாலைத் திணையின் உரிப்பொருளாக "பிரிதலும் பிரிதல் நிமித்தமும்" உள்ளது. கோடையில் வெப்பத்தால் மரங்களெல்லாம் காய்ந்து, இலைகளின்றி வறண்டு கிடக்கும். பாலையில் ஆறலைக் கள்வர் பெருகி இருக்கும் வழியாகத் தலைவன், தலைவியை விட்டுப்பிரிந்து மணப்பதற்கு முன்போ மணந்த பின்போ பொருள் தேடச் செல்வான். அச்சூழலில் தலைவன், தலைவியின் வருத்தத்தைப் பாலைத்திணைப் பாடல்கள் விளக்குகின்றன.

எட்டுத்தொகை அகநூல்களில் பாலைத் திணைப் பாடல்கள் 529இல் தலைவன் கூற்றாக 119 பாடல்களும், கண்டோர் கூற்று 4 பாடல்களும், பாணன் கூற்றாக 2 பாடல்களும், அந்தணர் கூற்றாக ஒரு பாடலும் இடம் பெற்றுள்ளன.

### III. முல்லைத் திணை

காடும் காடு சார்ந்த இடப்பகுதியும் முல்லைத்திணை. உடைய முல்லைநிலம், கார் காலத்தில் பெய்த மழையால் பசுமை நிறைந்து காணும் இயல்புடையது. பிரிந்து சென்ற தலைவன் திரும்பி வரும் வரையில் தலைவி, தலைவனின் பிரிவை ஆற்றியிருத்தல் முல்லைத் திணை ஒழுக்கமாகும்.

எட்டுத்தொகை அகநூல்களில் முல்லைத் திணையில் மொத்தம் 215 பாடல்கள் உள்ளன. அவற்றுள் தலைவன் கூற்றாக 95 பாடல்கள் இடம் பெற்றுள்ளன.

### IV. மருதத் திணை

வயலும் வயல் சார்ந்த நிலப்பகுதியில் வாழும் உழவரும் உழத்தியரும் குன்றாத வளத்துடன் இல்லற தர்மங்களை இனிது நிறைவேற்றி இருப்பர். செவ்வாம்பலும் தாமரையும், குவளையும், நீர்நிலைகளில் துள்ளித் திரியும் மீன்களும், இதனைப் பிடிக்கக் காத்திருக்கும் கொக்கும், குளங்களில் நீந்தும் எருமைக் கடாவும் மருதத்தின் வளமைச் சூழலை விளக்குவனவாகும். இந்நிலத்துத் தலைவன் வைகறையிலும், விடியலிலும் பரத்தையரைப் பிரிந்து வருவான். இவ்வாறு பரத்தையொழுக்கம் புரியும் தலைவனைக் கண்டு தலைவி ஊடுவாள். இதுவே இந்நிலத்தின் உரிப்பொருளாகும். இத்தகைய ஊடல்கள், வாயில்கள் மூலம் தீர்க்கப்படும். வாயில்களை மறுத்துக்கூறும் பாடல்களும், தலைவனோடு ஊடும் பாடல்களும் மருதத்திணையின் உயிர்நாடியாகும். ஆறு பெரும்பொழுதுகளும் இத்திணைக்குரியன ஆகும்.

எட்டுத்தொகை அகத்திணைப் பாடல்களுள் மருதத்திணைப் பாடல்கள் மொத்தம் 263 பாடல்கள் உள்ளன. அவற்றுள் தலைவன் கூற்றாக 17 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. சான்றோர் கூற்றாக 2 பாடல்களும் இடம் பெற்றுள்ளன.

### V. நெய்தல் திணை

கடலும் கடல் சார்ந்த பகுதியும் நெய்தலாகும். தாழை, புன்னை, நெய்தல், பனை சூழ்ந்து காணப்படும். எற்பாடு என்னும் பகற்பொழுதின் பிற்கூறு, உயர்ந்து தாழும் அலைகளால், பிரிந்து சென்ற தலைவனை நினைத்து தலைவி வருந்துவாள். தலைவியிடம் இரக்க உணர்ச்சியைத் தூண்டும், இரங்கலும் இரங்கல் நிமித்தமும் நெய்தல் திணையின் உரிப்பொருளாகும். ஆறு பெரும்பொழுதுகளும் இத்திணைக்குரியனவாகும்.

எட்டுத்தொகை அகத்திணைப் பாடல்களுள் நெய்தல் திணையில் மொத்தம் 344 பாடல்கள் உள்ளன. அவற்றுள் தலைவன் கூற்றாக 28 பாடல்கள் இடம் பெற்றுள்ளன. கண்டோர் கூற்றாக 9 பாடல்களும், வாயில்கள் கூற்றாக இரண்டு பாடல்களும், பாங்கன் கூற்றாக ஒரு பாடலும் இடம்பெற்றுள்ளன.

**அகத்திணையில் உணர்வுகளை வெளிப்படுத்தும் கருவிகள்**

ஐந்திணைகளில் இடம்பெறும் மாந்தர்களின் உணர்வுகள் அந்தந்த பாத்திரங்களின் தனி – நேர் கூற்றுகளின் வாயிலாக வெளிப்படுகின்றன. இத்தகைய தனிக்கூற்றுகளே உணர்வை முழுமையாகவும் வெளிப்படையாகவும் உணர்த்தும் கருவிகளாக விளங்குகின்றன.

கூற்று நிகழ்த்துவதற்கு உரியவர்களாகத் தொல்காப்பியர் குறிப்பிடும் பன்னிருவர்களுள் தலைவன் – தலைவியே உணர்வுப் போராட்டத் தலைமை பாத்திரங்களாக அமைகின்றன.

தலைவியின் நினைவுகளையே தன்னெஞ்சில் சுமக்கும் தலைவன், தான் தொடர்பு கொண்டு பேசும் ஒவ்வொரு மாந்தரிடம் வெவ்வேறு விதமான உள்ள உணர்வுகளை வெளிப்படுத்துகிறான். வினைமுற்றி மீளும் போது வெளிப்படும் அவனது கூற்றில் மகிழ்ச்சிப் பெருக்கு காணப்படுகின்றது. வினை முற்றியவுடன் தலைவியைக் காண வேண்டும் என்னும் அவாவினால் தேர்ப்பாகனிடம், மலர்களின் மலர்ச்சியினால், தனது மகிழ்ச்சியையும், கார்கால வரவையும், இக்காலத்தில் பிணை இரலை ஏற்றைத் தேடுவதுபோல் தன்னைத் தலைவி எதிர்பார்த்திருப்பாள் என்பதையும் உணர்த்துகின்றான்.

தலைவியைக் காண விழையும் அவன் உள்ள வேகத்திற்கு ஏற்ப, தேர்ப்பாகனிடம் குதிரையை ஏவும்படிப் பணிக்கிறான். தான் மகிழ்வதுபோல் பாகனும் மகிழவேண்டும் என்பதோடு விரைவாகத் தேரைச் செலுத்தவேண்டும் என்பதையும் நுண்ணிதின் புலப்படுத்தும் தலைவன், தன்னெஞ்சிற்குச் சொல்வதில் வெளிப்படும் உயிரினக் காட்சிகள் மூலம் தோழிக்குத் தன்னுள்ளத்தை வெளிப்படுத்திவிடுகிறான். சில நேரங்களில் கேட்போர் இன்மையால் தனக்குத் தானே சொல்வதில் துன்பத்தைக் கொட்டித் தீர்த்து ஒருவாறு ஆறுதலடைகின்றான்.

தலைமகட்குச் சொல்லும் தலைவன், அவள் மகிழ்ந்து தன் விருப்பத்திற்கு உடன்பட வேண்டுமென்பதற்காக இயற்கைப் புணர்ச்சியில் அவளையும், அவளது பெற்றோரையும் புகழ்ந்து, இயற்கை உயிரினங்கள் மூலம் வெளியிடுகிறான். இரவுக்குறி மறுக்கப்பட்டு ஆற்றாதவன் புலி, கரடி, யானை முதலிய விலங்குகளுக்கிடையே வரும் தன் மனத்திண்மையை அவளுக்குச் சுட்டுவதோடு, தனக்காக அவள் இரங்கி வருந்துமாறு உள்ளக் காட்சிகளைக் குறிப்பிடுகின்றான்.

பொருள்வயிற் பிரியும் போது தலைவன், உயிரினங்களில் ஆணும் பெண்ணும் தழுவியிருக்கும் நிலையைச் சுட்டி, இதனைக் கண்டு தனது மனவுணர்வினை வெளிக்காட்டி அவளைத் தேற்றுகின்றான்.

தோழியிடம் இரந்து பின்னிற்கும் போது, தன்குறையுணர்ந்து நீக்குமாறு உள்ள நிகழ்வுகளை, உணர்வுகளை வெளிப்படுத்துகிறான்.

பாங்கனிடம் தலைவன் எந்நிலையிலும் மாறாத தன் காதலையும், அவள் அழகு அவள் காக்கப்படவேண்டியதன் தன்மை ஆகியவற்றைக் கூறித் தனக்கு உதவுமாறு வேண்டுகின்ற இயல்புடையவனாக இருக்கின்றான். இதேபோன்று, பரத்தையற் பிரிந்து தலைவியிடம் கூடுவதற்கு எண்ணும் தலைவன், பாணனிடம் ஆண்மானைப் பெண்மான் விட்டு நீங்கும் நிலையைச் சுட்டி, தன்னை அவளிடம் சேர்க்கும் பொறுப்பினை அவனிடம் சேர்க்கின்றான். இடைச்சுரத்துக் கண்டாரிடம் கூறும்பொழுது, அவளை அடைந்து மகிழப்போகும் தன்னுள்ளத்து உணர்வுகளைக் குறிப்பிடுகின்றான்.

இவ்வாறு தலைவன், தனக்கு ஏற்படும் இன்பம், துன்பம், சிக்கல், ஆழம், தேவை, ஏமாற்றம், கலக்கம், ஏக்கம், ஆற்றாமை போன்ற அனைத்து உள்ளத்துணர்வுகளையும் வெளிப்படுத்துவதற்குக் கருவியாக கூற்றுகள் அமைந்துள்ளன. இவ்வுணர்வுகளை உளவியல் நுட்பமுடன் தக்க இடத்தில் தக்கவரிடம் வெளிப்படுத்துகின்றான்.

இங்ஙனம் தலைவன் கூற்றாக இடம்பெறும் பாடல்கள் தலைவனின் மன உணர்வுகளை நேரடியாக உணர்த்தும் தன்மையன. இவை உணர்வுகளை வெளிப்படுத்தும் முதன்மைக் கருவியாக அமைகின்றன. பாங்கன் கூற்று, தேர்ப்பாகன் கூற்று கண்டோர் கூற்று, உழையோர் கூற்று போன்றவை தலைவனின் மனஉணர்வுகளை மறைமுகமாக உணர்த்தும் கருவிகளாக அமைகின்றன. இக்கூற்றுகளின் துணைகொண்டு அகத்திணைப்பாடல்கள் வழி புலனாகும் தலைவனின் மனவுணர்வுகளை வரும் இயல்களில் இந்த ஆய்வேடு ஆராய்கின்றது.

**புறத்திணை**

வெளிப்படையாகச் சொல்லும் நிகழ்வுகள் அனைத்தும் புறத்திணை எனப்படும். வெளியில் கடைபிடிக்க வேண்டிய ஒழுக்கநெறிகளைப் புறத்திணை ஒழுக்கம் எனலாம். அரசர்களுடைய போர்முறை, அவர்களுடைய ஆட்சியின் பெருமை, அவர்களுடைய வீரம், கொடை, புகழ், வரலாறு ஆகியவைகள் எல்லாம் புறப்பொருளில் அடங்கும். வாணிகம், கைத்தொழில், நீதி ஆகியவைகளும் புறத்திணைச் செய்திகளே ஆகும். புறத்திணை நூல்களில் அரசர்கள், வள்ளல்கள், புலவர்கள் ஆகியோரின் வரலாற்றை அறியமுடியும்.

அகத்திணையை ஏழு திணைகளாக அமைத்திருப்பது போலவே புறத்திணையையும் ஏழு திணைகளாக அமைத்திருக்கின்றனர். அவை வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை, வாகை, காஞ்சி, பாடாண் என்பவையாகும்.

புறத்திணைகளில், புலவர்கள் பாடிய பாடல்கள் மற்றும் புரவலர் பாடிய பாடல்கள் மூலம் சமுதாயத்தின் பல்வேறு படிநிலைகளில் பணிகளைப் பகிர்ந்து கொள்ளும் ஆடவரின் மன உணர்வுகள் ஆராயப்படுகின்றன.

**அ. வெட்சித் திணை**

> "வேந்து விடுமுனைஞர் வேற்றுப்புலக்களவின்
> ஆதந்து ஓம்பல் மேவற்றாகும்" (தொல். புறத்.நூ.2, ப. 7)

என்று வெட்சித் திணைக்கு இலக்கணமாகத் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். அரசனால் ஏவப்பெற்ற, நாட்டின் முனையிலுள்ள ஊரார், அயல்நாட்டின்கண் உள்ள பசுக்கூட்டங்களைக் கவர்ந்து கொணர்ந்து பாதுகாத்தலைச் செய்வதாகும். கவர்ந்த பசு மந்தையை எதிரி மீட்டுக்கொள்வது கரந்தைத் திணையாகும். அவை வெட்சித் திணையின் கண்படும் தன்மையாகும். இவ்விரு துறைகளைச் சார்ந்த பாடல்கள் புறநானூற்றில் 17 பாடல்கள்[17] உள்ளன.

**ஆ. வஞ்சித் திணை**

> "எஞ்சா மண்நசை வேந்தனை வேந்தன்
> அஞ்சுதகத் தலைச்சென்று அடல்குறித்தன்றே" (தொல்.புறத்.நூ.7, ப.30)

என்ற நூற்பாவில் குறையாத மண்ணை விரும்பிய அரசன் அஞ்சுமாறு, எதிர் அரசன், போர் செய்தலைக் குறிக்கும். இதனை வஞ்சித் திணையின் இலக்கணமாகத் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். புறநானூற்றில் வஞ்சித் திணை குறித்த 11 பாடல்கள்[18] இடம்பெற்றுள்ளன.

**இ. உழிஞைத் திணை**

> "முழுமுதல் அரணம் முற்றலும் கோடலும்
> அனைநெறி மரபிற்றாகும் என்ப" (தொல். புறத். நூ.10, ப.31)

என்ற நூற்பாவில் கோட்டையை முற்றுகை இடுதலும் அதைக் கொள்ளுதலும் என்ற முறையில் அமையும். இதனை உழிஞைத் திணையின் இலக்கணமாகத் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். உழிஞைத் திணையின் துறையாய் அமைந்த நொச்சித் திணை சார்ந்த பாடல்கள் எட்டுத்தொகை நூல்களில் 6 பாடல்கள் [19] இடம்பெற்றுள்ளன.

**ஈ. தும்பைத் திணை**

> "மைந்து பொருளாக வந்த வேந்தனைச்
> சென்று தலையழிக்கும் சிறப்பிற்றென்ப" (தொல். புறத். நூ.15, ப.33)

என்ற நூற்பா, தனது வலிமையைப் பொருளாகக் கருதி வந்த அரசனை, எதிர்த்துச் சென்று அவன் தலைமையைத் தீர்க்கும் சிறப்பினையுடையது. இது தற்காப்புப் போராகும். இதனை, தும்பைத் திணையின் இலக்கணமாகத் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார் எட்டுத்தொகை நூல்களில் தும்பைத் திணை சார்ந்து 27 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. [20]

**உ. வாகைத் திணை**

> **''தாவில் கொள்கைத் தத்தம் கூற்றைப்**
> **பாகுபட மிகுதிப்படுத்தல் என்ப''(தொல்.புறத்.நூ.19, ப. 35)**

என்ற நூற்பா வலியும் வருத்தமும் இன்றி, இயல்பாகிய ஒழுக்கத்தானே, தம்முடைய கூறுபாடுகளை, இருவகைப்பட மிகுதிப்படுத்தல் என்று வாகைத்திணைக்கு இலக்கணம் வகுத்துள்ளார் தொல்காப்பியர். வெற்றி, தனக்கென ஒரு தனிநிலையோ, வெட்சி, வஞ்சி, உழிஞை, தும்பை என்ற இப்புறத்திணை வகைகளுள், ஒரு திணை நிகழ்ச்சிக்கு மட்டும் தனி உரிமையோ உடையதாகாது. அகத்திணைகளின் முடிவாகவும் அகத்திணைகள் அனைத்திற்கும் உரியவாகவும் வரும் ஆதலின், அவ்வெற்றியாம் வாகையைத் தனக்கென ஒரு நிலம் பெறாமல், ''முல்லையும், குறிஞ்சியும் முறைமையில் திரிந்து நல்லியல்பு இழந்து நடுங்கு துயர் உறுத்துப் பாலை என்பதோர் படிவங் கொள்ளும் என்பது போல் முல்லை முதலாம் நிலங்களின் திரிபாகவும், அத்திணை ஒழுக்கங்கள் ஒவ்வொன்றோடும் கலந்திருப்பதாகவும் விளங்கும் பாலைத் திணையின் புறத்திணையாக வாகை அமைந்துள்ளது என்பர்.''[21]

**ஊ. காஞ்சித் திணை**

> **''பாங்கரும் சிறப்பின் பல்லாற்றானும்**
> **நில்லா உலகம் புல்லிய நெறித்தே'' (தொல். புறத்.நூ.23, ப.37)**

என்ற நூற்பா, இணை இல்லாத சிறப்பினையுடைய வீட்டின்பம் காரணமாக, பலவழிகளிலும் நிலை பேறில்லாத உலக இயற்கையைப் பொருந்திய நல்நெறியினை உடையது காஞ்சித்திணை என்று இலக்கணம் வகுத்துள்ளார் தொல்காப்பியர். உலக நிலையாமையை எடுத்துக்கூறுவது, நன்னெறியிலே நடக்கும்படி அறிவுறுத்துவது போன்றவற்றைக் கொண்ட காஞ்சித் திணை சார்ந்த பாடல்கள் சங்க இலக்கியப் புறநானூற்றில் 32 பாடல்கள் உள்ளன.[22] ''காஞ்சி தானே பெருந்திணைப் புறனே''[23] என்னும் அகத்திணைக்குப் புறனாக அமைகின்றது எனக் குறிப்பிட்டுள்ளார்.

**எ. பாடாண் திணை**

> **''பாடாண்பகுதி கைக்கிளைப் புறனே**
> **நாடுங்காலை நாலிரண்டு உடைத்தே'' (தொல். புறத்.நூ.25, ப. 39)**

எனும் நூற்பா ஒருவனுடைய ஒழுக்கம், வீரம், புகழ், கொடை முதலியவற்றைப் புகழ்ந்து பாடுவது பாடாண் திணை என்று தொல்காப்பியர் இலக்கணம் வகுத்துள்ளார். பாடாண் திணை, கைக்கிளை என்னும் அகத்திணைக்குப் புறனாக அமைந்துள்ளது. சங்க இலக்கியப் புறநானூற்றில் பாடாண் திணை சார்ந்த பாடல்களே **(369 பாடல்கள்)** மிகுதியாக இடம்பெற்றுள்ளன. [24]

## II. பதிற்றுப்பத்து

பதிற்றுப்பத்தில் திணை பற்றிய குறிப்பு புறநானூற்றில் குறிப்பிட்டுள்ளது போல் காணப்படவில்லை. தொல்காப்பியப் புறத்திணையியலை அடியொற்றித் திணைக்குறிப்பு டாக்டர் ந. சஞ்சீவி அவர்களால் தேர்ந்து தரப்பட்டுள்ளது.[25] அதனை மையமாகக் கொண்டு இவ்வாய்வு நிகழ்த்தப்படுகிறது. தொல்காப்பியர் சுட்டும் புறத்திணை ஏழனுள் வஞ்சியும் காஞ்சியும் ஒழிந்த வெட்சி, உழிஞை, தும்பை, வாகை, பாடாண், பதிற்றுப்பத்தில் இடம்பெற்றுள்ளன. ஒரே ஒரு பாடலைக் கொண்டுவருவன வெட்சியும் [26] உழிஞையும் [27] ஆகும். தும்பைத் திணையில் [28] மூன்று பாடல்களும் வாகைத் திணையில் [29] ஆறு பாடல்களும் இடம்பெற்றுள்ளன. பதிற்றுப்பத்திலும் பாடாண் திணைப் [30] பாடல்களே (69) மிகுந்துள்ளன. பதிற்றுப்பத்துப் புலவர்கள் ஒவ்வொருவரும் மன்னரிடம் பரிசில் வேண்டிய செய்தியை ஒவ்வொரு பத்தின் இறுதியில் உள்ள பதிகம் தெரிவிப்பதால் பாடாண் திணைப் பாடல்கள் பதிற்றுப்பத்தில் மிகுந்து காணப்படுகின்றன என்பதை அறியமுடிகிறது.

## ஆ. உளவியலும் உணர்வுகளும்

“இருபதாம் நூற்றாண்டில் அறிவியல் வாயிலாக, மனிதனைப் பற்றி ஆராய முனைந்த துறைகளுள் உளவியல் துறையும் ஒன்றாகும்”[31] என்பர் உளவியலார். சங்க காலத்திலேயே மனித மனத்தினை நன்கு அறிந்து செய்யுள்கள் படைக்கப்பட்டுள்ளன.

“மனிதன் எண்ணங்களால் ஆளப்படுவதோடு உணர்வுகளுக்கும் உணர்ச்சிகளுக்கும் உட்படுகின்றான். அத்தகைய உணர்வுகளே உணர்ச்சியாக உருவெடுக்கின்றன”[32] என்பர். எனவே, உணர்வு மனதின் செயற்பாடு என்பதை அறியமுடிகிறது. இத்தகைய உணர்வுகளை உளவியல் வாயிலாக அறிவதே இப்பகுதியின் நோக்கமாக அமைகின்றது. மாந்தரின் உள்ளத்தில் எழும் உணர்வுகள், அந்த உணர்வுகளுக்கிடையேயான போராட்டம், உள்ளமுறிவு, உள்ள இறுக்கம் போன்ற உளம் சார்ந்த சிக்கல்கள் குறித்து இவ்வியல் உளவியல் துணைகொண்டு விளக்கிச் செல்கிறது.

### 1. உள்ளம்

மனித வாழ்விற்கு அடிப்படையாக அமைந்து மனிதனை இயக்கிக் கொண்டிருப்பது மனமாகும். மனத்தை மனிதன் பெற்றிருப்பதாலேயே அவனால் நிலைபேறுடைய செயல்களைச் செய்ய இயலுகின்றது. ஏனைய உயிரினங்களைக் காட்டிலும் உயர்ந்து நிற்க முடிகின்றது. எனவேதான் தொல்காப்பியர், “ஆறறிவதுவே அவற்றொடு மனனே”[33] என மனத்திற்குச் சிறப்பளித்துச் செல்கின்றார். நினைத்தல், சிந்தித்தல் போன்ற செயல்கள் எல்லாம் மனத்தால் நிகழ்கின்றன. மனம் எனும் சொல் உள்ளம் என்றும் அழைக்கப்படுகின்றது.

மனத்தின் செயலாகிய சிந்தித்தல் என்பது பொதுவாக 'ஆழமாக நினைத்தல்' என்ற பொருளில் இன்றும் வழக்கில் உள்ளது. சிந்தையிலிருந்து தோன்றும் முடிவுகள், உண்மைகளையே சிந்தனை என்கிறோம். சிந்திக்கும் ஆற்றல் மனிதனுக்குரியது. தெளிந்த மனநிலையும், மதிநுட்பமும் வாய்க்கப்பெற்றவர்களுக்கே சிந்தனை செய்யும் ஆற்றல் அமையப்பெறும்.

*'மனிதனின் எண்ணங்களே மனிதனை உருவாக்குகின்றன' என புத்தர் உரைத்தார். எண்ண அமைப்பு முறைதான் வெற்றிக்கு வழிவகுக்கின்றது. அதேபோல் எண்ணங்களை ஒருமுகப்படுத்தும் போதுதான் பயன் கிடைக்கிறது. "எண்ணங்களை உள்ளே விடுங்கள்; முடியும் என்ற எண்ணங்களைத் திரும்பத் திரும்பச் சிந்திக்கும் போது அது செயலாகப் பரிணமிக்கிறது. பின் செயல் பழக்கமாகிறது. பல பழக்கங்கள் ஒரு மனிதனின் குணநலன்களாகின்றன"*[34]

என்று டிரைன் என்ற தத்துவஞானி வகுத்துள்ளார். எனவே எண்ணங்கள் தான் உணர்ச்சியாக, சக்தியாக உடலில் மாறுகின்றன என்பதை அறியலாம்.

மனித உள்ளம் அளப்பறிய ஆற்றலையும், கற்பனைகளையும், எண்ண வடிவங்களையும் தன்னகத்தே கொண்டுள்ளது. உள்ளத்தில் எழுகின்ற எண்ணச் செயல்பாடுகளை மனிதன் கூற்றாக மொழிந்தும், செயற்படுத்தியும் வெளிப்படுத்துகிறான்.

உள்ளத்தை நனவுளம் (Consious Mind), நனவடி உளம் (Sub Consious Mind), நனவிலி உளம் (Unconsious Mind) என்று உளவியலார் மூவகைப்படுத்தியுள்ளனர்.

*"உள்ளம் என்று முன்னையோர் கருதியது இப்போதைய நனவுளத்தையே குறிக்கும். உள்ளத்தின் பெரும்பகுதி நனவுள்ளத்திற்குக் கீழே ஆழ்ந்திருப்பது. மனிதனது நடத்தையை உருவாக்குகிறது. இந்த ஆழ்ந்த உள்ளம் (நனவிலி உளம்) மிகுந்த ஆற்றல் வாய்ந்தது. நாம் வெளிப்படையாகக் காணும் அறிகுறிகளும் நடத்தைகளும் ஆழ்ந்த உள்ளத்தால் ஏற்படும் மாறுதல்களாலானவை. எனவே, மனிதனது பெரும்பாலான நடத்தைக்குக் காரணம் ஆழ்ந்த உள்ளமே"*[35]

என்பதாகும். இந்த உண்மையைத் தொகுத்து அறிவியல் அடிப்படையில் முதன்முதலாக வெளியிட்டவர் சிக்மண்ட் பிராய்டு என்ற உளவியலறிஞர் என்கிறார் ந. சுப்புரெட்டியார்.

### உ. உள்ளக் கிளர்ச்சி

உள்ளக் கிளர்ச்சி (Emotion) இன்னது என்பதை வரையறைப்படுத்தி உரைத்தல் இயலாது. அதன் பொருளைச் சொற்களால் எல்லை கட்டி உணர்த்த முடியாது.

*"வெகுளி (Anger) என்பது ஓர் உள்ளக்கிளர்ச்சி. ஆனால் அதனை நாம் உணர்ச்சி (Feelings) எனக் குறிப்பிடுகின்றோம். ஆனால், "உளவியலில் வெகுளி, அச்சம் (Fear), அன்பு (Love) ஆகிய அனுபவங்களைக் குறித்தற்கு உள்ளக்கிளர்ச்சி"*[36]

என்றே வழங்குகின்றனர். உளவியலார் கூறும் இந்த உள்ளக்கிளர்ச்சியை இவ்வாய்வில் உணர்வோட்டம் என்ற சொல்லால் ஆய்வாளர் குறிப்பிடுகிறார்.

**அ. உணர்ச்சியும் உள்ளக்கிளர்ச்சியும்**

உணர்வு என்பது தாமே உணர்ந்து கொள்வதேயன்றி, ஐம்பொறியால் அறியுமாறு ஒருவருக்குக் காட்ட இயலாத ஒன்றாகும். இதனை,

**"நோயும் வேட்கையும் நுகர்வும் என்றாங்கு**
**ஆவயின் வரூஉம் கிளவி எல்லாம்**
**நாட்டிய மரபின் நெஞ்சுகொளின் அல்லது**
**காட்டி லாகாப் பொருள என்ப"** (தொல்.பொருள்.நூ.2, ப.5)

என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

உணர்ச்சிகளில் மூன்று வகையான இரகசியங்கள் (Mystiries) உள்ளன என்பர் உளவியலார். அவை எழுப்புதல் நிலை (arousal), வெளிப்பாடு (Expression), அனுபவித்தல் (Experience) என்பனவாகும்.[37]

**ஆ. உள்ளக் கிளர்ச்சிகளைக் கட்டுப்படுத்தல்**

*"உள்ளக் கிளர்ச்சிகளே நமக்கு ஆற்றல் அளிக்கும் விசைகள். உள்ளக் கிளர்ச்சிகளைத் தக்க முறையில் கட்டுப்படுத்திச் செயலை எழுப்பி, நிறுத்தி நெறிப்படுத்துவதே நாகரிக முறையாகும்"*[38]

என்பர் உளவியலார். இத்தகைய நனி நாகரிகராக சங்க கால மக்களுள் ஆடவர் சிறந்திருந்தனர் என்பதைச் சங்கப் பாடல்கள் நமக்கு உணர்த்துகின்றன.

ஒருவாறு உள்ளக் கிளர்ச்சிகளை அடக்குவதும் மறைப்பதும் சிறந்த நல்லொழுக்கத்தின் அறிகுறியாகும். சங்க கால ஆடவர் தம் உள்ளக்கிளர்ச்சியை அடக்கியாளும் பெற்றியராகத் திகழ்ந்தனர் என்பதை சங்கப் பாடல்கள் வெள்ளிடை மலையென விளக்கிக் காட்டுகின்றன.

"உலகெங்கும் மனிதனுக்குத் தெரியாமல் ஒரு நுண்ணிய சக்தி ஊடாடி நிற்கின்றது. அந்தச் சக்தியே உணர்ச்சியாகும். அவ்வுணர்ச்சிகளின் அடிப்படையில்தான் இலக்கியங்கள் தோன்றுகின்றன. தான்பெற்ற இன்பம் அதே உணர்வுடன் பிறரும் பெறவேண்டும் என்று நினைக்கின்றவர்கள்தான் இலக்கியத்தைப் படைக்கின்றனர்" என்பர் அறிஞர்.[39] இப்படிப்பட்ட உணர்ச்சிகளின் தூண்டலாகவே (Stimuli) இலக்கியத்தின் உள் வடிவங்களான கற்பனை, உவமை, வடிவம் போன்றவை அமைகின்றன.

**3. உள்ளத்தின் நிலைகள்**

புறத்தே நிகழும் நிகழ்ச்சிகள் எல்லார்க்கும் தெரியும் வண்ணம் அமைந்துவிடுகின்றன. உள்ளத்தில் தோன்றும் நினைவுகள், கண், உடலசைவின் மூலமாகவும், கூற்றாகவும் மட்டுமே நிகழ வாய்ப்புண்டு. இத்தகைய மனித மனத்தினை உணர்வு நிலை மனம், உணர்வு

கடந்த நிலைகள், உள்ளுணர்வு மனம் என்று மூன்று நிலைகளில் பிரித்தறிகின்றனர் அறிஞர் பெருமக்கள். [40]

**அ. உணர்வுநிலை மனம்**

அகமும் புறமும் விழித்த நிலையில் இருக்கும்போது மனம் பிறர் வயப்படுகின்றது. தன்னுணர்வு பெற்ற நிலையிலேயே இன்ப துன்பங்களைப் பகுத்தறிந்து செயல்களை நிறைவேற்றுகின்றது. பிறரின் ஆதிக்கம் தன்னையறியாமல், தன் மனத்தை ஆட்படுத்தும் போது, உணர்வானது நிலை கொண்டுவிடுகிறது. இதனையே உணர்வு நிலை மனம் என்று குறிப்பிட்டுள்ளனர்.[41]

**ஆ. உணர்வு கடந்த நிலைகள்**

"விழித்திருக்கும் மனநிலையிலிருந்து மாறுபட்டு மனமானது பிறமனத்தை விரும்பும் நிலைப்பாடே உணர்வு கடந்த நிலை"[42] என்கிறது உளவியல். தன்னுணர்ச்சி பெற்ற நிலையிலே பிறமனத்தை விரும்புவதாகும். சிறப்பாகத் தோன்றும் எக்காட்சியும் மனதில் பதிகின்றது. இத்தகைய உணர்வு கடந்த நிலையை ஆடவர் பெறுவதைச் சங்க அகப்பாடல்களில் நாம் காணலாம்.

**இ. உள்ளுணர்வு மனம்**

மற்றவர்கள் கூறுகின்ற நல்லது, கெட்டதை நமக்குப் பகுத்தறிந்து உணர்த்தும் மனமே உள்ளுணர்வு மனம் என்பர்.

**4. உளநுட்பச் செயல்பாடுகள்**

உள்ளத்தின் நுட்பமான செயற்பாடுகள் ஆழ் மனத்தில் எழும் எண்ணங்களின் வாயிலாக உருவெடுக்கும் உணர்வுகளின் போக்கில் அமைகின்றன. இந்த உளநுட்பச் செயற்பாடுகள் ஆழ்மனத்தின் போக்கு, உணர்வின் அடிப்படையில் அகம் எனும் இருவகையில் அமைகின்றது.

**அ. ஆழ்மனத்தின் போக்கு**

அவிழ்த்து விடப்பட்ட குரங்கைப்போல, மனம் தன் கட்டுப்பாட்டை விட்டுவிட்டு இயங்கும் தன்மை உடையது. அதன்போக்கு அகமனத்தினுள் உறைந்திருக்கும் செயல்வடிவினைக் கொண்டே அமையும். நனவுலகில் எழும் நிறைவேறாத மன உணர்வுகள் ஆழ்மனதில் பதிந்துவிடுகின்றன. பின்னர் துயிலின் போது, அவை மெல்லக் கனவின் வெளிப்பாடாக மேலெழும்புகின்றன. "கனவு என்பது மறைக்கப்பட்ட வேட்கையின் வெளிப்பாடு மட்டுமின்றி நனவு, மனமறிந்த நம்பிக்கை, நடுக்கம் இன்னபிறவற்றின் உருமாறிய வடிவம் என்றும் கொள்ளலாம்"[43] என்று அ. நலங்கிள்ளி குறிப்பிட்டுள்ளார்.

**ஆ. உணர்வின் அடிப்படையில் அகம்**

நாம் காணுகின்ற காட்சிகள் மனத்தையும், ஆழ்மனத்தையும், செவியையும் குளிரவைக்கும்படி இருப்பின், அது இன்பம் தருகிறது. பருவ வயதில் காண்பதெல்லாம் கலையின் வெளிப்பாடாகவே தோன்றும். 'அரண்டவன் கண்ணுக்கு இருண்டதெல்லாம் பேய்' என்றும் 'காமாலை கண் கொண்டவனுக்குப் பார்ப்பதெல்லாம் மஞ்சளாகத்தான் தெரியும்' என்றும் வழக்கில் கூறுவது உண்டு. அவரவர் காணும் பருவம், வயது, சூழல்களே ஆழ்மனதில் வெவ்வேறு வடிவங்களாக, உணர்வுகளாகப் பதிகின்றன. அவை தக்க சமயத்தில் வெளிப்பட்டுத் தன்னை நிலைநிறுத்துகின்றன. சங்க இலக்கியத் தலைவனின் ஆழ்மனதில் உள்ள தலைவி மீதான விருப்பம் வெளிப்படும் போது, தன்னைப் போலவே அவளும் இருப்பாள் என நினைக்கத் தோன்றும். இந்த மாயையைத்தான் 'உணர்வின் அடிப்படையில் அகம்' என்று குறிப்பிடலாயிற்று.

சங்க இலக்கியத் தலைவன் தலைவி இருவரும் இளம்பருவத்தினர். இத்தகைய பருவத்தில் இருவரின் மனதில் தோன்றும் எண்ணங்கள், உணர்வுகள் ஒத்திருப்பதை அவர்களின் கூற்றின் மூலம் அறியமுடிகிறது. ஒத்த பருவத்தினர் ஆதலால் தன்னுணர்ச்சியும், மற்றவருடைய உணர்ச்சியும் ஒத்திருக்கும் என்று அகம் உணர்வதை அறியமுடிகிறது.

**5. மாந்தரின் உணர்ச்சி நிலைகள்**

மாந்தரின் உணர்ச்சிகள் அகமனத்தின் மகிழ்ச்சி, புறமனத்தின் வெளிப்பாட்டு நிலை, உடல் கடந்த மன இன்பம் போன்ற நிலைகளில் காணப்படுகின்றது. விரும்பத் தகுந்த காட்சி, பொருள், ஒலி எதுவாயினும் கண்களுக்குப் புலப்படும் போதும், காதுகளுக்கு அவை கேட்கப்படும் போதும், உள்மனமாகிய 'அகம்' மகிழ்ச்சி கொள்கின்றது. பிறர் கூறும் கூற்றினை உண்மை என மனம் நினைத்து விடுகின்றது. அதனோடு இயைந்த காட்சியைக் கண்டவுடன் அகமனம் மகிழ்ச்சி கொள்கின்றது. மனதில் தோன்றும் உணர்வுகள், மெய்யின்கண் உணர்ச்சியாக வெளிப்படுகிறது.

**6. உளநலச் சிக்கல்கள்**

உளநலத்தை உருவாக்கிப் பாதுகாத்தல் எளிய செயலன்று. உடலின் தேவைகள் நிறைவதால் மட்டும் உள்ளம் நிறைவுற்று விடுவதில்லை. டாக்டர் மு. வரதராசன், 'உள்ளத்தின் தேவைகளே மக்களின் வாழ்க்கையில் கவலையை வளர்க்கின்றன. உள்ளத்தின் அமைதியும் தெளிவுமே மக்களுக்கு உண்மையின்பத்தைத் தருகின்றன'[44] எனக் கூறுகிறார்.

நலமான உள்ளம் பெற்ற மனிதன் தன்னுள் நிறைவும் ஒத்திசைவும் பெற்றிருப்பான். சமூக நல்லிணக்கம் அவனது நடத்தையின் பொதுப் போக்காக இருக்கும். உளவியலார்,

“உள்ளும் புறமும் ஒத்துவாழ்வதே நல்ல ஆளுமையாகும்”[45] என்பர். தன்னளவில் முரண்பாடுகள் அற்ற ஒத்திசைவும் சமூக அளவில் நல்லுறவான இணக்கமும் உளநலத்தின் இருபெரும் கூறுகள் எனலாம். இப்பொருத்தப்பாட்டினைச் சிதைக்கும் சிக்கல்களை உளவியலார், உள்ள முறிவு (Frustration), உள்ளப் போராட்டம் (Conflict), உள்ள இறுக்கம் (Pressures) என்று மூவகைப்படுத்துவர்.[46]

### அ. உள்ளமுறிவு

உள்ளமுறிவு என்பது “விரும்பிய இலக்கினை அடைவதில் நேரும் தடைகளாலோ குறுக்கீடுகளாலோ நேர்மையான குறிக்கோள் ஒன்று இன்மையாலோ விளைவதாகும்”[47] என உளவியலார் விளக்குவர். ஓர் அழுத்தமான தேவையும் அதனை எய்தி நிறைவுற இயலாத உணர்வும் உடனியையும் போது நேரும் அனுபவமே உள்ள முறிவு என்று பிரித்தானியக் கலைக்களஞ்சியம் வரையறுக்கின்றது.[48] இத்தகைய உள்ளமுறிவு குறைபாடுகளினாலும், பொருள் நிலையினாலும், சமூக நிலையினாலும் உண்டாகிறது.

உடல் குறைபாட்டினால் உருவாகும் உள்ளமுறிவை “ஒருவனது நாட்டத்தின் அளவுக்கும் உண்மைத் திறனுக்கும் வேறுபாடு அதிகம் இருப்பின் அவன் மனமுறிவு பெறுகிறான்”[49] என்பர் உளவியலார்.

பொருளாதாரச் சீர்கேடு உள்ளத்தைச் சிதைத்துவிடும் வன்மை வாய்ந்தது ஆகும். சங்க காலத்தில் ஒருவனது பொருளாதார நிலை, அவனது பிறப்பு, மேற்கொண்ட தொழில் சமுதாயத்தில் அத்தொழிலின் நிலை ஆகியவற்றைச் சார்ந்து அமைந்தது.

பொருள் முதலான உடல் சார்ந்த தேவைகள் நிறைவதால் மட்டும் உள்ளம் நிறைவு கொள்வதில்லை. பிறரது ஆதரவையும் அன்பையும் எதிர்பார்த்து ஏங்கும் ஏக்கமும், அவை மறுக்கப்படும் போது நேரும் மனமுறிவும், உள்ள அழுத்தமும் குறிப்பிடத்தக்கனவாகும்.[50] உளவியலார், “மனிதர்களிடம் நிலவும் அன்பிற்கும் பிறர்நல விழைவிற்கும் பிறரது துலங்கலைப் பெறவேண்டும் என்னும் விருப்பமே அடிப்படை”[51] என்பர். ஏனெனில் “ஒவ்வொருவரும் சமூகத்தின் அங்கங்களாக விளங்குகின்றனர். அதேபோல் சமூகமும் ஒவ்வொருவரது உளவாழ்விலும் பெரும் பங்கு பெறுகின்றது”[52] என்பது உளவியல் உண்மையாகும்.

### ஆ. உள்ளப் போராட்டம்

உள்ளத்தின் நோக்கமும் ஊக்கமும் மனிதனைச் செயல்படுத்துகின்றன. ஒரே நேரத்தில் ஒன்றிற்கு மேற்பட்ட விருப்பங்கள் உடனிகழ்வாய்த் தோன்றுமாயின் எதனை ஏற்பது, எதனை விடுப்பது என்னும் ஐயம் தோன்றும். இதன் அடிப்படையில் முடிவெடுக்க இயலா நிலையும் செயற்பட இயலா நிலையும் தோன்றும். இத்தகைய நிலையே உள்ளப் போராட்டம் எனப்படும்.

இருவேறு நோக்கமும் ஊக்கமும் ஒரே நேரத்தில் ஒரே உள்ளத்தில் தோன்றி மோதுகின்றன என்பது கருதத்தக்கது. “ஒரே நேரத்தில் நிறைவுற இயலாததும் ஒன்றற்கொன்று தனித்தனியானதுமான செயல்நோக்கமும் ஊக்கமும் உள்ளத்தில் இருப்பதனால் விளைவதே உள்ளப்போராட்டம்”[53] என உளவியலார் விளக்குவர்.

“உள்ளத்தின் உணர்வுப் போராட்டத்திற்கு ஆட்படும் மனிதன் இணை வலிமையானதும் நேர்நிலையானதுமான இருவகை மாற்று ஆற்றல்களால் இழுபடுகிறான். இம்மாற்று ஆற்றல்கள் இணைவலிமையுடன் இல்லாவிட்டால் போராட்டம் நிகழாது”[54] என்று உளவியலார் கூறுவர். அன்புடைத் தலைவியுடன் உறையும் அகவாழ்வு இன்பமுடையது. பொருள் புறவாழ்வின் அடிப்படைத் தேவையாகிறது. உயிரியல் சார்ந்த வேட்கை ஒருபுறமும் சமுதாயவியல் சார்ந்த தேவை ஒருபுறமும் தலைவன் நெஞ்சை அலைக்கழிக்கின்றன. இடைச்சுரத்து அழுங்கும் தலைவன் கூற்றில் அமைந்த எட்டுத்தொகைப் பாடல்களில் இப்போராட்ட உணர்வினைக் காணலாம்.

**இ. உள்ள இறுக்கம்**

உள்ள முறிவு எவ்வகைத் தீர்வுமின்றி நெடுங்காலம் தொடருமானால் உணர்வியல் சார்ந்த முற்றிய விறைப்புநிலை (Tension) தோன்றும். அந்நிலையை உள்ள இறுக்கம் (Stress) என உளவியலார் குறிப்பர்.[55] உள்ளம் முறிவுற்ற நிலையிலும் போராட்டம் மிக்க நிலையிலும் சில எதிர்மறையான உள்ளக் கிளர்ச்சிகள் (Emotion) தோன்றுகின்றன. அவற்றுள் சினம் (Anger), அச்சம் (Fear), கவலை (Anxiety) என்ற மூன்றினைச் சிறப்பாக உளவியலார் குறிக்கின்றனர்.[56] இதனை “அச்சமும் அவலமும் ஆர்வமும் நீக்கிச் செற்றமும் உவகையும் செய்யாது காத்து”[57] என்னும் பாடலடிகளில் காணலாம்.

> *“உள்ளத்தின் முறிவாலும் போராட்டத்தாலும் மனம் கலக்கம் அடைகின்றது. இக்கலக்கத்தின் விளைவே கவலை ஆகும். மனமுறிவுள்ள ஒரு மனிதனும் சரி அல்லது மனப்போராட்டத்தில் உள்ள ஒரு மனிதனும் சரி, ஒரு கலக்கமடைந்த இறுக்கமான நிலைமையிலிருக்கின்றான். அவனுடைய மூல ஊக்கியின் தூண்டல் நிலை சிறிதும் குறையாமலிருக்கின்றது. மேலும், அவனுடைய மன இறுக்கம் போராட்டத்திலிருந்து எழுந்த மனவெழுச்சித் துலங்கலினால் வலிமையூட்டப் பட்டிருக்கின்றது.”*[58]

இந்நிலையே கவலை அல்லது தவிப்பு என்பது உளவியலாரின் கருத்து.

கவலையைப் பற்றிய இவ்வுளவியல் விளக்கம் சங்க இலக்கியத்தில் உள்ள இடர்ப்பாடு மிக்க வாழ்க்கைச் சூழல்கள் அனைத்திலும் இணைத்துக் காணத்தக்கதாகும். சங்க இலக்கியத்தில் ‘நோதல்’ என்னும் சொல் உள்ளத்தின் முறிவு, போராட்டம், விறைப்பு நிலை, அழுத்தம், இறுக்கம் ஆகியவற்றை உணர்த்தும் பொதுச் சொல்லாகவே பெரும்பாலான இடங்களில் பயின்று வருகின்றது.[59]

**நடத்தை**

“மனித நடத்தைகள் தாறுமாறானவை அல்ல; ஒரு குறிப்பிட்ட தேவைக்கோ, செயலுக்கோ உரியவை”[60] என்ற தனது இருத்தல் கொள்கையாக (Existentialism) ஜேம்ஸ் குறிப்பிட்டுள்ளார்.

சங்க ஆடவரின் நடத்தைகள் (Behaviour) குறிப்பிட்ட தேவையைச் சந்திப்பதாகவோ அல்லது செயலை எதிர்நோக்குவதாகவோ அமைகின்றன என்பதைச் சங்கப் பாடல்கள் வழி அறியலாம்.

**ஆளுமை**

ஒருவனைத் தனிப்பட்ட சிறப்புடைய ஓர் ஆளாகச் செய்யும் தன்மைகளின் முழுமையை ‘ஆளுமை’ என்னும் சொல்லால் குறிக்கிறோம். ஒருவனுக்கு இருக்கும் அளக்கக் கூடிய சிறப்பியல்புகள், அவன் உடலமைப்பு, ஆற்றல்கள், திறமைகள், அவன் நடத்தையில் நாம் பார்க்கக்கூடிய மனநிலை, மனப்பான்மை போன்றவை ஆளுமையின் வெளிப்படையான அம்சங்களாகும். ஒருவனின் உந்தல்கள், தன்னை அவன் உணர்வதில் அடங்கியுள்ள எண்ணங்கள் மனப்போக்குகள் இவற்றின் தொகுதி, அவனுடைய உணர்ச்சிகள், சிந்தனைகள், செயல்கள் இவற்றில் ஆதிக்கம் செலுத்தும் உணரப்படாத அல்லது நனவிலியான போக்குகள் போன்ற இவையனைத்தும் உட்புற அம்சங்கள் ஆகும்.[61]

இத்தகைய ஆளுமைத்திறன் சங்ககால ஆடவரிடையே இருந்ததைச் சங்கப் பாடல்களில் காணப்படுகின்றது.

**உள்ளத் துணிவு**

தனிமனித ஆசைகள் மேம்படும்பொழுது உள்ளத்துணிவு ஏற்படும் என்பதை, “ஈடுபாடு மிகுதிப்படுத்தப்படும் பொழுது மனித உள்ளம் தான் அடைந்து வந்த நன்மைகள் எல்லாவற்றையும் புறந்தள்ளித் தடைகளைத் தாண்டுவதற்கு வியப்படையத்தக்க விரைவுடன் செயலாற்றத் தொடங்குகிறது”[62] என்கிறார் உளவியலறிஞரான ஆர்தர் சோபனார். இத்தகைய உள்ளத்துணிவு மிக்க ஆடவரை எட்டுத்தொகைப் பாடல்களில் நம்மால் காணமுடிகிறது.

இவ்வியலில் உள்ளம், உள்ளக்கிளர்ச்சி, உணர்ச்சியும் உள்ளக்கிளர்ச்சியும், உள்ளத்தின் நிலைகள், உளநுட்பச் செயல்பாடுகள், மாந்தரின் உணர்ச்சி நிலைகள், உளநலச் சிக்கல்கள், உள்ளமுறிவு, போராட்டம், இறுக்கம் இவைபோன்ற உள்ளம் சார்ந்த கருத்துக்களை உளவியலார் துணைகொண்டு அறியப்பட்டது.

**இ. மெய்ப்பாடுகளும் உணர்வுகளும்**

தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் பொருளை அகம், புறம் என இரண்டாகப் பகுத்து, மனிதனைப் பற்றியும், மனித உள்ளம், சமூக நிலை, செயல்கள், மனித மனத்துள் எழும் உந்துதல்கள், உலக நிகழ்வுகள், இலக்கிய நெறிகள் பற்றியும் வரையறுத்துள்ளார். பிற்காலத்தில் தோன்றிய வேதாந்த சித்தாந்த நூல்கள் போல் இல்லாமல், இக்கால உளவியலார் கொள்கைகளுக்கு ஏற்றபடி இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே மனித மன உணர்வுகளையும், உணர்வு வெளிப்பாடுகளையும் தொல்காப்பியம் ஆராய்ந்து வரையறுத்துள்ளது. எனவே தொல்காப்பியம் சிறந்த உளவியல் நூலாகவும் விளங்குகிறது என்பதை உணரலாம்.

**மெய்ப்பாடுகள்**

**"உய்ப்போன் செய்தது காண்போர்க் கெய்துதல்**
**மெய்ப்பாடென்ப மெய்யுணர்ந் தோரே" (தொல்.பொருள்.இளம்.உரை.ப.7)**

என்பர் செயிற்றியனார். "மெய்யின்கண் தோன்றுதலின் மெய்ப்பாடாயிற்று"[63] என்று இளம்பூரணர் விளக்குவர். கண்ணீர் அரும்பல், மெய்ம்மயிர் சிலிர்த்தல் முதலிய அறிகுறிகள் மூலம் அறிவதே மெய்ப்பாடாகும் என்பதை அறியமுடிகிறது. மெய்ப்பாட்டை அறிவு, உணர்வு படைத்தோரால் மட்டுமே அறிந்துணர முடியும் என்றும் குறிப்பிட்டுள்ளார். இதனை,

**"கண்ணினும் செவியினுந் திண்ணிதின் உணரும்**
**உணர்வுடை மாந்தர்க்கல்லது தெரியின்**
**நன்னயப் பொருள்கோள் எண்ணருங் குரைத்தே"**

**(தொல்.பொருள்.நூ.271,ப.33)**

என்ற நூற்பா மூலம் அறியலாம். அகத்திணைக்கும், புறத்திணைக்கும் பொதுவான மெய்ப்பாடுகளாக,

**"நகையே அழுகை இளிவரல் மருட்கை**
**அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று**
**அப்பால் எட்டும் மெய்ப்பாடென்ப" (தொல்.பொருள்.நூ.247,ப.7**

என்ற எண்வகை மெய்ப்பாடுகளைச் சுட்டுகிறார். அவை, நகை, அவலம், அச்சம், இழிவு, வெகுளி, வீரம், வியப்பு, உவகை ஆகிய எட்டு குணங்களும் சுவைப்பொருளும், சுவைப்போனும், சுவைப்போனது சுவை உணர்வும், சுவைத்தோன் வெளிப்படுத்தும் புலனுணர்ச்சியும் என்ற நான்கின் அடிப்படையில் மெய்ப்பாடாக வெளிப்படுவதை அறியமுடிகிறது. மேலும் மெய்ப்பாட்டினை,

**"உடைமை இன்புறல் நடுவுநிலை அருளல்**
**தன்மை அடக்கம் வரைதல் அன்பு எனாஅக்**
**கைம்மிகல் நலிதல் சூழ்ச்சி வாழ்த்தல்**
**நாணுதல் துஞ்சல் அரற்றுக் கனவு எனாஅ**
**முனிதல் நினைதல் வெரூஉதல் மடிமை**
**கருதல் ஆராய்ச்சி விரைப்பு உயிர்ப்பு எனாஅக்**
**கையாறு இடுக்கண் பொச்சாப்புப் பொறாமை**
**வியர்த்தல் ஐயம் மிகைநடுக்கு எனாஅ" (தொல்.பொருள்.நூ.256,ப.15)**

என்று முப்பத்திரண்டு வகையாகச் சுட்டியுள்ளார். தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ள நகை முதலான எண் வகை மெய்ப்பாடுகளை உளவியலாரின் உணர்வு வெளிப்பாட்டுடன் பொருத்திப் பார்க்கும் வகையில் இப்பகுதி அமைகிறது.

**அ. நகை**

**"எள்ளல் இளமை பேதைமை மடனென்று**
**உள்ளப்பட்ட நகை நான்கென்ப" (தொல்.பொருள்.நூ.248,ப.8)**

என்ற நான்கு வகை நிலைகளில் நகை எனும் மெய்ப்பாடு நிகழும் என தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். நகை என்பது இகழ்ச்சியிற் பிறப்பது. அவை, "முடவர் செல்லுஞ் செலவு எள்ளுதற் பொருண்மையாயிற்று; மடவோர் சொல்லுஞ் சொல் மடமைப் பொருண்மையாயிற்று; கவற்சி பெரிதுற்றுரைப்போர் கூற்று பேதைமையாயிற்று; குழவி கூறு மழலை இளமைப் பொருளாயிற்று; புணர்ச்சி நிமித்தமாகக் கூற்று நிகழ்ந்துழி வரும் நகை. இளமை என்பதனாற் கொள்க"[64] என்பர் இளம்பூரணர்.

நகை உணர்வினை உளவியலார், "நாம் ஒன்றுக்குத் தயாராய் இருக்கும் போது, வேறொன்று நடைபெற்றுவிட, நம்மை அது உறுத்த, நமக்கு அதனால் அபாயம் இல்லை என்ற உணர்வு வரும்போது, அந்த ஆச்சர்யமான உணர்வு (சிரிப்பு) நகையெனும் மெய்ப்பாட்டினை வெளிப்படுத்துகிறது. அல்லது எதிர்பாராத சொல்லும், கதை முடிவும், எதிர்பாராத உதவியும் வியப்பை உண்டாக்குவதன் மூலம் (சிரிப்பு) நகை ஏற்படுகின்றது"[65] என்பர்.

நகைச்சுவை உணர்வினை, "அறிவு சார்ந்தது, அறிவு சாராதது, சூழலால் தோன்றுவது எனப் பகுத்து அவை தம்முள் நுண்ணிய வேறுபாடு கொண்டவை"[66] என உளவியல் அறிஞரான ஃபிராய்டு குறிப்பிட்டுள்ளார். இங்ஙனம் நகை பற்றி வந்த மெய்ப்பாடுகள் எட்டுத்தொகை அகப்புறப் பாடல்களில் ஆடவரிடம் பரக்கக் காணப்படுவதை இயல் மூன்று விரிவாக எடுத்துரைக்கின்றது.

**ஆ. அழுகை**

> **"இளிவே இழவே அசைவே வறுமைஎன**
> **விளிவில் கொள்கை அழுகை நான்கே"** (தொல்.பொருள்.நூ.249,ப.9)

என்ற நூற்பாவில் இளிவென்பது பிறர் தன்னை எளியன் ஆக்குதலாற் பிறப்பது, இழவாவது உயிரானும் பொருளானும் இழத்தல், அசைவென்பது தளர்ச்சி, தன்னிலையில் தாழ்தல், வறுமை என்பது நல்குரவு. இத்தகைய நான்கு நிலைக் களன்களைக் கொண்டு அழுகை எனும் மெய்ப்பாடு தன்னாலும், பிறராலும் பிறக்கும் என்பர்.[67]

அழுகையை உளவியலார், "அழுகையை Depression என்பர். வாழ்வில் எதிர்பாராது நடந்த இழப்பு (Disappointment), வருத்தம் (Regret), பேரார்வம் (Anxiety), தாங்க முடியாத அளவு தன்னையே வெறுத்தல், மற்றும் சில மனநோய்கள் (Decisions Exhaustion Hypochondria, Hallucinations) இவையெல்லாம் அழுகை அல்லது சோகத்திற்குரிய நிலைக்களன்களாகக் கருதுவர். இவற்றில் குடும்பத்தில் இறப்பு, வேலை போய்விடல் போன்றன பெரும்பாலும் வெளிக்காரணங்களால் வருவன"[68] என்று குறிப்பிட்டுள்ளனர். தூக்கமின்மை, பசியின்மை, அமைதியின்மை போன்றவை இந்நிலைக்கு முக்கிய காரணங்களாக அமைகின்றன.

**இ. இளிவரல்**

> **"மூப்பே பிணியே வருத்தம் மென்மையொடு**
> **யாப்புற வந்த இளிவரல் நான்கே"** (தொல்.பொருள்.நூற்.250,ப.10)

என்ற நான்கு வகை நிலைக்களனில் இளிவரல் என்னும் மெய்ப்பாட்டுணர்வு வெளிப்படும் என தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். இவை தன்மாட்டும், பிறர் மாட்டும் தோன்றும் இயல்புடையது. மூப்பென்பது முதுமை. பிணியென்பது நோய். அதனைக் கண்டு இழித்தல், வருத்தம் என்பது உள்ளத்தில் தோன்றும் கவலை, மென்மை என்பது நல்குரவு என்பன போன்ற நான்கு நிலைக்களனில் இளிவு பிறக்கும் என்பர்.

தொல்காப்பியர் குறிப்பிடும் நிலைக்களன்கள் மற்றும் வாழ்க்கையில் ஏற்படுகின்ற அவநம்பிக்கை, நெருங்கிய குடும்பப் பாசமின்மை, தாழ்வு மனப்பான்மை, சமூகப்படிகளில் உயர்ந்த பின் அங்கு நிலைத்து நிற்க மேற்கொள்ளும் உணர்வுப் போராட்டம் போன்றன எல்லாம் ஏற்படும் போது, நம் கட்டுப்பாட்டுக்கு உட்படாத சக்திகளுக்கு நாம் பலியாகும் அவல உணர்வினை நம்மிடம் தோற்றுவிக்கின்றன. இதன்விளைவாக ஏற்படும் உணர்வுகளின் மொத்த வடிவம் தான் இளிவரல் எனும் மெய்ப்பாடு என்பதை அறியமுடிகிறது.

சமுதாயம் தம்மைப் புறக்கணித்துவிடுமோ என்ற பாதுகாப்பின்மை உள்ளத்தில் எழுவதாலேயே இளிவரல் என்னும் சோர்வு தோன்றுகிறது. இதனை உளவியலார்,

"புற உலகத்தோடு அகத்திற்கு உள்ள தொடர்பின் விளைவாக இயற்கையான 'கவலை' தோன்றுகிறது என்றும் நனவிலி (ID) மனத்துடன் அகம் கொண்டுள்ள தொடர்பின் விளைவாக 'நரம்புத்தளர்ச்சி', 'கவலை' தோன்றுகிறது என்றும்,[69] ஃபிராய்டு கூறுகிறார் என்று கலைக்களஞ்சியம் வழி அறியமுடிகிறது.

**ஈ. மருட்கை**

**"புதுமை பெருமை சிறுமை ஆக்கமொடு**
**மதிமை சாலா மருட்கை நான்கே" (தொல்.பொருள்.நூ.251,ப.12)**

என்ற நிலைக்களன்களில் மருட்கை எனும் (வியப்புணர்வு) மெய்ப்பாடு வெளிப்படும் என்பர் தொல்காப்பியர். புதுமையாவது யாதொன்றானும் எவ்விடத்தினும் எக்காலத்தினும் தோன்றாததோர் பொருள் தோன்றிய வழி வியத்தல். பெருமை என்பது பண்டு கண்ட பொருள்கள் போலல்லாது பொருள்கள் அவ்வளவிற் பெருத்தன கண்டு வியத்தல். சிறுமை என்பது பிறவும் நுண்ணியன கண்டு வியத்தல், ஆக்கம் என்பது ஒன்றன் பரிணாமங்கண்டு வியத்தல். இத்தகைய நான்கு நிலைக்களன்களின் அடிப்படையில் மருட்கை மெய்ப்பாடு வெளிப்படும் என்பர்.[70]

மனிதனின் பட்டறிவிற்கும் பழக்கப்பட்ட புலன் காட்சிக்கும் உட்படாத ஒன்றினைக் காண நேரும் போதுதான் மருட்கை எனும் மெய்ப்பாட்டுணர்வு தோன்றும் என்பர்.

**உ. அச்சம்**

**"அணங்கே விலங்கே கள்வர் தம்இறையென**
**பிணங்கல் சாலா அச்சம் நான்கே" (தொல்.பொருள்.நூ.252,ப.13)**

என்ற நான்கினை அடிப்படையாகக் கொண்டு அச்சம் எனும் மெய்ப்பாட்டுணர்வு வெளிப்படும் என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். அணங்கு, விலங்கு, கள்வர், இறையென்ற நான்கு நிலைக்களன்களைக் கொண்டு அச்சம் என்னும் மெய்ப்பாடு வெளிப்படும் என்பர். அச்ச உணர்வு செயலார்வத்தை ஒட்டி நிலைகொள்ளும் தன்மையுடையது. வயது முதிர்ச்சி, கல்வியறிவு ஆகியவற்றால் சமூக இயல்புக்கு இயைந்த உணர்ச்சியாக அச்ச உணர்வு மாற்றப்படுவதுண்டு.

இத்தகைய அச்ச உணர்வை, "ஒருவருடைய சூழ்நிலையை முழுமையாக நோக்கும் போது, அதில் எதிர்பாராமல் திடீரென ஏற்படும் சில மாற்றங்களே அவரிடம் அச்சம் உண்டாவதற்கான தூண்டல்களாக (Stimuli) அமைகின்றன"[71] என்பர் உளவியல்ார். உளவியலார் குறிப்பிட்ட அச்ச உணர்வுக்கான இத்தூண்டல்களைச் சங்க கால ஆடவர் எதிர் கொண்டு வென்ற தன்மையை இயல் மூன்று விரிவாக எடுத்துரைக்கின்றது.

**ஊ. பெருமிதம்**

**"கல்வி தறுகண் இசைமை கொடையெனச்**
**சொல்லப்பட்ட பெருமிதம் நான்கே" (தொல்.பொருள்.நூ.253,ப.13)**

என்ற நூற்பா கல்வி, அஞ்சாமை, நன்னடையால் வரும் புகழ், வரையாது வழங்கும் வள்ளல் தன்மை போன்ற நான்கு நிலைக்களன்களைக் கொண்டு பெருமிதம் என்னும் மெய்ப்பாடு வெளிப்படும் என தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். பெருமிதம் என்பது தன்னைப் பெரியவனாக எண்ணுதலாகும். சமூகத்தில் மிக உயர்ந்த மெய்ப்பாடாக பெருமிதம் விளங்குகிறது. மிக உயர்ந்தோரும் தலைமக்களும் இம்மெய்ப்பாட்டுணர்வைப் பெறுகின்றனர்.

**எ. வெகுளி**

**"உறுப்பறை குடிகோள் அலைகொலை என்ற**
**வெறுப்ப வந்த வெகுளி நான்கே" (தொல்.பொருள்.நூ.254,ப.14)**

என்னும் நான்கு நிலைக்களன்களில் வெகுளி எனும் மெய்ப்பாட்டுணர்வு தோன்றும் என தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். உறுப்பறை என்பது அங்கமாயினவற்றை அறுத்தல், குடிகோள் என்பது கீழ்வாரை நலிதல், அலை என்பது வைதலும் புடைத்தலும், கொலை என்பது கொல்லுதல் ஆகும்.[72]

வெகுளி என்பது ஏதேனும் ஒரு தடைதோன்றி நம் செயலைச் சிதைக்கும் போது எதிரூன்றலாக எழும் உள்ளக் கிளர்ச்சியாகும். அது தனித்தோ மற்றவருடன் சேர்ந்தோ தோன்றுகிறது. பொறாமை, துக்கம் முதலிய நிலைகளில் வெகுளி ஒரு கூறாகவும் அமைந்துள்ளது. தான் போடும் திட்டத்திற்கு ஊறு விளைந்தாலும், தன் புகழ், விருப்பம் ஆகியவற்றிற்கு இடைஞ்சல் ஏற்படினும் கோபம் உண்டாகும்.[73]

இத்தகைய உணர்வினை உளவியலார், "சினமும் அச்சமும் அனிச்சைச் செயல்புரியும் (Sypathetic Nerves) பரிவு நரம்பு அமைப்புகளால் கட்டுப்படுத்துவதாகும். சினம் உண்டாகும் போது அல்லது உண்டாக்கப்படும் போது அட்ரினல் சுரப்பியிலிருந்து 'எபினரின்' (Epinephrine), நாரிபினரின் (Norepinephrine) என்ற இரு புரதங்கள் சுரந்து மன அழுத்தத்தைக் குறைக்கின்றன. அதனால் சினம் தாக்குதலுக்குரிய குறிப்புகள் உடம்பில் ஏற்பட்டு எரிச்சல், மன ஒடிவு (Vexation), சூடாதல் (Heatness) போன்ற உணர்வுகளை நிலைநிறுத்துகின்றன"[74] என்பர். இத்தகைய வெகுளி உணர்வினைச் சங்க கால ஆடவர் நிரம்பப் பெற்றிருந்தமையைப் புறப்பாடல்கள்வழி அறியலாம்.

**ஏ. உவகை**

**"செல்வம் புலனே புணர்வு விளையாட்டுஎன்று**
**அல்லல் நீத்த உவகை நான்கே" (தொல்.பொருள்.நூ.255,ப.14)**

என்ற நூற்பாவில் செல்வத்தால் ஏற்படும் நுகர்ச்சியாலும், புலமையால் ஏற்படும் அறிவு முதிர்ச்சியாலும், உள்ள இணைப்பாலும், உள்ளம் ஒத்தாரொடு கூடி ஆடும் விளையாட்டாலும், துன்பம் நீங்கிய மகிழ்ச்சியாலும் உவகை எனும் மெய்ப்பாடு தோன்றும் என்பர் தொல்காப்பியர்.

இத்தகைய உவகை சமூக நலங்காட்டும் மெய்ப்பாடாக விளங்குகிறது. இதனை உளவியலார், மூளையிலிருந்து 'எண்டார்பின்' (Endorbins) என்ற புரதம் வெளிப்படுவதால் மனித மனம் மகிழ்ச்சி நிலையை அடைகிறது. மற்ற மெய்ப்பாடுகள் உடலின் உறுப்புகளைத் தங்கள் கட்டுப்பாட்டிற்குள் வைத்து நடைபெறுகின்றன. மகிழ்ச்சி மட்டுமே மனத்தால் உணரப்பட்டு செயல்படுகிறது"[75] என்பர். இத்தகைய மகிழ்ச்சியே உவகை என்னும் மெய்ப்பாட்டை ஒத்திருப்பதை அறியமுடிகிறது.

தொல்காப்பிய மெய்ப்பாட்டியலில் இடம்பெற்றுள்ள ஆடவர், பெண்டிர் இருவர்க்கும் பொதுவான மெய்ப்பாடுகளோடு இன்றைய உளவியலார் குறிப்பிடும் உணர்வு மற்றும் உள்ளக் கிளர்ச்சிகள் ஒத்திருக்கும் தன்மையை இவ்வியலில் ஆராய்ந்தோம்.

### ஈ. ஆடவரின் பருவநிலைகளும் உணர்வுகளும்

ஆடவரின் பருவநிலைகளும் உணர்வுகளும் எனும் இப்பகுதியில் மனிதனின் பருவநிலைகளைத் தமிழிலக்கியம் அடிப்படையிலும், உளவியல் அடிப்படையிலும் இப்பகுதி ஆராய்ந்தறிகிறது.

### எட்டுத் தொகையில் மனிதனின் பருவங்கள்

குழந்தை பருவமே எல்லாப் பருவங்களிலும் எதையும் ஈர்க்கவல்ல பருவம் எனலாம். குழவிப் பருவம், கரு என்னும் அரும்பு மலர்ந்த நிலையில் தொடங்குகிறது.

தொல்காப்பிய மரபியலில், மக்களின் இளமைப் பெயர்களாகக் குழவி, மகவு என்பன சுட்டப்பட்டுள்ளன.[76] மேலும் குழவி,[77] சிறுவன்,[78] பிள்ளை,[79] புதல்வர்,[80] புதல்வன்,[81] மகன்[82] என்பன வழங்கப்பட்டுள்ளன.

சங்க இலக்கியத்தில் இளமையில் இருபாற் குழவிகளையும் சுட்டும் பெயர்கள் குழவி, மக, மகவு, மகார், மக்கள், குறுமக்கள் என்பன. ஆண் குழந்தையின் ஒருமைப் பெயராகச் சிறுவன், செல்வன், சேய், புதல்வன், பெயரன், மகன் என்பனவும், பன்மைப் பெயராக இளைஞர், இளையோர், சிறார், சிறியர், சிறுவர், புதல்வர், மைந்தர் என்பனவும் அமைந்திருக்கின்றன. ஆண்மக்கள் நன்றாக வளர்ந்த நிலையில் காளை, குருசில், தோன்றல், விடலை என்றழைக்கப்பட்டனர்.[83]

இளம் வயதில் நல்ல குணங்களை உடையவராய் இருத்தல் வேண்டும் என்பதற்காகத் தாயும் தந்தையும் குழந்தையிடம் தீயவைக் கண்ட இடத்தில் கடிந்து திருத்தியதை[84] அறியலாம்.

"யாய் நயந்தெடுத்து ஆய்நலம்" (ஐங்.98, ப.132)
"நற்றோய் நயந்து பாராட்டி" (ஐங். 384, ப. 434)

என்ற பாடலடிகள் மூலம் குழந்தைகளின் வளர்ப்பில் பெற்றோர் பங்கு குறித்து அறியலாம்.

**எட்டுத்தொகையில் - சிறார் முதல் முதியோர் வரை**

**அ) குழந்தையின் இயல்பு**

"குறுகுறு நடந்து சிறுகை நீட்டி
இட்டுந் தொட்டுங் கவ்வியுந் துழந்தும்
நெய்யுடை அடிசின் மெய்ப்பட விதிர்த்தும்
மயக்குறு மக்களை" (புறம். 188, ப.317)

என்று குழந்தையின் இயல்பு இப்புறப்பாடலில் விளக்கப்பட்டுள்ளது.

"மாசுஇல் அங்கை மணிமருள் அவ்வாய்
... ... ... ...
யாவரும் விழையும் பொலந்தொடிப் புதல்வன்" (குறுந். 16:3-5,ப.41)

என சிறார்களின் மழலையும் உருவத் தோற்றமும் யாரையும் மயக்கும் தன்மையது. ஆதலின் எச்செல்வத்திலும் உயர்ந்த செல்வமாக, வாழ்வின் பயனாகப் போற்றப்படுகின்றனர்.

உயிரினங்களின் இளமைப் பெயரைக் குறிக்கும் தொல்காப்பியம் "குழவியும் மகவும் ஆயிரண் டல்லவை கிழவ அல்ல மக்கட் கண்ணே"[85] எனக் குழவி, மகவு எனும் இரண்டினை மட்டுமே மாந்தரின் இளமைப் பெயராகச் சுட்டுகிறது. ஆயினும் சிறுவன், புதல்வன் என்பனவும் தொல்காப்பியத்தில் இடம்பெற்றுள்ளதைக் காண முடிகிறது. "ஆய்பெருஞ் சிறப்பில் சிறுவன் பெயர",[86] "புதல்வர் பயந்த புனிறுதீர் பொழுதின்"[87] என்பன ஆண்பாற்குரியனவாக உள்ளது. சேய் என்பது சங்க இலக்கியத்தில் குழந்தையைச் சுட்ட வழங்கப்படுகிறது.

குழவி, மகவு என்பன இளமைப் பெயராக மட்டும் அமைய சிறுவன், புதல்வன், மகன், மகள் என்பன இளமைப் பெயருடன் உறவுப் பெயராகவும் அமைகின்றன. சங்க இலக்கியத்துள் புதல்வன், மகன், மகள், சிறுவன், சேய் என்பன ஒருங்கே அமைவதை,

"அல்லகெழு கடவுட் புதல்வ
மலைமகள் மகனே
வெற்றி வெல்போர்க் கொற்றவை சிறுவ
இழையணி சிறப்பின் பழையோள் குழவி
அலந்தோர்க்கு அளிக்கும் பொலம்பூண் சேஎய்"

(திருமுருகாற்றுப்படை-256-259,271)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. சிறார், சிறான், சிறுமி, மக்கள், மகாஅர் எனும் சொற்கள்,

**"புலிப்பல் தாலி புன்தலைச் சிறார்"** (புறம்.374:9, ப.529)

**"செம்முதுபெண்டிர் காதலம் சிறான்"** (புறம்.286:1, ப. 427)

**"கைப்படுக்கப் பட்டாய் சிறுமி நீ"** (கலி.65:16,ப.259)

**"மாண்ட என் மனைவியொடு மக்களும் நிரம்பினர்"**(புறம்.191:13, ப. 320)

**"பாடுவல் மகாஅர்"** (புறம். 291:1, ப. 432)

போன்ற பாடல் வரிகளில் இடம்பெற்றுள்ளன.

**சிறார் - பொருள்**

*"'சிறு' எனும் வேர்ச்சொல்லுடன் 'மை' என்னும் பண்பு விகுதி இணைவால், சிறார்க்குத் தோற்றுவாயாக அமையும் இச்சொல் இளமையுடையது; குறைபாடுடையது எனப் பொருள்படுகிறது."*[88]

சிறுவர், சிறார் என்பது வயதில், அறிவில், பட்டறிவில், பழக்கவழக்கங்களில் குறைவுடையோரை மேலும் வளர்ச்சியை, நிறைவை நோக்கிச் சென்று சென்றுகொண்டிருப் போரைக் குறிப்பதாகக் கொள்ளலாம். வாழ்வின் தொடக்க பருவத்தில் நின்று முழுமையை நோக்கி நடைபோடத் தொடங்குவோரைக் குறிப்பதாகும்.

**சிறார் வளர்ப்பு**

நரிவெரூஉத்தலையார், அரசன் எப்படி நாட்டு மக்களைப் பாதுகாக்க வேண்டும் எனப் பெருஞ்சேரல் இரும்பொறைக்கு அறிவுறுத்தும் பொழுது "காவல், குழவி கொள்பவரின் ஓம்புமதி"[89] என்று மொழிகின்றார்.

வாழ்க்கையை நடத்துவதற்கும், சுற்றத்தைப் பேணுவதற்கும் தேவையான பொருளைத் தேடுதல் ஆடவர் கடனாக அமைந்ததால் சிறாரை வளர்க்கும் பொறுப்பு தாயினுடையதாகிறது. எனினும் சிறாருக்கும் தந்தைக்கும் உள்ள நெருங்கிய உறவு, "யாழொடும் கொள்ளா, பொழுதொடும் புணரா, பொருள் அறிவாராயினும் தந்தையர்க்கு அருள் வந்தனவால் புதல்வர் தம் மழலை"[90] பொருள் வயிற் பிரிந்த தந்தை, "வந்தீக எந்தை என்னும் அம்தீம் கிளவி கேட்கநாமே"[91] என விரைந்து திரும்புதல்; சிறுவன் முறுவல் காண்டலுக்காகப் பொருள் தேடலை ஒத்தி வைத்தல்[92] என்பனவற்றால் உறுதிப்படுத்தப்பட்டுள்ளது.

"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே; சான்றோர் ஆக்குதல் தந்தைக்குக் கடனே"[93] எனும் பொன்முடியாரின் புறப்பாடல் புதல்வரை அறிவு ஒழுக்கங்களில் சிறந்து சான்றோனாக்குதல் தந்தையின் கடமை என்பதைப் புலப்படுத்துகின்றது. செல்வச் சிறாராயினும் வறுமையின் பிடியில் வாடுவோராயினும் தாயின் பராமரிப்பில் வளர்ந்துள்ளனர்.[94] செல்வக்குழந்தைகள் தாய் மட்டுமன்றிச் செவிலியரின்

அரவணைப்பிலும் வளர்ந்ததைக் கலித்தொகைப்பாடல்[95] உணர்த்துகின்றது. முகிழ்நிலா காட்டி இளஞ்சிறார்க்கு உணவு ஊட்டும் பொழுதே[96] அவருக்கேற்ற அறிவுரை பகர்ந்து ஊட்டுதலும்[97] காணப்படுகின்றது. உடல் வளர்ப்புடன் உள வளர்ச்சியைப் பேணுவதிலும் தாய் ஈடுபட்டதை அறியமுடிகிறது. சிறாரை ஊட்டி வளர்ப்பதில் தந்தையரும் சிறிதளவு பங்கேற்றதை,

**"வன்கை வினைஞர் புன்தலைச் சிறார்அர்**
**தெங்குபடு வியன்பழ முனையிற் றந்தையர்**
**குறைக்க ணெடும்போ ரேறி விசைத்தெழுந்து**
**செழுங்கோட் பெண்ணைப் பழந்தொட முயலும்"** (கலி.85:33-35,ப.167)

என்ற பாடல் காட்சி தெளிவுபடுத்துகிறது.

**விளையாட்டு**

"குழந்தைகளிடம் உண்டாகும் அதிகப்படியான ஆற்றல் செலவாகவும், எதிர்கால வாழ்க்கைக்கு உதவக் கூடிய பயனைப் பெறவும், அன்றாட வேலைகளினால் ஏற்படும் சோர்வு நீங்கி ஓய்வுகொள்ளவும் விளையாட்டு தேவைப்படுகிறது" என்கிறார் மு. இராசமாணிக்கனார்.[98]

இத்தகைய விளையாட்டில் சங்ககால ஆடவர் இடம்பெற்றிருந்ததைப் பரவலாகக் காணலாம். சிறுகுழந்தையில் ஆண்குழந்தை விளையாட்டாகச் சிறுதேர் உருட்டல் மட்டுமே காட்டப்படுகிறது.[99]

சிறுவர் விளையாடும் விளையாட்டுகள் பெரும் பொழுதுபோக்காக அமைவதுடன், அவர்தம் உளப்பாங்கினையும் இயல்பினையும் வெளிப்படுத்துகிறது. பால் வேறுபாடின்றி இருபாலரும் இணைந்து விளையாடியதையும் பரவலாகக் காணலாம்.[100] பால் வேற்றுமை கருதாத இவர்தம் மனநிலையை,

**"இவன்இவள் ஐம்பால் பற்றவும் இவள்இவன்**
**புன்தலை ஓரிவாங்குநள் பரியவும்**
**... ... ... ...**
**ஏதில் சிறுசெரு உறுப"** (ஐங். 403, ப. 454)

என்ற பாடலடிகள் மூலம் உணரலாம். இத்தகைய விளையாட்டுகள் வீட்டைச்சுற்றி நடக்கும் நிகழ்ச்சிகளின் தூண்டலாக விளையும் பாசாங்கு விளையாட்டாகவும் தங்கள் ஆற்றலை வெளியிட்டு, பிற்கால வாழ்க்கைக்குத் தங்களைத் தயார்படுத்த உதவும் ஆக்க உணர்வாகவும் அமைகின்றன.

**சிறார்-கல்வியும் தொழிலும்**

கல்வியானது இளம் பருவத்திற்குரிய செயற்பாடுகளுள் ஒன்றாகும் இதனை 'இளமையில் கல்' எனும் பழமொழி மூலம் அறியலாம். "உற்றுழி உதவியும் உறுபொருள் கொடுத்தும் பிற்றை நிலை முனியாது கற்றலை"[101] புறப்பாடல் உணர்த்துகின்றது. "கல்வியென் என்றும் வல் ஆண் சிறாஅன்"[102] என்பது இளையோர் கல்வி கற்றதை எடுத்துரைக்கின்றது. இவர்கள் எங்கு, எப்படி, யாரிடம், எதைக் கற்றனர் என்பதைத் தெளிதற்கான வாய்ப்பு சங்கப் பாடல்களில் அமையவில்லை.

**"மதுகை மன்றத்து**
**அலந்தலை இரத்தி அலங்கு படுநிழல்**
**கயந்தலைச் சிறாஅர் கணை விளையாடும்**
**அருமிளை இருக்கையதுவே''** (புறம்.325:11-14,ப.465)

**"இளையவர் தழூஉ ஆடும் எக்கர்"** (கலி. 83:3, ப. 305)

**"புன்தலைச் சிறார் மன்றத்து ஆர்ப்பின்"** (புறம். 334:3, ப.479)

எனும் குறிப்புகள், ஊர்ப்பொது மன்றம் இளையோர் ஒருங்கு கூடும் சமுதாயக் கூடமாகவும் கற்குமிடமாகவும் நின்றதை நவில்கின்றன. கல்வி குறிப்பாகப் போர்க் கல்வியாக அமைந்தது உணர்த்தப்பட்டுள்ளது.

சிறுவர்கள் வருவாய் தரும் தொழிலில் ஈடுபட்டிருந்தனர். அன்றைய சூழல் சிறார் தொழிலுக்கு இடனளித்ததும் பாலையொழிந்த நிலப் பகுதியிலும் இவர்கள் பணி மேற்கொண்டிருந்தனர் என்பது மிகத் தெளிவாகப் பதிவு செய்யப்பட்டுள்ளது. விளையாட்டுப் போக்கிலேயே இவர்தம் குலத்தொழில் கற்றதை, "சுடுஞ்சுறா எறிந்த கொடுந்தாட் தந்தை புள்இமிழ் பெருங்கடல் கொள்ளான் சென்றென மனைஅழுது ஒழிந்த புன்தலைச் சிறார்"[103] என்பதை நற்றிணை உணர்த்துகின்றது.

'சிறுதொழில் மகாஅர்'[104], 'ஊர்க்குறு மாக்கள்'[105] என்பன சிறார் தொழிலில் ஈடுபட்டிருந்ததைத் தெளிவாக்குகின்றன. முல்லை நிலச் சிறார் மாடுமேய்த்தல், பானாக் கூழுக்கு மாற்று செய்தல்[106] போன்றவற்றில் ஈடுபட்டனர். இவர்தம் தொழிலை விளையாட்டுணர்வோடு மேற்கொண்டதை, எருமையின் 'மீதேறித் திரிதல்'[107] கொண்டும்,

**"கன்று ஆற்றுப்படுத்த புன்தலைச் சிறார்**
**மன்ற வேங்கைமலர் பதம் நோக்கி**
**ஏறாது இட்ட ஏமப்பூசல்**
**விண்தோய் விடரகத்து இயம்பும்"** (நற்.80:1-4, ப.105)

**"பல்லான் கோவலர் கல்லாதூதும்**
**சிறுவெதிர்ந் தீங்குழல்"** (அகம்.399:11-12,ப.238)

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம்.

குறிஞ்சியின் வெள்வாய் வேட்டுவர் வீழ்துணை மகாஅர் வேட்டையாடலில் ஈடுபட்டனர்.[108] "வேட்டச் சிறார் சேண்புலம் படராது படப்பைக் கொண்ட குறுந்தாள் உடும்பு"[109] என்பதால் வேட்டையாடுதல் இவர்தம் இளமை காரணமாக நெடுந்தொலைவு செல்லவில்லை என்றும், பயிற்சியாக அருகிலேயே அமைந்தது என்றும் கருதலாம். இவர் வில் பயிற்சியும் பெற்றிருந்ததைப் "புன்தலைச் சிறாஅர் வில் எடுத்து ஆர்ப்பின் பெருங்கட் குறுமுயல் கருங்கலன் உடைய மன்றில் பாயும்"[110] என்ற புறப்பாடல் சுட்டுகிறது.

நெடுந்தொலைவு வேட்டைக்குச் செல்லும்பொழுது குழுவாகச் சென்றதை "மான்கணம் தகைமார் வெந்திறல் இளையர் வேட்டெழுந்தாங்கு"[111] என்பதில் அறியலாம்.

உறுதொழிலிலும் முனைந்ததை, "எருதுகால் உறாது இளைஞர் கொன்ற சில்விளை வரகின் புல்லென் குப்பை"[112] மூலம் அறியலாம். வரிவலைப் பரதவரின் கருவினைச் சிறாஅர் திமில் மேற்கொண்டு திரைச்சுரம் நீந்தி வாள்வாய்ச் சுறவொடு வயமீன் பெற்று, வெற்றியுடன், மீன் வேட்டையாடித் திரும்பினர்.[113] இவரும் முதலில் ஆழமற்ற கழிமுகங்களில் மீன்பிடித்துப் பழகியதை அகநானூறு[114] பாடல் காட்டுகிறது. மீன் பிடித்தல் தந்தையால் பயிற்றுவிக்கப்பட்டதை,

**"திரைச்சுரம் உழந்த திண்டிமில் விளக்கில்**
**பன்மீன் கூட்டம் என்னையர்க் காட்டிய**
**எந்தையும் செல்லுமார் இரவே"** (அகம்.240:5-7, ப. 273)

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம். நீர்த்துறைகளில் யானைகளை நீராடச் செய்தலை ஊர்க்குறுமாக்கள் மேற்கொண்டதும்[115] குறிப்பிடத்தக்கது. தாயின் தொழிலுக்கு மகன் துணைநின்றதை,

**"உவர் உணப்பறைந்த புன்தலைச் சிறாரொடு**
**அவ்வரி கொன்ற கறைசேர் வள்ளுகிர்ப்**
**பசைவிரல் புலைத்தி நெடிது பிசைந்தூட்டிய**
**பூந்துகில் இமைக்கும்"** (அகம். 387:4-7, ப. 207)

என்பதில் உணரலாம். சிறுவர்கள் போரில் பங்கேற்றதை,

**"செம்முது பெண்டின் காதல் அம்சிறாஅன்**
**மடப்பாள் ஆய்மகள் வள்உகிர் தெறித்த**
**குடப்பால் சில் உறைபோல**
**படைக்கு நோய் எல்லாம் தான் ஆயினனே"** (புறம்.276:3-6, ப.417)

என்ற பாடல் மூலம் அறியலாம்.

இவர்கள் போர்த்திறம் போற்றப்பட்டுள்ள அளவிற்குப் போரின்கண் உயிரிழத்தலும்[116] மிகுதியாகக் காணப்படுகிறது. பெருந்துயரத்திற்குரிய இச்செய்தி, ஈன்ற ஞான்றினும் பெரிதும் உவப்பதாகக்[117] காட்டியிருப்பது நெஞ்சை உலுக்குகிறது. இது நாட்டுப்பற்றையும் மீறிய மனஉணர்வினையும் உணர்த்துகிறது. காவற்பெண்டு[118] மற்றும் காக்கைப் பாடினியார் நச்செள்ளையார்[119] பாடல்கள் இவ்வுணர்வை வெளிப்படுத்துகின்றன.

போருக்குச் செல்வோர் சிறார் அல்லர்; உரம் பெற்ற வீரரே என்பதை வலியுறுத்த சிறுவர்க்குரிய அடையாளங்கள் வீரர்க்குரியதாக மாற்றம் பெறுகின்றன. இதனை,

**''கிண்கிணி களைந்த கால் ஒண்கழல் தொட்டு**
**குடுமி களைந்த நுதல் வேம்பின் ஒண்தளிர்**
**நெடுங்கொடி உழிஞைப் பவரொடு மிலைந்து**
**குறுந்தொடி கழிந்த கைச் சாபம் பற்றி**
**நெடுந்தேர்க் கொடுஞ்சி பொலிய நின்றோன்**
**யார் கொல்? வாழ்க, அவன் கண்ணி! தார்பூண்டு**
**தாலி களைந்தன்றும் இலனே, பால்விட்டு**
**அயினியும் இன்று அயின்றனனே''** (புறம்.77:1-8, ப. 189)

என இடைக்குன்றூர்க் கிழார், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனைப் பாடியதில் உய்த்துணரலாம்.

**சமூகத்தில் சிறார் நிலை**

அந்தணர், அரசர், வணிகர், வேளாளர் என்ற சமூக அடுக்கில் அந்தண, அரசச் சிறார் குறித்த செய்திகள் கிடைக்கின்றன. பார்ப்பன குறுமகன் குடுமித் தலையனாகவும்,[120] வேதமறிந்துள்ளதுடன் துறவுக்கோலம் கொண்டவனாகவும்,[121] அறிவில் தேர்ந்தவனாகவும், இரந்துண் வாழ்க்கையைக் கடைபிடிப்போனாகவும்[122] காட்டப்பட்டுள்ளான்.

சொத்துரிமை போன்று அரசுரிமையும் வழிவழியாக வந்தமைகிறது. இதன் காரணமாகத் தாய் வயிற்றிருக்கும் பொழுதுகூட அரசுரிமை திணிக்கப்படுகிறது.[123]

அரச குடும்பத்தினர் வீரமரணம் பெறுதல் வேண்டும் என்பதால் ''குழவி இறப்பினும் ஊன்தடிப் பிறப்பினும் ஆள் அன்று''[124] என்று வாளின் தப்பார். இவரது இளமையை முன்னிட்டு நாடுகவர பகையரசர் முனைதலும்[125] உண்டு. பகையரசனின் வெஞ்சினத்திற்கு அரசரில் பிறந்த குழவிகளும் இடனாவர். விலக்கப்படமாட்டார் என்பதைச் சோழன் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் மலையமான் மக்களை யானை கொண்டு அழிக்க முனைந்தது[126] கொண்டு அறியலாம். இவையெல்லாம் சங்க காலத்தில் சிறார்களின் நிலையை விளக்கிக் கூறும் வகையில் அமைந்துள்ளது.

**சிறார் குறித்த பிற செய்திகள்**

பரத்தமை காரணமாகத் தலைவன் தலைவியரிடையே ஊடல் மிகுதிப்பட்டு இல்லறச் சிதைவு தோன்றக் கூடிய நிலையில் அதைத் தவிர்த்துச் சீர்செய்யும் கருவியாக சிறுவர் அமைந்துள்ளனர்.[127]

நல்ல மகனைப் பெற்ற அன்னை, "வயிறுமாக இளீயர் அவன் ஈன்ற தாயே"[128] என்று மகன் பொருட்டுத் தாய் பாராட்டப்படுதல்.

உயிர்ப் பலியாகக் குழந்தைகள் அமைந்ததை, "மாசுஇல் கற்பின் மடவோள் குழவி போய் வாங்கக் கைவிட்டாங்கு"[129] என்பதில் அறிய இயலுகிறது.

வாழ்த்தும் போது 'நோயிலராக நின் புதல்வர்'[130] எனவும் நீண்ட ஆயுளை வேண்டி, "நன்றும் இவர் (நின்னோரன்ன புதல்வர்) பெறும் புதல்வர்க்காண் தொறும் நீயும் புகன்ற செல்வமொடு புகழ் இனிது விளங்கி நீடு வாழிய"[131] என உயர்வுடன் சிறப்பித்துள்ளது. "நீ வாழியர் நின் தந்தை தாய் வாழியர் நிற்பயந்திசினோரே"[132] எனவும் வாழ்த்துதலை அறியலாம்.

- எட்டுத்தொகைப் பாடல்களில் இடம்பெறும் சிறார் குறித்த செய்திகள், சிறார் – பருவநிலையில் ஆடவர், பால் வேறுபாடு கருதாமல் மிகுந்த விளையாட்டுணர்வு கொண்டவராக விளங்கினர். விளையாடும் பொழுதும் வேட்டைக்குச் செல்லும் பொழுதும் குழுவுணர்வோடு செயல்பட்டனர்.
- தத்தம் தந்தையரிடம் தொழிலைக் கற்றுக்கொண்டு தொழிலுணர்வும், கடமையுணர்வும் கொண்டு விளங்கினர்.
- கல்வி கற்கும் உணர்வினராகத் திகழ்ந்தனர்.
- நாடு காக்கும் போரிலும் தங்களை ஈடுபடுத்தி நாட்டுப்பற்றுணர்வு கொண்டவராக விளங்கினர்.
- தாய் தந்தை மேற்கொண்ட தொழில்களுக்குத் துணை புரியும், ஏவல் புரியும் உணர்வினராகத் திகழ்ந்தனர்.

**ஆ. இளையோர்**

இளம் பருவத்தினரை, இளையர், இளையோர் எனச் சுட்டுவர். இதனை,

> **"மின்னிழை மகளிர் இளையரும் மடவரும் ஊரே"** (குறுந்.246:6-7,ப.292)

> **"தச்சன் செய்த சிறுமா வையம் - கையின்**
> **ஈர்த்து இன்புறும் இளையோர் போல"** (குறுந். 61:1-2, ப. 95)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. குழந்தைப் பருவத்திலிருந்து முதியோன் பருவத்திற்கு மாறுகின்ற பருவத்தினை இளையோர் பருவத்தினர் என்று கூறப்படுகிறது''[133] இளையோர் எனும் சொல் வீரர்களையும் குற்றேவல் புரிவோரையும் சுட்டுவதை,

**"தளை அவிழ் அலரித் தண்நறும் கோதை**
**இளையரும் சூடி வந்தனர்"** (நற். 367:9-10, ப. 491)

**"யான் கண்டனையர் என் இளையரும்"** (புறம்.191:4, ப. 320)

என்ற பாடல் வரிகள் உணர்த்துகின்றன. சிறார் எனும் சொல் வழக்கு, சங்ககாலத்தில் ஆண் மகனைச் சுட்டுகின்றது.

**இ. முதியோர்**

அறிவியல் வளம்பெற்றுள்ள இன்று முதியோரின் நலவாழ்வு மிகுந்த கவனத்துடன் பாதுகாக்கப்படுகிறது. இயற்கையோடியைந்த வாழ்வினரான சங்கத் தமிழரிடையே முதியோர் வாழ்வு, முதுமை நிலை போன்றவற்றை அறிய முற்படுவோம்.

முதிர்,[134] முதுமை,[135] முதிர்வு,[136] முதிர்பு,[137] முதாரி,[138] மூப்பு[139] எனும் சொற்கள் அன்று முதுமையைக் குறிக்கப் பயன்பட்டுள்ளன.

முதியர்,[140] முதிர்ந்தவன்,[141] முதிர்வினள்,[142] மூத்தோர்,[143] முதுவோர்,[144] மூதாளர்[145] என முதுமையுடன் தொடர்புடைய சொற்களே வழக்கில் இருந்தன.

**முதுமை நிலை**

சங்க இலக்கியத்தில் முதுமை, உருவ மாறுபாட்டால் பெரிதும் உணர்த்தப்பட்டுள்ளது. நரை அதில் முதன்மை பெறுகிறது.[146] மூப்படைந்த நிலையில், தலை நிமிர்ந்திருக்கும் நிலை மாறி இறங்கியும்,[147] தோல் உலர்ந்து உடல் நரம்புகள் வெளிப்படும்,[148] உடல் நடுக்கமும், தொடர்ந்து பேச இயலாமல் இருமல் தடைப்படுத்துதலும்,[149] நடப்பதற்குக் கோலின் துணை தேடலும் கூந்தல் குறைதலும் கண்பார்வை மறைதலும்[150] காணப்படுகின்றன.

**இயலாமை**

இளமையின் ஆற்றலை எண்ணி இரங்கிநிற்றல் தொடித்தலை விழுத்தண்டினாரின் பாடலில்[151] காணலாம். முதுமையுடன் வறுமையும் இணையும் பொழுது வாழ்வில் சலிப்புணர்வும், கழிவிரக்கவுணர்வும் மேலோங்கி நிற்பதை,

**"வாழும் நாளோடு யாண்டுபல உண்மையில்**
**தீர்தல் செல்லாது என்உயிரெனப் பலபுலந்து**
**கோல் காலாகக் குறும்பல ஒதுங்கி**
**நூல் விரித்தன்ன கதுப்பினள் கண்துயின்று**
**முன்றில் போகா முதிர்வினள்"** (புறம்.159, ப. 278)

என்ற பாடலில் உணர்த்தப்பட்டுள்ளது. சூழல் சிறப்புற அமைத்து அனைத்து செயற்பாடுகளும் நிகழ்ந்து மனநிறைவு காணும் இன்பவாழ்க்கை பெறின் முதுமை ஒரு சுமையாகாது; மன அமைதி முதுமையைப் புறம் தள்ளும் எனும் உளவியல் கருத்தினை, “யாண்டு பலவாக நரையிலவாகுதல் எப்படி”[152] என்பதைப் பிசிராந்தையார் வழி அறியலாம்.

**முதியோர் வினைகள்**

முதுமையுற்றோர், எழுந்து நடமாடவியலாதவாறு ஓரிடத்தே முடங்கும் வரை, தம் பணிகளில் ஈடுபட்டிருந்ததைச் சங்கப் பாக்களில் பரவலாகக் காணலாம். ஆடவர் புறப்பணிகளில் ஈடுபாடு காட்டியதைப் பனித்துறைப் பரதவர்க்கும், கழனி உழவர்க்கும் இடையே நடந்த சிறு செருவில் நரைமூதாளர் சந்து செய்வித்தலை அகநானூறு[153] மூலம் அறியலாம். களவில் மணம் ஒன்றியத் தலைவன் தலைவியின் திருமண நிகழ்விற்குத் தண்டுடைக் கையர் வெண்டலைச் சிதவலர் முன்னின்று ஒப்புதல் அளிப்பதைக் குறுந்தொகைப் பாடல் உணர்த்துகின்றது.[154] தம் இல்ல இளையோர் தொழிலில் அவருக்குத் துணையாக நின்றதையும் அறிய முடிகிறது.[155]

ஊர்ப் பொதுமன்றத்தில் ஆடவர் ஒன்றுகூடி வல்லு ஆடிப்[156] பொழுது போக்கியுள்ளனர். சங்ககால ஆடவர் வாழ்வில் முதுமையைச் சுமையாகக் கருதாமல் இயன்றவரை இன்பந்துய்த்துள்ளனர் என்பதை அறியமுடிகிறது. இறுதிநிலையில் ஒரு சிலர் தவ வாழ்வும் மேற்கொண்டுள்ளனர்.[157]

**சமூகத்தில் முதியோர் நிலை**

இளையோர் தம் வாழ்க்கைச் சீர்மைக்கு, முதியோரின் வழிகாட்டுதலை ஏற்றுள்ளனர். சங்க ஆடவர், முதியோர் என்றழைத்தலைப் பெருமையாகக் கருதினர். கரிகாலன் நரைமுடித்த தலையனாக வந்து நீதி வழங்கியது,[158] இளந்துணைப் புதல்வரின் முதியர்ப் பேணி[159] எனச் செல்வக் கடுங்கோ வாழியாதனைக் கபிலர் பாராட்டுவது ஆகியன சங்க கால முதியோர் அன்றைய சமூகத்தினரால் உயர்வாக மதிக்கப்பட்டதைக் காட்டவல்லன.

பெற்றோர் தம் முதுமைக் காலத்தை மகன் இல்லில் கழித்தமையும்[160] அறியலாம். வயதான பெற்றோர்களையும் உறவினர்களையும் ஆதரித்துப் பேண வேண்டியது கடமையாகக் கருதப்பட்டது.[161] இக்கருத்து பொருள்தேடிச் செல்லும் குறுந்தொகைத் தலைவனின் கூற்று[162] மெய்ப்பிக்கின்றது. இதன்மூலம் சங்ககால ஆடவர் முதியோரையும் உறவினரையும் காக்கும் பொறுப்புணர்வு கொண்டவர்களாகத் திகழ்ந்தனர் என்பதை அறியலாம்.

இளமையின் நிலையாமையை உணர்ந்த நிலையில் பொருள் தேடலுக்கு ஓர் உந்துதலாகவும் அன்று மூப்பு[163] பயன்பட்டுள்ளது. பட்டறிவும் படிப்பறிவும் இல்லையாயின் முதுமையில் எப்பயனும் இல்லை[164] என்பதும் அவர்தம் எண்ண வெளிப்பாடாகும். இங்ஙனம்

சங்க கால ஆடவர் முதுமையை பெரிய இடையூறாகக் கருதாமல், இடை ஒதுங்காமல், வாழ்வியல் இன்பங்களை நுகர்ந்து சமூகத்தாலும் சுற்றத்தாலும் புறக்கணிக்கப்படாது மதிப்புடன் வாழ்ந்ததைச் சங்கப் பாடல்களின் மூலம் அறிய முடிகிறது.

சங்க இலக்கியத்தில் குழவிப் பருவம் முதல் முதுமைப் பருவம் வரையிலான ஆடவரின் மன உணர்வுகள் பருவ வளர்ச்சிக்கேற்ப மாற்றம் பெற்றிருந்ததைப் பாடல்கள் வழி அறிய முடிகிறது.

**தமிழிலக்கியம் வழி மனிதனின் பருவ நிலைகள்**

மனிதனின் பருவங்களைப் பிள்ளைத்தமிழ் காப்பு முதல் சிறுபறை வரை பாடியுள்ளது. பிள்ளை பிறந்து மூன்றாம் திங்கள் தொடங்கி இருபத்தோராம் திங்கள் முடியவுள்ள காலப்பகுதியைப் பத்துப் பருவங்களாகப் பகுத்துப் பாடுவர். ஆணுக்குப் பத்துப் பருவங்களும் பெண்ணுக்குப் பத்துப் பருவங்களும் வைத்து பாடும் இலக்கியங்கள் பிள்ளைத் தமிழ் இலக்கியங்கள் ஆகும். காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாராணை, அம்புலி, சிற்றில், சிறுதேர், சிறுபறை என்பன ஆண்பாற் பிள்ளைத் தமிழுக்குரியன.

இத்தகைய பத்துப் பருவங்களின் மூலம் ஆணின் வளர்ச்சி நிலையில் அவனது செயல்பாடுகளைப் பாடியுள்ளனர்.

**காப்பு (மூன்றாம் திங்கள்)**

பாட்டுடைத் தலைவனைத் தெய்வங்கள் காப்பதாக என்று தாய் வேண்டும் பகுதியாகும். இப்பருவப் பாடல்களின் முற்பகுதி தலைவனின் இயல்பும், பிற்பகுதி அவனைக் காக்க இறைவனிடம் வேண்டுதலும் கொண்டிருக்கும்.

**செங்கீரை (ஐந்தாம் திங்கள்)**

குழந்தை முட்டிபோட்டுத் தவழும் பருவம் ஆகும். ஒரு காலை மடக்கி ஒரு காலை நீட்டி, இரு கைகளையும் நிலத்தில் ஊன்றித் தலையை நிமிர்த்திக் குழந்தை முகம் அசைய ஆடும் பருவம் ஆகும்.

**தால் (ஏழாம் திங்கள்)**

குழந்தையைத் தொட்டிலில் இட்டு அக்குழந்தையின் சிறப்புகளை மொழிந்து, தாலே தாலேலோ எனத் தாலாட்டும் பருவம். சங்க இலக்கிய காலத்தில் பாடப்பட்டது வீரத் தாலாட்டு ஆகும்.

**சப்பாணி (ஒன்பதாம் திங்கள்)**

குழந்தை காலை மடித்து உட்கார்ந்து தம் கைகொட்டி விளையாடும் பருவம். சப்பாணியாவது இரு கைகளையும் சேர்த்துக் கொட்டுதல் ஆகும். வியப்பு நிலையில் உள்ள பருவம்.

**முத்தம் (பதினோராம் திங்கள்)**

குழந்தையை மடியில் வைத்துக் கொஞ்சிக் குலவி முத்தம் தருக என வேண்டும் பருவம்.

**வாரானை (பதின்மூன்றாம் திங்கள்)**

குழந்தைகளின் செயல்களில் ஏற்படும் வளர்ச்சி நிலையினைக் கண்டு அவர்களை ஊக்கப்படுத்தும் வகையில் அமையும் பருவமாகும்.

**அம்புலி (பதினைந்தாம் திங்கள்)**

வானத்து விளங்கும் சந்திரனைக் குழந்தையுடன் விளையாட வருக என அழைக்கும் பருவமாகும்.

**சிறுபறை (பதினேழாம் திங்கள்)**

குழந்தை சிறுபறையைக் கொட்டி விளையாடும் பருவம். சிறுபறை முழக்கு எனக் குழந்தையை வேண்டுவது.

**சிற்றில் (பத்தொன்பதாம் திங்கள்)**

தெருவிலே சிறுமியர் சிறு வீடுகட்டி விளையாடுவர். அப்போது சிறுவர் விளையாட்டாய் அவர் கட்டிய சிறு வீடுகளை அழிப்பதுண்டு. அவ்வாறு அழிக்க வரும் சிறுவரைப் பார்த்து, எம் சிற்றில்லை அழிக்காதே என வேண்டுவதாகப் பாடப்படுவது ஆகும். சங்க இலக்கியத்தில் இப்பருவம் இடம்பெற்றுள்ளது.

**சிறுதேர் (இருபத்தோராம் திங்கள்)**

குழந்தை சிறுதேரை இழுத்து விளையாடும் பருவம். சிறுதேர் உருட்டியருள்க என வேண்டிப் பாடுவதாகும்.

இங்ஙனம் பிள்ளைத்தமிழ் இலக்கியங்கள் ஆண் குழந்தையைப் பிறந்த மூன்றாம் திங்கள் முதல் வளர்ச்சியடைந்த இருபத்தொரு திங்கள் வரை பத்துப்பருவங்களாகப் பிரித்துக் காட்டுகின்றது.

**மனிதனின் பருவ நிலைகள் - உளவியல் நூல்களின் அடிப்படையில்**

அனைத்து உயிரினங்களுக்கும் பருவநிலைகள் உண்டு. அவற்றில் மனித இனம் முக்கியமானதாகும். இவ்வினத்தார் அடைகின்ற பருவநிலைகள் ஆறு என்று உளவியல் வகுத்துரைப்பதாக ந. சுப்புரெட்டியார் பின்வருமாறு குறிப்பிடுகிறார்.[165]

1. கருப்பருவம் (Pre-natal Stage).

2. குழவிப் பருவம் (Infancy Stage).

3. குழந்தைப் பருவம் (Baby hood Stage).

4. பிள்ளைப் பருவம் (Child hood Stage).

5. குமரப் பருவம் (Adalescense Stage).

6. முதிர் பருவம் (Adult Stage).

போன்றவையாகும். இந்த ஆறு பருவங்களில் பிள்ளைப் பருவமானது முன்பிள்ளைப் பருவம், பின்பிள்ளைப் பருவம் என இரண்டாகவும், குமரப் பருவமானது முன் குமரப் பருவம், பின் குமரப் பருவம் என இரண்டாகவும், முதிர் பருவமானது முன் முதிர் பருவம் (Early Adult Stage), நடுத்தர வயது (Middleage Stage) என இரண்டாகவும் பகுக்கப்பட்டிருக்கின்றன.

இப்பருவங்கள் குறித்து அன்னார் வழி நின்று அறிமுகப்படுத்துவது இங்கு பொருத்தப்பாடுடையதாக இருக்கும்.

**கருப்பருவம்**

கரு உண்டானதிலிருந்து பிறப்பு வரை கிட்டத்தட்ட 280 நாட்கள் வரையிலான பருவம், இதனை, கருப்பருவம் என குறிப்பிடுகின்றனர்.

**குழவிப் பருவம்**

பிறப்பு தொடங்கி இரண்டு மாதம் வரையில் உள்ள வளர்ச்சிப் படியைக் குழவிப் பருவம் என்கிறோம். இது மிக முக்கியமான பருவம் மட்டுமன்றிப் பிற பருவ வளர்ச்சிக்கு அடிப்படையாகவும் கருதப்படுகிறது.

**குழந்தைப் பருவம்**

மூன்று மாதத்திலிருந்து ஏறக்குறைய இரண்டு வருடம் வரை உள்ள பருவம் குழந்தைப் பருவம் ஆகும்.

**பிள்ளைப் பருவம்**

இரண்டு முதல் பன்னிரண்டு வயது வரை உள்ள பருவம் பிள்ளைப் பருவமாகும். பிள்ளைப் பருவம், குழவிப் பருவத்திற்கு அடுத்த வளர்ச்சி நிலை ஆகும். பிள்ளைப் பருவத்தில் எலும்புகள் மற்றும் தசைகள் தொடர்ந்து வளர்ச்சி பெறுகின்றன. உயரத்திலும் எடையிலும் வளர்ச்சி ஏற்படுகிறது. சீரான உடல் வளர்ச்சி, அறிவு வளர்ச்சி, மனவெழுச்சி வளர்ச்சி, சமூக வளர்ச்சி, ஒழுக்க வளர்ச்சி போன்றவற்றைக் கற்றுக்கொள்ளுதல் அவற்றை வெளிப்படுத்துதல் போன்றவை வளர்ச்சி அடைகின்றன. [166]

**முன்பிள்ளைப் பருவம்**

ஆறு வயது வரை உள்ள பருவம் முன்பிள்ளைப் பருவமாகும். இப்பருவத்தில் பிள்ளைகள் துருதுருவென்று எதையாவது செய்யத் துடித்துக் கொண்டிருப்பார்கள். எதைப்பற்றியாவது அறிய ஆவல் மிகுந்து காணப்படுவர். இப்பருவத்தினரை 'உயிருள்ள கேள்விக்குறி' என்று அறிஞர்கள் குறிப்பிடுவர்.

**பின்பிள்ளைப் பருவம்**

இது ஏழு வயது முதல் பத்து அல்லது பதினொரு வயது வரை உள்ள பருவமாகும். இப்பிள்ளைப் பருவத்தில்தான் கட்டுணர்ச்சி முதிர்ச்சி பெறுகின்றன. தனிக்காட்டரசர்களாக இருப்பதில் இப்பருவத்தில் விருப்பம் இருப்பதில்லை. பிற பிள்ளைகளுடன் கூட்டாளிக் குழுக்களை அமைத்து குழுவாகச் செயல்படவே இவர்கள் விரும்புவர். இப்பருவத்தைக் 'கூட்டாளிக் குடும்பப் பருவம்' என்றும் கூறலாம்.

**குமரப் பருவம்**

13 வயதிலிருந்து 19 வயது வரை உள்ள பருவம். இப்பருவத்தை இருபருவங்களாகப் பிரிக்கலாம். குமரப் பருவம் என்பது 'வளர்ச்சி காணும் பருவம்' ஆகும். இப்பருவம் எல்லாவற்றிலும் வளர்ச்சி மற்றும் முன்னேற்றம் அடையும் பருவம். அதிகமாக உடல் தோற்றங்களில் மாற்றம் ஏற்படும் காலம் இது. நினைவாற்றல், உற்றுநோக்கல், காரணங்களைக் கண்டறிதல், அறிவாற்றல் போன்றவற்றில் உச்சநிலை காணப்படும்.

ராஸ் கூற்றுப்படி "குமரப் பருவம் வாழ்க்கையின் ஆரம்ப நிலையின் தொகுப்பு" என்றும் 'ஸ்டான்லி ஹால் கூற்றுப்படி "குமரப்பருவம் மனக்குமுறலும், கொந்தளிப்பும் நிறைந்த பருவம்" அல்லது "புயலும் அலையும் நிறைந்த பருவமாகும்". அதாவது "அமைதியற்ற சிக்கல்கள் நிறைந்த பருவமாகும்"[167] என்பர்.

இப்பருவத்தில் மனவெழுச்சி கலந்த உணர்ச்சி வசப்படும் பருவம், புயல் போன்ற வேகமும் துடிப்பும், கோபமும் நிறைந்தது, வழிகாட்டலும், அறிவுரை பகர்தலும், வழங்கப்பட வேண்டிய பருவமாகும் என ஸ்டான்லி ஹால் என்னும் அறிஞர் கூறுகிறார். உடலிலும் நாளங்களிலும் பெரும் மாற்றங்களை உண்டாக்கும் உணர்ச்சி வசப்படும் பருவம். உலகில் பல மாற்றங்கள் உருவாவதற்கும் ஏற்ற பருவம் குமரப்பருவம் ஆகும்.[168]

**முன்குமரப் பருவம்**

13 வயதிலிருந்து 17 வயது வரை உள்ள பருவம் ஆகும். உயர்நிலைப் பள்ளிகளில் கல்வி கற்கும் மாணவர்கள் இப்பருவத்தினர் ஆவர்.

**பின்குமரப் பருவம்**

17 வயதிலிருந்து 20 (அ) 21 வயது வரை உள்ளவர்கள் இப்பருவத்தினர். கல்லூரிக் கல்வி கற்பவர்கள் இப்பருவத்தினர் ஆவர்.

**முதிர் பருவம்**

20 வயதிலிருந்து இறப்பு வரை உள்ள பருவம். இதனை முன்முதிர் பருவம், நடுத்தரவயது, முதுமைப்பருவம் என்று மூன்றாக உளவியலாக வகைப்படுத்துகின்றது.

**முன் முதிர் பருவம் (20-40)**

வாழ்க்கைத் துணையைத் தேர்ந்தெடுத்தல், வாழ்க்கைத் துணையோடு ஒத்து வாழக் கற்றுக்கொள்ளுதல், குடும்பத்தை அமைத்துக் கொள்ளுதல், குழந்தைகளை வளர்த்தல், வீட்டைக் கவனித்துக் கொள்ளல், தொழிலில் ஈடுபடுதல் போன்றவை நிகழும் பருவமாகும்.

**நடுத்தர வயது (40-60)**

குடும்பம் மற்றும் சமுதாயப் பொறுப்புகளை ஏற்றுக்கொள்ளுதல், வாழ்க்கைக்குத் தேவையான பொருளாதார நிலையை உருவாக்கி அதனை நடத்திச் செல்வர். இளம் வயதினரைப் பொறுப்புள்ளவர்களாக, மகிழ்ச்சியுடையவர்களாக ஆக்குதல், நடுத்தர வயதுக்குரிய மனநிலை மாறுதல்களை ஏற்றுக்கொண்டு அதற்கு ஏற்ற வகையில் தன்னைத் தயார் செய்து கொள்ளுதல், பெற்றோர்க்கு ஏற்றவகையில் அனுசரித்துப் பேசுதல் இப்பருவத்தினர்க்கு ஏற்ற பண்புகளாகும்.

இப்பருவத்தில் உடல், அறிவு வளர்ச்சி, பொதுமைக் கருத்து உருவாக்குதல், கற்பனையும் நினைவாற்றலும், காலநிலை, படைப்பாற்றல், மனவெழுச்சி, சமூக வளர்ச்சி, பிறரைச் சார்ந்து இருத்தல், பிடிவாதமாகக் கூறல், தன்னலம் மற்றும் சுமூகமின்மை, சமூக நடத்தைகள், ஒழுக்கம் அல்லது நன்னடத்தை போன்றவைகள் வளர்ச்சியடைகின்றன.

**முதுமைப் பருவம் (60 வயதுக்கு மேல்)**

உடல் பலவீனம் அடைதல், உடல்நலக் குறைபாடு இவற்றிற்கு ஏற்ற வகையில் பொருத்தப்பாடுகளை அமைத்துக் கொள்ளல், தொழிலில் இருந்து ஓய்வு பெறுவதினை மனப்பூர்வமாக ஏற்றுக்கொள்ளுதல், மகிழ்ச்சியுடன் வாழ்க்கையை நடத்திச் செல்ல வேண்டிய ஏற்பாடுகளை மேற்கொள்ளுதல் போன்றவை முதுமைப் பருவ வளர்ச்சியின் மாற்றங்கள் ஆகும்.[169]

இத்தகைய பருவ நிலை வளர்ச்சியின் மாற்றங்களே மனித வாழ்வின் இன்றியமையா நிலை ஆகும். முதுமைப் பருவத்தினர் பின்வரும் மன உணர்வினராகத் திகழ்ந்தனர்.

- இளமையின் ஆற்றலை எண்ணி இரங்கும் உணர்வினர்.
- முதுமையைப் பெருமையாகக் கருதி வரவேற்ற உள்ளத்தினர்.
- வயது முதிர்ந்த ஆடவர் தம் முதுமைக் காலத்தில் மகன், பராமரிப்பில் அவன் இல்லத்தில் கழிக்கும் உரிமை உணர்வு கொண்டவராகத் திகழ்ந்தனர்.
- வயது முதிர்ந்த பெற்றோரைத் தம் இல்லில் வைத்துக் காப்பதை இளைஞர்கள் தம் கடமை உணர்வாகக் கொண்டு மகிழ்ந்தனர்.

**பருவ நிலைகளில் ஆணின் மனவளர்ச்சி**

குழந்தைப் பருவத்தில் ஏற்படும் சில சிறப்பியல்புகள் ஒருவனுடைய முதிர்ந்த ஆளுமைக்கு அடிப்படையை அளிக்கின்றன என்பதை, 'தொட்டில் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்னும் பழமொழி விளக்குகின்றது. மரபுநிலை, சூழ்நிலை இவ்விரண்டு நோக்குடனும் ஆராய்ந்து கூறக்கூடிய நியாயமான ஆதாரவிதி, ஒருவனுக்கு மரபுவழியில் கிடைத்த பண்புகள் வயதாக ஆக மாறுவதில்லை. தன் வளர்ச்சியின் ஒரு பருவத்தில் முயன்றுபெற்ற பழக்கங்கள் மனப்போக்குகள், சிறப்பியல்புகள் போன்றவை அவன் அடுத்த நிலைக்குச் செல்லும் போதும் அவனது வாழ்க்கையில் ஆழ்ந்த ஆதிக்கத்தைச் செலுத்துகின்றன.

"மன உணர்ச்சியும், பாலுணர்ச்சியும் ஆர்வங்கள் அமைவதற்குத் தூண்டுதல்களாக இருப்பதுபோல் அவர்கள் வாழ்கின்ற கீழ்நிலையும் காரணமாக அமைகின்றது.

பருவக் கோளாறு என்று சொல்லுமளவிற்கு, பால் உந்துதல் காரணமாகக் காதல் உணர்வு மேலிடுகிறது. இதன் காரணமாகத் தோற்றம், நிறம் போன்றவைகளில் கவர்ச்சி ஏற்படுகின்றது. ஆண்களுக்கு ஈர்ப்பும், காதல் உணர்வுகளும் தோன்றுகின்றன.

பருவமடைந்ததற்கேற்ப ஆண் பெண்களுடைய மன உணர்வுகளிலும் பரிமாற்றங்கள், உணர்வுப் போராட்டங்கள் நிகழ்கின்றன. பருவ வளர்ச்சியில் மனதில் உணர்வுகளும் வளர்ச்சிப் பெற்ற நிலையில் இயங்குகின்றது என்பதை அறிய முடிகிறது.

இங்ஙனம் உளவியல் மனிதனின் பிறப்பு தொடங்கி அறுபது வயது வரை வரையறுத்துக் காட்டுகின்றது. அந்தந்த வயதுக்கேற்ற உடல், மன வளர்ச்சி குறித்தும், அவர்களின் செயல்பாடுகள் குறித்தும் குறிப்பிடுகின்றது.

**தொகுப்புரை**

- திணைகளும் உணர்வுகளும் எனும் இப்பகுதியில் திணை – பொருள் விளக்கமும், அகத்திணைகள் மற்றும் புறத்திணைகளின் விளக்கமும் இடம்பெற்றுள்ளன. உணர்வுகளை வெளிப்படுத்த உதவும் கருவியாகக் கூற்றுகள் திகழ்வதையும் சுட்டிக் காட்டப்பட்டுள்ளது. உள்ளத்தில் தோன்றும் உணர்வுகளை வெளிப்படுத்தும் கூற்றுகள் ஆராயப்பட்டுள்ளன.
- உளவியலும் உணர்வுகளும் எனும் பகுதியில் உள்ளம், உணர்வுகள், அவற்றில் ஏற்படும் நிகழ்வுகள், உளவியலார் கருத்துப்படி விளக்கப்பட்டுள்ளன. உள்ளப் போராட்டம், உள்ள இறுக்கம், உள்ள முறிவு, உளநலச் சிக்கல்கள், உள்ளத்தின் எழுச்சி நிலைகள், நடத்தை, ஆளுமை செயல்பாடுகள் குறித்து உளவியலார் கருத்துப்படி விவரிக்கப்பட்டுள்ளன.
- மெய்ப்பாடுகளும் உணர்வுகளும் எனும் பகுதியில் தொல்காப்பியர் சுட்டிய அகம், புறம் இரண்டிற்கும் பொதுவான எண்வகை மெய்ப்பாடுகளை உணர்வுகளின் வாயிலாகவும் உளவியலார் கருத்து வாயிலாகவும் விவரிக்கப்பட்டுள்ளது. எட்டுத்தொகை ஆடவரின் மனதில் தோன்றிய உணர்வுகள் மெய்ப்பாடாக வெளிப்பட்டதை அறிய இப்பகுதி ஏதுவாக அமைந்துள்ளது.
- ஆடவரின் பருவநிலைகளும் உணர்வுகளும் எனும் இப்பகுதியில் எட்டுத்தொகைப் பாடல்களில் இடம்பெற்றுள்ள ஆடவரின் பருவம் சிறார் முதல் முதியோர் வரை குறிப்பிட்டுள்ளதைப் பாடல்கள் வழி சான்று காட்டப்பட்டுள்ளன. அத்தகையப் பருவங்களில் அவர்களுக்கு ஏற்படும் உணர்வுகளினால் வெளிப்படும் மெய்ப்பாட்டுணர்வை எடுத்தியம்பியுள்ளன.



**அடிகுறிப்புகள்**

1. இளங்குமரன், இரா., புறநானூறு–2, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 76.
2. தமிழண்ணல், குறுந்தொகை–165, கோவிலூர் மடாலயப் பதிப்பு,ப. 208.
3. கருணாநிதி, ந., தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல் நூற்பா–20, வசந்தா பதிப்பகம், ப. 11.
4. குறிஞ்சிப் பாட்டு–205.
5. தமிழண்ணல், குறுந்தொகை–45, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 76.
6. இளங்குமரன், இரா., புறநானூறு–27, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 54.
7. மேலது., 24, ப. 50.
8. மேலது., 159, ப. 201.
9. சாரங்கபாணி, இரா., பரிபாடல்–16:7, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 225.
10. மீனவன், நா., முருகசாமி, தெ., அகநானூறு–16:16, களிற்றியானை நிரை, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 39.
11. புறநானூறு–159,373, பதிற்றுப்பத்து–14,31,72,82.
12. பதிற்றுப்பத்து–59, குறுந்தொகை–95, 100, 184, 228, 234, 322, 355, நற்றினை–82, 87, 91, 110, 156, 203, 232, புறம்–19, 277, 295.
13. கார்த்திகேசு சிவதம்பி, திணைக் கோட்பாட்டின் சமூக அடிப்படைகள், ப. 23.
14. கருணாநிதி, ந., தொல்காப்பியம், பொருளதிகாரம், அகத்திணையியல், நூற்பா–13, ப. 9.
15. Studies in Tamil literature History,Ramachandra Thitchithar,P. 178.
16. சஞ்சீவி, ந., சங்க இலக்கிய அட்டவணை, சென்னைப் பல்கலைக்கழகம், ப. 307.
17. புறநூனூறு–257,258,262,269,297,259–270.
18. புறநானூறு–4,76,36,41,45,46,47,517,213,292.
19. புறநானூறு–109,110,111,271,272,299.
20. சஞ்சீவி, ந., சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள், சென்னைப் பல்கலைக் கழகம், ப. 309.
21. கோவிந்தன், கா. பண்டைத் தமிழர் போர்நெறி, ப. 269.
22. சஞ்சீவி, ந., சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணைகள், சென்னைப் பல்கலைக்கழகம், ப. 309.
23. கருணாநிதி, ந., தொல்காப்பியம், பொருள், புறத்திணையியல் நூற்பா–22, வசந்தா பதிப்பகம்ட, ப. 37.
24. சஞ்சீவி, ந., சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை, சென்னைப் பல்கலைக் கழகம், ப.309.
25. மேலது., ப. 319.
26. பரிமணம், அ.மா., பதிற்றுப்பத்து–30, கோவிலுர் மடாலயப் பதிப்பு, ப, 92.
27. மேலது., 77, ப. 274.
28. மேலது., 34,56,85.

29. மேலது., 36,39,52,81,84,89.
30. மேலது., 11–29,31–33,35,37,38,40–51,53–90.
31. கணேசன், அ., இலக்கிய மனம், ப. 13.
32. The Power of Heart, P.169.
33. சுப்பிரமணியன், ச.வே., தொல்காப்பியம், மரபியல், மணிவாசகர் பதிப்பகம், நூ. 27.
34. காந்தி, க., தமிழர் எண்ணங்கள், (எடுத்தாண்டது), உலகத்தமிழாராய்ச்சி நிறுவனம், ப. V.
35. சுப்புரெட்டியார், ந., கல்வி உளவியல் கோட்பாடுகள், மணிவாசகர் பதிப்பகம், ப. 361.
36. மேலது., ப. 179.
37. ABC's of the Human Mind, Readers Digest, P.169
38. சுப்புரெட்டியார், ந., கல்வி உளவியல் கோட்பாடுகள், மணிவாசகர் பதிப்பகம், ப. 193.
39. வேலுச்சாமி, நா., நான்காவது கருத்தரங்க மலர், கேரளப் பல்கலைக்கழகம், ப.101.
40. முருகானந்தம், மா., உளவியல் நோக்கில் சிற்றிலக்கியங்கள், ப.66.
41. மேலது., ப.66.
42. மேலது., ப.66.
43. நலங்கிள்ளி, அ., இலக்கியமும் உளப்பகுப்பாய்வும், ப. 105.
44. வரதராசனார், மு., கவிஞர் தாகூர், பாரிநிலையம், சென்னை, ப.70.
45. மனுவேல், ஐ., உளச் சுகாதாரம், கலைக்களஞ்சியம் தொகுதி இரண்டு, ப. 373.
46. James C. Coleman, "Problems of adjusments can be classified as frustrations, conflicts and Pressures - Psychology and Effective Behaviour, P. 176.
47. James C. Coleman., "Frustration is the result of the thwarting of a motive either by some obstacle that blocks or impedes our progress toward a desire goal or by the obsence of an appropriate goal object", Psychology and Effective Behaviour, P-176.
48. .............. "Frustraction is experience of strong need accompanied by a sense of being prevented from satisfying" it - Norman Alexander Cameron, Psychology Abnormal, Encyclopaedia Brittennica, Vol.18, P-749.
49. சண்முகம், தா.ஏ., உளநலவியல், தமிழ் வெளியீட்டுக்கழகம், ப.40.
50. சிவராஜ், து., சங்க இலக்கியத்தில் உளவியல், சிவம் பதிப்பகம், ப. 8.
51. ஜேம்ஸ் டி. பேஜ், பிறழ்நிலை உளவியல், ப. 40.
52. சண்முகம், தா.ஏ., உளநலவியல், தமிழ் வெளியீட்டுக் கழகம், ப. 247.
53. Mani Bhushan Prasad., "A conflict is created by the existence of mutually exclusive drives or moives which can not be satisfied at the same time" - Reactions to Threat, P-1.

Mani Bhushan Prasad., ................. "Conflict evoke feelings of exasperations and frustraction, because satisfaction of one motive will lead to the frustration of the other" - Reactions to Threat, P-1.

54. Norman L. Munn, "in an approach - approach conflict the person (P) is between two alternatives with equally positive valences.... if the alternatives were not equally attractive there would be no conflict", Introduction to Psychology, P-209.
55. Norman L. Munn, "When frustraction is prolonged and no resolution occurs, there is usually a condition of chronic emotional tension. Sometimes referred to as stress" Introduction to Psychology, P-214.
56. James C. Coleman, "Three emotional patterns are of special significance here : anger, fear and anxiety" Psychology and Effective Behaviour, P-210.
57. மதுரைக் காஞ்சி, ப. 489–490.
58. இராசமாணிக்கம், மு., உளவியல் துறைகள் – இரண்டாம் தொகுதி, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், ப.326.
59. சிவராஜ், து., சங்க இலக்கியத்தில் உளவியல், சிவம் பதிப்பகம், ப.34.
60. சண்முகம், தா.ஏ., உளவியல், தமிழ் வெளியீட்டுக் கழகம், ப. 19.
61. அப்புள்ளாச்சாரி, ரா., குழந்தை உளவியல், சாந்தா பப்ளிகேஷன்ஸ், ப. 856
62. Arther Schper heaven, The world as will and idea, Meta Physics of the love sexes, Vol. III, Pg.337.
63. சண்முகம்பிள்ளை, மு., தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, பதிப்பு, ப. 7.
64. சண்முகம்பிள்ளை, மு., தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, பதிப்பு, ப. 8–9.
65. ABC's of the Human Mind, Readers Digest, P.170.
66. Wit and its Relation to the Unconscious, Sigmund Freud, P-84-93.
67. சண்முகம்பிள்ளை., மு. தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, நூற்பா–249, பதிப்பு, ப. 9.
68. ABC's of the Human Mind, Readers Digest, P.186.
69. கலைக்களஞ்சியம், தொகுதி–9, ப. 180.
70. சண்முகம்பிள்ளை, மு., தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, நூற்பா–251, பதிப்பு, ப. 12.
71. How to make psychololgy work for you, P-67.
72. சண்முகம்பிள்ளை, மு., தொல்காப்பியம், பொருளதிகாரம், இளம்பூரணர் உரை, பதிப்பு, ப. 14.
73. சுப்புரெட்டியார், ந., கல்வி உளவியல் கோட்பாடுகள், மணிவாசகர் பதிப்பகம், ப. 129.
74. Medical Question and Answer Book, Readers Digest, P-206.
75. Bennert, T.C., The Sensory World, P. 403.
76. கருணாநிதி, ந., தொல்காப்பியம், மரபியல், நூற்பா. 23, ப. 214.
77. கருணாநிதி, ந., தொல்காப்பியம், பொருள் புறத்திணை, நூற்பா. 29, வசந்தா பதிப்பகம், ப. 41.

78. மேலது., நூற்பா. 24, ப. 38.

79. மேலது., நூற்பா–5, ப. 29.

80. மேலது., கற்பியல் நூற்பா–10, ப. 82.

81. மேலது., நூற்பா. 5,6,7,8,31.

82. மேலது., நூற்பா, 24,33.

83. கோகிலவாணி, சு., ஐங்குறுநூற்றில் தாயும் சேயும் ஓர் ஆய்வு, ஆய்வேடு, சென்னைப் பல்கலைக்கழகம், ப. 27.

84. சிங்கார வடிவேலன், அர., ஐங்குறுநூறு–98. கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 132.

85. கருணாநிதி, ந., தொல்காப்பியம், மரபியல் நூற்பா. 23, வசந்தா பதிப்பகம், ப. 214.

86. மேலது., புறத்திணையியல் நூற்பா. 24:32, ப.38.

87. மேலது., கற்பியல் நூற்பா. 5:27, ப. 77.

88. Tamil Lexicon-vol 3,University of Madras

89. பரிமணம், அ.மா., பதிற்றுப்பத்து–6:9, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 242.

90. இளங்குமரன், இரா., புறநானூறு–92:1–3, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப.202.

91. மகாதேவன், கதிர்., நற்றிணை–221:12–13, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 299.

92. சிங்கார வடிவேலன், அர., ஐங்குறுநூறு–309, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 361.

93. இளங்குமரன், இரா., புறநானூறு–312:1–2, கோவிலுர் மடாலயப் பதிப்பு, ப. 452.

94. அகநானூறு, மணிமிடை பவளம்–219:1–10, புறநானூறு–180:1–4. கோவிலூர் மடாலயப் பதிப்பு.

95. அண்ணாமலை, சுப., கலித்தொகை–81–84, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப.295–309.

96. மீனவன், நா., முருகசாமி, தெ., அகநானூறு–54:17–22, களிற்றியானை நிரை, கோவிலூர் மடாலயப்பதிப்பு, ப. 122.

97. அண்ணாமலை, சுப., கலித்தொகை–85:33–35, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப.312.

98. இராசமாணிக்கனார், மு., உளவியல் துறைகள், முதல் தொகுதி, தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், ப. 83–86.

99. சிங்கார வடிவேலன், அர., ஐங்குறுநூறு–403, கோவிலுர் மடாலயப் பதிப்பு, ப. 454.

100. நற்றிணை–254:1–5,363:7–10,378:7–12, குறுந்தொகை–401:3–5,கலித்தொகை–59:1821.

101. இளங்குமரன், இரா., புறநானூறு–183:1–2, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 313.

102. மேலது, ப. 313.

103. மகாதேவன், கதிர்., நற்றிணை–392:1–3, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 525.

104. மீனவன், நா., அண்ணாமலை, சுப., அகநானூறு–206:5, மணிமிடைபவளம், கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 195,

105. இளங்குமரன், இரா., புறநானூறு–96:1, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 206.

106. தமிழண்ணல், குறுந்தொகை–241:3, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 287.

107. மேலது., 221:2–4, ப. 267.
108. இளங்குமரன், இரா., புறநானூறு–324:3–9, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 464.
109. மேலது., 320:8–9, ப., 460.
110. மேலது., 322:4–6, ப. 462.
111. மகாதேவன், கதிர்., நற்றிணை–111:4–5, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 145.
112. இளங்குமரன், இரா., நற்றிணை–327:1–2, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 145.
113. மகாதேவன், கதிர்., புறநானூறு–111:3–9, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 145.
114. மீனவன், நா., அண்ணாமலை, சுப., அகநானூறு–290:1–8, மணிமிடைபவளம், கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 386.
115. இளங்குமரன், இரா., புறநானூறு–96:1–2,104, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 206.
116. மேலது, 286, 310, 19, 278, 279.
117. மேலது., 277.
118. மேலது., 86.
119. மேலது., 278.
120. சிங்கார வடிவேலன், அர., ஐங்குறுநூறு–202:2–3,கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப.242.
121. தமிழண்ணல், குறுந்தொகை–156, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 197.
122. மேலது., 33, ப. 62.
123. பொருநராற்றுப்படை:130–138,கோவிலூர் மடாலயப் பதிப்பு
124. இளங்குமரன், இரா., புறநானூறு–74:1–2, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 185.
125. மேலது., 72, ப. 183.
126. மேலது., 46, ப. 148.
127. கலித்தொகை–81:32–37, அகநானூறு 66:7–26, நற்றிணை–250.
128. பரிமணம், அ.மா., பதிற்றுப் பத்து–20:26–27,கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 54.
129. மகாதேவன், கதிர்.. நற்றிணை–15:7–8, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 20.
130. இளங்குமரன், இரா., புறநானூறு–196:10, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 325.
131. மேலது., 198:20–23, ப. 328.
132. மேலது., 137:13–15, ப. 250.
133. கார்ல்சி. காரிசன், (மூலம்) இளையோர் உளவியல், தி.இரா.அரங்கராஜன் (மொழிபெயர்ப்பு) ப. VI
134. அண்ணாமலை, சுப., கலித்தொகை, 65:9, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 239.
135. மீனவன், நா., முருகசாமி, தெ., அகநானூறு, 6:15, களிற்றியானைநிரை, கோவிலூர், மடாலயப் பதிப்பு, ப. 16.
136. இளங்குமரன், இரா. புறநானூறு, 159:5, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 278.
137. மேலது., 161:34, ப. 282.
138. மேலது., 138:5, ப. 252.

139. அண்ணாமலை, சுப., கலித்தொகை 12:18, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 47.
140. இளங்குமரன், இரா., புறநானூறு – 254:1, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 396.
141. அண்ணாமலை, சுப., கலித்தொகை – 130:7, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 509.
142. இளங்குமரன், இரா., புறநானூறு – 159:1–5, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 278.
143. மேலது., 75, ப. 186.
144. சிறுபாணாற்றுப்படை – 231.
145. இளங்குமரன், இரா., புறநானூறு – 234:14, கோவிலூர் மடாலயம் பதிப்பு, ப. 374.
146. அகநானூறு – 377:7, புறநானூறு – 277:2, பக். 184–418.
147. தமிழண்ணல், மீனவன், நா., அகநானூறு – 377:7–8, நித்திலக் கோவை, கோவிலூர் மடாலயப்பதிப்பு, ப. 184.
148. இளங்குமரன், இரா., புறநானூறு – 278:1, கோவிலூர் மடாலயப்பதிப்பு, ப. 418.
149. மேலது., 243, ப. 386.
150. மேலது., 159:1–5, ப. 278.
151. மேலது., 243, ப. 386.
152. மேலது., 159, ப. 278.
153. மேலது., 191, ப. 320
154. தமிழண்ணல், மீனவன், நா., அகநானூறு, 366: 612, நீத்திலக்கோவை, கோவிலூர் மடாலயப்பதிப்பு, ப. 159.
155. தமிழண்ணல், குறுந்தொகை, 146, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 187.
156. மகாதேவன், கதிர்., நற்றிணை–207:7–10, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 280.
157. புறநானூறு–52:12–17, ப. 155, அகநானூறு–377:6–13, ப. 184.
158. புறநானூறு: 251, 252, பக். 394, 395.
159. பொருநராற்றுப்படை–187–188.
160. பரிமணம், அ.மா., பதிற்றுப்பத்து, 70:21–22, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 246.
161. இளங்குமரன், இரா., புறநானூறு – 159, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 278.
162. வாழ்வியற் களஞ்சியம், தொகுதி–13.
163. தமிழண்ணல், குறுந்தொகை – 255, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 303.
164. அண்ணாமலை, சுப., கலித்தொகை – 12:12–19, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 47.
165. மேலது., 130:7–8: ப. 509.
166. சுப்புரெட்டியார், ந., கல்வி, உளவியல், மணிவாசகர் பதிப்பகம், ப. 25.
167. மீனாட்சி சுந்தரம், அ., கல்வி உளவியல், ப. 30.
168. மேலது., ப. 31
169. மேலது., ப. 41.

# இயல் மூன்று



## அகத்திணைகளில் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வுகள்

அ. அன்பின் ஐந்திணையில் வெளிப்படும் தலைவனின் மன உணர்வுகள்

ஆ. அன்பின் ஐந்திணையில் வெளிப்படும் பிற ஆடவரின் மன உணர்வுகள்

இ. கைக்கிளை, பெருந்திணையில் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வுகள்



**இயல் மூன்று**

# அகத்திணைகளில் வெளிப்படும் ஆடவரின் உணர்வுகள்

## அ. அன்பின் ஐந்திணையில் வெளிப்படும் தலைவனின் மனஉணர்வுகள்

களவு நெறி என்பது ஒருயிர் தன் காதல் செல்லுதற்குரிய மறுபாலுயிரைத் தானே தேர்ந்து கொள்ளும் இயற்கை நெறியாகும். அகத்திணை வாழ்வில் சிறப்பம்சம் பெற்றுத் திகழும் இக்களவு கற்பு ஒழுக்கத்தில் வெளிப்படும் ஆடவர் மனஉணர்வுகளைத் தொல்காப்பியர் வழியில் எட்டுத்தொகை ஐந்திணைப் பாடல்கள் துணைகொண்டு இவ்வியல் ஆராய்கின்றது.

குறிஞ்சி, முல்லை, பாலை, நெய்தல், மருதம் ஆகிய அன்பின் ஐந்திணைகளைக் கைகோள் என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். கைகோள் என்பதன் பொருள் ஒழுக்கம் ஆகும் கைகோளைப்பற்றி,

**“கைகோள் என்பது ஒழுக்கங்கோடல்’’ (தொல்.செ.பே.உரை.ப.396)**

என்று “காமமாகிய செயலை அல்லது ஒழுக்கத்தைக் கொள்ளுதல்”[1] என்று கூறும் பேராசிரியர் உரையும் பொருத்தமுடையதாகின்றது. எனவே கைகோள் என்பதற்குச் செயல் அல்லது ஒழுக்கம் என்னும் பொருள் பொருத்தமுடையதாகிறது.

அகத்திணையியலின் முதல் நூற்பாவில் அகத்திணைகள் ஏழு என்று கூறிய தொல்காப்பியர் அவ்வேழையும் தனித்தனியே விளக்காது, கைக்கிளை, பெருந்திணை, களவு, கற்பு என நான்கு பிரிவுகளாகப் பிரித்து விளக்குகின்றார். களவையும், கற்பையும் தனித்தனி இயல்களில் எடுத்துரைக்கின்றார்.

இருபால் ஒத்த அன்பை அடிப்படையாகக் கொண்டவை ஐந்து திணைகளுமாகும். இதனை,

**“இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு**
**அன்பொடு புணர்ந்த ஐந்திணை’’(தொல்.கள.நூ.1, ப.48)**

என்பர் தொல்காப்பியர், அன்பொடு புணர்ந்த ஐந்திணை என்று அகத்திணையைக் குறிப்பிடுவதோடு இன்பமும் பொருளும் அறமும் சேர்ந்துஇயங்குவதே அகத்திணை என்று குறிப்பிட்டுள்ளதை அறியமுடிகிறது. இவ்வழியில் தெ.பொ. மீனாட்சி சுந்தரன் கூறும் கருத்துகள் இதனை மேலும் வலிமைபெறச் செய்கின்றன. அவை, “அகமெனில் அன்பு,

வாழ்க்கையின் சாரம் அகம் எனப்படும். அகப்பாடல்கள் மனித உள்ளத்தின் உணர்ச்சியைப் பிரதிபலிக்கச் செய்கின்றன. ஆனால் விளக்கமாக இன்றி குறிப்பினால் தாம் அனுபவித்த அன்புணர்வினைத் தெரிவிக்கின்றன"[2] என்று கூறுகின்றார்.

**களவும் ஐந்திணைகளும்**

களவு என்பது திருமணத்திற்கு முந்திய காமக் கூட்டத்தைக் குறிக்கும். இது புணர்தலும் புணர்தல் நிமித்தமும் எனக் குறிஞ்சியில் அடக்கப்பட்டது. பிற உரிப் பொருள்களோ, கற்பொழுக்கமோ குறிஞ்சியில் பாடுவது மரபன்று. "திருமணத்திற்குப் பின்பு நிகழும் பிரிவு, இருத்தல், இரங்கல், ஊடல் முதலிய கற்பொழுக்கங்கள் முறையே பாலை, முல்லை, நெய்தல், மருதத்திணைகளுள் வைத்துப் பாடப்படுகின்றன."[3] என்கிறார் இளம்பூரணர். எனினும் இத்திணைகளுள் இக்கற்பொழுக்கங்களேயன்றிக் களவொழுக்கமும் மயங்கி வருதலுண்டு.

இக்களவொழுக்கத்தைத் தொல்காப்பியர் 'காமக் கூட்டம்' 'மறைந்த ஒழுக்கம்' 'மறை' என வெவ்வேறு பெயர்களிட்டுக் கூறுகின்றார்.[4] தலைமகளின் பெற்றோர் அறியாமல் அவளைக் களவிற்கண்டு புணர்தலின் களவு எனப்பெறும். களவு குறித்து இளம்பூரணர், "களவாவது பிறர்க்குரிய பொருளை மறையிற்கோடல், இன்னதன்றி ஒத்தார்க்கும் மிக்கார்க்கும் பொதுவாகிய கன்னியரைத் தமர் கொடுப்பக் கொள்ளாது, கன்னியர் தம் இச்சையினால் தமரை மறைத்துப் புணர்ந்து பின்னும் அறநிலை வழாமல் நிற்றலால் இஃது அறம் எனப்படும்".[5] "இக்களவொழுக்கம் பிறர்க்குரிய பொருளை மறைத்துக் கொள்ளும் களவு போன்றதன்று என்றும், வேதம், மறை என்று பெயர் பெற்றாற்போல இவ்வொழுக்கம் களவு என்று பெயர் பெற்றது" என்றும் நச்சினார்க்கினியர் கூறுவர்.[6]

**களவின் வகைகள்**

களவின் புணர்ச்சி வகை நான்கு என்பர் தொல்காப்பியர் அவை காமப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், தோழியிற் புணர்வு என்பனவாகும். இதனை,

> **"காமப்புணர்ச்சியும்இடந்தலைப்படலும்**
> **பாங்கொடு தழாஅலும் தோழியின் புணர்வும் என்று**
> **ஆங்க நால்வகையினும் அடைந்த சார்பொடு**
> **மறைஎன மொழிதல் மறையோர் ஆறே''** (தொல்.செய்.நூ.178, ப.149)

எனத் தொல்காப்பியர் செய்யுளியலில் வரையறுப்பர்.

**கற்பும் ஐந்திணைகளும்**

களவு வெளியாகும் முன்போ அல்லது வெளியான பின்போ தலைமகளின் சுற்றத்தார் அவளைத் தலைமகனுக்கு மணஞ்செய்து கொடுத்தலே கற்பெனப்படும். தொல்காப்பியர் கற்பு என்பதை வாழ்க்கை நெறிகளுள் ஒன்றாகக் கருதுகின்றார். திருமணத்துக்கு முன்னர்

தலைமக்களின் வாழ்க்கையைக் களவு என்றும், திருமணத்திற்குப் பின்னர் தலைமக்களின் வாழ்க்கையைக் கற்பு என்றும் அவர் வரையறுத்துள்ளார். கற்பின் இலக்கணத்தைத் தொல்காப்பியர்,

**"கற்பெனப் படுவது கரணமொடு புணரக்**
**கொளற்குரி மரபிற் கிழவன் கிழத்தியைக்**
**கொடைக்குரி மரபினோர் கொடுப்பக்கொள் வதுவே"**
**(தொல்.கற்.நூ.-1, ப.73)**

என்று குறிப்பிடுவதிலிருந்து தலைமகளின் பெற்றோர் கொடுப்ப தலைமகன் அவளைப் பெறுவது கற்பு என அறிய முடிகின்றது. எனவே தலைமகளின் தமர் கொடுப்பக் கொள்வது கற்பு, கொடுப்பாரின்றிக் கூடுவது களவு என்பதை உணர முடிகின்றது.

மகளிர்க்கு உயிரைவிட நாணும், நாணைவிடக் கற்பும் சிறந்தது என்று தொல்காப்பியர் கூறுகின்றார்.[7] கற்பை மகளிரின் சிறப்பியல்பாகக் கூறினாலும் கற்பியலில் அதனை இருபாற்கும் ஒத்த வாழ்க்கை நெறியாகவே அவர் குறிப்பிடுகின்றார். தொல்காப்பியரின் கற்பு பற்றிய கொள்கைக்கு இணங்க நச்சினார்க்கினியாரும் களவின்றிக் கற்பு அமையப் பெறாது என்று உரை கூறுகின்றார்.[8] இவற்றால் களவின் முடிந்த நிலையே கற்பு என்பது பெறப்படுகின்றது.

**கற்பியல் பாகுபாடு**

களவொழுக்கம் வெளியான பின்னர் அல்லது களவு வெளியாகு முன்னர் தலைவியின் சுற்றத்தார் அவளைத் தலைவனுக்கு மணஞ்செய்து கொடுத்தல் கற்பெனப்பெறும் மணம் நிகழ்ந்த பின்னர் நிகழும் மலிவு, ஊடல், பிரிவு என்னும் இக்கூறுகளும், கற்பியலின் பாகுபாடுகளாகும். இப்பாகுபாட்டினைச் செய்யுளியலில், மறை வெளிப்படுதலும் என்று தொடங்கும் நூற்பாவில்

**"மறைவெளிப் படுதலுந் தமரிற் பெறுதலும்**
**இவைமுத லாகிய இயனெறி திரியாது**
**மலிவும் புலவியும் ஊடலும் உணர்வும்**
**பிரிவொடு புணர்ந்தது கற்பெனப் படுமே" (தொல்.செய்.நூ.1, ப.149)**

என்று தொல்காப்பியர் வரையறுத்துக் கூறுகின்றார்.

திருமணத்தில் நடைபெறும் சடங்கு நிகழ்ச்சிகளைக் கூறுவது மணமுறையாகும். தலைவியைக் கொள்வதற்கு உரிமையுடைய தலைவனுக்குத் தலைவியைக் கொடுக்கும் உரிமையுடையவர்கள் கொடுப்பத் தலைவன் கரண முறையால் மணஞ்செய்து கொள்வதே கற்பென்று கூறப்பெறுகின்றது. இது குறித்துத் தொல்காப்பியம் "கற்பெனப்படுவது கரணமொடு புணரா"[9] என்னும் நூற்பாவில் கூறியிருக்கின்றார்.

"உள்ளப் புணர்ச்சியளவில் உரிமை பூண்டொழுகிய தலைவனும் தலைவியும் உலகத்தார் அறிய மனையறம் நிகழ்த்துதற்கு உரிமை செய்தளிக்கும் செயல்முறையே பண்டைத் தமிழரின் திருமணச் சடங்காகும்"[10] என்பர் ந. சுப்புரெட்டியார்.

**குறிஞ்சித் திணையில் வெளிப்படும் ஆடவரின் உணர்வுகள்**

எட்டுத்தொகை அகநூல்களில் குறிஞ்சித் திணைக்கு மொத்தம் 487 பாடல்கள் உள்ளன. இவற்றுள் களவுப் பாடல்கள் 462, கற்புப்பாடல்கள் 22, கைக்கிளை மூன்று பாடல்கள் என்ற வகையில் அமைந்துள்ளன. அவற்றில் தலைவன் கூற்றாக 83 பாடல்களும் பாங்கன் கூற்றாக இரண்டு பாடல்களும் இடம் பெற்றுள்ளன.[11] குறிஞ்சித் திணையில் தலைவன் கூற்றான 83 பாடல்களில் குறுந்தொகையில் 35 பாடல்களும், நற்றிணையில் 23 பாடல்களும், அகநானூறில் 23 பாடல்களும், ஐங்குறுநூறில் 7 பாடல்களும், கலித்தொகையில் 5, பாடல்களும் அமைந்துள்ளன.[12]

அகப்பாடல்கள் அனைத்தும் யாரேனும் ஒருவர் கூற்றாக அமைந்திருக்கும். களவின் கூற்றிற்குரியோரை,

> **"பார்ப்பான், பாங்கன், தோழி, செவிலி**
> **சீர்த்தகு சிறப்பின் கிழவன், கிழத்தியொடு,**
> **அளவியல் மரபின் அறுவகையோரும்**
> **களவினில் கிளவிக்கு உரியர் என்ப''** (தொல்.செய்.நூ. 181, ப.150)

எனத் தொல்காப்பியர் வரையறுத்துள்ளார். அக நூல்களில் இடம் பெற்றுள்ள களவுப் பாடல்களில், தொல்காப்பியர் வரையறுத்த நான்கு வகையான புணர்ச்சியின் கண் தலைவன் கூற்றில் வெளிப்படும் உணர்வுகளை இனி ஆராயப் புகுவோம்.

அகத்திணை மாந்தர்களில் தலைவன் முக்கிய இடம்பெறுபவனாவான். 'பெருமையும் உரனும்' இவனுக்குரியன என்று தொல்காப்பியர் குறிப்பிடுவர். தலைவனின் சிந்தையும் செயலும் தலைவியை வட்டமிட்டே அமைகின்றன. தலைவியோடு கூடிக்களிக்கும் பொழுதும், அவளைப் பிரிந்து வாடும் போதும் தலைவன் நிகழ்த்தும் கூற்றுகள், தலைவனின் மன உணர்வினை வெளிப்படுத்துவனவாக அமைகின்றன.

ஐந்திணைகளில் இடம்பெற்றுள்ள தலைவன் கூற்றுகளைப் புணர்ந்து நீங்கும் தலைவன், அல்லகுறிப்பிட்ட தலைவன், தோழியை இரந்து பின்னிற்கும் தலைவன், இடித்துரைக்கும் பாங்கன் முன் தலைவன், இடைச்சுரத்து நின்ற தலைவன், பிரிவு உணர்த்திய தலைவன், மடல் வலித்த தலைவன், உடன்போகும் தலைவன், பாசறைக்கண் தலைவன், வினைமுற்றி மீளும் தலைவன் என பிரித்து வகைப்படுத்திக் காட்டுவர் ஆ. இராமகிருட்டினன்.[13]

தொல்காப்பியக் களவியலிலும்[14] கற்பியலிலும்[15] தலைவன் நிகழ்த்தும் கூற்றுக்கள் வரையறை செய்யப்பட்டுள்ளன. களவொழுக்கத்தில் ஏற்படும் உணர்வுகளை,

"வேட்கை ஒருதலை உள்ளுதல் மெலிதல்
ஆக்கம் செப்பல் நாணுவரை இறத்தல்
நோக்குவ எல்லாம் அவையே போறல்
மறத்தல் மயக்கம் சாக்காடு என்றுஅச்
சிறப்புடை மரபின் அவை களவு எனமொழிப''
(தொல்.கள.நூ.9, ப.50)

என்பர் தொல்காப்பியர். குறையாத விருப்பம், இடைவிடாது நினைத்தல், இளைத்தல், ஆவதற்குரியதைக் கூறல், தம் நாண எல்லையைக் கடத்தல், காண்பன அனைத்தும் தம்மைப் போன்றிருப்பதாகத் தோன்றுதல், தம் செயல்களை மறத்தல், தெளிவின்மை, சாதல் நினைவு, இவை தலைவன், தலைவி இருவர் மாட்டும் நிகழும் களவுக்குரிய உணர்வுகளாக, ஒழுகலாறுகளாகக் குறிப்பிட்டுள்ளார்.

நிலத்தால் குறிஞ்சி முதன்மை பெறுவது போல ஒழுக்கத்தாலும் குறிஞ்சி முன்னிற்பதனைத் தொல்காப்பியர் சுட்டியிருப்பது நோக்கத்தக்கது. உரிப்பொருள் சுட்டுமிடத்துப் 'புணர்தல்' ஆகிய குறிஞ்சி ஒழுக்கமே முதலில் குறிக்கப்படுகின்றது.[16]

குறிஞ்சித் திணைக்குரிய களவொழுக்கமாக இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற் கூட்டம், தோழியற் கூட்டம் (அ) தோழியிற் புணர்வு என்ற நால்வகைச் சார்ந்ததாகும்.[17] இத்தகைய நால்வகைக் களவொழுக்கத்தின் கண் அகநூல்களில் நிகழும் தலைவன் கூற்றில் வெளிப்படும் உணர்வுகளை ஆராயும் வகையில் இப்பகுதி அமைகின்றது.

**நற்றிணை**

நற்றிணையில் குறிஞ்சித் திணைப்பாடல்களில் தலைவன் கூற்றாக இடம்பெற்றுள்ள இருபத்து மூன்று பாடல்களும் இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, தோழியிற் புணர்ச்சி, பல்வேறு சூழல்களில் நெஞ்சிற்கும், முன்னிலைப் புறமொழியாகவும், தலைவிக்கு ஆறுதல் கூறும் வண்ணமும், தோழியை மதியுடம்படுத்தல், தலைவியைப் பற்றியும் தன்நிலைப்பற்றியும் பாங்கற்கு உரைக்கும் வண்ணமாகவும் அமைந்துள்ளன.

தலைவனும், தலைவியும் தாங்களே சந்தித்துப் புணரும் இயற்கைப் புணர்ச்சியில் தலைவியுடன் கூடி மகிழ்ந்த தலைவன், தலைவிக்கு ஆயத்தார் செய்யும் வழிபாட்டைக் கண்டு,

"யார்மகள் கொல்இவள் தந்தை வாழியர்
துயரம் உறீஇயினள் எம்மே'' (நற்.8:4-5, ப.10)

என வியந்து,

"திண்தேர்ப் பொறையன் தொண்டி
தன்திறம் பெறுகஇவள் ஈன்ற தாயே''(நற்.8, ப.10)

என்று குறிப்பிடுகின்றான். இதில் தலைவியின் உயர்நிலையை உணர்ந்துஇவள் யார் மகள் என வியந்து எதற்கும் அசையாத என் உள்ளத்தைக் கொள்ளை கொண்டு எனக்குத் துன்பம் செய்கிறாள். இத்தகு அழகு படைத்த இவளைப் பெற்று எனக்குத் தந்த இவளின் தாய், தந்தை நெடுங்காலம் வாழ வேண்டும் என்று வாழ்த்துகின்றான். இதில் எதற்கும் அசையாத திடமான தலைவன், தலைவியின் அழகில் அசைந்து கொடுத்து அவளின் பெற்றோரை வாழ்த்தும் உயர்ந்த குணம் கொண்டவனாக, எண்ணம் கொண்டவனாகவும் காட்சியளிக்கிறான். இங்கு தலைவன் 'மருட்கை' மற்றும் 'வாழ்த்தல்' என்னும் மெய்ப்பாட்டுணர்வுடன் காணப்படுகிறான்.

இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர் நிகழும் இடந்தலைப்பாடு எனும் கூட்டம் பாங்கன் அல்லது தோழியின் துணை கிட்டும்வரை நீடிக்கும் களவொழுக்கம் ஆகும். இத்தகைய நிலையில் நற்றிணைகுறிஞ்சித் தலைவன், இடந்தலைப்பாடுற்ற நிலையில்,

**"சொல்லின் சொல்லெதிர் கொள்ளாய் யாழநின்**
**திருமுகம் இறைஞ்சி நாணுதி கதுமெனக்**
**காமம் கைம்மிகின் தாங்குதல் எளிதோ''**(நற். 39:1-2, ப.51)

என்று காமம் மிகுந்த நிலையில் தலைவியிடம் குறிப்பிடுகின்றான். தலைவியின் மேல் கொண்ட காதல்மிகுதியையும் அதனை ஆற்ற முடியாமல் அவன் தவிக்கின்ற தவிப்பும் புலனாகின்றது. இங்கு தலைவன் 'கைம்மிகல்' எனும் மெய்ப்பாடு உடையவனாகக் காணப்படுகிறான்.

இத்தகைய இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு என்ற இரண்டு நிலையிலும் தலைவியுடன் உள்ளப்புணர்ச்சியில் ஈடுபட்டு நீங்கிய தலைவன், பாங்கனிடம் இதனை எடுத்துரைத்து மேலும் தலைவியைக் கூடி மகிழும் எண்ணத்திற்குப் பாங்கனின் துணையைத் தலைவன் வேண்டும் நிலையில்

**"ஆனா நோயோடு அழிபடர்க் கலங்கிக்**
**காமம் கைம்மிகக் கையறு துயரம்**
**காணவும் நல்கா யாயின்''**(நற்.185:1-3, ப.249)

என்று தலைவியால் தான் உற்ற காமநோயால் தன்மதி அழிந்து நிற்கும் நிலையை விளக்கினான். அழுகை என்ற மெய்ப்பாட்டின் உட்பிரிவான அசைவு என்ற மெய்ப்பாடு கொண்டு விளங்குவதைக் காணமுடிகின்றது. 'அசை' வென்பது தளர்ச்சி தன்னிலையில் தாழ்தல் என்கிறார் இளம்பூரணார். மேலும்,

**''காமங் கைம்மிகின் தாங்குதல் எளிதோ''**(நற்.39:3,ப.51)

**''உடையுமென் உள்ளம்''** (நற்.75:5, ப.99)

**''பைதல் நெஞ்சம்''** (நற். 75:10, ப.99)

**''அருந்துயர் அவலம்''** (நற்.140:10, ப.184)

போன்ற தொடர்கள் தலைவன் உள்ளத்தை அழுத்தும் வேட்கையின் வேகத்தையும், செயலற்ற சோகத்தின் ஆழத்தையும் வெளிப்படுத்துகின்றன. இதன் மூலம் உளவியலார் குறிப்பிடும் உள்ள இறுக்கம் எட்டுத்தொகை ஆடவரிடம் இருந்ததை அறியமுடிகிறது. எனவே தலைவியைக் கண்டு அவளை அடையவழி வகுப்பாய் என்று தோழனிடம் கேட்பதோடு, தான் உற்றதை மறைக்காமல் தன் தோழனிடம் உணர்வுகளைப் பகிர்ந்து கொள்ளும் தன்மை கொண்டவனாகத் திகழ்வதைக் காணமுடிகிறது.

**“கொடிச்சி கையகத் ததுவே பிறர்**
**விடுத்தற்கு ஆனாது பிணித்தஎன் நெஞ்சே’’** (நற்.95:9-10, ப.124)

தலைவி தன் நெஞ்சைவிட்டு நீங்க மாட்டாள் என்பதை,

**“கால்பொருதுஇடிப்பினுங் கதழுறை கடுகினும்**
**உருமுடன்று எறியினும் ஊறுபல தோன்றினும்**
**பெருநிலங் கிளரினுந் திருநல உருவின்**
**மாயா வியற்கைப் பாவையிற்**
**போதல் ஒல்லாளென் நெஞ்சத் தானே’’**(நற்.201:8-12, ப.272)

என்று பாங்கனிடம் உரைக்கின்றான். இவ்வாறு தலைவி மீதான பற்றுதலைப் பாங்கனுக்கு விளக்கி தலைவியை அடையும் எண்ணம் கொண்டவனாகத் திகழ்வதை அறியமுடிகிறது. இதனை உளவியலார் உள்ளத்துணிவு என்ற குறிப்பிடுகின்றனர்.

இத்தகைய சூழல்களில் பாங்கன், தலைவனின் உணர்வைப் புரிந்து கொண்டவனாகக் காணப்படுகின்றான். அதே வேளையில் தலைவனை இடித்துரைக்குமாறு காமம் நிலையில்லாதது என்று கூறும் பாங்கனிடம்,

**“நயனும் நண்பும் நாணும்நன்கு உடைமையும்**
**பயனும் பண்பும் பாடறிந்து ஒழுகலும்**
**நும்மினும் உடையேன்’’** (நற்.160:1-3,ப.214)

என்று தலைவன் தன் இயல்பைத் தானே குறிப்பிடுகின்றான். இதில் தலைவியைக் காண்பதற்கு முன் தனக்கு நயமாக எல்லோரிடமும் பேசும் இயல்பும் பகைவரே அஞ்சுமாறு செய்து சுற்றத்தைக் காப்பாற்றும் தன்மையும், தனக்கு ஈடுஇணையற்றவரிடம் கெஞ்சி நில்லாமையும், தன்நிலையில் தாழாது பிறர்க்கு உதவி செய்தலும், தீயவை கண்ட இடத்துக் கொதித்து எழுகின்ற உள்ளமும், பிறர் துன்பத்தைக் கண்டு அதனை நீக்குவதற்கு உரிய வழியைத் தேடலும், போன்ற பண்புகளும் இருந்ததாகக் குறிப்பிட்டு, உரைப்பதிலிருந்து தலைவனின் நல்லுணர்வுகளை அறியமுடிகிறது. இத்தகைய நல்லுணர்வுகளைத் தான் இழந்து நிற்கும் நிலையைக் குறிப்பிடுவதன் மூலம், ‘இழவு’ என்ற உணர்வினைக் கொண்டவனாகத் தலைவன் இருப்பதை அறிய முடிகிறது.

பாங்கனின் உதவியோடு நடைபெறும் பாங்கன் கூட்டத்திற்குப் பிறகு பாங்கிமதியுடம்பாடு நடைபெறும் இம்மதியுடம்படுத்தலை,

**"குறையுற உணர்தல், முன்னுற உணர்தல்**
**இருவரும் உள்வழி அவன் வரவுணர்தல் என**
**மதியுடம்படுத்தல் ஒரு மூவகைத்தே''** (தொல். களவு. நூ.36, ப.66)

என்பர் தொல்காப்பியர். இம்மூவகையால் தலைவன், தலைவியை உணர்ந்த பின்புதான், பின்னிலை முயற்சிகளைச் செய்வான். தோழியிடம் தலைவியின் ஊர், உறவினர்களைப் பற்றி வினவி தோழியின் உடன்பாடு பெறுதலை,

**"பெருங்கல் வேலிச் சிறுகுடி யாது? எனச்**
**சொல்லவும் சொல்லீர்''** (நற்.213:6-7, ப.288)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. தோழியிடம், தலைவன், தன் உள்ளத்தைத் தலைவிக்கு எடுத்துரைத்து அவளைக் காண்பதற்கு உதவுமாறு கேட்கும் நிலையில், தோழி இவன் குறையை ஆராயும் நிலையும், குறி மறுத்தலின்போதும் குறியிடத்துத் தலைவியைக் காணாத போதும் தலைவன் தவிப்புணர்வு கொண்டவனாகவும் உள்ள இறுக்கம் கொண்டவனாகவும் குறிஞ்சித் திணைப்பாடல்களில் காணப்படுகிறான்.[18]

இரவுக்குறி வேண்டிச் சென்ற தலைவன், தோழி கேட்ப தன்னெஞ்சிடம், தலைவியைக் காண தான் வந்துள்ள செய்தியை யாரேனும் ஒருவர் சென்று அவளிடம் கூறினால் அவள் பெரிதும் மகிழ்வாள். அவ்வாறு கூறுவதற்கு எனக்கு ஒருவர் கிடைக்கப் பெறவில்லையே என தலைவன் ஏக்கத்துடன் தன்நெஞ்சிற் குரைத்தான். இதனை,

**". . .   . . .   . . . பெருந்தோள் குறுமகட்கு**
**எய்தச் சென்று செப்புநர்ப் பெறினே''** (நற்.6:4-5, ப.8)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் தலைவியை மகிழ்விக்கும் உள்ளம் கொண்டவனாகவும், நம்பகமான ஒரு தோழியின் நட்புக்காக ஏங்குபவனாகவும் இருப்பதை உணர முடிகிறது. இங்கு தலைவியிடம் தலைவன் கொண்ட அன்பு, அவனைப் பிறரிடம் உதவிகேட்கும் அளவிற்கு எளியனாக்குகின்றது. இங்கே 'இளிவு' என்ற உணர்வுடையவனாகத் தலைவன் காணப்படுகிறான். இற்செறிப்புக்கு உட்படுத்தப்பட்ட தலைவியை எண்ணி, தன் நெஞ்சிடம்,

**"......   ......   ......   முறுவல் நல்கி**
**மனைவயின் பெயர்ந்த காலை நினைஇய**
**நினக்கோ அறியுநள் நெஞ்சே''** (நற். 44:3-5, ப.57)

என்று கூறி, குறவர் மின்மினியை விளக்காகக் கொண்டு மழை இயக்கத்தை நோக்குதல் போல, நீயும் தலைவியின் இயக்கத்தைத் தோழியின் மூலம் அறிகிறாய் என்று நெஞ்சிடம் உரைக்கின்றான். இதனை,

**“பல்மர உயர்சினை மின்மினி விளக்கத்துச்**
**செல்மழை இயக்கம் காணும்**
**நன்மலை நாடன் காதல் மகளே’’** (நற்.44:10-13, ப.57)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றது தலைவியைக் காண தோழியை நாடி நிற்கும் நிலையில் தன் நெஞ்சிடம், மலை போன்ற யானை மீது ஏறிப் புலையனால் முழக்கப்படும் பெரிய துடியின் ஒலி கேட்டுப் பகை நாட்டில் புகுந்து கடத்தற்கு அரிய கோட்டையை அழித்துப் பெருமூச்செறியும், வீரனைப்போன்று தலைவியின் உள்ளத்தை அடைந்து விட்டோம் ஆதலால் அவள் உடன்பட்டுக் கூறும் வரையில் பொறுமையுடன் காத்திருப்போம் என்று உரைத்தான்.[19] இப்பாடலடிகள் தலைவியைக் காண பொறுமையுடன் காத்திருக்கும் தலைவனின் “அடக்கம்” எனும் மெய்ப்பாட்டுணர்வைப் புலப்படுத்துகின்றது.

தோழியருடன் இருந்த தலைவியைக் காணவந்த தலைவன், தோழியை நோக்கித் தனக்குத் தலைவிபால் ஏற்பட்ட காதலையும், அவள் மறுத்த காரணத்தால் உண்டான குறையையும் கூற எண்ணினான், இத்தகையச் சூழலில் தன்னெஞ்சிடம்,

**“அருந்துயர் அவலந் தீர்க்கும்**
**மருந்துபிறிது இல்லையான் உற்ற நோய்க்கே’’** (நற்.140:8-11, ப.184)

என்றும்,

**“தவிரும் காலை ஆயின், என்**
**உயிரொடு எல்லாம் உடன் வாங்கும்மே’’**(நற்.209:8-9, ப.283)

என்று தோழிக்கு உரைக்குமிடத்தில் இளிவரல் என்ற மெய்ப்பாட்டில் ‘வருத்தம்’ என்ற உணர்வு, கொண்டவனாகத் தலைவன் திகழ்கிறான்.

தலைவன் தோழியின் உதவியோடு தலைவியை அடைய எண்ணுகிறான். ஆனால் தோழிஅவனுக்கு உதவ மறுக்கின்றாள். இச்சூழலில் தலைவன் தன்நெஞ்சிடம்,

**“மடல்மா ஊர்ந்து மாலை சூடிக்**
**கண்அகன் வைப்பின்’’** (நற். 377:1-2, ப.505)

என்றும்,

**“..... ...... ..... அரவுக் குறை படுத்த**
**பசுங்கதிர் மதியத்து அகல்நிலாப் போல**
**அளகம் சேர்ந்த திருநுதல்**
**கழறுப மெலிக்கும் நோய் ஆகின்றே’’**(நற். 377:6-9, ப.506)

என்று குறிப்பிடுகின்றான். இதில் தலைவியை எண்ணி அவளை அடைய பனைமடலால் செய்த குதிரையில் ஏறி வந்து தலைவியைச் சிறப்பித்துக் கூறுகிறான். இங்ஙனம் அவளையே எண்ணி அதுவே நோயாகி தான் இறந்து போவேனோ என்று தன்னெஞ்சிற்கு உரைப்பதில்

தலைவியை எண்ணி வருந்தும் உள்ளம் கொண்டவனாகவும், தலைவிக்காக மடலேறத் துணியும் உள்ளத்துணிவு கொண்டவனாகவும் தலைவன் விளங்குவதை அறிய முடிகிறது. இதே கருத்தினை மேலும் ஒரு பாடல் [20] விளக்குகின்றது.

தலைவன் தான் விரும்பிய தலைவியை மணம்பேசி வரச் சான்றோரை அனுப்புகிறான். ஆனால் தலைவியின் பெற்றோர் பெண் தர இசையவில்லை. இதனை அறிந்த தலைவன் ஆற்றானாகித் தன்நெஞ்சிடம்,

**"அசைவுஇல் நோன்பறை போலச் செலவா**
**வருந்தினை வாழிஎன் உள்ளம்! ஒருநாள்**
**காதலி உழைய ளாகவும்**
**குணக்குத் தோன்று வெள்ளியின் எமக்குமார் வருமே''**(356:6-9,ப.476)

என்று உரைக்கின்றான். தலைவியைத் தர மறுத்தபோதும் தலைவன் அசையாத நம்பிக்கை கொண்டவனாக, எண்ணியதை எண்ணியவாறு பெறும் திடமான மனஉணர்வு கொண்டு தலைவியை எவ்வாறேனும் அடைய முடியும் என்று ஆணித்தரமாக நம்பும் உணர்வினனாகக் காணப்படுகிறான். இதில் தலைவன், விரும்பிய இலக்கினை அடைவதில் தடை ஏற்படுமாயின் உள்ளம் முறிவு கொள்ளும் என்னும் உளவியல் உண்மையை எதிர்கொண்டு உள்ளமுறிவு கொள்ளாமல் மனம் தளராமல் தொடர்ந்து செயல்பட்டுத் தன் இலக்கினை அடையும் ஆளுமைத்திறன் கொண்டு விளங்கியதை அறியமுடிகிறது.

**குறுந்தொகை**

குறுந்தொகையில் இடம்பெற்றுள்ள குறிஞ்சித்திணையில் தலைவன் கூற்றுப் பாடல்களாக 35 பாடல்கள் உள்ளன. இவற்றில் குறிஞ்சித் திணை களவொழுக்கமாகிய இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியிற் புணர்வு, கழற்றெதிர்மறை போன்ற நிலைகளில் அமைந்துள்ளன.

இயற்கைப் புணர்ச்சிக்கண் இடையீடு பட்டு நின்ற தலைவன் தலைவியின் நாணினை நீக்கும் பொருட்டு மெய் தொட்டுப்பயிறல் நிகழ்த்திக் கூடித் தனது அன்பு வெளிப்படுமாறு, ஒரு வண்டை நோக்கி,

**"பயிலியது கெழிஇய நட்பின் மயில்இயல்**
**செறிஎயிற்று அரிவை கூந்தலின்**
**நறியவும் உளவோநீ அறியும் பூவே''**(குறுந். 2, ப.25)

என்று பாடுவதன் மூலம் தலைவியின் கூந்தல், மலரைக் காட்டிலும் மணம் மிக்கது என்று தலைவியின் நலனைப் புனைந்துரைக்கின்றான். இங்கு தலைவனின் உள்ளத்தில் தொல்காப்பியர் குறிப்பிடும் 'உவகை' எனும் மெய்ப்பாடு வெளிப்படுகிறது. தலைவியைப்

பலபடப் புனைந்து பாராட்டுவது அவனது உளவியல் உத்தியை வெளிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளது.

**"செம்புலப் பெயல்நீர் போல**
**அன்புடை நெஞ்சம் தாம்கலந் தனவே''(குறுந். 40, ப.70)**

என்ற குறுந்தொகைப்பாடலில் தலைவனின் நெஞ்சம் தலைவியின் நெஞ்சோடு இரண்டறக் கலந்த தன்மையை விளக்குகின்றது. இத்தகுத் தலைவியை நாடியே தன் உள்ளம் அவள் பின் செல்வதை 'என் உள்ளம் பின்னும் தன் உழையதுவே'[21] என்று தலைவன் கூறி மகிழ்கிறான். இத்தகு நிலையில் அவனது மனம் 'நகை' எனும் மெய்ப்பாடு கொள்வதை அறியமுடிகிறது.

இயற்கைப் புணர்ச்சிக்குப்பின் தலைவியிடம் 'நீயே அஞ்சல்' என்று தலைவியை விட்டுப் பிரியமாட்டேன் என்று நம்பிக்கை கூறுகின்றான். இதனை,

**"கடல்சூழ் மண்டிலம் பெறினும்**
**விடல் சூழ லனால் நின்னுடை நட்பே''(குறு. 300, ப.356)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. தலைவிக்குத் தன் மீது அசைக்க முடியாத நம்பிக்கை ஏற்படுமாறு தலைவனின் செயல்பாடுகள் இருக்கும் என்று கூறியதில் தலைவனின் திடமான 'அன்பு' மெய்ப்பாட்டுணர்வு வெளிப்படுவதை உணரமுடிகிறது. இங்கு தலைவனின் நடத்தை குறிப்பிட்டதேவையைச் சந்திப்பதற்காகச் செயல்படுவதை அறியமுடிகிறது.

இயற்கைப் புணர்ச்சிக்குப் பின்னர் நிகழும்இடந்தலைப்பாடு எனும் நிகழ்வை எதிர்பார்த்து, முன்பு கூடி மகிழ்ந்தபின் அந்த அனுபவத்தை நலம் பாராட்டிப் பின்னும் கூட விரும்பும் உணர்வு கொண்டவனாக விளங்குவதை,

**''நறிய நல்லோள் மேனி**
**முறியினும் வாய்வது முயங்கற்கும் இனிதே''(குறுந். 62, ப.96)**

என்று தன்விருப்பினை, வெளிப்படுத்துகின்றான். இங்கு தலைவனிடம் புணர்வு காரணமாக வந்த மெய்ப்பாடு வெளிப்படுகிறது. தலைவனின் இயல்பான செயல்பாடுகளில் வேறுபாட்டினை உணர்ந்த பாங்கன், யாது காரணம் என வினவிய பொழுது,

**"பூஒத்து அலமரும் தகைய; ஏஒத்து**
**எல்லாரும் அறிய நோய்செய் தனவே''(குறுந். 72, ப.107)**

என்று தலைவி மீதான காமநோயைத் தன் தோழனிடம் வெளிப்படுத்துகின்றான். காதலுக்கு உகந்தவள் தன் வாழ்விலும் சிறந்தவளாகக் கருதிப் பற்றுவயப்படுகின்றான். அவனது பிற வலிமை எல்லாம் குன்ற அவளது அன்பு வேண்டி கெஞ்சிப் பின் நிற்கின்ற தலைவன், "நீரோர் அன்ன சாயல் தீயோர் அன்னவென் உரனவித்தன்றே''[22] என புலம்புகின்றான். உடனடியாகத் தலைவியின் ஏற்புடைமை இல்லாத போது தலைவனின்

வேட்கை உணர்வு நோயாகிப் புலம்புகின்றான். இந்நிலையில் தலைவனின் உள்ளம், உளவியலார் குறிப்பிடும் உள்ள இறுக்க நிலைக்குத் தள்ளப்படுவதை உணரமுடிகின்றது. மன வலிமையுடைய தலைவனை அவளது நீர் போன்ற இனிய சாயல் வலிமை இழக்கச் செய்கிறது. இங்கு 'அசைவு' என்னும் மெய்ப்பாட்டினைக் கொண்டவனாகக் காணப்படுகிறான்.

இதுபோன்று தலைவியின் அழகு தலைவனைக் கட்டிப் போட்ட நிலையில், தலைவி வயப்பட்ட காம உணர்வு கொண்டவனாகத் தலைவன் திகழ்வதைக் குறிஞ்சித் திணைப் பாடல்களில் எட்டு பாடல்கள் வலியுறுத்துகின்றன.[23]

தலைவனின் உணர்வுகள் தலைவியின் வசமாகிவிட்டதை உணர்ந்த பாங்கன், தலைவனைக் கேலி செய்து இடித்துரைக்கும் போது அதனை மறுத்துத் தன் காதலை நிலைநிறுத்தும் கழற்றெதிர் மறை' எனும் நிலையில் பாங்கனிடம்,

> **"கைஇல் ஊமன் கண்ணின் காக்கும்**
> **வெண்ணெய் உணங்கல் போலப்**
> **பரந்தன் இந்நோய்''** (குறுந்.58, ப.91)

என்று காதலுணர்வால் தான் படும் துன்பமாகிய இடுக்கண் என்னும் மெய்ப்பாட்டை எடுத்துரைக்கின்றான். இங்கு தலைவன், இளிவரல் என்னும் மெய்ப்பாட்டின் உட்பிரிவான 'வருத்தம்' எனும் உணர்வை வெளிப்படுத்துகிறான். மேலும் பாங்கன் ஒரு பெண்ணுக்காக இவ்வாறு வருந்தலாமா என்று கேட்டதற்கு,

> **"தாய்காண் விருப்பின் அன்ன**
> **சாஅய் நோக் கினளே மாஅ யோளே''** (குறுந். 132, ப.173)

என்று, பாசமிக்க அவளை யான் மறக்க முடியாத நிலையில் உள்ளேன் என்றான். இதில் தலைவியை மறக்காத அன்புணர்வு கொண்டவனாகத் திகழ்ந்தான் என்பதை அறியமுடிகிறது. தலைவனை இடித்துரைத்த பாங்கனிடம்,

> **"பிரிந்தோர்ப் புணர்க்கும் பண்பின்**
> **மருந்தும் உண்டோ மயலோ இதுவே''** (குறுந். 156, ப.197)

என்று கூறுமிடத்தில் தவிப்புணர்வு புலப்படுகின்றது. பிரிந்திருக்கும் காதலரைச் சேர்த்து வைக்கும் தன்மை உன்னிடம் இல்லாமல் இருக்க, உனது அறிவு மயக்கம், எங்களைச் சேர்த்து வைக்க முயலாமல் இடித்துரைக்கச் செய்கிறதா என்று பாங்கனிடம் வினவுகின்றான். தலைவியுடன் சேர்ந்து வாழத் துடிக்கும் தலைவனின் மன உணர்வை.

> **"ஒருநாள் புணரப் புணரின்**
> **அரை நாள் வாழ்க்கையும் வேண்டலென் யானே''**(குறுந்.280, ப.332)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. தலைவி தன் வாழ்விற்கு இன்றியமையாதவள் என்பதை உணர்ந்தவனாகக் காணப்படுகின்ற தலைவனிடம் 'புணர்வு' 'வேட்கை' 'உவகை' என்ற மெய்ப்பாடுகள் வெளிப்படுகின்றன.

தலைவி மீதான அன்பு, காதல், இரக்க உணர்வைப் பாங்கனிடம் வெளிப்படுத்தி உணர்வுகளைப் பகிர்ந்து கொண்ட பின்னர், தலைவியை அடைய தலைவியின் தோழியை அணுக வேண்டிய சூழல் ஏற்படுகிறது. அத்தகையச் சூழலில், தலைவியைப் புணர்ந்து நீங்கிய தலைவன், தலைவியை நினைத்து,

**''சிலமெல்லியவே கிளவி**
**அணைமெல் லியள்யான் முயங்குங் காலே''** (குறுந். 70, ப. 105)

என்று நெஞ்சிற்குள் எண்ணி மகிழ்வடைகிறான். இங்கும் தலைவனிடம் புணர்வு பற்றி வந்த 'உவகை' மெய்ப்பாடு வெளிப்படுகின்றது. இதுபோன்ற புணர்ச்சி இன்பத்தை மட்டுமே மனதில் கொண்டு தலைவியை மணந்து கொள்ளும் நினைவன்றி இருக்கையில் தோழி, தலைவனும் தலைவியும் கூடி இன்பந் துய்க்கும் குறியினை மறுத்துரைத்த போது,

**"நல்லுரை இகந்து புல்லுரை தாஅய்ப்**
**பெயல்நீர்க்கு ஏற்ற பசுங்கலம் போல**
**உள்ளம் தாங்கா வெள்ளம் நீந்தி**
**அரிதுஅவா வுற்றனை நெஞ்சே''**(குறுந். 29, ப. 57)

என்று நெஞ்சிடம் உரைப்பதில் தலைவியைக் கூடும் இன்ப உணர்வைப் பெரிதாக எண்ணாமல் மணம் முடித்துக் கொள்ள வேண்டும் என்று நெஞ்சிற்கு வலியுறுத்துபவனாக விளங்குவதை அறிய முடிகிறது. இதில் தலைவன் உள்ளக்கிளர்ச்சியை அடக்கியாளும் நல்லொழுக்கம் கொண்டவனாகக் காணப்படுகின்றான்.

தலைவியைக் காண குறியிடம் சென்று தலைவி வராததால் மனமுடைந்து தலைவன் தன் நெஞ்சிற்கு அவளைப் பார்ப்பது அரிதான செயல்என்றும் கைப்பொருள் இல்லாதவன் இன்பம் அடைய ஆசைப்பட்டது போல உள்ளது[24] என்றும் சமாதானமடையும் உயர்ந்த உள்ளம் கொண்டவனாக விளங்குகிறான். தலைவியைக் காண தோழியை வேண்டி பின்னின்ற தலைவன், தலைவியைக் காண அனுமதி மறுக்கப்பட்டால் பனங்கருக்கால் செய்யப்பட்ட குதிரையில் ஏறி, வெட்கத்தைத் தொலைத்து, வீதியில் வருதல் தலைவனின் உள்ளத்தை இறுக்கமடையச் செய்கிறது. வாய்ப்பு மறுக்கப்பட்ட நேரத்தில் உள்ளத்தில் விளையும் சின உணர்ச்சியும் தாக்குதல் வேகமும் ஏற்றுக்கொள்ளத்தக்க மென்மையான வடிவத்திற்கு மாறுகிறது. அடக்கப்பட்ட சின உணர்ச்சியும், கவலையும் இணைந்து மடல் ஏறலுக்குத் தலைவனைத் தூண்டுகிறது. பழியொடு பரவி உள்ளத்துள் வாட்டும் காமநோய் நாளுக்கு நாள் மிகுதிப்பட,

**"இன்னள் செய்தது இதுவென முன்நின்று**
**அவள் பழிநுவலும் இவ்வூர்**
**ஆங்கு உணர்ந் தமையன் ஈங்கு ஏகுமார் உளெனே''(குறுந்.173, ப.216)**

என்று கூறி, தலைவியைப் பெறவேண்டி ஊரார் தூற்றச் செய்யும் நிலைக்கும் துணிகிறான். இதே சூழலை மேலும் ஒரு பாடல் உணர்த்துகின்றது.[25]

தலைவியை அடைய உதவுமாறு தோழியிடம் கெஞ்சுதல் நிலைக்குச் செல்லவும் தயங்காதவனாகக் காணப்படுகின்றான்.[26] மேலும்,

**''யாங்குஆ குவள்கொல் தானே**
**பெருமுது செல்வர் ஒருமட மகளே''(குறுந்.337, ப.397)**

என்று புலம்புகிறான். தலைவியைக் காணாமல் தான் வருந்துவதுபோல் தன்னைக் காணாமல் தலைவியும் வருந்துவாளே என்று தலைவிக்காக வருந்தும் உணர்வு கொண்டவனாகக் காணப்படுகிறான். இங்கு தலைவன் அழுகை எனும் மெய்ப்பாட்டின் உட்பிரிவான 'அசை' என்னும் மெய்ப்பாடு அடைகிறான். தலைவியை அடைய எந்த நிலைக்கும் தாழ்ந்து செல்லத் துணிகின்ற தலைவனைக் குறுந்தொகைப் பாடல் காட்டுகிறது. நேர்மை தவறாது அறங்கூறும் அவையத்தில்,

**"முறையுடை அரசன் செங்கோல் அவையத்து**
**யான்தற் கடவின் யாங்கா வதுகொல்?''(குறுந். ப.276)**

என்று வினவினால் தலைவியை ஊரார் பழிதூற்றும் நிலை ஏற்படும் என்று தோழியை அச்சுறுத்தும் வகையில் செயல்பட்டுத் தலைவியை அடைய எண்ணுகின்றான். இங்கு இத்தலைவனின் மாறுபட்ட உணர்வு வெளிப்பாட்டினை அறிய முடிகிறது. இதில் தலைவனின் நடத்தை தலைவியை அடையும் செயலை எதிர்நோக்கி அமைவதைக் காணமுடிகிறது.

இரவுக் குறி வந்து தலைவன் நீங்கியபோது தன் நெஞ்சில் நினைக்கின்ற நிகழ்வு, நடுஇரவில் என்னுடன் நறுமணம் கமழும் மலர்சூடி வந்து நம்முடன் ஒன்றியிருந்தவள், விடியும் புலர்காலையில்,

**"அமரா முகத்த ளாகித்**
**தமர் ஓரன்னள்'' (குறுந். 312, ப. 370)**

என்று தன் நெஞ்சிற்குக்கூறுமிடத்தில் தலைவனிடம் புணர்வு எனும் மெய்ப்பாட்டுணர்வு வெளிப்படுகிறது. உள்ளத்தைக் கவர்ந்த தலைவியைக் காண இயலாத போது

**"பேர் அமர் மழைக்கண் கொடிச்சி**
**மூரல் முறுவலொடு மதைஇய நோக்கே'' (குறுந். 286, ப. 339)**

என்ற அவளின் செருக்கினையுடைய பார்வையினை இனி நான், "உள்ளிக் காண்பேன் போல்வல்" என்று கூறுவதில் அவன் உள்ளம் சோர்ந்த நிலையிலும் தலைவியின் நினைவு அவனுக்கு மகிழ்ச்சியைத் தருவதாகக் கருதுகிறான். இதில் தலைவனின் உள்ளம் மகிழும் நகை உணர்வு வெளிப்படுகின்றது. மேலும் குறுந்தொகைத் தலைவன், தலைவியின் இற்செறிப்பினால் மனமுடைந்த நிலையில்,

**"பெறுவது இயையா தாயினும் உறுவதுஒன்று**
**உண்டுமன் வாழிய நெஞ்சே''** (குறுந். 199, ப. 243)

என்றும்,

**"இறுமுறை எனஒன்று இன்றி**
**மறுமை உலகத்தும் மன்னுதல் பெறுமே''** (குறுந். 199, ப. 243)

என்று தலைவியின் இற்செறிப்பினால் அவளைக் காணமுடியாத போது மறுபிறவியிலாது தான் அவளை அடையும் பயன் நிச்சயம் உண்டு என உறுதியாக நம்புகிறான்.

தலைவன், தலைவியுடன் உள்ளம் புணர்ந்து கூடிப்பிரிந்து வந்தபின்பும் நள்ளிருள் யாமத்தில் யானையைப் போல் பெருமூச்சு விட்டு என் உள்ளம் அவளிடமே தங்கியுள்ளது என்பதில் பெருமூச்செறியும் நிலை தொல்காப்பியர் குறிப்பிடும் 'உயிர்ப்பு' [27] எனும் மெய்ப்பாடாக வெளிப்படுவதை உணரலாம். இதனை,

**''... .... .... .... பானாள்**
**பள்ளி யானையின் உயிர்த்து, என்**
**உள்ளம் பின்னும் தன்உழை யதுவே''** (குறுந். 142, ப. 183)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. தலைவி, தன்னைப் புதுக்கோள் யானையைப்போல் பிணித்தாள் என தலைவன், தலைவியின் அணைப்பில் ஏற்பட்ட மெய்யுணர்வை உணர்ந்து வியக்கும் நிலையை, 'புதுக்கோள் யானையின் பிணித்தற்றாள் எம்மே" [28] என்ற பாடலடி உணர்த்துகின்றது. இதில் தலைவன் இன்பத்தை நுகரும் உணர்வினனாகவும், 'மருட்கை' எனும் மெய்ப்பாட்டை வெளிப்படுத்துபவனாகவும் காணப்படுகிறான்.

தலைவன், தலைவி மீது கொண்டுள்ள உண்மையான காதலில் பிரிவு ஏற்படுமாயின் மடலேறித் தலைவியைப் பழிச்சொல்லுக்கு ஆளாக்க மாட்டேன், ஆயினும் அவ்வாறு மடலேறித்தலைவி மீதான காதலை வெளிப்படுத்தாவிடில் உயிரோடு வாழ்வது எனக்கு பழியாகும் என்பதால் உயிர் தரியேன் என்று குறிப்பிடுவதால், தலைவன், தலைவிக்கும் தனக்கும் பழிச்சொல் வராதவாறு நடக்கும் நன்னடத்தை மூலம் பெருமித மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துவதை அறியமுடிகிறது.

**ஐங்குறுநூறு**

ஐங்குறுநூற்றில் குறிஞ்சித் திணைப் பாடல்களில் தலைவன் கூற்றாக இடம்பெற்றுள்ள ஒன்பது பாடல்கள் இயற்கைப் புணர்ச்சி, பாங்கற் கூட்டம், தோழியிற் புணர்வு என்ற நிலையில் அமைந்துள்ளன. தலைவனுடன் இயற்கைப் புணர்ச்சி எய்தித் தலைவி பிரிந்து தோழியர் கூட்டத்தோடு சேர்ந்து நின்றதைக் கண்டு வியப்படைந்து தலைவன்,

**"கண்போல் மலர்தலும் அரிதுஇவள்**
**தன்போல் சாயல் மஞ்ஞைக்கும் அரிதே''** (ஐங். 299, ப. 349)

என்று தலைவன் மகிழ்ந்த உள்ளத்தினனாய் மருட்கை மெய்ப்பாடு வெளிப்படுமாறு தனக்குள்ளே கூறிக் கொண்டான். தலைவியைக் கண்ட தலைவனுடைய செயல்பாடுகளில் வேறுபாட்டினை உணர்ந்த பாங்கன் நின்னாற் காணப்பட்டவள் எத்தன்மையள் என்றதற்குத் தலைவன்,

**"வரையர மகளிர்ப் புரையுஞ் சாயலள்**
**ஐயள் அரும்பிய முலையள்**
**செய்ய வாயினள் மார்பினள் சுணங்கே''** (ஐங். 255, ப. 301)

என்று தலைவியின் அழகைப் புனைந்து கூறினான். இதில் தலைவன், தலைவி மீது அன்புணர்வு கொண்டு காதல் வயப்பட்ட காம உணர்வு கொண்டவனாக இருப்பதைக் காணமுடிகிறது.

தோழியிடம் தலைவியை அடைய உதவி செய்யுமாறு கேட்ட தலைவனுக்குத் தோழி, நீ கூறுகின்றவள் உன்னை வருத்தும் பருவத்தினள் இல்லை என்று கூறியதற்குத் தலைவன்,

**"வண்டுபடு கூந்தல் தண்தழைக் கொடிச்சி**
**வளையள் முளைவாள் எயிற்றள்**
**இளையள் ஆயினும் ஆரணங் கினளே''** (ஐங். 256, ப. 302)

என்று உரைத்தான். இதில் தலைவி கண்டவரை வருத்தும் அழகினை உடையவள் ஆதலால் என்னையும் வருத்துகின்றாள். எனவே எனக்கு உதவ வேண்டும் என தோழியிடம் நட்புணர்வு கொண்டு வேண்டிக்கேட்டு கொள்ளும் பண்பினன் என்பதை உணர முடிகிறது. ஆரணங்கினள் என்று கூறுவதன் மூலம் அச்சங்கலந்த வியப்புணர்வு வெளிப்படுகிறது.

தலைவனின் உள்ள உணர்வை உணர்ந்த தோழி, தலைவனுக்காகப் பரிந்து பேசியதும் தலைவி நாணத்தினால் மறைத்தொழுகியதனைக் கூறக் கேட்ட தலைமகன்,

**"தான்எம் அருளாள் ஆயினும்**
**யாம்தன் உள்ளுபு மறந்தறியேமே''** (ஐங். 295, ப. 348)

என்று அவள் எனக்கு அருள் காட்டாவிட்டாலும் யாம் அவளை மறக்காத உணர்வு பெற்றவனாக இருப்பதை எடுத்துரைக்கிறான். தலைவியை மணந்து கொள்ளத் தீர்மானித்து மகிழ்ந்த உள்ளத்தோடு தனக்குள்ளே சொல்லி மகிழ்வதில் 'நகை' மெய்ப்பாடு வெளிப்படுகிறது.

ஆயத்தோடு விளையாட்டு விருப்பினால் பொழிலகம் புகுந்த தலைவியை, எதிர்ப்பட்டு ஒழுகுகின்ற தலைமகன் அவள் தினைப்புனம் காவற்கு உரியளாய் நின்றதைக் கண்டு மகிழ்ந்து, ''இரும்பல் கூந்தல் கொடிச்சி பெருந்தோள் காவல் காட்டி''[29]

என்றும்,

**'நன்றே செய்த உதவி நன்றுதெரிந்து**
**யாம்எவன் செய்குவம் நெஞ்சே காமர்**
**மெல்லியள் கொடிச்சி காப்பப்**
**பல்குரல் ஏனல் பாத்தருங் கிளியே''** (ஐங். 288, ப. 338)

என்றும் தன் உள்ளத்து உணர்வை வெளிப்படுத்துகிறான். தலைவியை மீண்டும் கூடும் உணர்வுடன் வந்த தலைவனுக்கு, தினைப்புனக் காவலுக்கு வந்த தலைவியைக் கண்டதும் மனம் மகிழ்ந்து காம உணர்வு வெளிப்பட்டது. அவனது இச்சை ஈடேறும் மகிழ்ச்சியில் தலைவிக்கும், கிளிக்கும் நன்றி கூறும் நன்றியுணர்வும் 'உவகை' மெய்ப்பாடும் கொண்டவனாக இருந்ததைக் காண முடிகிறது.

தலைவியைத் திருமணம் முடிக்கும் பொருட்டு பொருள் தேவைக்காகப் பிரிந்த தலைவன் திரும்பி வந்து,

**''..... ..... .... பணைத்தோள்**
**ஆய்தழை நுடங்கும் அல்குல்**
**காதலி உறையும் நனிநல் ஊரே''** (ஐங். 291, ப. 341)

என்று மகிழ்ச்சியோடு கூறினான். பகலில் குறித்த இடத்தில் தலைவியைக் கூடத் தலைவன் வந்தான். தலைவி அவன் அறியாமல் பின்னால் வந்து கண்களைப் பொத்தியபோது,

**''சிலம்புகமழ் காந்தள் நறுங்குலை யன்ன**
**நலம்பெறு கையின்என் கண்புதைத் தோயே**
**. . . . . .   . . . . .   . . . . .   . . . . .**
**நீ யலது உளரோ என்நெஞ்சு அமர்ந்தோரே''** (ஐங். 293, ப. 343)

என்று தலைவன், உறக்கத்திற்கு இனிய துணையாகவும், பெரிய தோளும், மயில் போன்ற சாயலும் பெற்று என் நெஞ்சில் அமரும் தகுதியை உடையவள் உன்னைத் தவிர வேறு எவரும் இலர் என்று குறிப்பிடுகின்றான், இதில் தலைவனுக்குத், தலைவியின் மீதுள்ள காதல் உணர்வு வெளிப்படுகிறது. இங்கு தலைவனின் மனம் உணர்வு கடந்த நிலையில்

செயல்படுவதை அறியமுடிகிறது. இங்கு தலைவன், 'புணர்வு' எனும் உவகை மெய்ப்பாட்டுணர்வுடன் காணப்படுகின்றான்.

**கலித்தொகை**

கலித்தொகையில், குறிஞ்சிக்கலியில் தலைவன் கூற்றாக ஐந்து பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அவை இயற்கைப் புணர்ச்சி, குறையுற்றுப் பின்னிற்கும் தலைவனின் நிலை, தலைவியுடன் உறழ்தல் போன்றவை அமைந்துள்ளன. முழு நிலாப் போல் ஒளி வீசும்படியான முகம் மலரப் பெற்று வந்த தலைவியைக் கண்டு, மருட்கையுற்ற தலைவன்,

> **"மாதர்கொள் மான்நோக்கின் மடநல்லாய்! நிற்கண்டார்ப்**
> **பேதுறூஉம் என்பதை அறிதியோ? அறியாயோ?''**
>
> (கலி. 56:15-18, ப. 204)

என்று நான் கூறுவதைக் காதில் வாங்காமல் விடை ஒன்றும் சொல்லாமல், மற்றவர் படும் துன்பத்தை உணராமல், ஏதோ மயக்கம் கொண்டவளைப் போலச் செல்கின்றாய். சற்று நின்று யான் படும் துன்பத்திற்கு உன்மீதும், உன்னை வெளியில் விட்ட உன்வீட்டார் மீதும் குற்றமில்லை எனினும்,

> **"நிறைஅழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்**
> **பறையறைந் தல்லது செல்லற்க என்னா**
> **இறையே தவறுடையான்''** (கலி. 56:33-35, ப. 204)

என்று கூறினான். நீ வரும் செய்தியைப் பறையறைந்து தெரிவிக்க ஆணையிடாத அரசனே தவறுடையவன் என்றான். இதில் அவளைக் கண்டு மனம் பித்துறுதல், துன்புறுதல் என்பவை காதலால் ஏற்படும் படிப்படியான துன்பங்கள் எனலாம். இத்தகைய துன்பத்தைக் கலித்தொகை குறிஞ்சித் தலைவன், அடைந்த நிலையை இப்பாடலடிகள் உணர்த்துகின்றன. இங்கு தலைவன் 'கையாறு' என்னும் மெய்ப்பாடும் துன்பம் நீங்கிய 'உவகை' மெய்ப்பாடும் கொண்டு விளங்குகிறான்.

தலைவியின் அழகு, தலைவனின் உள்ளம் நிலைதடுமாறச் செய்வதை,

> **"வேய்எனத் திரண்டதோள் வெறிகமழ் வணர்ஐம்பால்**
> **மாவென்ற மடநோக்கின் மயில்இயல் தளர்பு ஒல்கி**
> **ஆய்சிலம்பு அரிஆர்ப்ப அவிர்ஒளி இழைஇமைப்பக்**
> **கொடிஎன மின்என அணங்குஎன யாதொன்றும்**
> **தெரிகல்லா இடையின் கண் கண்கவர்பு ஒருங்குஓட''**
>
> (கலி. 57:1-5,ப.209)

என்ற பாடலடிகள் தலைவனின் 'மருட்கை' மெய்ப்பாட்டைத் தெளிவு படுத்துகின்றன. மேலும்,

''ஊர்க்கால் நிவந்த பொதும்பருள், நீர்க்கால்
கொழுநிழல் ஞாழல் முதிர்இணர் கொண்டு
கழும முடித்துக் கண்கூடு கழை
.... ..... ..... .... ..... ..... .... ..... .....
நல்கூர்ந்தார் செல்வமகள்'' (கலி. 56:1-12, ப. 204)

என்று, இத்தகைய அழகுடையவளைக் கண்டு பலவாறு புகழும் ஆடவனின் மனம் எழுச்சி கொண்டதை, அகம் விழித்த நிலையில் இருக்கும் போதே மனம் பிறர் வயப்படும் நிலை, ஆழ்மனதில் படிந்த நினைவே காரணம் என்ற பிராய்டிய கருத்திற்கு அரண் சேர்க்கும் வகையில் அமைந்துள்ளது. சிறிதுகூடப் புலப்படாத தலைவியின் இடை அழகால் பார்ப்பவரின் கண்கள் ஈர்க்கப் பெற்று இடைவிடாது பார்க்கும்படிச் செய்கிறது, மேலும்,

''பூந்தண்தாரப் புலர்சாந்தின் தென்னவன் உயர்கூடல்
தேம்பாய அவிழ்நீலத்து அலர்வென்ற அமர் உண்கண்
ஏந்துகோட்டு எழில்யானை ஒன்னாதார்க்கு அவன்வேலின்
சேந்து நீ இனையையால் ஒத்ததோ?'' (கலி. 57:8-11, ப. 209)

என்றும்,

''கணையினும் நோய்செய்தல் கடப்பன்றோ?''
(கலி. 57:15, ப. 209)

''இனையன கூற, இறைஞ்சுபு நிலம்நோக்கி
நினையுபு நெடிதுஒன்று நினைப்பாள்போல் மற்றுஆங்கே
துணையமை தோழியர்க்கு அமர்த்த கண்ணள்
மனையாங்குப் பெயர்ந்தாள்என் அறிவு அகப்படுத்தே''
(கலி. 57:21-24 ப. 209)

என்றும் கூறி, தலைவியின் அழகு தன்னை வருத்தும் நிலையில், பகைவரின் மார்பில் பாயும் அவனுடைய அம்பைப் போல நோவினைத் தருகின்றன என்றும் தலைவன் கூறியதைக் கேளாமல், தலைகுனிந்து, தரையைப்பார்த்து ஏதோ சிந்திப்பவள் போல் தன் தோழியரைப் பார்த்தவாறு என் மனத்தைச் சிறை பிடித்துக் கொண்டு சென்றுவிட்டாள் என்றான். இதில் ஆடவர், பெண்டிரின் அழகால் கட்டுண்டு, அவர்களைப் பின்தொடர்ந்து அவர்களை அடையும் நோக்கோடு செயல்பட்டனர் என்பது தெளிவாகிறது. பெண்ணின் அழகால் கவரப்பெற்ற ஆடவனிடம் காதல் உணர்வு மிகுதியாக வெளிப்படுவதை இப்பாடலடிகள் மூலம் உணர முடிகிறது. தலைவிமீதுள்ள காதலுணர்வால் தலைவன், தன் உயிரின் வலிமை குறைந்ததை ''ஆருயிர் வௌவிக் கொண்டு அறிந்தீயாது இறப்பாய்''[30] என்று குறிப்பிடுகின்றான். மேலும், ''உளனா என் உயிரை உண்டு உயவுநோய் கைம்மிக''[31] என் உயிரின் பெரும்பகுதியைக் கொண்டு சென்றுவிட்டாய். ''அல்லல் கூர்ந்து அழிவுற அணங்காகி அடரும் நோய், சொல்லினும் அறியாதாய்''[32] என்டைய தனது உயர்ந்த

ஒழுக்கத்தைக் கடைபிடிக்க முடியாதபடி மறதி ஏற்படுத்தி, உடலையும் உயிரையும் துன்புறுத்துகிறாய் என்றான், இங்கு தன்னிலை தாழ்தல் என்ற 'அசைவு' உணர்வும் 'இழவு' என்ற அழுகையுணர்வும் புலப்படுகின்றன.

துன்புறுத்துகின்ற இந்நோய் யான் பொறுத்துக் கொள்ள முடியாதபடி பெருகுமாயின்,

**"..... ...... ..... பொலாங்குழாய்**
**மறுத்து இவ்வூர் மன்றத்து மடலேறி**
**நிறுக்குவென் போல்வல்யான் நீபடு பழியே''**
**(கலி. 58:21-23, ப. 212)**

என்று கூறி தலைவியின் மீதான அன்புணர்வு மிகுவதை வெளிப்படுத்துகின்றான். இப்பாடலடிகள் மூலம் தலைவனின் அன்புணர்வு, காதல் உணர்வு வெளிப்படுவதை உணரமுடிகிறது. உயிரையும், ஒழுக்கத்தையும் மறக்கும் நிலையில் காதல்உணர்வு மேலிட்டவனாகவும், பெண்ணின் அழகைக் கண்டு மனத்துன்பம் எய்துபவனாகவும் இருந்ததை அறிய முடிகிறது. தலைவன் தனது உள்ளக்கிளர்ச்சியை அடக்கியாளும் தன்மை கொண்டவனாக இருந்த போதும் அவனது உணர்வு கடந்த நிலையில் உயிரையும் ஒழுக்கத்தையும் மறக்கும் நிலைக்குத் தள்ளப்படுகிறான் என்பதை அறியமுடிகிறது.

தலைவியைக் கண்டு காதல் கொண்ட தலைவன் அவள் மனம் தன்னிடம் அன்பு கொள்ளுமாறு, அவள் இருக்கும் இடத்திற்கு அடிக்கடி வந்தான். தலைவி நாணத்தாலும், அச்சத்தாலும் பாராமுகமாய் இருந்ததைக் கண்டு, துன்பம் பொறாத தலைவன், அவளிடம் இரந்து குறையுற்றுப் பின்னின்று, இவ்வாறு என்னை வருத்தினால், நீ மேற் கொண்ட நோன்புகள் உனக்குப் பயன்தராது என்று கூறினான். இதனை,

**"மருளியான் மருளுற, "இவன் உற்றது எவன்'' - என்னும்**
**அருள் இலை இவட்கு'' (கலி. 59:10-11, ப. 216)**

**''... ... ... ஒளிவாட "இவன்உள்நோய் யாது'' என்னும்**
**அருள் இலை இவட்கு என அயலார்நின் பழிக்குங்கால்''**
**(கலி. 59:14-15, ப. 216)**

என்றும்,

**"அனையவை உளையவும் யான்நினக்கு உரைத்ததை**
**இனைய நீ செய்ததுஉத வாயாகில், சேயிழாய்!**
**செய்ததன் பயம்பற்று விடாது**
**நயம்பற்று விடின்இல்லை நசைஇயோர் திறத்தே''**
**(கலி. 59:22-26, ப. 216)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் தலைவன் தலைவியிடம் இரந்து குறையுற்றபோதும் அவளை அச்சுறுத்தும் வகையில் சொல்லி அவளை தன்இச்சைக்கு வசப்படுத்தும் உளவியல் உத்தி அறிந்தவனாக வெளிப்படுகின்றான்.

தலைவனும் தலைவியும் களவில் கண்டு சிலநாள் பழகி, தலைவி எதிர்பார்த்திருந்த பொழுது தொடர்ந்து வராதிருந்தான். அவன் வந்தபோது தன்வருத்தத்தைக் காட்ட பாராமுகமாக இருந்தவளைத் தலைவன்,

**"அரும்படர் கண்டாரைச் செய்தாங்கு இயலும்**
**விரிந்துஒலி கூந்தால்! கண்டை ; எமக்குப்**
**பெரும்பொன் படுகுவை பண்டு'' (கலி. 64,5-8, ப. 224)**

என்றும்,

**"ஈங்கே தலைப்படுவன் - உண்டான் தலைப்பெயின்**
**வேந்துகொண் டன்ன பல'' (கலி. 64,24-25, ப. 224)**

**"அத்திறம் அல்லாக்கால் வேங்கைவீ**
**முற்றெழில் கொண்ட சுணங்குஅணி பூண்ஆகம்**
**பொய்த்து ஒருகால் எம்மை முயங்கினை சென்றீமோ**
**முத்துஏர் முறுவலாய் நீபடும் பொன்னெல்லாம்**
**முத்தி எறிந்து விடற்கு'' (கலி. 64, 27-31, ப. 224)**

என்று தலைவியின் வருத்தத்தைப் போக்கினான். இதில் கண்டார்க்குத் துயர்செய்து நடக்கும் அழகு உனக்கு என்னால் தான் வந்தது. உன் தோளின் புத்தழகும் குவளை மலரனையக் கண் புதுப்பொலிவு பெற்றதும் இதுதவிர மற்ற உறுப்புகள் பொலிவு பெற வேண்டுமானால் என்னைத் தழுவிக் கொள் என்று தலைவியின் உணர்வுகளைத் தூண்டி இவனது உணர்வைத் தணித்துக் கொள்ளும் பண்பினனாக உள்ளான். பலவாறு கூறி தலைவியின் வருத்தத்தைப் போக்கும் இரக்க உணர்வு கொண்டவனாகவும் விளங்குவதை அறிய முடிகிறது. தலைவன் தனது உள்ள உணர்வை வெளிப்படுத்தித் தனது தேவையை நிறைவேற்றிக்கொள்ளும் ஆளுமைத்திறன் நிறைந்தவனாகக் காணப்படுகிறான்.

**அகநானூறு**

அகநானூற்று குறிஞ்சித் திணையில் பதின்மூன்று பாடல்கள் தலைவன் கூற்றாக அமைந்துள்ளன. அவை ஏதேனும் ஒருவகையில் இரவுக்குறி தொடர்புள்ளதாய் அமைந்துள்ளது. இரவுக் குறியில் (உள்ளம்) தலைவியைப் புணர்ந்து நீங்கியபின் நெஞ்சுக்கு உரைக்கும் போதும், அல்ல குறிப்பட்டுத் தலைவியைக் காண இயலாத போதும் தலைவன் கூற்றுகள் நிகழ்ந்துள்ளன. இரவுக்குறியில் தலைவியைச் சந்தித்துக் கூடிய தலைவன் அந்த இன்பத்தை,

**"கடல்மீன் துஞ்சும் நள்ளென் யாமத்து**
**உருவுகிளர் ஏர்வினைப் பொலிந்த பாவை**
**இயல்கற் றன்ன ஒதுக்கினள் வந்து,**
**பெயல் அலைக் கலங்கிய மலைப்பூங் கோதை**

**இயல்எறி பொன்னின் கொங்கு சோர்பு உறைப்ப,**
**தொடிக்கண் வடுக்கொள முயங்கினள்,**
**வடிப்புஉறு நரம்பின் தீவிய மொழிந்தே''** (அகம். 142:20-26, ப. 50)

**"குறையோர் கொள்கலம் போல, நன்றும்**
**உவ இனிய வாழிய நெஞ்சே''** (அகம். 142:6-7, ப. 50)

என்று நெஞ்சுக்குரைத்தான். தலைவி நள்ளிரவில் என்னைக் காண வந்தபோது அழகாகச் செய்த பொம்மை, நடை கற்றாற்போல, மெல்ல மெல்ல வந்தாள், யாழ் போல் இனிமையாகப் பேசி, சுவடு பதிக்கத் தழுவினாள், அதனால் நெஞ்சே, மாந்தரல் பொறையன் கடுங்கோ என்னும் சேரமன்னனைப் புகழ்ந்து பாடிய புலவர்கள் அவனிடம் நிறைந்த அணிகலன்களைப் பெற்று மகிழ்வதுபோல் மகிழ்வாயாக என்று குறிப்பிடுகின்றான். இங்கு தலைவன் புணர்வு எனும் உவகை மெய்ப்பாட்டுணர்வு கொண்டவனாகக் காணப்படுகிறான்.

இரவுக்குறியில் தலைவன், தலைவியின் அழகையும், அவளது துணிச்சலையும், "நெஞ்சு நடுங்கு அரும்படர் தீரவந்து"[33] என்று எண்ணி வியந்து தனது மருட்கை மெய்ப்பாட்டை வெளிப்படுத்துகிறான். தன்னிடம் வந்து இரப்போர்க்குக் கலம் நிறையச் சோறளிக்கும் ஆய் என்பவனின் தலையாறு என்னும் ஊரில் உள்ள மலையில் வளரும் மூங்கிலை ஒத்த தோள்களைக் கொண்ட தலைவியைத் தழுவி இன்பம் கொண்டதால் நெஞ்சம் துன்புற்று நிற்கிறான். இதனை,

**"வேய்அமைக் கண்இடை புரைஇ**
**சேய ஆயினும், நடுங்குதுயர் தருமே''** (அகம். 152:23-24, ப. 73)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. தலைவியின் பண்புடைமை, பெறுவதற்கரிய தெய்வம் போன்ற தன்மை போன்றவற்றை நெஞ்சிற்கு எடுத்துரைக்கின்றான். இதில் தலைவன் பெறுதற்கரிய பொருளையும் பெற்றுவிட்ட 'பெருமிதம்' என்றும் மெய்ப்பாடும், தலைவியின் பண்பை உணர்ந்து மதிக்கத் தெரிந்த பண்புணர்வும் கொண்டவனாகவும் திகழ்வதைக் காண முடிகிறது. தலைவியைக் கண்டு இரவுக்குறியில் கூடி நீங்கும் தலைவன்,

**"உப்புச் சிறைநில்லா வெள்ளம் போல**
**நாணுவரை நில்லாக் காமம் நண்ணி**
**நல்கினள்''** (அகம். 208:18-20, ப. 199)

என்று கூறுவதன் மூலம், தலைவியைக் கூடிப் பெற்ற 'உவகை' என்னும் மெய்ப்பாட்டினைத் தலைவன் புலப்படுத்துகின்றான். இதே மெய்ப்பாட்டினைத் தலைவன் பெற்றதை,

**"இன்உயிர் செகுப்பக் கண்டுசினம் மாறிய**
**அன்னி மிஞிலி போல மெய்ம்மலிந்து,**
**ஆனா உவகையேம் ஆயினேம்''** (அகம். 262:11-13, ப. 325)

என்ற பாடலும் உணர்த்துகின்றது. இரவுக்குறியில் தலைவியைச் சந்தித்த தலைவன் ஒருநாள் அவன் வருவதற்கு முன்பாகவே தவறுதலாகக் குறி ஏற்பட்டு விட்டதால் தலைவி குறியிடம் வந்து தலைவனைச் சந்திக்க இயலாமல் போனது, ஆனால் அடுத்து அவன் உண்மையாக வந்து செய்த குறியைத் தலைவிக் கருதாததால் அவன் அவளைச் சந்திக்க முடியாமல் போனது, இஃது ஏமாற்றத்தை அளித்தது. இதனை அகம். 62, 322ஆம் பாடலடிகள் உணர்த்துகின்றன.

இதில் தலைவன் தலைவியைக் காணமுடியாத ஏமாற்றம் கொண்டாலும் தலைவிக்கும் இது ஏமாற்றத்தைத் தருமே என்று எண்ணி அவளின் மன உணர்வையும் அறிந்து வருந்துபவனாக 'இளிவரல்' மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துபவனாகக் காணப்படுகின்றான். இதேபோன்று அல்லகுறியினால் தலைவியைக் காண இயலாத தலைவன் தன்னெஞ்சிடம்,

**"ஒறுப்ப ஓவலை, நிறுப்ப நில்லலை,**
**புணர்ந்தோர் போலப் போற்றுமதி நினக்குயான்**
**கிளைஞன் அல்லெனோ? நெஞ்சே''** (அகம். 342:1-3, ப. 106)

என்று கூறிச் சமாதானப் படுத்துகின்றான், மேலும் குறிஞ்சித்திணைத் தலைவன் அல்லகுறியால் ஏமாற்றமடைந்து,

**"இரும்பணைத் தொடுத்த பலர் ஆடு ஊசல்**
**ஊர்ந்து இழி கயிற்றில், செலவர வருந்தி,**
**நெடுநெறிக் குதிரைக் கூர்வேல் அஞ்சி**
**கடுமுனை அலைந்த கொடுவில் ஆடவர்**
**ஆகொள் பூசலில் பாடுசிறந்து எறியும்,**
**பெருந்துடி வள்பின் வீங்குபு நெகிழா,**
**மேய்மணி இழந்த பாம்பின், நீநனி**
**தேம்பினை வாழி, என் நெஞ்சே''** (அகம். 372:7-14, ப. 172)

என்று நெஞ்சிடம், பெரிய கிளையில் கட்டப்பெற்ற ஆடும் ஊஞ்சலின், ஏறியும் இறங்கியும் ஆடும் கயிறு போலச் சென்றும் திரும்பியும் அலைந்து வருந்துகிறாய்; கூரியவேலினை உடைய அஞ்சி என்பானது வீரர்கள் பசுக்கூட்டங்களைக் கவரும் போரில் ஒலி மிகும்படி அடிக்கும் பெரிய உடுக்கை வாரைப்போலச் செறிந்தும் நெகிழ்ந்தும் வருந்துகிறாய்; மேய்வதற்காக உமிழ்ந்து வைத்த மணியை இழந்த நல்ல பாம்பைப் போல வாடுகிறாய் என்று தன் மன உளைச்சலை, நெஞ்சிடம் கூறுவதுபோல் வெளிப்படுத்துகின்றான். இங்கு தலைவனிடம் 'வருத்தம்' என்ற மெய்ப்பாடு புலப்படுகிறது.

இங்ஙனம் இரவுக்குறியில் தலைவன் வழியினதருமை கருதி இரவுக்குறியைத் தவிர்ப்பதில்லை. அஞ்சாமை அவனது இயல்பாகின்றது. வழி அச்சத்தை உறவு வேட்கை

வெல்கின்றது. அல்லகுறி, பிற இடையீடுகள், தலைவியை இற்செறித்தல் முதலியவற்றால் உறவு தவிர்வதுண்டு. அந்நிலையில் தலைவன், "ஆராக் காமம் அடுஉநின் றலைப்ப"[34] என வருந்துகிறான். இங்ஙனம் வேட்கை உணர்வு வேகத்தோடு வருபவன் நிறைவுறாத தாகத்தோடு உள்ள இறுக்கம் பெறும் நிலையை எட்டுத்தொகை ஆடவரிடம் காணமுடிகிறது.

தலைவியைக் காண இயலாத தலைவன், தலைவியை நினைந்து அவளது நட்பு கெடாமல் தன் நெஞ்சிற்கு எப்பொழுதும் உறுதுணையாக இருக்க வேண்டும் என எண்ணுகின்றான். இதனை,

**"முயங்கல் இயையாது ஆயினும், என்றும்**
**வயவுஉறு நெஞ்சத்து உயவுத் துணையாக,**
**.... .... .... .... .... .... ....**
**அகல்இருங் கானத்துக் கொல்லிபோல,**
**தவாஅ லியரோ நட்பே,''** (அகம். 338, ப. 97)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. அல்லகுறிபட்ட தலைவன், தன்நெஞ்சை பெரிய ஆண்யானைக் கூட்டம் இறங்கிக் குளித்த சிறிய குளத்தைப் போல அறிவு கலங்கினாய். அவ்விவேகமற்ற நேரத்தில் முடிவு செய்து, அவள் எட்டாக்கனி என்பதை எண்ணாது, அவளைக் காண நாள்தோறும்இடர்நிறைந்த வழியைக் கடந்து செல்ல வைத்து என்னைத் துன்பத்தில் மாட்டிவிட்டாயே என்று நெஞ்சைத் தூற்றுகின்றான். அதுமட்டுமல்ல கிடைத்தற்கரியவளை, இடைவிடாது எண்ணியதன் விளைவுதான் இது. இதற்குக் காரணம் 'அதிகமான உன் செருக்கு அது அழிந்து போகட்டும்' என்று சபிக்கின்றான். இதனை,

**"கூர்மதன் அழியரோ நெஞ்சே, ஆனாது**
**எளியோள் அல்லோள் கருதி,**
**விளியா எவ்வம் தலைத் தந்தோயோ''** (அகம். 212:21-24, ப. 209)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதே சூழலில்

**" ...... ...... ...... உலகத்து**
**உள்ளோர்க்கு எல்லாம் பெருநகை யாக**
**காமம் கைம்மிக உறுதர**
**ஆனா அரும்படர் தலைத்தந் தோயே''** (அகம். 258:12-15, ப. 316)

என்றும் நெஞ்சைக் கடிந்து எனக்குத் துன்பம் தந்ததால் நீ "மாயஇருள்அளை மாய்கல் போல"[35] புகழிழந்து மாய்க என்று கூறி புலம்புகின்றான். இங்கு 'வருத்தம்' எனும் 'இளிவரல்' மெய்ப்பாட்டுணர்வு கொண்டவனாகக் காணப்படுகிறான்.

"உண்மையானதும் உடனடியானதுமான காரணங்களிலிருந்து கவலை தோன்ற முடியும்"[36] என்னும் உளவியலார் கருத்துக்கேற்ப, ஒளியற்ற கண்கள், தனிமை உறையும் சூழல், தன்னிரக்கம், பெருகும் வேட்கை போன்றவை தலைவனின் உள்ள இறுக்கத்தை வெளிப்படுத்தும் முழுமையான வெளிப்பாடுகளாக உள்ளதை எட்டுத்தொகை ஆடவரிடம்

காணமுடிகிறது. எட்டுத்தொகையில் ஆடவர் உள்ளம் இறுக்கமுற்ற நிலையிலும் அத்துன்பத்தனின்று மீளும் திறன் கொண்டதாக உள்ளது. ஆடவர் தம்மைத்தாமே உணர்ந்து சமாதானம் ஆகும் ஆளுமைத்திறன் நிறைந்தவராகக் காணப்படுகின்றனர்.

அகநானூறு குறிஞ்சித் திணையில் தலைவன் கூற்றுகளில் வெளிப்படும் ஆடவர்களின் உணர்வு வெளிப்பாட்டுக் கருவியாக நெஞ்சு அமைந்துள்ளது. இரவுக்குறியில் தலைவியைப் புணர்ந்து நீங்கிய பின் அவள் அழகை நினைந்து மனம் மகிழ்ந்து இன்ப உணர்வு கொண்டவனாகவும், இரவுக்குறி அல்லகுறியானபோது ஏமாற்றம் அடைந்து மன உளைச்சலுக்கு ஆளாகி நெஞ்சுக்குள் புலம்புகின்ற நிலையையும் காண முடிகிறது.

குறிஞ்சித்திணையில் தலைவன், தலைவியின் அழகைக் கண்டு வியக்கும் நிலையில் 'மருட்கை' உணர்வினன். தலைவி தனக்கு கிடைக்க வேண்டுமே என்று எண்ணுகின்ற நிலையில் பெருமையும் உரனும் இழந்து பின்னிற்கும் 'அசைவு' என்ற மெய்ப்பாடு கொண்டவன். குறிஞ்சி நிலத் தலைவன், இயற்கைப் புணர்ச்சியிலும் இடந்தலைப் பாட்டிலும், பாங்கற் கூட்டத்திலும், தோழியிற் புணர்ச்சியிலும், தலைவியுடன் கூடி மகிழும் போதும் புணர்வு நிமித்தமாகிய 'உவகை' மெய்ப்பாட்டுணர்வினனாகக் காணப்படுகின்றான். மேலும் இளமை காரணமான 'நகை' மெய்ப்பாட்டுணர்வினனாகவும் 'இழவு', 'வருத்தம், 'கைம்மிகல்' எனும் 'இளிவரல்' மெய்ப்பாட்டுணர்வினனாகவும் காணப்படுகிறான். குறிஞ்சி நிலத் தலைவனிடம் மன இறுக்கத்தைக் காண்கிறோமே தவிர உள்ள முறிவைக் காணவில்லை.

எனவே, எட்டுத் தொகை நூல்களில் அகநூல்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தெகை, அகநாநூறு போன்றவற்றில் உள்ள குறிஞ்சித் திணையில் தலைவன் கூற்றாகப் பாடப்பட்டுள்ள பாடல்களில் வெளிப்பட்ட ஆடவரின் மன உணர்வுகளைப் பின்வருமாறு தொகுத்துரைக்கலாம். அவையாவன;

### இயற்கைப் புணர்ச்சியில் தலைவனின் மன உணர்வுகள்

- தலைவியைக் கண்டு 'யார் மகள் இவளோ' என்று எண்ணி வியக்கும் உணர்வோடு அன்னாளைப் பெற்றோரை வாழ்த்தும் உணர்வினன் (நற்.8, ஐங்.299, அகம். 152).
- தலைவியின் நலம்பாராட்டி மகிழும் உணர்வினன். கண்கள், இடை, தோள் என ஒவ்வொன்றாய் நலம் பாராட்டி மகிழ்பவன் (குறுந். 2).
- தலைவியின் நாணத்தால் கட்டுண்டு மகிழ்பவன்; பின் தொடர்பவன், (கலி. 57).
- தன் உணர்வைப் புரிந்துகொள்ளாமல் இருக்கும் தலைவியின் நிலைகண்டு தவிப்பவன் (கலி. 56).
- காதல் கைம்மிக புலம்பும் உணர்வினன். (கலி. 58).

**இடந்தலைப்பாடு**

- 'சொல்லின் சொல்லெதிர் பெறாஅ' தலைவன் காமம் கைம்மிகும் நிலையில் தவிக்கும் உணர்வினன். (நற். 39)
- 'நின்னைப் பிரியேன்' என்று தலைவியிடம் உறுதி கூறும் உணர்வினன். (குறுந். 300).
- தலைவியைக் கூடும் அனுபவத்தை மீண்டும் பெற விரும்புபவன். (குறுந். 62, ஐங். 288).
- தன் 'பெருமையும் உரனும்' தடுமாற உயிரையும், ஒழுக்கத்தையும் இழக்கும் நிலையில் தலைவியிடம் அவள் தனக்குக் கிடைக்கவில்லை என்றால் மடலேறுவேன் என்று அச்சுறுத்தும் உணர்வினன். (கலி. 58).
- தலைவி இருக்கும் இடம்நாடி அல்லும்பகலும் அலையும் உணர்வினன். (அகம். 142).
- தலைவியிடம் தன்னை, தன் காதலை, அன்பை ஏற்றுக்கொள்ளுமாறு இரந்து பின்னிற்கும் உணர்வினன். தான் இத்துணை பின்னின்று இரந்தும் ஏற்கவில்லை என்றால் அவள் நோற்கும் நோன்பினால் பயன் இல்லை, அயலார் பழிக்கு உள்ளாவாள் என்று பழிக்கும் உணர்வினன். (கலி. 59).
- தலைவியின் அழகுபெற்ற உறுப்புகள் மேலும் பேரழகு பெற தன் புணர்ச்சி காரணமாகும் என்று அவளுக்கு அறிவுறுத்தும் உணர்வினன். (கலி. 64).
- இரவுக்குறிக்கண் வந்த தலைவியைப் புணர்ந்து மகிழ்ந்த இன்ப உணர்வினன். (அகம். 142).
- இரவுக்குறிக்கண் தான் குறித்த இடத்தில் தன்னைச் சந்தித்த தலைவியின் உள்ளத்தைப் பாராட்டும் உணர்வினன். (அகம். 142).
- இரவுக்குறிக்கண் தலைவியோடு மெய்யுற்றுப் புணர்ந்த நிலையில் அளவில்லாத இன்பத்திற்கு உள்ளானாலும், இங்ஙனம் அடிக்கடி அவளைக் கண்டு சேரமுடியாதே என்ற அருமையை நினைத்துப் புலம்பும் உணர்வினன். (அகம். 142).
- அல்லகுறிபட்டு நெஞ்சம் கலங்குகின்றவனாகவும், அல்ல குறிப்பட்டாளுக்குக்காகக் கலங்குகின்றவனாகவும் காணப்படுகிறான். (அகம். 342, 372).
- தலைவியின் நட்பு நீங்காதிருக்க விரும்பும் உணர்வினன். (அகம். 338, 121).
- நெஞ்சொடு புலம்பலில் தன் நெஞ்சை சில நேரங்களில் வாழ்த்தியும், சில நேரங்களில் வைதும், தன் உணர்வை வெளிப்படுத்துபவன். (அகம். 212, 258).

**பாங்கற் கூட்டம்**

- தான் விரும்பும் தலைவி 'மகளிர்ப் புரையுஞ் சாயலள்' என்று தலைவியின் பேரழகைக் கூறும் இயல்பினன். (ஐங். 255).
- தலைவியைக் கூடி மகிழ பாங்கனின் துணையை நாடும் உணர்வினன். (நற். 185, 95, 201, குறுந். 58, 70, 132, 156, 280, ஐங். 255).
- 'கொடிச்சி கையகத்ததுவே பிறர் விடுத்தற்கு ஆனாது பிணித்த என் நெஞ்சே' என்று பாங்கனிடம் தனது உணர்வுகளை மறைக்காமல் கூறும் உணர்வினன். (நற். 95).
- இடித்துரைக்கும் பாங்கனிடம் தலைவியைக் காண்பதற்கு முன் நயனும், நண்பும், நாணும், பண்பும், பாடறிந்து ஒழுகும் தன்மையும் உடையவனாக இருந்ததை உணர்த்தி இவ்வொழுக்க நலன்களெல்லாம், தலைவியைக் கண்ட பின் உடைந்து போயின என்று உள்ளதை உள்ளவாறு பாங்கனிடம் உணர்த்தும் இயல்பினன். (நற். 160).
- 'தாய்க்காண் விருப்பின் அன்ன நோக்கின்' அளவிறந்த அன்புணர்வைக் கொண்ட தலைவியே தன் பெருமையும் உரனும் அழியக் காரணமாயினாள் என்று பாங்கனிடம் கூறும் உணர்வினன். (குறுந். 132).
- ஒருநாள் 'புணரப்புணரின் அரைநாள் வாழ்க்கையும் வேண்டலன் யானே' என்று சொல்லுமளவிற்குத் தலைவி மீது ஆழமான காதலுணர்வு கொண்டவன். (குறுந். 280).

**தோழியிற் புணர்ச்சி**

- தலைவனது உள்ளக்குறிப்பை உணராத இளையளாகத் தலைவி இருப்பினும் அவள் தன்னை வருத்தும் ஆரணங்கினளாக உள்ளாள் என்று தோழியிடம் கூறித் தலைவியை அடைய அவள் உதவியை நாடும் உணர்வினன். (நற். 6;44,77, 140, 204, 209, 265, 356, 341, 377, குறுந். 29, 120, 165, ஐங். 256)
- தலைவியின் இற்செறிப்பை உணர்ந்த சிறைப் புறத்தானாக நின்ற தலைவன் தன் நெஞ்சிற்குச் சொல்வான் போல் தோழி கேட்ப, தலைவியைச் சென்று சேர தனக்குத் துணையாயினர் உண்டோ என்று கூறி புலம்பும் உணர்வினன். நம்பகமான ஒரு தோழியின் நட்புக்காக ஏங்குபவன். (நற். 6).
- தலைவியைக் கூட விரும்பி தோழியிடம் குறையுற்று நிற்கும் உணர்வினன். (நற். 77, 204, 265).

- தலைவியையே நினைத்து, நினைத்து, அந்நினைவே நோயாகி இறந்துபோவேனோ என்று தன்னெஞ்சிற்கு உரைப்பான் போல் தோழிக்கு உரைப்பவன். (நற். 160).
- தலைவியை வரைந்து கொள்ளும் வேட்கை கொண்டவன், (ஐங். 298).
- குறியிடம் சென்று தலைவியைக் காணாமல் மனமுடைந்து வருந்தும் இயல்பினன். (அகம். 62, 322, 372).
- தலைவி கிடைக்கவில்லை எனில் இளமையில் அவளுக்காக அவன் விளையாட பாவை செய்து தந்தது; அதற்கான கோரையைப் பறிக்கப் பள்ளங்கள் பல ஏறி அலைந்தது; போன்ற செயல்களை அறங்கூறு அவையத்தில் சொல்லவும் துணிந்தவன். (குறுந். 276).
- தலைவியோடு இரவுக்குறிக்கண் ஒரு இரவில், விடியும் புலர்காலையில் மகிழ்ந்ததை நெஞ்சிலே நினைத்து மகிழ்ந்தவன். (குறுந். 312).
- இம்மையில் தலைவியின் இற்செறிப்பினால் தலைவியைக் காண முடியாத நிலையில், மறுமையிலாவது அவளை அடைவேன் என்று நினைக்கும் உறுதி கொண்டவன். (குறுந். 199).
- தான் விரும்பும் தலைவியை மணம் பேசி வர சான்றோரை அனுப்பும் உணர்வினன். (நற். 356).
- தலைவியின் பெற்றோர் தலைவனுக்குத் தலைவியைத் தர மறுத்த போதும் “குணக்குத் தோன்றும் வெள்ளியின் எமக்குமார் வருமே” என்று தலைவியை அடையும் உள்ள உறுதி கொண்டவன். (நற். 356).

**ஆ. முல்லைத் திணையில் தலைவன் கூற்றில் வெளிப்படும் ஆடவரின் உணர்வுகள்**

முல்லைப் பாடல்கள் மொத்தம் 217. அவற்றுள் தலைவன் கூற்றாக வருவன 95 பாடல்கள் ஆகும். முல்லைத்திணைப் பாடல்களைக் கற்பொழுக்கத்தின் பாற்படுவன முல்லைத் திணையில் தலைவன் முதலிடம் பெறுகிறான். எட்டுத்தொகை அக நூல்களில் நற்றிணையில் 13 பாடல்களும், குறுந்தொகையில் 6 பாடல்களும், ஐங்குறுநூறு 50 பாடல்களும், அகநானூறு 26 பாடல்களும் என்ற எண்ணிக்கையிலான பாடல்கள் தலைவன் கூற்றாக இடம்பெற்றுள்ளது.[37]

ஆற்றியிருத்தல் முல்லைத் திணையாகும். தலைமகன் “கார்காலம் வருந்துணையும் ஆற்றியிரு ” என்று கூறியபடி தலைவி ஆற்றியிருக்கிறாள். கார்காலம் தொடங்கும் முன் ஆற்றியிருந்தவள், அப்பருவம் தொடங்கியதும் – தொடங்கும் அறிகுறி தோன்றியதும்

ஆற்றாமை உடையவளாகிறாள். இது முல்லைப் பாடல்கள் பலவற்றில் தலைவி பற்றிய கருத்தாக அமைந்துள்ளது.

"கற்பெனப்படுவது சொல் திறம்பாமை" [38] என்னும் கூற்று வெளிப்படையாகப் பெண்களின் கற்பைக் காட்டுவன என்றாலும் தான் தலைவிக்கு வாக்களித்தபடி குறித்தக் காலத்தில் தலைவியை வந்து சேரும் தலைவனுக்கும் பொருந்தும் வகையில் உள்ளன. 'முல்லை சான்ற கற்புடையவள்' என்று இரு இடங்களில் ( நற் – 142; அகம் – 274) அவன் தலைவியைப் புகழ்ந்தாலும் தன் கற்புடைமையான சொல் திறம்பாமையை வெளிப்படுத்துகின்றான்"[39] போர் முடிந்ததும் குறித்த பருவத்திற்குள் ஊர் திரும்பவே அவன் துடிக்கின்றான். பாசறையில் கூறுவன,[40] தூது விடுப்பன,[41] நெஞ்சிற்குக் கூறுவன,[42] பாகனிடம் உரைப்பன,[43] கண்டோர்,[44] முல்லை,[45] மழை,[46] புறவு,[47] போன்றவற்றிடம் பேசுவன எல்லாமே தான் தன் மனைவியிடம் வாக்களித்தபடி அவளைச் சென்றடையத் துடிப்பதையே உணர்த்துகின்றன.

முல்லைத்திணையில் தலைவன் கூற்றுகளை மூன்று பகுதிகளில் அடக்கலாம். பாசறையில் கூறுவன, போர் முடிந்ததும் கூறுவன, வீடு திரும்பிய பின் கூறுவன என்ற நிலைகளில் அமைந்துள்ளன.

முல்லைநிலத் தலைவன் பாகனிடம் (44 பாடல்கள்) தன் நெஞ்சிடம் (16) தலைவியிடம் (21), தூதாகும் பாணனிடம் (4) தோழியிடம் (1), கண்டோரிடம் (1) கூற்றுகள் நிகழ்த்துகின்றான். மேலும் முல்லை (1), மழை (2), புறவு (1) போன்றவற்றை நோக்கியும் கூற்றுகள் நிகழ்த்துகின்றான்.

## நற்றிணை

காதல் வயப்பட்ட தலைவன் தன் காதல் உணர்வைப் பிற விலங்குகள், பறவைகள், காலம் போன்றவற்றின் மீது ஏற்றிக் கூறுகின்றான்.

தலைவன், பிரிவால் வாடும் தலைவியை நினைவு கூர்ந்து தேரின் வேகத்தினை அதிகப்படுத்துகிறான். "இந்நிறைவேறா ஆசைகளை உள்ளடக்கிய மனித மனம் அதை எவ்வாறேனும் சமுதாய ஏற்புகளுக்கு தகுந்தாற் போல் மாற்றி நிறைவேற்றிக் கொள்ளமுயலும். அவ்வாறு முயலும்பொழுது மனம் பல தற்காப்பு உத்திகளைக் கையாளும்"[48] என்று பிராய்டு குறிப்பிடுவதைக் கொண்டு தலைவனின் உணர்வு வெளிப்பாட்டினை உணரலாம்.

இவ்வாறான செயல்பாடுகளை வெளிப்படுத்தும் தலைவன் கூற்றுகள் நற்றிணையில் 13 பாடல்களில் இடம் பெற்றுள்ளன.[49] இப்பாடல்கள் அனைத்திலும் தலைவியைக் காண விழையும் தலைவனின் மன உணர்வு வேகத்தையும், தேர்ப்பாகன் தேரை விரைந்து செலுத்த தலைவன் கையாளும் உத்திகளையும் விளக்கும் வகையில் அமைந்துள்ளன.

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன், "மறத்தற் கரிதால் பாக" (நற். 42) என்று தலைவியை மறக்க முடியாத தன் நிலையைத் தேர்ப்பாகனிடம் கூறி

**" ... ... ... ... வல்விரைந்து**
**செல்க - பாக! நின் தேரே; உவக்காண்**
**கழிப்பெயர் களரில் போகிய மடமான்**
**விழிக்கட் பேதையொடு இனன்இரிந்து ஓட**
**காமர் நெஞ்சமொடு அகலாத்**
**தேடூஉ நின்ற இரலை ஏறே''** (நற். 242:5-10, ப. 326)

என்று தன் உள்ள உணர்வைப் பிரதிபலிக்கும் உயிரினக் காட்சியைக் காட்டி உணர்த்துகின்றான். இதில் மருண்டு விழிக்கும் பெண்மான் தன் குட்டியின் பின்னே ஓடியது. ஆண் மானானது தன்னுடைய பெண்மானைக் காணாமல் தேடித் திரியும் அந்த மானைப் போன்று தலைவியைக் காண என் மனம் துடிக்கின்றது என்று கூறி தேரை விரைந்து செலுத்துமாறு குறிப்பிடுகின்றான். இங்கு தலைவன் 'விரைவு' எனும் மெய்ப்பாட்டு உணர்வை வெளிப்படுத்துகிறான். இதைப் போன்று,

**"தீண்டா வைமுள் தீண்டி நாம் செலற்கு**
**ஏகுமதி வலவ தேரே! உதுக்காண்''** (நற். 21:4-5, ப. 27)

என்ற பாடலடிகள் மேற்கூறிய தலைவனின் மன உணர்வினை உணர்த்துகின்றன. மேற்குறிப்பிட்ட பாடல்களில் தலைவன் 'வருத்தம்' எனும் மெய்ப்பாட்டையும் தன்னிலும் தாழ்ந்த தேர்ப்பாகனிடம் தன் உணர்வுகளைக் கூறுமிடத்தில் 'அசைவு' எனும் மெய்ப்பாட்டையும் வெளிப்படுத்துகிறான்.

முன்பு நடந்த நிகழ்வுகள், தலைவி மீதான காதல் உணர்வு தோன்ற மனதில் அழுந்தக்கிடக்கும் எண்ணங்களை வெளிக்கொணர்ந்து அவற்றை மறுபடியும் நினைவின் மூலமாக அனுபவிக்கச் செய்தால் மன இறுக்கம் நீங்கி விடுகிறது. எனவே தலைவன் தன் மன இறுக்கத்திலிருந்து விடுபட, காதல் உணர்வைத் தூண்டும் மாலை நேரத்தில் தலைவி, தானில்லாததால் மனம் நிம்மதியின்றி அங்கும் இங்கும் நடந்து கொண்டிருப்பாள் என்று தன் மன உணர்வை தலைவி மீது ஏற்றிக் குறிப்பிடுகின்றான். இதனை,

**". . . .   . . . .   . . . . மெல்ல**
**வருந்தும் கொல்லோ, திருந்துஇழை அரிவை?**
**வல்லைக் கடவுமதி தேரிலே சென்றிக''** (நற். 321:6-8, ப. 428)

என்றும்,

**"..... ..... .... அன்புகலந்து**
**நம்வயின் புரிந்த கொள்கையொடு நெஞ்சத்து**
**உள்ளினள் உறைவோள்''** (நற்.59:6-7, ப. 78)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் தலைவியின் காதல் உணர்வைப் புரிந்து கொள்ளும் இயல்பினனாகத் தலைவன் வெளிப்படுகிறான். தலைவியின் மீது அக்கறை கொண்ட தலைவன் அவனது அன்புணர்வு வெளிப்படுமாறு,

**"... .... .... .... .... தொடி ஞெகிழ ஏங்கி**
**அழல்தொடங் கினளே ஆயிழை''** (நற். 371:6-7, ப. 496)

என்று கூறி விரைந்து செல்லும் தன் மன உணர்வினைத் தேர்ப்பாகனுக்கு வெளிப்படுத்துகிறான்.

வினை முடித்து மீளும் தலைவன், தன் வருகையை எண்ணிக் காத்திருக்கும் தலைவி கார்கால வரவைக் கண்டவுடன் எனக்கு விருந்து செய்யும் விருப்பினை உடையவளாய், நம்மை நோக்கி முறுவல் செய்வாள். அதனைக் காண வேண்டும் என்ற உணர்வு கொண்டவனாகக் காணப்படுகிறான். இதனை,

**"விருந்து அயர் விருப்பமொடு வருந்தினள் அசைஇய**
**முறுவல் இன்னகை காண்கம்''** (நற். 81:8-9, ப. 107)

என்ற பாடலடிகள் மூலம் உணரலாம். வினை முடித்து கார்காலம் வந்தவுடன் திரும்பி வருவேன் அதுவரை எனக்காகக் காத்திருக்கவேண்டும் என்று கூறிச் சென்ற தலைவனின் சொல்லைக் காப்பாற்றும் தலைவியைப் போலவே தலைவனும் சொன்ன சொல் காப்பாற்றும் உணர்வு கொண்டவனாக கார்காலத்தில் திரும்பி வருகின்றான். இதில் இருவரும் ஒருமித்த உணர்வு கொண்டவர்களாக உள்ளனர். இங்கு தலைவன் நன்னடையில் வரும் 'இசைமை' எனும் பெருமித மெய்ப்பாட்டு உணர்வை வெளிப்படுத்துகிறான்.

போர்க்களம் சென்று வினைமுடித்து மீண்ட தலைவன் இல்லத்திற்கு சென்று தலைவியையும் தன் மகனையும் மகிழ்விக்க வேண்டும் என்ற விருப்போடு காத்திருக்கிறான். என்னுடைய வீட்டில் நடைபயிலும் என் மகனிடம் உன் தந்தை வருகிறார் என்று கூறி கொஞ்சுகின்ற இனிய சொற்களைக் கேட்க வேண்டும் எனவே தேரினை விரைந்து செலுத்தி என் விருப்பினை நிறைவேற்று என்று கூறுகிறான். இதனை,

**"நடைநாட் செய்த நவிலாச் சீறடிப்**
**பூங்கட் புதல்வன் தூங்குவயின் ஒல்கி**
**வந்தீக, எந்தை!''** (நற். 221:10-12, ப.299)

என்ற பாடலடிகள் மூலம் உணரலாம். இதேபோன்று புதல்வனைக் காட்டி இன்புறும் தலைவியின் உணர்வைக் காண விரும்புபவனாகக் காணப்படுகின்றான். இதனை,

**"காதல் கெழுமிய நலத்தள் ஏதில்**
**புதல்வர் காட்டிப் பொய்க்கும்**
**திதலை அல்குல் தேமொழி''** (நற். 161:10-12, ப. 216)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இங்கு தலைவன், 'இளமை' காரணமான 'நகை' என்னும் மெய்ப்பாட்டு உணர்வினை வெளிப்படுத்துகிறான்.

கார்காலத்தில் திரும்பி வரும்போது தன் வரவை தலைவிக்குத் தெரிவித்த பல்லி, மழை போன்றவற்றிற்கு நன்றி கூறும் உணர்வு கொண்டவனாகக் காணப்படுகின்றான். இதனை,

> **"முன்னியது முடித்தனம் ஆயின் நன்னுதல்**
> **வருவம் என்னும் பருவரல் தீரப்**
> **படுங்கொல் வாழி நெடுஞ்சுவர்ப் பல்லி''** (நற். 169:1-3, ப. 226)

என்றும்,

> **"வணர்ந்துஒலி கூந்தல் மாஅ யோளொடு**
> **புணர்ந்தினிது நுகர்ந்த சாரல் நல்லூர்**
> **விரவுமலர் உதிர வீசி**
> **இரவுப் பெயல் பொழிந்த உதவி யோயே''** (நற். 139:7-10, ப. 183)

என்று மழைக்கும், பல்லிக்கும் நன்றி கூறுகின்றான். இதில் தலைவன் நன்றியுணர்வு கொண்டவனாகவும், சொன்னசொல்லைக் காக்கும் திண்ணிய உணர்வு கொண்டவனாகவும் வினைமுடித்து திரும்பியபின் தலைவியோடு கூடி இன்பம் துய்க்கும் காதலுணர்வு கொண்டவனாகவும் காட்டப்படுகிறான். இங்கு தலைவன் 'புணர்வு' எனும் 'உவகை' மெய்ப்பாட்டு உணர்வை வெளிப்படுத்துகிறான்.

**குறுந்தொகை**

குறுந்தொகை முல்லைத் திணையில் தலைவன் கூற்றாக ஆறு பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அதில் ஒரு பாடல் மட்டும் (குறுந் – 233) வரைவிற்காக பொருள் தேடப் பிரிந்த தலைவனின் கூற்றாக அமைந்துள்ளது.

பொருள் தேடிக் கொண்டு திரும்பிய தலைவனிடம் தோழி, தலைவியை மறந்து இத்தனை நாள் உங்களால் இருக்க முடிந்ததா? தலைவியை மறந்து எப்படி வாழ்ந்தீர்கள் என்று கேட்க, அதற்குத் தலைவன்,

> **"உள்ளினென் அல்லெனோ யான்; உள்ளி**
> **நினைத்தனென் அல்லெனோ பெரிதே; நினைத்து**
> **மருண்டனென் அல்லெனோ, உலகத்துப் பண்பே!''** (குறுந். 99, ப. 138)

என்று தோழியிடம், இதில் தலைவன் உலகியல்பை மதிக்கும் உணர்வு கொண்டவனாகவும், தலைவியை மறக்காது அவளையே எண்ணி இன்புறும் உணர்வு கொண்டவனாகவும் திகழ்கிறான். இங்கு தலைவனின் மனம் 'மருட்கை' எனும் மெய்ப்பாட்டை வெளிப்படுத்துகிறது.

வினைமுற்றி மீண்ட தலைவன் பாகனிடம், தலைவியின் தோளைத் தழுவி உறங்கிக் கழிந்த நாள்களே நான் வாழும் நாள்களாகும். பிற நாள்கள் எல்லாம் பலனற்ற உள்ளீடில்லாத பதர் போன்ற நாள்களாகும் என்று கூறி தலைவியைத் தன் வாழ்நாளைக் காப்பவளாக எண்ணி அதிகமான அன்புணர்வுடன் உள்ளதை வெளிப்படுத்தினான். இதனை,

**"அரிவை தோள் இணைத் துஞ்சிக்**
**கழிந்த நாள் இவண் வாழும்நாளே!**
**எல்லாம் எவனோ? பதடி வைகல்!''** (குறுந். 323, ப. 383)

என்ற பாடலடிகள் மூலம் உணரலாம். மேலும், வினைமுற்றி வந்த தலைவன், தேர்ப்பாகனை, நல்லறிவுத் திறன் கொண்டவன் என்றும், தேரை மட்டும் விரைந்து செலுத்தவில்லை, என் தலைவியின் உயிரையும் மீட்டுக் கொடுத்தவன். அதனால் நீ போற்றுவதற்கு உரியவன் என்று தேர்ப்பாகனைப் பாராட்டி நன்றி கூறும் நட்புணர்வு கொண்டவனாகத் தலைவன் காணப்படுகிறான்.

இதனை,

**"சேயாறு செல்வாமாயின் இடர்இன்று**
**களைகலம் காமம் பெருந்தோட்கு என்று**
**நன்று புரிந்து எண்ணிய மனத்தை ஆகி**
**முரம்புகண் உடைய ஏகிக் கரம்பைப்**
**புறவழிப் படுத்த மதியுடை வலவோய்!**
**இன்று தந்தனை தேரோ,**
**நோய்உழந்து உறைவியை நல்கலானே''** (குறுந். 400, ப. 464)

என்ற பாடல் உணர்த்துகின்றது. இங்கு தலைவன் தன் பணியாளரையும் வாழ்த்தி நன்றி கூறும் நன்னடையால் வரும் 'இசைமை' மெய்ப்பாட்டையும் துன்பம் நீங்கிய மகிழ்ச்சியால் பெறும் 'உவகை' எனும் மெய்ப்பாட்டு உணர்வையும் வெளிப்படுத்துகிறான்.

கார்கால மாலை நேரத்தில் முல்லைக்கொடியில் சிறிய வெண்மையான மொட்டுகளின் மூலம் புன்னகை செய்யும் முல்லையைக் கண்டு மனம் தவித்த நிலையில், "தலைவியைப் பிரிந்து தனிமையில் இருக்கும் எனக்கும், என்னைப் பிரிந்து இருக்கும் தலைவிக்கும் நீ எள்ளி நகையாடுவது போல் உள்ளதே இது சரியா", என தலைவன் கேட்கிறான். இதனை,

**"கார்புறந் தந்த நீருடை வியன்புலத்துப்**
**பலர்புகு தரூஉம் புல்லென் மாலை**
**முல்லை வாழியோ முல்லை''** (குறுந். 162, ப. 204)

என்று தன் வருத்த மெய்ப்பாட்டுணர்வையும் தவிப்புணர்வையும் வெளிப்படுத்துவதை உணர முடிகிறது.

வினை முடிந்து குறித்த காலத்தில் திரும்பிய தலைவன், தலைவியுடன் கூடி இன்புறும் வேளையில், விண்ணைப்பார்த்து, இருளை வெட்டும் மின்னலை உருவாக்கி, குளிர்ச்சி பொருந்தும் மழைத்துளிகளைத் தந்து, முரசுபோல் இடிமுழங்கி மழைபெய்யும் அவ்வானையும் வாழ்த்தி மகிழ்கிறான். இதனை,

**"பெய்து இனி வாழியோ பெருவான்! யாமே**
**செய்வினை முடித்த செம்மல் உள்ளமோடு**
**இவளின் மேவினம் ஆகி''** (குறுந். 270, ப. 320)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில், குறித்த பருவத்தில் திரும்பிவந்து தலைவியின் நலனைக் காத்த 'பெருமித' உணர்வுடன் தலைவன் திகழ்வதைக் காண முடிகிறது.

**ஐங்குறுநூறு**

ஐங்குறுநூறு முல்லைத் திணையில் தலைவன் கூற்றாக 50 பாடல்கள் உள்ளன. இப்பாடல்கள் பாசறையில் கூறுவன, தேர்ப்பாகற்கு கூறுவன , வினைமுற்றி மீள்வான் தலைவிக்கு கூறுவன, குறித்த பருவத்திற்கு முன்பு வந்து கூறுவன என்ற வகையில் அமைந்துள்ளன.

ஐங்குறுநூற்று முல்லைத் திணையில் பாசறைப் பத்து என்ற ஐந்தாவது பகுதியில் இடம் பெற்றுள்ள பத்துப் பாடல்களும் தலைவன் கூற்றாக அமைந்துள்ளன.

போர்வினை காரணமாகப் பாசறையில் தலைவியைப்பிரிந்து தனிமையில் இருந்த தலைவன், போர் முடிந்ததும், தான் திரும்பி வருவதாகச் சொன்ன கார்ப்பருவம் தோன்றியதைக் கண்டு தலைவியை நினைந்து வருந்துகிறான். அந்நிலையில் தலைவி, தலைவனுக்குத் தூது விடுக்கின்றாள். அத்தூது கண்டு,

**"நோய்நன்கு செய்தன எமக்கே**
**யாம்உறு துயரம்அவள் அறியினோ நன்றே''** (ஐங். 441, ப. 489)

என்று வருந்திக் கூறுகிறான். வேந்தனுக்கு உதவியாகப் போரில் ஈடுபடத் தலைவன் தலைவியை விட்டு பிரிந்தான். போர் குறித்த காலத்தில் முடியாமையால் தலைவியுடன் சேர்ந்து வாழும் இனிமையை இழந்து உள்ளம் துடிக்கும் 'வருத்தம்' எனும் இளிவரல் மெய்ப்பாடு கொண்டவனாகக் காணப்படுகிறான். போர்த்தொழில் முடிந்து வேந்தன் திரும்பினால் தானும் திரும்பி தலைவியைக் கூடி மகிழலாம் என்று கூறுகிறான். இதனை,

**"வெல்வேல் வேந்தன் பகைதணிந்து**
**இன்னும் தன்நாட்டு முன்னுதல் பெறினே''** (ஐங். 444, ப. 492)

**"பெரும்சின வேந்தன் அருந்தொழில் தணியின்**
**விருந்துநனி பெறுதலும் உரியள் மாதோ''** (ஐங். 442, ப. 490)

**“நனிசேய்த்து என்னாது நல்தேர் ஏறிச்சென்று**
**இலங்கு நிலவின் இளம்பிறை போலக் காண்குவம்’’** (ஐங். 443, ப.491)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதே கருத்தினை 446, 447, 449 பாடல்கள் உணர்த்துகின்றன. இப்பாடல்களில் அரசனுக்கு உதவிபுரியும் வகையில் போர்த்தொழிலில் ஈடுபட்டு வெற்றியை ஈட்டித் தரவேண்டும் என்ற வீர உணர்வும், இடையில் விட்டு வராத நாட்டுப் பற்றுணர்வும், அதே நேரம் தலைவியைக் காணத் துடிக்கும் தவிப்புணர்வும் தலைவனிடம் காணப்படுவதை உணரமுடிகிறது.

பாசறையில் தங்கியிருந்த தலைவன், கார்ப்பருவம் வந்தபோது, பசு காளையைத் தழுவிச் செல்லும் மாலை நேரத்தில் தலைவியின் நினைவு வரும்போதெல்லாம், நெஞ்சிடம், “நீதான் தலைவியைத் தனியாக வருந்தவிட்டுப் பிரிந்து இங்கே வந்து சேர்ந்தாய். மேலும் என்னையும் கட்டாயப்படுத்தி இங்கே விரைவாக வரச்செய்தாய் ஆதலால் வருத்தமுற்ற நிலையில் உள்ளேன்” என்று கூறி புலம்புகிறான். இதனை,

**“புகழ்சால் சிறப்பின் காதலி புலம்பத்**
**துறந்துவந் தனையே அருந்தொழில் கட்டூர்**
**நல்ஏறு தழீஇ நாகுபெயர் காலை**
**உள்ளுதொறும் கலிழும் நெஞ்சம்**
**வல்வே எம்மையும் வரவு இழைத் தனையே’’** (ஐங். 445, ப.493)

**“பொங்குபெயல் கனைதுளி கார்எதிர்ந் தன்றே**
**அஞ்சில் ஓதியை உள்ளுதொறும்**
**துஞ்சாது அலமரல் நாம் எதிர்ந் தனமே’’** (ஐங். 448, ப. 496)

என்றும்,

**“வெய்ய உயிர்க்குநோய் தணியச்**
**செய்யோள் இளமுலைப் படீஇயர் எம்கண்ணே’’** (ஐங். 450, ப. 498)

என்ற பாடலடிகளில் காணமுடிகிறது. மாலைப் பொழுது வரும்போதெல்லாம் கடமையும் காதலும் வருத்தும் இருநிலைகளில் அவனது மன உணர்வோட்டம் செயல்படுவதைக் காண முடிகிறது. இங்கு தலைவன் அஞ்சாமையால் வரும் ‘தறுகண்’, நன்னடையால் வரும் ‘இசைமை’ எனும் பெருமித மெய்ப்பாட்டு உணர்வையும் தலைவியைக் காணத் தவிக்கும் ‘வருத்தம்’ எனும் ‘இளிவரல்’ மெய்ப்பாட்டு உணர்வையும், இழவாகிய ‘அழுகை’ மெய்ப்பாட்டுணர்வையும் அறியமுடிகிறது. இதே போன்று,

வினைமுடித்து மீளும் தலைவன், தன் தேர்ப்பாகனிடம், தேரினை விரைந்து செலுத்துமாறு ஏவுகின்றான். காதலில் தலைவனும் தலைவியும் துயிலின்றி வாடுவதை இப்பாடல் உணர்த்துகின்றது.

**“அல்லல் அருநோய் ஒழித்தல் எமக்கு எளிதே’’** (ஐங். 425, ப. 475)

**“நல்நுதல் அரிவை தன்நலம் பெறவே’’ (ஐங். 483, ப. 530)**

**“பெருந்தோள் நலம்வர யாமும் முயங்க’’ (ஐங். 485, ப. 532)**

**“புல்லி ஆற்றாப் புரையோள் காண’’ (ஐங். 486, ப. 533)**

**“செறிதொடி உள்ளம் உவப்ப’’ (ஐங். 487, ப. 534)**

**‘‘பருவரல் தீரக் கடவுமதி தேரே’’ (ஐங். 488, ப. 535)**

**“கையுள் நெஞ்சின் தையல் உவப்ப’’ (ஐங். 489, ப. 535)**

**“ஆய்தொடி அரும்படர் தீர’’ (ஐங். 490, ப. 536)**

என்ற பாடலடிகள் தலைவியின் துயர் தீர்க்க விரும்பும் "நினைத்தல்" என்ற மெய்ப்பாட்டு உணர்வை வெளிப்படுத்துகிறது. மேலும் “நெடிய நீடினம் நேரிழை மறந்தே”[50] என்று கூறுவதில் தலைவியை மறந்து போர்த்தொழிலில் அதிக கவனம் செலுத்திய தலைவனின் தொழில் மீதான பொறுப்புணர்வை உணரமுடிகிறது.

வேந்தனுக்குச் சேனைத்தலைவனாய் விளங்கும் தலைவன், தலைவியைப்பிரிந்து, வினைமுடிந்து திரும்பித் தலைவியோடு வாழ்கிறான். அப்போது தலைவி மீண்டும் தலைவன் தன்னை விட்டுப் பிரிவானோ என எண்ணி மயங்குகிறாள். அதனைக் கண்ட தலைவன்.

**“வெல்வேல் வேந்தன் அருந்தொழில் துறந்துஇனி**
**நன்நுதல் யானே செலவுஒழிந் தனனே**
**முரசுபாடு அதிர ஏவி**
**அரசுபடக் கடக்கும் அரும்சமத் தானே’’ (ஐங். 426, ப. 476)**

என் அவளின் கவலையைத் தீர்க்கும் குணம் கொண்டவனாகக் காணப்படுகிறான். மேலும் காதலியைப் பிரிந்து பாசறைக்குத் தலைவன் வரமாட்டான் என்று கருதி அரசனும் போர்மேல் செல்வதைத் தவிர்த்து விட்டான். இதனை,

**“போருடை வேந்தன் பாசறை**
**வாரான் அவன்எனச் செலவு அழுங் கினனே’’ (ஐங். 427, ப. 477)**

என்ற பாடலடிகள் மூலம் அறியமுடிகிறது. இதில் தலைவன், தலைவியை விட்டுப் பிரிந்து அவளை துன்பப்படுத்தாமல் தங்கி அவளை சமாதானப்படுத்தும் உணர்வு கொண்டவனாகக் காணப்படுகின்றான்.

**“பல்லிரும் கூந்தல் பசப்பு நீ விடின்**
**செல்வேம் தில்ல யாமே செற்றார்**
**வெல்கொடி அரணம் முருக்கிய**
**கல்லா யானை வேந்துபகை வெலற்கே’’ (ஐங். 429, ப. 479)**

என்று தலைவியிடம் குறிப்பிடுகின்றான். இதில் தலைவன் தலைவியிடம், நீ உன் மனதை மாற்றிக் கொண்டு அனுமதி அளித்தால், உன் மேனி நிறம் மாறுவதைக் கைவிட்டால்,

பகைவருடைய கொடி விளங்கும் கோட்டைகளை உடைத்து நொறுக்கிய யானைகளை உடைய நம் வேந்தனது பகையை வெல்லுவதற்கு நானும் செல்வேன் என்று கூறுகிறான். தலைவன், தலைவியின் மனம் வருந்தாவண்ணம் சூழலை எடுத்துக்கூறி அவளிடம் சாதுரியமாக அனுமதி பெறும் உணர்வு கொண்டவனாகவும் வருத்தம், இளிவரல் என்னும் மெய்ப்பாட்டு உணர்வுகளைக் கொண்டவனாகவும் காணப்படுகிறான்.

வினையை முடித்து திரும்பிய தலைவன், தலைவியிடம் கார்காலம் என்னை இடைவிடாமல் வருத்தியது. மிகவும் மனம் நொந்து வருந்தும் மனதோடு, உன் அழகுக்குத் துணையாக நிற்க விரைவாக வந்து விட்டேன் என்று கூறும் தலைவனின் கூற்றுகள் ஐந்து பாடல்களாக இடம் பெற்றுள்ளன.[51] மேற்குறிப்பிட்ட தலைவனின் மனநிலையை வெளிப்படுத்தும் வகையில்,

**"நொந்துநொந்து உயவும் உள்ளமொடு**
**வந்தனெம் மடந்தைநின் ஏர்தர விரைந்தே"** (ஐங். 491, ப. 537)

**"நின்னே உள்ளி வந்தனென்**
**நல்நுதல் அரிவை காரினும் விரைந்தே"** (ஐங். 492, ப. 538)

என்று தன் மன உணர்வினைத் தலைவியிடம் கூறுவதை ஐங்குறுநூறு **493, 494, 495**ஆம் பாடல்கள் உணர்த்துகின்றன. இதில் தலைவியை நினைந்து வருந்தும் உணர்வு கொண்டவனாகவும், தலைவியின் துயரைத் துடைக்கும் மாண்பு பெற்றவனாகவும் விளங்குவதை அறிய முடிகிறது. மேற்கண்ட பாடல்களில் தலைவன் உள்ளம் வருந்துவதால் 'வருத்தம்' எனும் இளிவரல் மெய்ப்பாட்டு உணர்வையும் தலைவியின் துன்பம் நீக்கிய 'உவகை' மெய்ப்பாட்டு உணர்வையும் புலப்படுத்துகிறான்.

இல்லற வாழ்விற்கும் தலைவிக்கும் உரிமையுடையவனான தலைவன், தான் திரும்பி வருவதாக உறுதி கூறிய கார்பருவம் வருவதற்கு முன்பே வந்து, தனக்குப் பின்னால் வந்த கார்ப்பருவத்தைத் தலைவிக்குச் சுட்டிக்காட்டும் தன்மையினை; கிழவன் பருவம் பாராட்டுப் பத்து என்னும் பகுதியில் பத்து பாடல்களும் தலைவன் கூற்றாக தலைவியுடனும் தன்நெஞ்சிடமும் கூறியதாக அமைந்துள்ளது.

தலைவன் குறித்துச் சென்ற பருவத்திற்கு முன்பே வினைமுடித்து திரும்பி வந்து தலைவியோடு கூடி வாழும் போது, கார்கால மழை இடியுடன் பெய்யத் தொடங்கியது, இதனைக் கண்டு தலைவன்.

**"வீழ்தரு புதுப்புனல் ஆடுகம்**
**தாழ்இருங் கூந்தல் வம்மதி விரைந்தே"** (ஐங். 411, ப. 461)

என்று வெள்ளத்தில் சேர்ந்து விளையாடி மகிழ அழைக்கின்றான். இதனை ஐங்குறுநூறில் மூன்று பாடல்கள் எடுத்துரைக்கின்றன.[52] இதில் தலைவன் தலைவியை மகிழ்விக்கும் பெருமித உணர்வுடன் காணப்படுகின்றான்.

தலைவன் விலங்குகளும், பறவைகளும் கூடி மகிழும் காட்சியைத் தலைவியிடம் காட்டி

**'புள்ளும் மாவும் புணர்ந்து இனிது உகள' (ஐங். 414, ப. 464)**

என்றும்,

**"உயிர்கலந்து ஒன்றிய செயிர்தீர் கேண்மைப்
பிரிந்துஉறல் அறியா விருந்து கல்வி
நம்போல் நயவரப் புணர்ந்தன
கண்புகு மடவரல் புறவின் மாவே"(ஐங். 419, ப. 469)**

என்றும் தலைவியைக் கூடி மகிழ விரும்பும் தன் வேட்கையை வெளிப்படுத்துகிறான். இதில் தலைவனின், காதலுணர்வு மற்றும் புணர்ச்சி வேட்கையும் வெளிப்படுவதை உணர முடிகிறது.

இங்ஙனம் பருவத்திற்குள் வந்து தலைவியை மகிழ்வித்து தானும் மகிழும் நடுவுநிலை மனஉணர்வு கொண்டும், வினையை விரைந்து முடிக்கும் திண்மை பெற்றவனாகவும், தலைவியின் மீது அளவு கடந்த அன்புணர்வு (காதலுணர்வு) கொண்டவனாகவும் 'புணர்வு' மற்றும் 'விளையாட்டு' என்ற 'உவகை' உணர்வு கொண்டவனாகவும் தலைவன் காணப்படுகின்றான்.

**அகநானூறு**

அகநானூறு முல்லைத்திணையில் தலைவன் கூற்றுகளாக **26** பாடல்கள் இடம் பெற்றுள்ளன. அப்பாடல்கள் வினைமுற்றும் போது நெஞ்சிடம் கூறுவன, தேர்ப்பாகனிடம் கூறுவன, பாசறையிலிருந்து கூறுவன என்ற வகையில் இடம்பெற்றுள்ளன.

போர்த்தொழில் காரணமாகத் தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன், தான் மேற் கொண்ட செயல் முடிந்தபோது தன்நெஞ்சிடம்,

**"மங்குல் மாமழை, தென்புலம் படரும்
பனிஇருங் கங்குலும் தமியள் நீந்தி
தம் ஊ ரோளே" (அகம். 24:8-10, ப. 56)**

என்று வாடைக்காற்று வீசும் வைகறையில் இரவாகிய வெள்ளத்தைத் தனியே நீந்துகின்ற தலைவியின் துயரை உணர்ந்து, வருந்தி, விரைவில் போர் முடிந்தால் தலைவியைக் கண்டு இன்பம்அடையலாம் என்று எண்ணிய தலைவன்,

**"இன்னாது உறைவி தொல்நலம் பெறூஉம்
இது நற் காலம் கண்டிசின் பகைவர்
மதில்முகம் முருக்கிய தொடிசிதை மருப்பின்
கந்துகால் ஒசிக்கும் யானை
வெஞ்சின வேந்தன் வினைவிடப் பெறினே" (அகம். 164:10-11, ப. 99)**

என்று கூறி வருந்துகிறான். மேலும், தன்னைக் காணாமல் அவள் துயர் அடைவதைப் போல தானும் துயருற்று வருத்தமுடன் இருக்கும் நிலையை அவள் அறியாமல் புலம்புகின்றாள். இதனை,

**"நம்நோய் தன்வயின் அறியாள்**
**என்நொந்து புலக்கும்கொல் மாஅ யோளோ''** (அகம். 304:20-21, ப.21)

என்று தன் உணர்வினைப் புரிந்து கொள்ளாத தலைவியை நினைந்து மேலும் வருத்தமடைகின்றான். இங்கு தலைவன், தலைவியின் நினைவால் வருந்தும், 'வருத்தம்' எனும் 'இளிவரல்' எனும் மெய்ப்பாட்டு உணர்வை வெளிப்படுத்துகிறது. இதே கருத்தினை அகம் – 214 ம் பாடலும் வலியுறுத்துகின்றது. வினைமுற்றிய தலைமகன், தலைவியைக் காண தேரில் விரைந்து வந்து கொண்டிருக்கும் போது, இடைவழியில் தேர்ப்பாகனை நோக்கி

**"இன்றுவரல் உரைமோ, சென்றிசினோர் திறத்துஎன**
**இல்லவர் அறிதல் அஞ்சி, மெல்லென**
**மழலை இன்சொல் பயிற்றும்**
**நாணுடை அரிவை மாண்நலம் பெறவே''** (அகம். 34:15-18, ப. 78)

என்று கூறிய தலைவன், தேரினை விரைந்து செலுத்துமாறு வேண்டிக் கேட்கிறான். இதனை அகம் 34,44,54,64,94,114,124,124,144,154,ஆம் பாடல்கள் உணர்த்துகின்றன. மேலும் தலைவன் தலைவியைக் கண்டு தழுவி இன்புற வேண்டும் என எண்ணி தேர்ப்பாகனிடம்,

**"தண்டலை கமழும் கூந்தல்**
**ஒண்தொடி மடந்தை தோள் இணை பெறவே''** (அகம். 204:13-14,ப.191)

என்று கூறுகிறான். இதே கருத்தினை அகநானூற்றில் ஏழு பாடல்கள் விளக்குகின்றன.[53] வினை முடிந்த தலைவன் தேரில் ஏறி தலைவியின் ஊரை அடைந்தான். அடைந்தபின் தேர்ப்பாகனிடம்,

**"நம்வயின் நினையும் நல்நுதல் அரிவை**
**புலம்பொடு வதியும் கலங்குஅஞர் அகல**
**வேந்துஉறு தொழிலொடு வேறுபுலத்து அல்கி**
**வந்துவினை முடித்தனம் ஆயின் நீயும்**
**. . . . . . . .  . . . .  . . . .**
**ஊர்நணித் தந்தனை, உவகையாம் பெறவே''** (அகம். 254:8-11, ப. 308)

என்று கூறி அவனை வியந்து, விரைந்து செயல் பட்ட திறத்திற்கு நன்றி கூறுகிறான். இங்கு தலைவன் தேர்ப்பாகனிடம் வேண்டிக் கேட்பதில் 'அசைவு' எனும் மெய்ப்பாட்டு உணர்வையும் தனது துன்பம் நீங்கி மகிழ்ச்சி அடைந்ததால் 'உவகை' எனும் மெய்ப்பாட்டு உணர்வையும் வெளிப்படுத்துகின்றான்.

முல்லைத்திணையில் தலைவன், இளிவரல், அழுகை, பெருமிதம், நகை, உவகை, மருட்கை, விரைவு, நினைத்தல் போன்ற மெய்ப்பாடுகள் நிறைந்தவனாகக் காணப்படுகின்றான். முல்லை நிலத்தலைவன் வருத்தம் எனும் இளிவரல் உணர்வினன், அழுகை எனும் அசைவு உணர்வினன், பெருமிதம் எனும் அஞ்சாத தறுகண்மையினன் நன்னடையால் வரும் இசைமை உணர்வினன், இளமையால் வரும் நகை உணர்வினன், புணர்வு, விளையாட்டு எனும் உவகை உணர்வினன், வியப்பினால் உண்டாகும் மருட்கை உணர்வினன், விரைந்து வினைமுடிக்கும் விரைவு எனும் மெய்ப்பாட்டு உணர்வினன் தலைவியை நினைந்து வருந்தும் 'நினைத்தல்' எனும் மெய்ப்பாட்டுணர்வினன் என்பதை அறியமுடிகிறது.

முல்லை நிலத் தலைவனின் உள்ளம் தலைவியை நாடியே, செயல்பட்டது. தலைவியைப் பிரிந்து வாழும் உள்ளத் துணிவு அற்றவனாகவும், களவுக் காலத்தைவிட கற்புக் காலத்தில் தலைவியுடன் சேர்ந்து பெறும் இன்பத்தை விரும்புபவனாகவும் காணப்படுகின்றான். தலைவியுடன் இருப்பதற்காக விரைந்து வினை முடிக்கும் உணர்வினனாகக் காணப்படுகிறான். குடும்பத்தைப் பாதுகாக்கும் பொறுப்புணர்வு கொண்டவனாகவும் காணப்படுகின்றான்.

**முல்லைத் திணையில் ஆடவர் பின்வரும் உணர்வுநிலைப் பட்டவர்களாகக் காணப்படுகின்றனர்.**

- தலைவன், தலைவியை மறக்க இயலாதவன். அவளைக் காணத்துடிக்கும் தவிப்புணர்வு கொண்டவன் **(நற் 21, 42, 59, 242, 321, ஐங். 422, 450, அகம். 31)**
- தலைவன் சொன்ன சொல்லைக் காப்பாற்றும் திண்ணிய உணர்வினன் **(நற்–81, ஐங்குறு. 411, 412)**
- தலைவன், தலைவியையும், மகனையும் வினைமுடித்து மீண்டுவந்து மகிழ்விப்பவன். **(நற்–221)**
- தலைவன் வினைமுடித்துவரும் தன் வருகையை தலைவிக்குத் தெரிவித்த பல்லி, மழை, போன்றவற்றிற்கும், தலைவியைக் காண விரைந்து தேரை செலுத்திய தேர்ப்பாகனுக்கும் நன்றி செலுத்தும் நன்றியுணர்வு கொண்டவன். **(நற்–139,169, குறுந் –400)**
- தலைவியைப் பிரியக் காரணமான தன் நெஞ்சை நொந்து புலம்பினாலும், வினையே ஆடவர்க்கு உயிர் என்ற உலக இயல்பை அறிந்து பொருள் தேடச் செல்லும் உணர்வினன். **(குறுந். 99)**
- தலைவன், தலைவியுடன் கூடிவாழ்ந்த நாள்களைத் தவிர மற்ற நாள்களை பதர் என எண்ணுபவன். **(குறுந் – 323)**

- தலைவன், தனக்கும், தலைவிக்கும் துன்பத்தைத் தரும் முல்லை மொட்டு மலர்தலைச் சாடுபவன் (குறுந் –162)
- தலைவியின் நலனைக் காக்கும் பொறுப்புணர்வும் அவள் உணர்வுகளுக்கு மதிப்பும் அளிப்பவன் (குறு – 270, ஐங் – 425, 483, 485, 486, 487, 488, 489, 490)
- தலைவன் குறித்த பருவத்திற்கு முன்வந்து, பின்வரும் கார்காலத்தைக் தலைவிக்குக் காட்டி பெருமிதம் கொள்பவன். (ஐங் –413,420)
- தலைவன், பறவைகள், விலங்குகள் கூடி மகிழும் காட்சியைத் தலைவிக்குத் தன் விருப்பத்தைக் குறிப்பாக வெளிப்படுத்துபவன்.(ஐங் – 414,415,416,417,419)
- வினை முடித்து திரும்பிய தலைவன், போர்ச்சூழலில் மீண்டும் தன்னைப் பிரிவான் என்று வருந்திய தலைவிக்கு ஆறுதல் கூறி தேற்றுபவன். (ஐங் – 426,427,428)
- தலைவன் நாட்டைக் காக்கும் பொருட்டு, தலைவியைப் பிரியும் முன் அவளுக்குச் சூழலை விளக்கி அனுமதி கேட்கும் சாதுரிய உணர்வினன். (ஐங் – 429)
- போருக்காகத் தலைவன் பாசறையில் தங்கியிருந்த போது, தலைவியிடம் கூறிய பருவத்தில் திரும்பி வர இயலாததால் தலைவியை எண்ணி வருந்துபவன். (ஐங் –442,443,441,444,446,447,449)
- தலைவன் வீரவுணர்வு, காதலுணர்வு என்ற இரு உணர்வுகளுக்கும் இடையில் இவற்றுக்கிடையில் சிக்கித் தவிக்கும் உணர்வினன். (ஐங் – 448)
- தலைவன், தலைவி மாட்டு 'வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும்' காதல் உணர்வினன். (ஐங் – 484)
- தலைவியினால் பெறக்கூடிய இன்ப உணர்வை விட வீரத்தை வெளிப்படுத்தும் போரை விரும்புபவன் (ஐங் –445)
- தலைவன் தலைவியின் விருந்தோம்பும் பண்பைக் கண்டு இரசிக்கும் உணர்வினன். (அகம் –34,44,54)

### இ. மருதத் திணையில் தலைவன் கூற்றில் வெளிப்படும் ஆடவரின் உணர்வுகள்

மருதத் திணையில் மொத்தம் 263 பாடல்கள் உள்ளன. அவற்றுள் 17 பாடல்கள் தலைவன் கூற்றாக இடம் பெற்றுள்ளன. நற்றிணை மருதத் திணையில் நான்கு பாடல்கள் தலைவன் கூற்றாக அமைந்துள்ளன.[54] தலைவியைக் காண தோழி மறுத்துரைத்த போது தலைவன் தனக்குள் சொல்வது போல் தலைவியின் மீதான காதலுணர்வை வெளிப்படுத்துதல், பரத்தையற் பிரிந்ததலைவன், விருந்து வாயிலாகவும், புதல்வன்

வாயிலாகவும் தலைவியை அடைதல், தன்னிடம் பாராமுகமாய் இருக்கும் தலைவி ஒரு காலத்தில் தன்னிடம் அன்பாய் இருந்ததன்மையைப் பாணனிடம் கூறுவது போல் தலைவிக்கு உணர்த்துதல் என்ற வகையில் அமைந்துள்ளன.

தலைவியைக் காண தோழி மறுத்ததால் தலைவன் (தனக்குள்) தன் நெஞ்சிடம், தான் உற்ற காதல் நோய்க்கு தலைவியே மருந்தாவாள் அவளன்றி வேறொரு மருந்தில்லை என்பதை,

**''பெருந்தோள் குறுமகள் அல்லது**
**மருந்துபிறிதுஇல்லையான் உற்ற நோய்க்கே''** (நற். 80:5-9, ப. 105

என்று உரைக்கின்றான். இதில் தலைவன், தலைவியைப் பிரிந்து வாழும் உள்ளத் துணிவு இல்லாதவனாகவும், தலைவியின் மீதுள்ள காதல் உணர்வு மிகுதியால் நோயால் வருந்தும் வருத்தத்தை உணர்பவனாகவும் காணப்படுகிறான். இங்கு தலைவன் 'கையாறு', 'இடுக்கண்' எனும் மெய்ப்பாட்டு உணர்வை வெளிப்படுத்துகிறான்.

பரத்தையற் பிரியும் தலைவன், தலைவியின் ஊடலைத் தணிக்க, தன்னுடன் விருந்தினை அழைத்து வருகிறான். ஏனெனில் விருந்தோம்பல் பண்பு, எச்சூழலிலும் 'விருந்து எதிர்கோடல்' என்ற பண்பு தலைவன்–தலைவியரிடையே இருப்பதால், விருந்துவரின் முகம் சுளிக்காமல் வரவேற்று உபசரிக்கும் போது தன்னுடனான ஊடலையும் தலைவி தவிர்த்து விடுவாள் என்று எண்ணி,

**"எமக்கே வருகதில் விருந்தே சிவப்புஆன்று**
**சிறியமுள் எயிறு தோன்ற**
**முறுவல் கொண்ட முகங்காண் கம்மே''** (நற். 120:10-12, ப. 158)

என்று தலைவியின் ஊடலைத் தவிர்க்க விருந்தினை வாயிலாகப் பயன்படுத்தி இல்லத்திற்குள் நுழைகிறான். இதில் தலைவன் பரத்தையற் பிரிந்தாலும் அவனது மனம் தலைவியின் மீதான காதலுணர்வையே வட்டமிடும் தன்மை கொண்டதால் தலைவியை நாடி வருபவனாகத் தலைவன் காணப்படுகிறான். மேலும் தலைவன், தலைவியின் மழலை மாறாத நகைப்பைக் கண்டு தனது 'நகை' மெய்ப்பாட்டை வெளிப்படுத்துகின்றான்.

பரத்தையை நாடிச் சென்ற தலைவன் மீது, ஊடல் கொண்டு இருக்கும் தலைவியின் கோபத்தைப் போக்க வாயில்களை நாடி உள்ளே நுழைந்து தலைவியைச் சமாதானப்படுத்தும் உணர்வு கொண்டவனாகத் தலைவன் காணப்படுகின்றான். இதற்கு வாயிலாகப் புதல்வனைப் பயன்படுத்துகிறான். இதனை,

**"..... ..... ..... தெருவில்**
**தேர்நடை பயிற்றும் தேமொழிப் புதல்வன்**
**பூநாறு செவ்வாய் சிதைத்த சாந்தமொடு**
**காமர் நெஞ்சம் துரப்ப, யாம் தன்**
**முயங்கல் விருப்பொடு குறுகினே மாக''** (நற். 250:2-6, ப. 336)

என்ற நற்றிணைப் பாடல் வரிகள் விளக்குகின்றன. இங்கு தலைவன், மழலை மாறாத மகனின் சிரிப்பைக் கண்டு, நகை எனும் மெய்ப்பாட்டு உணர்வை வெளிப்படுத்துகிறான்.

தலைவி, தலைவனின் குலம் விளங்க மகனைப் பெற்றதைக் கேள்விப்பட்டதும் தலைவன், மகனுடன் படுத்திருந்த தலைவியை நெருங்கி,

**“புதல்வன் ஈன்றெனப் பெயர்பெயர்த்து அவ்வரித்**
**திதலை அல்குல் முதுபெண்டு ஆகித்**
**துஞ்சுதி யோமெல் அம்சில் ஓதி எனப்**
**பல்மாண் அகட்டில் குவளை ஒற்றி**
**உள்ளினென் உறையும் எற்கண்டு மெல்ல**
**முகைநாண் முறுவல் தோற்றித்**
**தகைமலர் உண்கண் கைபுதைத் ததுவே’’** (நற். 370:5-11, ப. 495)

என்று கூறி தலைவியின் செயலை எண்ணி மகிழ்ந்து பாணனிடம் கூறினான். இதில் தலைவன் தலைவியோடு மகிழ்ந்திருந்த உணர்வினை எண்ணி மகிழும் தன்மையைக் காணமுடிகிறது. நற்றிணை மருதத் தலைவன் பரத்தையை நாடிச் செல்லும் பண்பு கொண்டவனாகக் காணப்படுகிறான். தலைவி மகனைப் பெற்றதும் முதுபெண்டாகி விடுவாள் என்ற மனப்போக்கினைக் கொண்டவனாகக் காணப்படுகிறான். இங்கு தலைவன் ‘புணர்வு’ எனும் ‘உவகை’ மெய்ப்பாட்டு உணர்வு கொண்டவனாகக் காணப்படுகின்றான்.

**குறுந்தொகை**

குறுந்தொகை மருதத் திணையில் 48 பாடல்கள் உள்ளன. அவற்றில் தலைவன் கூற்றாக ஒரு பாடல் மட்டுமே அமைந்துள்ளது. அது தலைவியின் ஊடலைப் போக்கும் தலைவன், தன்னெஞ்சிடம் தலைவி நம்மீதான ஊடல் தணியாமல் மேலும் மேலும் கோபம் கொள்கிறாள். எனவே இனி அவள் நமக்கு யாரோ என்று எண்ணிக் கொள்ள வேண்டியதுதான் என்று புலம்பும் தன்மையினை,

**“இனைமதி வாழிய நெஞ்சே! மனைமரத்து**
**எல்லுறும் மௌவல் நாறும்**
**பல்லிருங் கூந்தல் யாரளோ நமக்கே?’’** (குறுந். 19, ப. 44)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் தலைவன், தலைவியின் கோபத்தைக் கண்டு வருந்துபவனாகத் திகழ்கின்றான். இங்கு தலைவன், தன்னைத் தலைவி எளியன் ஆக்குதலாள் ‘இளிவு’ எனும் ‘இளிவரல்’ மெய்ப்பாட்டு உணர்வினை வெளிப்படுத்துகிறான்.

**ஐங்குறுநூறு**

ஐங்குறுநூறு மருதத் திணையில் மொத்தம் 100 பாடல்கள் உள்ளன. அவற்றில் தலைவன் கூற்றாக ஏழு பாடல்கள் அமைந்துள்ளன.[55] களவுக்காலத்தில் தலைவனிடம், தோழி 'உனக்குத் தலைவியை மணந்து கொள்ளுமாறு தர தலைவியின் பெற்றோர் மறுக்கக் காரணம், உன் பெற்றோர் மற்றும் உறவினர் சென்று கேட்காததால் தான்' என்று கூறியதும் தலைவன்,

**"கருங்கோட்(டு) எருமைச் செங்கண் புனிற்றாக்**
**காதல் குழவிக்கு ஊறுமுலை மடுக்கும்**
**நுந்தை நும்மூர் வருதும்**
**ஒண்டொடி மடந்தை நின்னையாம் பெறினே''** (ஐங். 92, ப. 124)

என்று தோழியிடம், தலைவியைத் தனக்குமணமுடித்துத் தருவது உறுதியென்றால் தானே வருகிறேன் என்று கூறினான். இதில் தலைவன், தலைவியை மணந்து சேர்ந்து வாழும் விருப்பம் கொண்டவனாகக் காணப்படுகின்றான். இங்கு தலைவன் துன்பம் நீங்கி மகிழ்ச்சி கொள்ளும் 'உவகை' எனும் மெய்ப்பாட்டு உணர்வையும் நன்னடையால் வரும் 'பெருமிதம்' எனும் மெய்ப்பாட்டு உணர்வையும் வெளிப்படுத்துகிறான்.

தலைவன், தலைவியை மணப்பதற்காக வேண்டிய பொருளை ஈட்டத் தலைவியைப் பிரிந்து, நோக்கம் நிறைவேறி வெற்றியொடு திரும்பியவன், தலைவியை மணந்தால் களவுக்காலம் போல அஞ்சி ஒழுக வேண்டாம். மேலும் தலைவன்–தலைவி இருவரும் சேர்ந்து மகிழ்வதைக் கண்டு அலர் தூற்றிய ஊரார் இனிமேல் கழனிகளில் பூக்கும் தாமரை போல் முகம் மலர்வர் என்று எண்ணி மகிழ்கிறான். இதனை,

**"மள்ளர் அன்ன தடங்கோட்(டு) எருமை**
**மகளிர் அன்ன துணையொடு வதியும்**
**நிழல் முதிர்இலஞ்சிப் பழனத் ததுவே**
**கழனித் தாமரை மலரும்**
**கவின்பெறு சுடர்நுதல் தந்தை ஊரே''** (ஐங். 94, ப. 127)

என்ற பாடலடிகள் மூலம் அறிய முடிகிறது. இதில் தலைவன், தன் திருமணத்திற்குத் தேவையான பொருளைத் தானே ஈட்டிச் சேர்த்த உறுதியான மனப்பாங்கு கொண்டவனாக திகழ்கிறான். களவுக் காலத்தில் அஞ்சி வாழ்கின்ற தலைவன் கற்புக்காலத்தில் அஞ்சாமல் தலைவியோடு உரிமையுடன் வாழ்கிறான் என்றும் அறிய முடிகிறது. மருதநிலத் தலைவன் களவுக்காலத்தை விட கற்புக்காலத்தையே பெரிதும் விரும்புகின்றவனாகவும் உவகை மெய்ப்பாட்டுணர்வினனாகவும் திகழ்கின்றான். இதன் மூலம் ஆடவரின் மனஉணர்வு திணைக்குத் திணை வேறுபடுவதை அறியமுடிகிறது.

தலைவி, தலைவன் பரத்தையற் பிரிந்ததால் ஊடல் கொண்டிருந்த போது, அவ்வூடலைத் தணித்து, அவளுடன் புதுப்புனல் ஆடவிரும்பிய தலைவன்,

**"குவளை உண்கண் ஏஎர் மெல்லியல்**
**மலர்சூர் மலிர்நிறை வந்தெனப்**
**புனலாடு புணர்துணை ஆயினள் எமக்கு"** (ஐங். 72, ப. 102)

என்றும்,

**"வண்ண ஒண்தழை நுடங்க வால்இழை**
**ஒண்ணுதல் அரிவை பண்ணை பாய்ந்தெனக்**
**கள்நறும் குவளை நாறித்**
**தண்ணென்(று) இசினே பெருந்துறைப் புனலே"** (ஐங். 73, ப. 103)

என்று, தலைவித் தன்னுடன் களவுக்காலத்தில் சேர்ந்து மகிழ்வோடு புனலாடியதைத் தலைவிக்கு நினைவு கூரச் செய்து இன்றும்அதுபோல் தன்னுடன், தனக்குத் துணையாக தலைவி புனலாட வரவேண்டும் என எண்ணுகிறான். களவுக் காலத்தில் தலைவி புனலாட மருதமரம் உதவியது போல, தனக்கு, கற்பில், களவுக்கால, 'புனலாட்டு நினைவு' உதவ வேண்டும் என எண்ணி,

**"கரைசேர் மருதம் ஏறிப்**
**பண்ணை பாய்வோள் தண்ணறுங் கதுப்பே"** (ஐங். 74, ப. 104)

என்று கூறி தலைவியைத் தன்னுடன் புனலாட அழைக்கிறான். இதில் தலைவன், களவுக் காலத்தில் தலைவியுடன் சேர்ந்து பெற்ற இன்பத்தை, காதல் உணர்வை, திருமணத்திற்கும் பின்னும் பெற வேண்டும் என்ற பேரவா கொண்டவனாகவும் தலைவியின் ஊடலைத் தணித்துஅவளுடன் சேர்ந்து புனலாடும் விருப்பம் கொண்டவனாகவும், தலைவிக்கு களவுக் கால நினைவை நினைவு கூரச் செய்யும் நுட்பமான உணர்வு கொண்டவனாகவும் காணப்படுகின்றான். மேற்குறிப்பிட்ட பாடல்களில் தலைவன் 'புணர்வு', 'விளையாட்டு' எனும் 'உவகை' மெய்ப்பாட்டு உணர்வை வெளிப்படுத்துவதை அறிய முடிகிறது.

பரத்தையொழுக்கம் புரியாமல் தலைவியோடு சேர்ந்து வாழ்ந்திருக்கும் தலைவனை, பரத்தையோடு அவனுக்கு பழக்கம் உண்டென்று எண்ணித் தலைவி ஊடுகிறாள். அவ்வூடலைத் தணித்துத் தலைவன், தலைவியோடு கூடிஇன்புறும் வேளையில்,

**"பகன்றை வால்மலர் மிடைந்து கோட்டைக்**
**கருந்தாள் எருமைக் கன்று வெரூஉம்"** (ஐங். 97, ப. 130)

என்று தலைவியின் பொய்யான கோபத்தையும் அவளது உள்ளமும், உடலும் குளிர்ச்சியுடன் காணப்படுவதையும் உணர்ந்து மகிழ்கிறான். இதில் தலைவன், தலைவியின் அன்பை காதலை கண்டிப்பை உணர்ந்தவனாகக் காணப்படுகிறான். தலைவியின் அச்சத்தைப் போக்கும் உணர்வினனாகக் காணப்படுகிறான். இங்கு தலைவன் தலைவியை மகிழ்வித்து

தானும் துன்பம் நீங்கி மகிழும் 'உவகை' எனும் மெய்ப்பாடும் 'நகை' மெய்ப்பாடும் உடையவனாகத் திகழ்கிறான்.

பரத்தையிற் பிரிந்து வந்த தலைவனுக்கு தலைவி வாயில் நேர்கிறாள். அந்நிலையில் தலைவியின் செயலை,

**"பூக்கஞல் ஊரன் மகள்இவள்**
**நோய்க்குமருந் தாகிய பணைத்தோ ளாளே''** (ஐங். 99, ப. 133)

என்று எண்ணி வியந்து 'மருட்கை' எனும் மெய்ப்பாட்டு உணர்வை வெளிப்படுத்துபவனாகக் காணப்படுகிறான்.

**கலித்தொகை**

பரத்தையின் பிரிந்து வந்த தலைவன், தன் வீட்டுக்கு வந்ததைக் கண்டு ஊடல் கொண்ட தலைவியிடம் தூது அனுப்ப இயலாமையால் தானே வந்து தலைவியைப் பிரிந்த துயரத்தைப் போக்குமாறு கூறி ஊடலைத் தணிக்கிறான்.

**"என்இவை, ஒருயிர்ப் புள்ளின் இருதலை யுள்ஒன்று**
**போர்எதிர்ந் தற்றாப் புலவல்நீ கூறின்என்?**
**ஆருயிர் நிற்குமாறு யாது''** (கலி. 89:4-6, ப. 327)

என்றும்,

**"மருந்தின்று; மன்னவன் சீறில் தவறுண்டோ? நீ நயந்த**
**இன்னகை! தீதோ இலன்''** (கலி. 89:10-11, ப. 327)

என்று குறிப்பிடுவதிலிருந்து அறிய முடிகிறது. எதைச் சொன்னால் எப்படிச் சொன்னால் தலைவியின் ஊடல் தணியும் என்பதை உணர்ந்தவன் தலைவன். இங்ஙனம் தலைவியின் ஊடலைத் தணிக்கும் 'ஆராய்ச்சி' என்ற மெய்ப்பாட்டுணர்வினைக் கொண்டவனாகத் தலைவன் திகழ்வதை பின்வரும் இருபாடல்களும் தெளிவாக உணர்த்துகின்றான். இதைக் கேட்ட தலைவி ஊடல் தணிந்தவளாய்

**"மாண மறந்து, உள்ளா நாணிலிக்கு இப்போர்**
**புறஞ்சாய்ந்து காண்டைப்பாய் நெஞ்சே! உறழ்ந்து இவனைப்**
**பொய்ப்ப விடேஎம் எனநெருங்கின், 'தப்பினேன்'**
**என்றுஅடி சேர்தலும் உண்டு''** (கலி. 89:12-15, ப. 327)

என்ற தலைவின் மன எண்ணத்திலிருந்து, தலைவன் பரத்தையிடம் செல்லவில்லை என்று பொய் கூறுபவனாகவும் மேலும் தலைவி ஊடல் கொண்டால் 'தவறு செய்து விட்டேன் என்று காலில் விழுவதற்கும் தயங்காதவனாகவும் காணப்படுகிறான். தலைவியோடு சேர்ந்து வாழும் வாழ்வினை எவ்வாறேனும் முயன்று பெரும் திண்மை வாய்ந்தவனாகத் திகழ்கின்றான் என்பதை அறிய முடிகிறது. இங்கு தலைவன், தன்னிலையில் தாழ்ந்து

தலைவியின் காலில் விழவும் தயங்காத நிலையில் 'அசைவு' எனும் மெய்ப்பாட்டு உணர்வையும் தலைவியுடன் சேர்ந்து வாழ வேண்டும் என்ற உறுதியான உள்ள உணர்வையும் வெளிப்படுத்துகிறான்.

பரத்தையரிடம் சென்று பின் பிரிந்து வந்த தலைவன் மீது தலைவி ஊடல் கொள்கிறாள். அதனைத் தவிர்க்க எண்ணிய தலைவன், தெய்வ மகளிர் விளையாடுவதுபோல் கனவு கண்டேன், அக்கனவில்,

**"...... நேரிணர் முசிய வண்டெல்லாம் அவ்வழிக்**
**காரிகை நல்லார் நலம்கவர்ந்து உண்பபோல் ஓராங்குமூச''**
**(கலி. 92:30-31, ப. 338)**

என்று, பெண்களின் அழகை நுகரும் ஆடவர் போல அப்பெண்கள் மீது ஒன்று போல வண்டுகள் மொய்த்தன. அவர்களுள் ஊடலால் கணவனைத் தழுவாதுஇருந்த ஒரு பெண், வண்டு மொய்ப்பதைக் கண்டு அஞ்சி ஊடலைக் கைவிட்டு குளிர்ந்த மாலையை உடைய அவனது மார்பைத் தழுவினாள், இக்கருத்தை

**".... புலவியால் புல்லாதிருந்தாள் அலவுற்று**
**வண்டினம் ஆர்ப்ப, இடைவிட்டுக் காதலன்**
**தண்தார் அகலம் புகும்'' (கலி. 92:39-41, ப. 338)**

என்ற பாடல் புலப்படுத்துகிறது. மனதில் புதைந்துள்ள நினைவே கனவாக வருகிறது என்ற உளவியல் ஆய்வாளரான பிராய்டின் கூற்றை மெய்ப்பிப்பதுபோல், தலைவியோடு சேர்ந்து மகிழவேண்டும் என்ற தலைவனின் உள்ளத்து நினைவே கனவாக வெளிப்பட்டதாக தலைவன் தலைவியிடம் கூறுவது கருதத்தக்கது.

**அகநானூறு**

அகநானூறு மருதத் திணையில் மொத்தம் 40 பாடல்கள் உள்ளன. அவற்றுள் மூன்று பாடல்கள் தலைவன் கூற்றாக அமைந்துள்ளன.[56] தலைவன் பரத்தையற் சேரியிலிருந்து மீண்டு வந்து தலைவியோடு சேர்ந்து வாழ தோழியை வாயில் வேண்டுவது, ஊடலின் போது தலைவியை நினைந்து நெஞ்சிற்குள் வருந்துவது என்ற வகையில் மூன்று பாடல்களும் அமைந்துள்ளன.

புறத்தொழுக்கம் புரிந்து தலைவியைக் காண வந்த தலைவன், தோழியிடம் தன்னைப் பற்றி தலைவிக்கு எடுத்துச் சொல்லி தலைவியோடு தன்னைச் சேர்த்து வைக்குமாறு வேண்டுகிறான். தோழி மறுக்கவே தலைவன்,

**"... ..... ..... கிளிஎனச்**
**சிறிய மிழற்றுஞ் செவ்வாய், பெரிய**
**கயல்என அமர்த்த உண்கண், புயல்எனப்**

**புறந்தாழ்பு இருளிய பிறங்குகுரல் ஐம்பால்**
**மின்நேர் மருங்குல், குறுமகள்**
**பின்னிலை விடாஅ மடம்கெழு நெஞ்சே''** (அகம். 126:17-22, ப. 12)

என்று மிக்க அழகுடைய தலைவியைப் பின் தொடர்ந்து தன் நெஞ்சு சென்றதாகக் கூறுகிறான். இங்கு தலைவன் தன்னிலையில் தாழ்ந்த தோழியிடம் வேண்டுவதில் 'அசைவு' எனும் மெய்ப்பாட்டு உணர்வைப் புலப்படுத்துகிறான்.

தலைவன், தலைவியின் ஊடலைத் தணிக்கவும் கூடி மகிழவும் முயன்றான். அவ்வாறு முயல முயல அவளது ஊடலும் அதிகமாயிற்று எனவே மனம் நொந்து,

**"உவர்நீங்கு கற்பின்எம் உயிர்உடம் படுவி**
**முருங்காக் கலிங்கம் முழுவதும் வளைஇ**
**பெரும்புழுக்கு உற்றநின் பிறைநுதல் பொறிவியர்**
**ஊறுவளி ஆற்றச் சிறுவரை திற'' என**
**ஆர்வ நெஞ்சமொடு போர்வை வவ்வலின்,**
**உறைகழி வாளின் உருவுபெயர்ந்து இமைப்ப**
**மறைதிறன் அறியாள் ஆகி, ஓய்யென**
**நாணினள் இறைஞ்சி யோளே''** (அகம். 136:19-26, ப.35)

என்று தலைவியும் தானும் கூடிஇன்பமாய் வாழ்ந்த முன் நிகழ்ச்சியை எண்ணி வருந்துகிறான். இங்கு தலைவன், வருத்தம் எனும் மெய்ப்பாட்டு உணர்வினைப் புலப்படுத்துகிறான்.

தலைவன் பரத்தையர் சேரியிலிருந்து மீண்டு வந்து, தலைவியைச் சந்தித்து இன்புறத் தோழியின் வாயிலை வேண்டி, முன் நிகழ்ந்த ஒன்றை நினைவுகூர்ந்து,

**"முயங்கல் விருப்பொடு முகம்புதை திறப்ப**
**அஞ்சினள் உயிர்த்த காலை யாழநின்**
**நெஞ்சம் படர்ந்தது எஞ்சாது உரைஎன''** (அகம். 86:23-25, ப. 193)

என்று கூறியபோது, நாணுற்று தலைகுனிந்தவள் இப்போது தன்னுடன் ஊடல் நிகழ்த்த வாய்ப்பில்லை. எனவே தலைவியிடம் தன்னைப் பற்றியும், தான் தலைவிமீது கொண்டுள்ள நம்பிக்கையையும் காதல் உணர்வையும் எடுத்துச் சொல்லி தலைவியுடன் கூடி மகிழுமாறு செய்க, என்று தோழியிடம் கூறுகிறான். இதில் தலைவன், தலைவியின் மன உணர்வினை அறிந்து மதிப்பவனாகவும், தன் காதலுணர்வை, நம்பிக்கையுணர்வை ஆழமாக உணர்த்தும் திண்மை கொண்டவனாகவும் காணப்படுகிறான். இங்கு தலைவன் தோழியிடம் வேண்டுவதில் 'அசைவு' எனும் மெய்ப்பாட்டு உணர்வையும், தலைவியை மகிழ்விக்கும் 'உவகை' எனும் மெய்ப்பாட்டு உணர்வையும் கொண்டு திகழ்கிறான்.

மருதத்திணையில், மழலையால் வரும் நகை, அசைவினால் வரும் அழுகை, வருத்தம் இளிவினால் வரும் இளிவரல், புணர்வால் வரும் உவகை, இசைமையால் வரும் பெருமிதம், வியப்பால் வரும் மருட்கை, மனத்துயரால் வரும் கையாறு, உடல் துன்பத்தினால் வரும் இடுக்கண், எதையும் ஆராய்ந்து செயல்படும் ஆராய்ச்சி போன்ற மெய்ப்பாடுகள் நிறைந்தவனாகக் காணப்படுகின்றான். இதன் மூலம் மருத நிலத் தலைவன் வருத்த உணர்வினன், நகை உணர்வினன், இளிவு உணர்வினன், புணர்வு உணர்வினன், இசைமை உணர்வினன், மருட்கை உணர்வினன், அசைவு உணர்வினன், கையாறு உணர்வினன், பெருமித உணர்வினன் என்பதை அறிய முடிகிறது. தலைவியைப் பிரிந்து வாழும் உள்ளத்துணிவு அற்றவனாகக் காணப்படுகின்றான்.

**மருதத் திணையில், தலைவன் கூற்றில் ஆடவர் பின்வரும் உணர்வுநிலைப் பட்டவர்களாகக் காணப்படுகின்றனர்**

- தலைவி மீதான காதல் உணர்வு மிகுதியால் வருந்துபவன். (நற். 80, அகம். 126)
- தலைவியின் ஊடலைத் தவிர்க்க விருந்து, புதல்வன், தோழி, கனவு போன்றவற்றை வாயிலாகப் பயன்படுத்தி தலைவியோடு சேர்ந்து வாழ விரும்பும் உணர்வினன். (நற்–120,250,குறுந் –19, அகம் –86, கலி–92)
- தன்னை பரத்தைமேற் சென்றதாக ஐயுற்ற தலைவியின் ஐயத்தையும், ஊடலையும் நீக்கி தன் கற்பு நிலையை மெய்ப்பிக்கத் துடிப்பவன். (நற். 250, ஐங். 97)
- களவுக் காலத்தில், அஞ்சாமல் தலைவியின் பெற்றோரிடம், தலைவியைப் பெண்கேட்கும் துணிவு கொண்டவன். (ஐங் –92)
- தலைவியுடன் களவில் கூடி மகிழ்வதை விட, கற்பில் கூடி மகிழ்வதை விரும்புபவன் (ஐங். 94)
- தலைவியுடன் களவில் பெற்ற புனலாடும் இன்பத்தைக் கற்பிலும் பெற விரும்புபவன். (ஐங். 72,73,74)
- தோழி வாயில் மறுத்தபோதும் தன்னை ஏற்றுக்கொண்ட தலைவியின் பண்பை நினைத்து மகிழ்ந்தவன். (ஐங். 99)
- தலைவியின் ஊடலைத் தானே தணிக்க பரத்தையரிடம் செல்லவில்லை என்று பொய் கூறவும் துணிந்தவன். அவள் காலில் விழவும் தயங்காதவன். (கலி–89)
- தலைவன், தலைவியின் ஊடல் தணியாததால் மனம் நொந்து, தவிக்கும் உணர்வினன். (அகம்–136)

## ஈ. பாலைத்திணையில் தலைவன் கூற்றில் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வுகள்

சங்க இலக்கிய எட்டுத் தொகை அகநூல்களில் பாலைத்திணைப் பாடல்கள் மொத்தம் 530, அவற்றுள் 119 பாடல்கள் தலைவன் கூற்றாக அமைந்துள்ளன.[57] பாலைத் திணைப் பாடல்கள் பொதுவாக பிரிவு குறித்த பாடல்களாக அமைந்துள்ளன. தலைவன்–தலைவிக்கிடையேயான பிரிவையும், பாலையின் கொடுமையையும் இப்பாடல்கள் விளக்குகின்றன. தலைவன் பொருள் தேட தலைவியை விட்டுப் பிரிந்து செல்லும் போதும், தலைவியுடன் உடன்போக்கு நிகழ்த்தும் போதும் பாலைத்திணையில் கூற்றுகள் நிகழ்த்தப்படுகின்றன. தலைவன் பொருள் தேட தலைவியை விட்டுப் பிரிய எண்ணும்போது தலைவியின் நலனை எண்ணி வியந்தும், வருந்தியும் தன்னெஞ்சிடம் கூற்று நிகழ்த்துகின்றான். உடன் போக்கில் தலைவியிடமும், பொருள் வயிற்பிரிந்து சென்று இடைச்சுரத்திலும், பொருள் தேடி திரும்பி வரும்போது தேர்ப்பாகனிடமும், வந்தபின் தலைவி, தோழி இருவரிடமும் தன் மன உணர்வினைத் தலைவன் பகிர்ந்து கொள்கின்றான். தலைவன், தலைவியை விட்டு பிரியக் கருதும்போது வருந்தும் தலைவியின் மன உணர்வினை, உணர்ந்துஅவளைத் தேற்றி சிறிது காலம் தங்கி பின்னர் பிரியும் இயல்பினனானத் தலைவனை பாலைத்திணையில் காண முடிகின்றது.

### நற்றிணை

நற்றிணையில் பாலைத்திணை தலைவன் கூற்றுப்பாடல்கள் மொத்தம் 29 பாடல்கள் ஆகும்.[58] அவை தலைவன்–தலைவியுடனான உடன்போக்கில் தலைவிக்கு களைப்பு தெரியாமல் இருக்க பல்வேறு சூழல்களைக் காட்டி, மகிழ்வித்து தன் மன உணர்வினையும் வெளிப்படுத்துகிறான். பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்கு தலைவியை எண்ணி செலவழுங்குதல், தலைவியைத் தேற்றுதல், பொருள் வயிற் பிரிந்து இடைச்சுரத்தில் தலைவியை எண்ணி வருந்துதல், பொருள்முற்றி திரும்புவதற்குள் வந்த கார்ப்பருவத்தை எண்ணி வருந்துதல் போன்ற வகையில் நற்றிணை பாலைத் திணைத் தலைவன் கூற்றுகள் அமைந்துள்ளன.

தலைவன்–தலைவி இருவரும் உடன்போக்குக்கு உடன்பட்டு தலைவியை இரவிலே யாரும் அறியாவண்ணம் அழைத்துச் செல்கின்றான். விடிந்த பின்னர் தலைவியிடம், இனிவரும் இடங்கள் எல்லாம் பொழிலும், ஊர்களும் நிறைந்தவை. ஆதலால் நீ விளையாடிக் கொண்டு வருந்தாமல் செல்லலாம் என்று தலைவியின் வழியிடைக் களைப்பை உணர்ந்து குறிப்பிடுகின்றான். இதனை,

> **“நிழல்காண் தோறும் நெடிய வைகி**
> **மணல்காண் தோறும் வண்டல் தைஇ**
> **வருந்தாது ஏகுமதி வாலெயிற் றோயே’’** (நற். 9:7-9, ப. 12)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. மேலும் தலைவன் தலைவி தனக்குக் கிடைத்த – கிடைக்கப் போவதை எண்ணி,

**"அழிவில முயலும் ஆர்வ மாக்கள்**
**வழிபடு தெய்வம் கண்கண் டாஅங்கு"** (நற். 9:1-2, ப. 12)

என்று தலைவியிடம் கூறுகின்றான். இதில் தலைவன், தலைவியைக் கண்டு அவள் தோள்களை அடைந்ததை, சிதையாமல் செயலை மேற்கொள்பவனுக்கு அச்செயல் வெற்றி தருவது போல தலைவியைப் பெற்றுவிட்டேன் என்று கூறி வியக்கிறான். இங்கு தலைவன் 'மருட்கை' எனும் மெய்ப்பாட்டு உணர்வையும் 'புணர்வு' எனும் 'உவகை' மெய்ப்பாட்டுணர்வையும் வெளிப்படுத்துகிறான்.

உடன்போக்கில் தலைவன் – தலைவி இருவரும் பொழிலையும் ஊரையும் கடந்து பாலை வழியே நெடுந்தூரம் வந்தபிறகு தலைவன்,

**"அஞ்சுவழி அஞ்சாது அசைவழி அசைஇ**
**வருந்தாது ஏகுமதி வால் இழைக் குறுமகள்"** (நற். 76:4-5, ப. 100)

என்று தலைவியிடம், பாலையின் கொடிய வழியில் நடந்த உனது மெல்லிய கால்கள் வருந்துகின்றன. அவ்வருத்தம் நீங்க எங்கு தங்க வேண்டும் என்று எண்ணுகிறாயோ அங்கு தங்கி இளைப்பாறிச் செல்லலாம் என்கிறான்.

தலைவன் – தலைவியை உற்றார் – உறவினர் அறியாமல் தலைவன் தன் ஊருக்கு அழைத்துக் கொண்டு வரும் வழியில் தலைவியின் சோர்வினைக் கண்டு தலைவன்,

**"மழகளிறு உரிஞ்சிய பராரை வேங்கை**
**மணல்இடு மருங்கின் இரும்புறம் பொருந்தி**
**அமர்வரின் அஞ்சேன் பெயர்க்குவென்**
**நுமர்வரின் மறைகுவென் மாஅயோளே"** (நற். 362:7-10, ப. 484)

என்று தலைவயிடம், கூறுமிடத்தில் தலைவியின் சுற்றத்தை மதிப்பவனாகவும், தலைவிக்காகப் போரிடவும் தயங்காத திடமான உள்ளத்துடன் வீர உணர்வு வெளிப்படும் வகையில் காணப்படுகின்றான்.

அதே வேளையில் தலைவியின் கால்கள் கரடு முரடான பாதைகளில் தனக்காகத் தன்னுடன் நடந்து வந்ததால் சோர்வுடன் காணப்பட்டன. தலைவியை அடைய முடியாமல் பெரிதும் வருத்தமுற்று இருந்த தனக்கு, தலைவி தன் நாணமாகிய பண்பை ஒதுக்கிவிட்டு தன்னுடன் வந்ததைக் கண்டு மகிழ்வதோடு, தன் நோய்க்கு தலைவி மருந்தாக அமைந்ததையும்,

**"..... .... ...... ..... மலர்ந்த**
**நல்நாள் வேங்கைப் பொன்மருள் புதுப்பூப்**
**பரந்தன நடக்கயாம் கண்டனம் மாதோ;**
**காண்இனி வாழி எம் நெஞ்சே! - நாண்விட்டு**
**அருந்துயர் உழந்த காலை**
**மருந்துஎனப் படூஉம் மடவோ ளையே"** (நற். 384:6-11, ப. 514)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் தலைவன் தலைவியின் துணிச்சலை எண்ணி வியந்து அவளைக் காக்கும் உணர்வினனாகக் காணப்படுகின்றான். இங்கு தலைவன் 'மருட்கை' எனும் மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துகிறான்.

பாலை வழியே தலைவியை அழைத்துச் செல்லும் தலைவன், அங்கு நிகழும் உயிரினக் காட்சியைத் தலைவிக்குக் காட்டி அதன்மூலம் தன் மன உணர்வினை வெளிப்படுத்துகிறான். இதனை,

**"..... ..... ..... .... வலிசிறந்து**
**வன்சுவல் பராரை முருக்கிக் கன்றொடு**
**மடப்பிடி தழிஇய தடக்கை வேழம்**
**தேன்செய் பெருங்கிளை இரிய வேங்கைப்**
**பொன்புரை கவழம் புறந்தருபு ஊட்டும்'' (நற். 202:2-6, ப. 273)**

என்ற பாடலடிகள் மூலம் உணர முடிகிறது. இத்தகைய உயிரினக் காட்சியைத் தலைவிக்குக் காட்டி, "நானும் உன்னோடு வாழ்ந்து, நமக்குப் பிறக்கும் குழந்தைகளைக் காத்து இன்பமாக வாழலாம்; இன்ப வாழ்வினை உனக்கு அளிப்பேன்" என்று தன் உள்ள கிடக்கையைத் தலைவியிடம் வெளிப்படுத்துகிறான். தலைவன், தலைவி, குழந்தைகளுடன் சேர்ந்து வாழ எண்ணும் உணர்வினனாகக் காணப்படுகின்றான். இதே போன்று, இன்னொரு காட்சியைக் கண்ட தலைவன்,

**"பைம்புறப் புறவின் செங்காற் சேவல்**
**களரி ஓதுங்கிய கவைமுட் கள்ளி**
**முளரிஅம் குடம்பை ஈன்றுஇளைப் பட்ட**
**உயவுநடைப் பேடை உணீஇய மன்னர்**
**முனைகவர் முதுபாழ் உகுநெற் பெறூஉம்'' (நற். 384:1-5, ப. 514)**

என்று தன் நெஞ்சிடம், பெண்புறாவிற்கு ஏற்பட்ட பசியைத் தீர்க்க ஆண்புறா முதிர் பாழிடம் (போரிட்டு வென்ற களர் நிலம்) சென்று அங்கு உதிர்ந்திருக்கும் நெற்களையெல்லாம் பொறுக்கிக் கொண்டுவந்து பெண் புறாவிற்கு அளிப்பது போல, தானும் தலைவியை அழைத்துச் சென்று, பொருள் ஈட்டி இல்லறம் சிறக்குமாறு வாழ்வேன் என்று இறைச்சியின் மூலம் தன்மன உணர்வினை வெளிப்படுத்துகிறான். இங்கு 'புணர்வு' எனும் 'உவகை' மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துகிறான்.

இவ்வாறு தலைவியை அழைத்துச் செல்லும் தலைவன், தன் ஊருக்கு அருகில் வந்து விட்டோம் என்பதை தலைவிக்குத் தெரிவிக்க, மூங்கில் நிறைந்த காட்டில் மேய்ந்த பசுக்கூட்டம் வீடு திரும்புகிற காரணத்தால் அவற்றின் கழுத்தில் கட்டப்பட்ட மணி ஒலிக்கின்ற ஓசை கேட்கிறது. எனவே நாம் ஊரை நெருங்கி விட்டோம், மிகவும் இருட்டுவதற்கு முன்னால் ஊர்போய்ச் சேரவேண்டும் எனவே விரைந்து வருவாயாக என்று கூறினான். இதனை,

**"..... ..... ...... நின்**
**வீபெய் கூந்தல் வீசவளி ஊர**
**ஏகுதி மடந்தை எல்லின்று பொழுதே**
**வேய்பயில் இறும்பில் கோவலர் யாத்த**
**ஆபூன் தெண்மணி இயம்பும்**
**உதுக்காண் தோன்றுஎம் சிறுநல் ஊரே''** (நற். 264:4-9, ப. 355)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் தலைவன் தலைவியைத்தன் ஊருக்கு இடரின்றி அழைத்து வந்து சேர்த்து விட்ட மகிழ்ச்சியும், தலைவியை விரைந்து மணம் முடித்து அவளுடன் சேர்ந்து வாழப் போகும் இன்ப வாழ்வை எண்ணி மகிழ்வதையும் காணமுடிகின்றது. இங்ஙனம் உடன்போக்கின் போது தலைவனின் உடலைவிட உள்ளத்துணர்வின் ஓட்டம் அதிவேகமாக காணப்படுகின்றது. இங்கு தலைவன் 'பெருமிதம்' மற்றும் 'புணர்வு' எனும் 'உவகை' மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துகிறான்.

தலைவன் – தலைவியைப் பிரிந்து முன்பொரு காலத்து பொருள்தேடச் சென்றான். அப்பொழுது நிகழ்ந்த நிகழ்ச்சியை நினைந்து மீண்டும் பொருள்தேடச் செல்ல நினைக்கும் போது மனம் தடுக்கிறது. காதல் துன்பத்தை மிகுவிக்கும் மாலைப் பொழுதில், எடுத்த செயலை முடித்தது போன்ற இனிமையுடைய தலைவி துன்புற்று வருந்துவாள். அதனை எண்ணாத நெஞ்சே நீ வேண்டுமானால் செல், நான் வரமாட்டேன் என்று கூறுகிறான். இப்பாடலில் தலைவியை ''வினைமுடித்தன்ன இனியோள்'' [59] என்று குறிப்பிடுவது கருதத்தக்கது.

தலைவன் பொருள் காரணமாகப் பிரிவதா வேண்டாவா என்ற இக்கட்டான நிலைக்கு ஆளாகின்றான். இத்துன்பத்திற்குத் தன் நெஞ்சமே துணையாகிறது. எனவே,

**".... வாழியெம் நெஞ்சே வெம்போர்**
**மழவர் பெருமகன் மாவள் ஓரி**
**கைவளம் இயைவ தாயினும்**
**ஐதுஏகு அம்ம இயைந்து செய் பொருளே''** (நற். 52:8-11, ப. 69)

என்று நெஞ்சிடம், நான் தலைவியை ஆரத் தழுவி அடையும் இன்பத்தையே என்றும் பெற விரும்புகிறேன். ஆனால் 'நீயோ பொருள் தேடும் முயற்சியில் ஈடுபாடு கொள்கிறாய் நீ வலியுறுத்தும் பொருளானது, போரில் வல்ல மழவர் மன்னனாகிய, கொடைப்பண்பு நிறைந்த ஓரியின் செல்வமே கிடைப்பதாயினும், அது தலைவியிடம் பெறும் இன்பத்தை விடச் சிறந்தது அல்ல வலிமையும் அற்றது' எனக் குறிப்பிடுகின்றான்.

பொருள் வயிற் பிரியக் கருதிய தலைவன், தலைவி கலங்கி நின்றதை நினைத்து மனம் வருந்தி,

**''இறந்துசெய் பொருளும் இன்பந் தரும்எனின்**
**இளமையின் சிறந்த வளமையும் இல்லை**
**இளமை கழிந்த பின்றை வளமை**
**காமம் தருதலும் இன்றே அதனால்**
**நில்லாப் பொருட்பிணிச் சேறி**
**வல்லே நெஞ்சம் வாய்க்கநின் வினையே''** (நற். 126:7-12, ப. 165)

என்று கூறுவதில் தலைவியினால் கிடைக்கப்பெறும் இன்பத்தைத் துய்க்க இயலாமல். இளமை கடந்தபிறகு, செல்வம் இன்பம் துய்க்க உதவாது. பொருளீட்டலை நாடி, உயிர் இழத்தலைவிடக் காதல் இன்பம் பெரிதல்லவா ஆகவே இவற்றை எல்லாம் ஒருசேர ஆராய்ந்து பொருள் ஈட்டும் ஆசையில் அகப்படாமல், இன்பம் துய்க்க எண்ணுவதை இடைக்கால முடிவாக ஏற்றுக்கொள்ளும் உணர்வு கொண்டவனாகக் காணப்படுகின்றான். இங்கு தலைவன் 'புணர்வு' எனும் 'உவகை', உணர்வோடு 'ஆராய்ச்சி' என்ற மெய்ப்பாட்டுணர்வும் கொண்டவனாகத் திகழ்கிறான்.

தலைவன் தன்னெஞ்சிடம், தலைவியைக் காட்டிலும் பாலை நிலத்தின்கண் சென்று பொருள் தேடுதல் சிறந்த ஒன்றாகுமா என்று கேட்டும் வகையில்,

**"தடமென் பணைத்தோள் மடநல் லோள்வயின்**
**பிரியச் சூழ்ந்தனை ஆயின் அரியதொன்று**
**எய்தினை வாழிய நெஞ்சே''** (நற். 137:2-4, ப. 180)

என்று இகழ்ந்து பேசும் தலைவன், தலைவிக்காக, தலைவியினால் கிடைக்கப் பெறும் இன்பநுகர்ச்சிக்காக தன்னெஞ்சைத் தானே இகழ்ந்து கொள்ளும் உணர்வினனாகச் செயல்படுகின்றான். இங்கு தலைவன் தன்னிலையில் தாழும் 'அசைவு' எனும் மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துகிறான்.

பாலைத்திணையில் ஒருசார் பாடல்கள் தலைவனிடம், பொருள்தேடும் உணர்வை வலியுறுத்தும் பாடல்களாகவும் அமைகின்றன. பொருள் தேடிவரத் தலைவன்—தலைவியைப் பிரியக் கருதியதை அறிந்த தலைவி பெரிதும் வருந்தினாள். அதனைக் கண்ட தலைவன், தலைவியின் அழகைக் கண்டு மயங்கினேன் எனினும் பொருள் தேடி பிரியக் கருதினேன். ஏனெனில் பொருளில்லையானால் நினைத்தும் பார்க்க இயலாத கொடுமையான வறுமை வருத்தும். எனவே நான் தலைவியைப் பிரியக் கருதியதில் வியப்பேதும் இல்லையே என்று எண்ணித் தெளியும் திடமான உள்ளம் கொண்டவன். இதனை,

**"ஆள்வினை வலிப்ப**
**பிரிவில் நெஞ்சு என்னும் ஆயின்**
**அரிதுமன் றம்ம, இன்மையது இளிவே''** (நற். 262:6-10, ப. 352)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் தலைவன் தலைவியின் நலனையும்இன்பத்தையும் விட பொருளின் இன்றியமையாமையை உணர்ந்தவனாகக்

காணப்படுகின்றான். இங்கு தலைவன் 'உடைமை' எனும் மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துகிறான். அதனோடு 'வறுமை' கண்டு அஞ்சுகின்றவனாகவும் காணப்படுகின்றான்.

தலைவன் கடுமையான பாலைவழியைக் கடந்து பொருள் ஈட்டச் செல்லும்போது, புதியோரிடம் பொருளைக் கவர்ந்து கொள்வதற்காகவே சிவந்த அம்பினை வைத்துக் கொண்டிருக்கும் கள்வர்கள் உலவும் அச்சம் தரும் பாலைவழியில் பொருள் தேடுவதை நினைத்து ஒருபுறமும், தலைவியின் அழகியத் தோள்களை எண்ணி மறுபுறமும் வருந்துவதாகக் குறிப்பிடுகிறான். இதனை, நற்றிணை **298**ஆம் பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் தலைவனின் மன உணர்வு, கள்வர்களின் சீழ்க்கை ஒலியை கேட்டு அஞ்சி பருந்தின் சேவல் தன்னுடைய கூட்டத்தில் சேர்வது போல் தலைவியின் நினைவால் ஈர்க்கப்பட்டு பொருள் தேடாமல் பின்வாங்கிச் செல்லுபவன் என்பதை உள்ளுறையாக வெளிப்படுத்தப்பட்டுள்ளது. இங்கு தலைவன், தன்னிலையில் தாழும் 'அசைவு' மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துகிறான்.

பொருள் ஈட்டப் பிரியக் கருதிய தலைவனின் எண்ணத்தைப் புரிந்து கொண்ட தலைவி தலைவனின் தோள்மேல் சாய்ந்து கலங்கி வருந்தி நின்றாள். தன்மீது பேரன்பு கொண்ட தலைவியை எண்ணித் தலைவன்,

> **"ஈர்மண் செய்கை நீர்படு பசுங்கலம்**
> **பெருமழைப் பெயற்குஏற் றாங்குஎம்**
> **'பொருள்மலி நெஞ்சம்' புணர்ந்துஉவந் தன்றே''** (நற். 308:9-11,ப.411)

என்று கூறி, பச்சை மண்ணில் செய்த குடத்தில் உள்ள நீர் மேலும் மழைபெய்யும் பொழுது எப்படி உடைந்து போகுமோ அவ்வாறே யான் மேற்கொண்ட பிரிவினைத் தவிர்த்தேன். என்று தலைவி மீதான இரக்க உணர்வினை வெளிப்படுத்துகின்றான். தலைவின் மீது இரக்கம் கொண்டு, தலைவிக்காக மனம் உருகும் தன்மை கொண்டவனாகவும், 'வருத்தம்' எனும் மெய்பபாட்டுணர்வு கொண்டவனாகவும் விளங்குகிறான். இதே கருத்தினை நற்றிணையில் **(312, 366)** மேலும் இரண்டு பாடல்கள் வலியுறுத்துகின்றன.

தலைவன் தன்னை விட்டு பிரியக் கருதினான் என்பதைக் குறிப்பினால் அறிந்த தலைவி துன்புற்றாள். அதனை அறிந்த தலைவன்,

> **"வினையும் வேறுபுலத்து இலனே நினையின்**
> **யாதனிற் பிரிவாம் மடந்தை**
> **காதல் தானும் கடலினும் பெரிதே''** (நற். 166:8-10, ப. 223)

என்று தலைவியின் மீது தான்கொண்ட காதல் உணர்வு கடலினும் பெரிது எனவே 'நின்னைப் பிரியேன்' என்று தலைவியை தேற்றுபவனாகக் காணப்படுகின்றான். அன்பு அளவில் மிகுந்து 'கைம்மிகல்' என்னும் மெய்ப்பாட்டு உணர்வை வெளிப்படுத்துகிறான். இதே கருத்தினை நற்றிணை **256**ஆம் பாடல் வலியுறுத்துகின்றது.

ஒருவாறு பொருளே தேவையெனத் தெளிந்து வீட்டைவிட்டுப் புறப்பட்ட பின்னும் தலைவனின் உணர்வுப் போராட்டம் ஓய்வதில்லை. இடைச்சுரத்து அழுங்கும் தலைவனின் பாடல்களில் இப்போராட்டத்தின் தொடர்ச்சியைக் காணலாம். வழியிடை நிற்கும் தலைவன் பொருள் தேவைக்கென பயணம் தொடர்வதா அன்றி மனையாளிடம் திரும்பி விடுவதற்காகப் பயணத்தைக் கைவிடுவதா என எண்ணித் தயங்குகிறான். இதனை,

**''ஒன்று தெரிந்து உனரத்திசின் நெஞ்சே**
**ஆள்வினைக் ககல்வாம் எனினும்**
**மீள்வாம் எனினும் நீதுணிந்து ததுவே''** (நற். 103:1-12, ப. 134)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இத்தகைய இடைச்சுரத்து நேரும் தலைவனின் உள்ளப் போராட்டம் பற்றிய நுண்ணிய உணர்வினை,

**''ஒளிறேந்து மருப்பிற் களிறுமாறு பற்றிய**
**தேய்புரிப் பழங்கயிறு போல**
**வீவது கொல்லென் வருந்திய உடம்பே''** (நற். 284:9-11, ப. 380)

என்ற பாடலடிகள் நுட்பமாக உணர்த்துகின்றன. ஏதேனும் ஒரு முடிவெடுக்க இயலாத தலைவனின் உள்ளத்தின் ஊசலாட்டத்தை அறியமுடிகிறது. இங்கு உள்ளப் போராட்டத்தில் சிக்கித் தவிக்கும் தலைவன், 'கையாறு' எனும் மெய்ப்பாட்டு உணர்வைப் புலப்படுத்துகிறான்.

இங்ஙனம் தலைவியைத் தேற்றி பின்னர் தலைவன் பொருள்வயிற் பிரிந்தான். நெடுந்தூரம் பயணம் செய்தபின்னர்த் தன் தலைவியை நினைந்து அவளை நாடும் நெஞ்சினை,

**"நெடுநீர் அற்ற நிழல்இல் ஆங்கண்**
**அருஞ்சுரக் கவலைய என்னாய் நெடுஞ்சேண்**
**பட்டனை வாழிய நெஞ்சே''** (நற். 105:5-7, ப. 137)

என்று தலைவியின் மீதான காதலுணர்வைத் தானே கட்டுப்படுத்தும் நிலையை இப்பாடலில் காண முடிகிறது.

இங்ஙனம் பொருள்வயிற் பிரிந்த தலைவனின் உள்ளம் இடைச்சுரத்தில் தலைவியை நாடிச் சென்றதைத் தேற்றி பொருள் தேடும் முயற்சியில் ஈடுபட்டான் அவன் நினைத்த அளவு பொருள் திரட்டும் முன்பே அவன் தலைவியிடம் கூறிச் சென்ற கார்ப்பருவம் வந்ததைக் கண்டு தன் நெஞ்சினை நோக்கி,

**"... .... .... .... புணர்குயில் விளித்தொறும்**
**நம்வயின் நினையும் நெஞ்சமொடு கைம்மிகக்**
**கேட்டொறுங் கலுழுமால் பெரிதே''** (நற். 157:5-7, ப. 210)

என்று தலைவியின் நிலையைக் கூறினான். கார் காலத்தில் தன் துணையோடு இருக்கும் குயில் கூவும் பொழுதெல்லாம் அக்குயிலின் ஓசையைக் கேட்டுப் பிரிவுத் துயரம் தாங்காமல்

அழுது துன்புறுவாளே என்று எண்ணித் தலைவிக்காக இரங்கி வருந்துகின்றான். இதில் தலைவனின் இரக்க உணர்வு வெளிப்படுவதையும் கைம்மிகல் எனும் மெய்ப்பாட்டு உணர்வு வெளிப்படுவதையும் உணரமுடிகிறது.

இங்ஙனம் எட்டுத்தொகை ஆடவன் பொருள்வயிற் பிரிந்து செல்லும் வழியின்கண் மான், மயில், குயில் என எதைக் கண்டாலும் அவை தலைவியாகவே அவன் கண்களுக்குத் தெரிகின்றது. இத்தகைய அஃறிணை உயிர்களின் செயல்கள் ஆடவனின் அக உணர்வைத் தூண்டச் செய்து அவனது ஆழ்மன உணர்வுகளை வெளிப்படுத்துவதை உணரமுடிகிறது.

காதல் பிரிவால், தனிமையில் புலம்புவது ஆண், பெண் இருபாலார்க்கும் பொருந்தும் காதல் வயப்பட்டு உள்ளங்கள் இணைந்தபின் தங்களுக்கு இடையே பிரிவு வருவதை தாங்கிக் கொள்ள இயலாது என்ற ஆழ்மனப் போக்கு, மன உணர்வோட்டம் எட்டுத்தொகை ஆடவரிடம் நிறைந்திருந்ததை எட்டுத்தொகைப் பாடல்கள் மூலம் அறியலாம்.

தலைவன், தலைவியைப் பிரிந்து சென்ற பின் சுரத்தில் கண்ட காட்சியாக

**''களிறு நின்று இறந்த நீரல் ஈரத்துப்**
**பால்வீ தோல்முலை அகடுநிலஞ் சேர்த்திப்**
**பசியிட முடங்கிய பைங்கண் செந்நாய்**
**மாயா வேட்டம் போகிய கணவன்**
**பொய்யா மரபின் பிணவுநினைந்து இரங்கும்**
**விருந்தின் - வெங்காட்டு வருந்துதும் யாமே'' (நற். 103, 4-9, ப. 134)**

என்பதைக் காட்டுகின்றான். இதில் காமவெப்பம் தாங்காது, தலைவி தளிர்மேலேகிடந்து காமத்தால் வருந்துவாள். தனக்கு ஏற்பட்ட இந்நிலையே தலைவிக்கும் இருக்கும் என நினைந்து தலைவியின் வருத்தத்தை உணரும் தன்மை கொண்டவனாகக் காணப்படுகிறான். இத்தகையச் சூழலில் நிகழும் தலைவனின் கூற்றில் வெளிப்படுவது காம உணர்வாக இருப்பினும், அகத்தினுள்ளே உரைந்து கிடக்கும் உணர்வினை, வெளிப்புறத்தே நிகழும் காட்சிகள் தூண்டிவிடும் தூண்டுகோல்களாக அமைகின்றன. மனிதமனத்தினுள் உறைந்துகிடக்கும் அக உணர்வுகள் மேலோங்கி எழுவதற்கு புறக்காட்சிகள் சான்றாக அமைகின்றன.

தலைவியின் நினைவுகளையே தன்னெஞ்சில் சுமக்கும் தலைவன், செலவு குறிப்பறிந்தும், பொருள் வயிற் பிரிவின்போதும் உயிரினங்களில் ஆணும் பெண்ணும் தழுவியிருக்கும் நிலையைச் சுட்டி, இதனைக் கண்டு பிரியாத, பிரிய விருப்பங்கொள்ளாத தனது ஆழ்மன உணர்வினை தலைவிக்கு வெளிப்படுத்துகிறான். தலைவன் அகத்தில் தலைவியோடு சேர்ந்து இன்பமாக வாழும் நல்லுணர்வு கொண்டவனாகப் பிரிவை விரும்பாதவனாக காணப்படுகின்றான்.

பொருள் தேடும் வினைமுற்றி மீள்கின்ற தலைவன் தன் தேர்ப்பாகனை நோக்கிச் சென்ற முறை நிகழ்ந்த நிகழ்வினைக் கூறி தேரினை விரைந்து செலுத்துமாறு கேட்டுக்கொள்கிறான். நாம் திரும்பிச் செல்லக் கூடிய கார்ப்பருவத்தில் பொழிகின்ற மழை பெய்ததினால் தவளைகள் ஒலிக்கின்றன. அவ்வொலியால் நம் தேரில் கட்டிய மணி ஒலியைத் தலைவி கேட்க இயலாமல் செய்தது. இதை அறிந்த நான்,

**“ஏகுமின் என்ற இளையர் வல்லே**
**இல்புக்கு அறியுந ராக மெல்லென’’ (நற். 42:6-7, ப. 54)**

என்று கூறி தன் வருகையைத் தலைவிக்குத் தெரிவித்தான். இச்செய்தியைக் கேட்டு தலைவி தன் கூந்தலை மாசுபோக நீராடி சில் மலர் கொண்டு கூந்தலைப் புனைந்து தன் வரவை மகிழ்ந்து கொண்டாடிய தன்மையை இன்றும் தன்னால் மறக்கமுடியாது என்கிறான். அத்தகைய தலைவியின் உள்ள மகிழ்வைப் பார்த்து இரசிக்கத் தேரினை விரைந்து செலுத்துமாறு தேர்ப்பாகனிடம் குறிப்பிடுகின்றான். மேலும் தலைவனின் பிரிவை அறிந்த தலைவி,

**“முறிதிமிர்ந்து உதிர்த்த கையள்**
**அறிவுஅஞர் உறுவி ஆய்மட நிலையே’’ (நற். 106:8-9, ப. 138)**

என்று தலைவி கையிலே வைத்திருந்த ஞாழல் மலரை உதிர்த்து மயக்கமுற்ற இளைய மகளின் துயரைப் போக்க தேரினை விரைந்து செலுத்துக என்று தேர்ப்பாகனிடம் குறிப்பிடுகின்றான். இப்பாடல்களில் தலைவன் தலைவியின் துயரைப் போக்குபவனாகவும், தலைவி மகிழ்ந்து உள்ளம் உவப்பதைக்கண்டு இரசிக்கும் உணர்வினனாகவும் திகழ்கின்றான் என்பதை அறிய முடிகிறது. இங்கு தலைவன், ‘உவகை’ மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துகிறான்.

**குறுந்தொகை**

குறுந்தொகை பாலைத்திணையில் மொத்தம் 90 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அதில் 16 பாடல்கள் தலைவன் கூற்றாக அமைந்துள்ளன.[60] இவற்றுள் தலைவன் பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்கு உரைப்பதும், தலைவியை உடனழைத்துப் போதல் பற்றியும், பொருள் வயிற் பிரிவும், பருவ வரவு கண்டு வருந்துதலும், வினைமுற்றிய தலைவன் தேரை விரைந்து செலுத்துமாறு கூறுவதுமாக தலைவன் கூற்றுகள் அமைந்துள்ளன. அக்கூற்றுகளில் வெளிப்படும் ஆடவரின் உணர்வுகள் இப்பகுதியில் ஆராயப்படுகிறது.

வாழ்க்கைக்குத் தேவையான பொருளை ஈட்ட வேண்டி தலைவன்–தலைவியை விட்டு பிரிய எண்ணும் போது, தலைவி, தனக்குக் காமநோயைத் தீர்க்கும் மருந்தாகவும், தேடித் தொகுத்து வைக்கும் செல்வத்திற்குச் செல்வமாகவும் இருக்கிறாள், அத்தன்மையளைப் பிரிந்து பெருஞ்செல்வம் ஈட்டுதல் இன்பம் துய்ப்பதற்கே, அவ்வாறெனின் அத்தகைய இன்பம் தலைவியிடம் கிடைக்கும், எனவே அவளை பிரிவானேன் என்று தனது நெஞ்சுடன் வாதிடுகிறான், இதனை,

"மருந்து எனின் மருந்தே! வைப்புஎனின் வைப்பே"[61] என்ற பாடல்வரி மூலம் அறிய முடிகிறது. இதில் தலைவன் பொருள் சேர்த்தலை இன்பம் துய்ப்பதற்கு என்ற எண்ணம் கொண்டவனாகவும் தலைவியை விட்டுப் பிரிய மனமின்றி தவிக்கும் தவிப்புணர்வு கொண்டவனாகவும் காணப்படுகின்றான். இங்கு தலைவன் 'வருத்தம்' எனும் இளிவரல் மெய்ப்பாட்டுணர்வையும், 'புணர்வு' எனும் 'உவகை' மெய்ப்பாட்டுணர்வையும் வெளிப்படுத்துகிறான். பொருள் வலிக்கப்பட்ட நெஞ்சிடம் தலைவன், தலைவியைப் பிரிந்து செல்லுதலால் இருவரின் இளமைப் பருவமும் பயனின்றி போகுமாதலால் தலைவியைப் பிரிய வேண்டாம் என்று அறிவுறுத்துகிறான். இதனை,

> **"மறப்பஅருங் காதலி ஒழிய**
> **இறப்பல் என்பது ஈண்டு இளமைக்கு முடிவே"** (குறுந். 151, ப. 192)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றது, தலைவியைப் பிரிந்து உயிர்வாழ்தல் என்பது முடியாது எனவே,

> **"புனற்புனை அன்ன சாய்இறைப் பணைத்தோள்**
> **மணத்தலும் தணத்தலும் இலமே**
> **பிரியின் வாழ்தல் அதனினும் இலமே"** (குறுந். 168, ப. 211)

என்றும், தலைவியைப் பிரிந்து செல்லும் காட்டு வழியில் தன் பெண் மானுடன் வயிறுநிரம்ப உண்ட ஆண்மான் துள்ளி விளையாடும் அக்காட்டினைக் கடந்து சென்று பொருள் தேடும் முயற்சியில் நன்மை பெற்றுத் திரும்புவேன். அதுவரை உன்னால் பொறுத்திருத்தல் இயலுமோ என யான் சொல்லி முடிக்கும் முன்பே, பொறுத்து நிற்றல் இயலாமல் தன் தலைவியது கண்கள் நீரால் ததும்பி மறைக்கப்பட்ட அக்காட்சியைக் கண்ட பின், தலைவியை எவ்வாறு பிரிவேன், எனவே தைவியைப் பிரிவதைக் கைவிடுமாறு நெஞ்சுக்குரைக்கின்றான். இதனை, குறுந்தொகை **256** ஆம் பாடலடிகளில் ஆண் மானும் பெண் மானும் சேர்ந்து துள்ளி விளையாடும் காட்சி தலைவன்–தலைவி இருவரும் சேர்ந்திருக்கும் காலத்தைத் தலைவனுக்கு நினைவுபடுத்துவதாக அமைந்துள்ளது, மேற்குறிப்பிட்ட பாடல்களில் தலைவன்–தலைவியை விட்டு பிரிந்தால் உயிர்வாழ முடியாது என்ற தன் மன உணர்வினை வெளிப்படுத்துபவனாகவும், தலைவியை விட்டுப் பிரிய முடியாதவாறு சூழல்களும் அவனைத் தடுக்கின்றன, எனவே தலைவியைப் பிரியாமல் அவளுடன் சேர்ந்துஇன்பம் துய்ப்பதையே விரும்பும் உணர்வினனாகக் காணப்படுகின்றான், இங்கு தலைவன் 'கையாறு' என்னும் மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துபவனாகக் காணப்படுகிறான். இக்கருத்தினை குறுந்தொகைப் பாடல்கள் **267,274**–ல் அமைந்துள்ளதைக் காண முடிகின்றது.

இங்ஙனம் பொருள் தேடிவர தலைவியைப் பிரிய முடிவு செய்த தலைவன் தன் மனதுடன் போராடி, ஒரு முடிவிற்கு வந்தவனாய். பொருள்தேடும் முயற்சியில் தலைவியும் தன்னுடன் வந்தால், அம்முயற்சியை மேற்கொள்ளலாம் என்று முடிவு செய்து.

**"ஈதலும் துய்த்தலும் இல்லோர்க்கு இல்எனச்**
**செய்வினை கைம்மிக எண்ணுதி அவ்வினைக்கு**
**அம்மா அரிவையும் வருமோ?**
**எம்மை உய்த்தியோ? உரைத்திசின் நெஞ்சே"** (குறுந். 63, ப. 97)

என்று நெஞ்சிடம் கூறுகின்றான். இதில் பிறர்க்கு ஈதலும் தான் இன்பத்தை அனுபவித்தலும் பொருள் இல்லாதவர்க்கு இல்லை என்பதை நினைத்து, பொருள் தேடும் செயலை, எல்லை கடந்து எண்ணுகிறாய். அப்பொருள் தேடும் செயலுக்காக தலைவியும் தன்னுடன் வருவாளா என நெஞ்சிடம் கேட்கின்றான். மேலும்,

**"கான நீளிடைத் தானும் நம்மொடு**
**ஒன்றுமணம் செய்தனள் இவளெனின்**
**நன்றே நெஞ்சம்! நயந்த நின் துணிவே"** (குறுந். 347, ப. 408)

என்ற மேற்குறிப்பிட்ட இரு பாடல்களிலும் தலைவன், பொருள்தேடச் செல்லும் போது தலைவியும் உடன் வந்தால், பொருள் சேர்த்து ஈதல் புரியும் தன்மையையும், தலைவியுடன் இன்பம் துய்த்தலுமாகிய இருவகையான இன்பத்தையும் உணர்வினையும் ஒருசேர அனுபவிக்கத் துடிப்பவனாகத் தலைவன் காணப்படுகின்றான். இங்கு தலைவன் எல்லை கடந்து எண்ணும் 'கைம்மிகல்' எனும் மெய்ப்பாட்டுணர்வு கொண்டு திகழ்கிறான்.

தலைவியைத் தன்னுடன் அழைத்துச் சென்றால் காதல் இன்பமும் ஒருசேர கிடைக்கும் என்று எண்ணி, பிறகு அவளை விட்டுப் பிரிந்து பாலைவழியே செல்லும் போது, அவ்வழியின் கொடுமையைக் கண்டு, நெஞ்சிடம் கூறி வருந்துவதை குறுந்தொகை **56**ஆம் பாடல் உணர்த்துகின்றது. வேட்டையாடித் திரியும் செந்நாய் பாலைநிலத்தில் தரையைத் தோண்டி, ஊறிய நீரை உண்டு பிறகு மிஞ்சியதில் காட்டு மல்லிகைப் பூ உதிர்ந்து அழுகிய நிலையில் காணப்படும் அந்நீரை உண்ணும் நிலைக்கு ஆளாகியிருப்பாள் இத்தகைய இரங்கத் தக்க நிலைக்கு அவள் என்னுடன் வராமல் இருந்ததே நல்லது என எண்ணுகின்றான். தலைவி தன்னுடன் வந்திருந்தால் பாலையின் கொடுமையை உணர்ந்து வருந்தியிருப்பாள். எனவே அவள் நலனைக் காத்து விட்டோம் என்று நெஞ்சுக்கு ஆறுதல் கூறுபவனாகக் காணப்படுகின்றான். இதில், தலைவியின் நலனைக் காப்பதில் அக்கறை கொண்டவனாகக் காணப்படுகின்றான்.[62] இங்கு தலைவன் 'அருள்' எனும் மெய்ப்பாடு வெளிப்படுமாறு காணப்படுகிறான்.

தலைவியைப் பிரிந்து சென்ற தலைவன், தான் திரும்பி வரும் வரையிலும் தன் தலைவியை, தலைவியின் நலனைக் காக்குமாறு வாடையிடம் "ஓம்புமதி வாழியோ வாடை"[63] என்று குறிப்பிடுகின்றான். தலைவியைப் பிரிந்து செல்ல அஞ்சும் தலைவனின் உணர்வைப் புரிந்து கொள்ளாமல் நெஞ்சு செயல்படுகிறது என்று எண்ணி,

**"அஞ்சுவது அறியாவது அமர்துணை தழீஇய**
**நெஞ்சுநப் பிரிந்தன்று; ஆயினும் எஞ்சிய**
**கைபிணி நெகிழின் அஃ்து எவனோ? நன்றும்**
**சேய இம்ம இருவாம் இடையே''** (குறுந். 237, ப. 283)

என்று புலம்புகின்றான். இதில் தலைவன், தலைவியைப் பிரிந்து சென்று மனதால் எண்ணி கனவில் அவளைத் தழுவுதல் நேரில் கையால் தொட்டுத் தழுவுவதைப்போல் இருக்குமா இதனை உணராமல் நெஞ்சு செயல்படுகிறதே என எண்ணி புலம்புவதைக் காணமுடிகின்றது. இங்கு தலைவனின் உள்ளம் தலைவியைப் பிரிய அஞ்சும் நிலையில் தலைவன் 'வெரூஉதல்' எனும் மெய்ப்பாடுடையவனாகக் காணப்படுகிறான்.

தலைவன்–தலைவியை விட்டுப்பிரிந்து பொருள் தேடிச் செல்ல முயன்றபோது தலைவியிடம், உன்னைப் பிரிந்து தனிமையில் வாடுமாறு செய்தால் அத்தகைய செயல் காரணமாக என்னிடம் இரவலர் யாரும் வாராமல் என் ஈந்துவக்கும் இன்பத்தை இழப்பவன் ஆவேன், எனவே,

**"மெல்லியல் அரிவைநின் நல்லகம் புலம்ப**
**நின்துறந்து அமைகுவெ னாயின், என்துறந்து**
**இரவலர் வாரா வைகல்**
**பலஆ குகயான் செலவுறு தகவே''** (குறுந். 137, ப. 178)

என்கிறான். இங்கு 'வரைவு' என்ற மெய்ப்பாட்டுணர்வு வெளிப்படுகின்றது.

பொருள்வயிற் பிரிய எண்ணும் தலைவன், தன்நெஞ்சிடம், நாள்தோறும் எவ்வுயிரைப் பற்றிச் செல்ல வேண்டுமோ அம்முறைப்படி பற்றும் மரபினையுடைய கூற்றுவனது, ஈவு இரக்கமின்றிக் கொண்டுபோகும் செயலை நன்கு அறிந்தவர் அறிவுடையோர். எனவே இவ்வுலகத்துப் பொருந்தும் இன்பப்பயன்கள் அனைத்தையும் தரும் பெருஞ்செல்வம் முழுவதும் ஒருசேரக் கிடைப்பதாயினும் தன் தலைவியை விட்டுப்பிரிய மாட்டேன் என்று தனது 'வெகுளி' மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துகிறான். இதனை,

**"இருங்கண் ஞாலத்து ஈண்டுபயப் பெருவளம்**
**ஒருங்குடன் இளைவ தாயினும்... .... .... ...**
**.... .... .... .... .... .... .... .... .... .... .... ....**
**கோல்அமை குறுந்தொடிக் குறுமகள் ஒழிய**
**ஆள்வினை மருங்கில் பிரியார்''** (குறுந். 267, ப. 317)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. பொருள் தேடிப் பிரிந்து சென்ற தலைவனின் நினைவுகள் தலைவியைப் பற்றியே இருந்தாலும், அவளோடு சேர்ந்து இருந்த இன்பமான காலத்தையும் அசைபோட்டுக் கொண்டே இருந்ததன் வெளிப்பாடாக, தலைவியின் அழகான உருவம் கனவில் தோன்றியது. அதைக் கண்டு உள்ளம் பூரித்து தலைவியை நேரில் கண்ட உணர்வினை ஏற்படுத்திய கனவை,

**‘‘நுண்பூண் மடந்தையைத் தந்தாய் போல
இன்துயில் எடுப்புதி கனவே
எள்ளார் அம்ம துணைப் பிரிந் தோரே’’** (குறுந். 147, ப. 188)

என்று கூறி, கனவு, வாழ்க்கைத் துணையைப் பிரிந்து வாடுபவர்களுக்கும் சிறந்த துணையாக அமைந்ததை எண்ணி மகிழ்கின்றான். தூக்கத்தை எழுப்பினாலும் கனவை யாரும் இகழமாட்டார்கள் என்று கனவை வரவேற்பவனாகக் காணப்படுகின்றான். தலைவன், தலைவியைப் பிரிந்து சென்றாலும் அவனது மன உணர்வுகள் அனைத்தும் தலைவியை நாடியே உள்ளது. கனவிலும் தலைவியைக் கண்டு மகிழ்பவனாகக் காணப்படுகின்றான். இங்கு தலைவனின் ஆழ்மன உணர்வே கனவாக மாறும் நிலையில் நினைத்தல்’ என்னும் மெய்ப்பாட்டு உணர்வு கொண்டவனாகத் திகழ்கிறான்.

பொருள் தேடிச் சென்ற வினை முடிந்ததும் தலைவன், தலைவியைக் காண புறப்படும் முன் அவனது மனம், உணர்வுகள் தலைவியைத்தேடி அவனுக்கு முன்பாகவே விரைந்து சென்று தலைவியை அடைகிறது. தலைவனது மனஉணர்வோட்டம் தலைவியைக் காணத் துடிக்கின்றது. எனவே அவனுக்கு முன்சென்று தலைவியை அடைகிறது. இதனை,

**‘‘... .... .... .... நெஞ்சே
ஈரம்பட்ட செல்விப் பைம்புனத்து
ஓரேர் உழவன் போலப்
பெருவிதுப்பு உற்றன்றால் நோகோ யானே’’** (குறுந். 131, ப. 171)

என்ற பாடலடிகள் மூலம் அறியமுடிகிறது. இங்கு தலைவன் ‘விரைவு’ எனும் மெய்ப்பாட்டு உணர்வு கொண்டவனாகத் திகழ்ந்ததைத் காணமுடிகின்றது.

தலைவியைக் காண நெடுந்தூரம் செல்லவேண்டி இருக்கும் தலைவன் மழை பெய்து ஈரம்பட்ட, உழுது விதைத்தற்கேற்ற பண்பையுடைய பசுமையான நிலத்தில், உழுவதற்குச் செல்லும் ஒரே ஒரு ஏரையுடைய உழவன் போல விருப்பமிகுதியால் விரைவுடன் துடிக்கின்றது. இதில் தலைவன்–தலைவியின் பண்பையும், தனக்காகக் காத்திருக்கும் தன்மையையும் உள்ளுறையாகக் கூறி அவளைக் காண விரைந்து செல்லும் தன் மனவுணர்வு ஓட்டத்தினையும் ‘விரைவு’ எனும் மெய்ப்பாட்டினையும் வெளிப் படுத்துகின்றான். இங்ஙனம் வினை முற்றித்திரும்பிய தலைவன் தோழியிடம்,

**‘‘கடற்றில் கலித்த முடச்சினை வெட்சித்
தளை அவிழ் பல்போது கமழும்
மைஇருங் கூந்தல் மடந்தை நட்பே’’** (குறுந். 209, ப. 254)

என்று குறிப்பிடுகின்றான். இதில் தலைவன் பொருளுக்காக பல இடர்ப்பாடுகளைத் தாண்டி பிரிந்து சென்றபோதும் தனது மனம், வெட்சிமரத்தின், முறுக்கவிழ்ந்த பல பேரரும்புகளைப் பார்த்து அவற்றின் கமழும் மணத்தை நுகரும் போது கரியகூந்தலையுடைய தலைவியின்

நட்பையே நினைத்திருந்தது என்று கூறுவதிலிருந்து எச்சூழலிலும் தலைவன் தலைவியின் நினைவாகவே, வாழ்கிறான் என்பதை அறிய முடிகிறது. இங்கு தலைவன் கழிந்தனை 'நினைத்தல்' என்ற மெய்ப்பாட்டினை வெளிப்படுத்துகிறான். வினைமுடித்து மீளும் தலைவனின் மனம் தலைவியைக் காணத் துடிப்பதால், தேர்ப்பாகனிடம்,

**"இன்றே சென்று வருதும்; நாளைக்**
**குன்றுஇழி அருவியின் வெண்தேர் முடுக**
**இளம்பிறை அன்ன விளங்குசுடர் நேமி**
**விசும்புவீழ் கொள்ளியின் பைம்பயிர் துமிப்பக்**
**கால்இயல் செலவின் மாலை எய்திச்**
**சில்நிரை வால்வளைக் குறுமகள்**
**பன்மாண் ஆகம் மணந்துஉவக் குவமே''** (குறுந். 189, ப. 233)

என்று தன்மனம் தலைவியைக் காணும் ஏக்கத்தில் உள்ளது என்பதைக் குறிப்பிடுகின்றான். இன்றே புறப்பட்டுச் சென்று விரைவில் திரும்பி வருவோம். நாளைக்கே குன்றிலிருந்து இறங்கிவரும் அருவியைப் போல விரைந்து காற்றைப் போல் இயங்கும் ஓட்டத்துடன் மாலை நேரத்தில் வீட்டை அடைவோம். அடைந்து தலைவியைத் தழுவி உவகை கொள்வோம் என்று குறிப்பிடுகின்றான். இதில் தலைவனுக்குத் தலைவியைக் காணும் பேரவா இருந்ததை உணர முடிகின்றது. எனினும் பொருள் தேடும் வினையாயினும், போர்த் தொழிலாயினும் முடிந்த பிறகே தலைவன் வீடுதிரும்புகின்றான். இடையில் திரும்பிவர மனம் துடித்தாலும் அதனைக் கட்டுக்குள் வைத்து உறுதியுடன் வினையை முடித்த பிறகே வீட்டிற்குத் திரும்புகின்றான். இதில் தலைவனின் உறுதியையும் திடமான மன உணர்வினையும் அறியமுடிகிறது. தலைவன் எடுத்த செயலை முடிக்காமல் திரும்பாத நிலையைக் காண முடிகின்றது. இங்கு தலைவன் துன்பம் நீங்கிய மகிழ்ச்சியில் 'உவகை' எனும் மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துகிறான்.

**ஐங்குறுநூறு**

ஐங்குறுநூறு பாலைத்திணையில் தலைவன் கூற்றுப்பாடல்கள் மொத்தம் 19 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அவற்றுள், தலைவன் வரைவிடை வைத்துப் பிரிந்து மீளும்போது இடைச்சுரத்தில் மாவின் தளிரிடம் கூறுவதும், இடைச்சுரத்தில் தலைவியை நினைத்து இரங்கி நெஞ்சிற்குக் கூறுவதும், தலைவியைப் பிரிந்து மீண்டு தோழிக்கும், தலைவிக்கும் உரைப்பது, உடன் போக்கில் இடைச்சுரத்தில் கூறுவதுமாக பாடல்கள் அமைந்துள்ளன.

திருமணத்தை முன்னிட்டுப் பிரிந்து தலைவன் திரும்பிவரும்போது இடைவழியில் தழைத்து நிற்கும் மாமரத்தின் தளிரைக் கண்ட,

**"நன்னலம் நயவர உடையை**
**என்நோற் றனையோ மாவின் தளிரே'' (ஐங். 365, ப.44)**

என்று தலைவியைப் போன்று மாந்தளிர் உள்ளது என்று கூறி வியக்கின்றான். இதில் தலைவன், காணும் பொருளிலெல்லாம் தலைவியைக் காணும் உணர்வு கொண்டவனாகக் காணப்படுகின்றான். இங்கு தலைவன் 'மருட்கை' எனும் மெய்ப்பாட்டு உணர்வினை வெளிப்படுத்துகிறான்.

தலைவன் பிரிந்து செல்லும் பாலைநிலத்தின் இடையில் நிகழும் நிகழ்வைக் கண்டும் தலைவியின் குணத்தை எண்ணி இரக்கமுற்று, காய்ந்த ஓமை மரத்தில் பெட்டைப்பருந்து வெப்பம் தாங்காமலும் சேவலை நினைத்தும் துயரமுற்று ஒலிக்கிறது. இதனைக் கண்ட தலைவன் ,தலைவியும் என்னை நினைத்து இவ்வாறு துயரடைவாள் என எண்ணி வருந்துகின்றான். இதனை, ஐங்குறுநூறு. 321ஆம் பாடலடிகள் உணர்த்துகின்றன. மேலும், 'மருட்கை' என்ற உணர்வு மிக்கவனாகத் தலைவன் திகழ்கிறான்.

**"ஒண்ணுதல் அரிவையை உள்ளுதொறும்**
**தண்ணிய ஆயின சுரத்திடை ஆறே'' (ஐங். 322, ப. 374)**

என்று கூறுகின்றான். இதனை எண்ணி ,

**"வெஞ்சுரக் கவலை நீந்தி**
**வந்த நெஞ்சம் நீ நயந்தோள் பண்பே'' (ஐங். 323, ப. 375)**

என்று தலைவியின் குணத்தைக் நினைத்து வியந்து இன்புறும் தன்மை கொண்டவனாகவும் தலைவி மீது இரக்க உணர்வு கொண்டவனாகவும் காணப்படுகின்றான். இதே கருத்தினை ஐங்குறுநூறில் மூன்று பாடல்கள் வலியுறுத்துகின்றன.[64] தலைவியின் பண்பை, இடைச்சுரத்தில் நினைத்து நெடுந்தொலைவு தாண்டி நம்மிடம் வந்துள்ளதை எண்ணி மகிழ்ந்து தன் நெஞ்சிடம்

**"மறுதரு வதுகொல் தானே செறிதொடி**
**கழிந்துகு நிலைய வாக**
**ஒழிந்தோள் கொண்டஎன் உரங்கெழு நெஞ்சே'' (ஐங். 329, ப. 381)**

என்று தலைவியை நினைவூட்டிய நெஞ்சினை நொந்தும் கடுமையான காட்டு வழியில் ஆள் நடமாட்டமில்லாத பாழ்பட்ட பாலையில் வழிப்பறி செய்யும் கள்வர்கள் நிறைந்து காணப்படுவர். இக்கடுமையான வழியில் தன்னுடன் வந்த நெஞ்சு இப்போது தலைவியை நோக்கிச் செல்கிறதே என்று தன்னைத் தானே கட்டுப்படுத்தும் உணர்வு கொண்டவனாகக் காணப்படுகின்றான். இங்கு தலைவன் மனமொழி மெய்யினடங்குதல் என்னும் 'அடக்கம்' என்ற மெய்ப்பாட்டுணர்வினை வெளிப்படுத்துகிறான்.

தன் நெஞ்சு பாதி வழியில் தலைவியை நோக்கிச் செல்லத் துணிவதாலும் தலைவி அழுத கண்ணோடும் மெலிந்த உடலோடும் தம்மை நினைத்து வருந்துவதாலும் மேலும் தொடர்ந்து செல்லாமல் பயணத்தை நிறுத்தலாம் என எண்ணுகின்றான். இதனை,

**"வெந்துகள் ஆகிய வெயில்கடம் நீந்தி**
**வந்தனம் ஆயினும் ஒழிகினிச் செலவே''** (ஐங். 330, ப. 382)

என்ற பாடலடிகள் மூலம் அறியமுடிகிறது. இதில் தலைவன் தலைவியின் துயரைப் போக்கும் இரக்க உணர்வும், 'அருள்' எனும் மெய்ப்பாட்டுணர்வும், 'அழுகை' மெய்ப்பாட்டுணர்வும் கொண்டவனாக திகழ்வதைக் காண முடிகின்றது.

தலைவன், தலைவியை விட்டுப் பிரிந்து மீண்டும் வந்த போது தோழி, தலைவனிடம் 'பாலையின் வெம்மையை எவ்வாறு தாங்கிக் கொண்டீர்' என்று வினவியபோது,

**"வெம்பலை அருஞ்சுரம் நலியாது**
**எம்வெம் காதலி பண்புதுணைப் பெற்றே''** (ஐங். 325, ப. 377)

என்றும்,

**"இன்னா மன்ற சுரமே**
**இனிய மன்றயான் ஒழிந்தோர் பண்பே''** (ஐங். 326, ப. 378)

என்று தோழியிடம் வெப்பம் மிகுந்த பாலை வழியில் இளமை பொருந்திய பெண்மான் தன்குட்டியுடன் வெம்மையால் வாடுகின்ற துயரங்கள் நிறைந்தது நான் சென்ற காட்டுவழி, ஆயினும் நான் பிரிந்து நீங்கிய தலைவியின் பண்புகள் மட்டுமே, நினைக்கும் போதெல்லாம் குளிர்ச்சியைத் தந்து என்வெம்மையைப் போக்கின. இதில் தலைவன், தலைவியை எண்ணி மகிழும் உணர்வினனாகக் காணப்படுகின்றான். இங்கு தலைவன் 'நினைத்தல்' என்னும் மெய்ப்பாட்டுணர்வும், 'பெருமிதம்', 'அழுகை' போன்ற மெய்ப்பாட்டுணர்வுகள் கொண்டவனாகக் காணப்படுகிறான்.

பொருள் தேட பிரிந்த தலைவன், எவ்வளவு பொருள்தேட வேண்டும் என்று நினைத்தானோ, அவ்வளவு தேடும் வரை காலம் நீட்டிக்காமல் ஈட்டிய பொருள் போதுமென்று எடுத்துக்கொண்டு, தலைவியின் நினைவு வந்தவுடன் ஊருக்குத் திரும்பி வந்தான். வந்தபின் தலைவியிடம்,

**"திருந்துஇழை அரிவை நின்நலம் உள்ளி**
**அரும்செயல் பொருட்பிணி பெருந்திரு உறுகெனச்**
**சொல்லாது பெயர்தந் தேனே"** (ஐங். 355, ப. 404)

என்று, கடுமையான வழியைக் கடந்து சென்று பொருள் தேடிய போது உன் நலத்தை எண்ணி சேர்த்த பொருள் போதுமென்று யாரிடமும் சொல்லிக் கொள்ளாமல் திரும்பி வந்து உன்னைக் கண்டு மகிழ்கிறேன் என்று கூறுகிறான். இதில் தலைவன் பொருளைவிட தலைவியுடனான நலனைக் காக்கும் பொறுப்பிற்கு முக்கியத்துவம் கொடுப்பவனாகக் காணப்படுகின்றான். இங்கு தலைவன், 'பெருமிதம்', எனும் மெய்ப்பாட்டினை வெளிப்படுத்துகிறான்.

தலைவியைப் பிரிந்து செல்லும் தலைவனுக்கு, அவன் செல்லும் இடம் தொலைவாகவும், தலைவியை நினைத்துத் திரும்புகின்ற பொழுது, அதே வழி பக்கமாகத் தோன்றுகிறது. இதனைத் தலைவியிடம்,

**“அரும்பொருள் வேட்கையும் ஆகி நின்துறந்து**
**பெரும்கல் அதரிடைப் பிரிந்த காலைத்**
**தவநனி நெடிய ஆயின இனியே**
**அணியிழை உள்ளியாம் வருதலின்**
**நணிய ஆயின சுரத்திடை ஆறே”** (ஐங். 359, ப. 408)

என்று கூறி தன்மன உணர்வினைப் பகிர்ந்து கொள்ளும் தன்மையைக் காண முடிகின்றது. இதில் தலைவன் மன உணர்வு பிரிவின்போது துயரத்தால் தாமதமாகவும் தலைவியைக் காண விரையும் போது மகிழ்ச்சியினால் விரைவாகவும் செயல்படுகிறது. உணர்வு மட்டுமன்றி உடலும் சேர்ந்தே விரைந்து செல்லும் பண்பினனாக வெளிப்படுகின்றான். இங்கு தலைவன், ‘விரைவு’, ‘மருட்கை’ என்னும் மெய்ப்பாட்டு உணர்வினனாகக் காணப்படுகிறான்.

தலைவன் சென்ற வேலைமுடிந்து மீண்டபோது தலைவியிடம் என் நெஞ்சத்தில் உன்னைத் தழுவ வேண்டும் என்ற விருப்பம் மிகுந்ததால் விரைந்தோடும் குதிரைகள் பூட்டிய வலிமையான தேரினை விரைந்து செலுத்தினேன். நான் வந்த வழி கடப்பதற்கு அரிதாய் இருந்தபோதும் எனக்கு எளிதாகத் தோன்றியது என்று தலைவியிடம் கூறி மகிழ்கிறான். இதில் தலைவியைத் தழுவும் விருப்பம் கொண்டவனாகத் தலைவன் காணப்படுகின்றான். இங்கு தலைவன் ‘கைம்மிகல்’ என்னும் மெய்ப்பாட்டுணர்வு கொண்டவனாகத் திகழ்கிறான்.

**அகநானூறு**

அகநானூறு பாலைத்திணையில் தலைவன் கூற்றாக **55** பாடல்கள் அமைந்துள்ளன.[65] இவை தலைவியை விட்டுப் பிரிந்து பொருள் தேடத் துடிக்கும் நெஞ்சிற்கும், பிரிந்த பின் நெஞ்சிற்கும், இடைச்சுரத்தில் நெஞ்சிற்கும், உடன்போக்கில் தலைவிக்கும் வினைமுற்றி மீண்டபின் தோழிக்கும், தலைவிக்கும் கூறுவனவாக அமைந்துள்ளன.

அகநானூறு பாலைத்திணைப் பாடல்களில் பெரும்பான்மையாக தலைவன் தன் நெஞ்சிடம் புலம்புவதாக அமைந்துள்ளன. வினைமுற்றிய பின் தேர்ப்பாகனிடம் பேசும் ஒரு பாடல் இடம்பெற்றுள்ளது.

தலைவன் பொருள் தேட எண்ணித் தலைவியைப் பிரிந்து செல்ல உறுதி கொண்ட நெஞ்சு இடைவிடாது வற்புறுத்தும் நிலையில், பிரிதற்கு இயலாத கார்ப்பருவம் எண்ணி பொருள் ஈட்டச் செல்வதைக் கைவிட்டு தன் நெஞ்சிடம்,

**"பல் இருங் கூந்தல் மெல்இயல் மடந்தை**
**நல்எழில் ஆகம் சேர்ந்தனம், என்றும்**
**அளியரோ அளியர் தாமே - அளிஇன்று**
**ஏதில் பொருட்டிணிப் போகி, தம்**
**இன்துணைப் பிரியும் மடமையோரே" (அகம். 43:11-15, ப. 98)**

என்று கார்காலத்தில் தலைவியைப் பிரியாமல் நாம் இருக்கிறோம். ஆனால் பொருள் சேர்க்கும் ஆசையால் மன இரக்கமின்றித் துணையைப் பிரிந்து செல்வோர் இரங்கத் தக்காரே ஆவர் என்று கூறுகின்றான். இதில் தலைவன் – தலைவியின் நலத்தைக் காக்க பிரியாமல் இருக்கும் தன்னைத் தானே புகழ்ந்து கூறும் மனநிலையையும் 'உவகை' மெய்ப்பாடு கொண்டவனாகவும் காணமுடிகிறது.

பொருளின் இன்றியமையாமையை உணர்த்திய நெஞ்சை நோக்கி இடித்துரைத்துப் போகாமல் இருக்கும் தலைவன்,

**"உயிரினும் சிறந்த ஒண்பொருள் தருமார்**
**நன்றுபுரி காட்சியர் சென்றனர், அவர் என**
**மனைவலித்து ஒழியும் மதுகையள் ஆதல்**
**நீ நன்கு அறிந்தனை ஆயின், நீங்கி" (அகம். 245:1-4, ப. 284)**

என்று தன் நெஞ்சிடம், தலைவி, தம் பிரிவைத் தாங்கும் மனவலிமை உடையவள் தானா என்று எண்ணாமல் செல்வத்தை, உயிரைவிடப் பெரிதாகக் கருதிச் செல்லத் துடிக்கிறாயே என்று இடித்துரைக்கின்றான். இதில் தலைவன்–தலைவியின் மனதைப் புரிந்து கொண்டவனாகவும். பொருளை, உயிரை விட மேலாகக் கருதுபவனாகவும் காணப்படுகின்றான். தலைவன் பொருள்வயிற்பிரிந்து உழலுதலும், தலைவியைப் பிரிந்து 'நாளது செலவும் மூப்பினது வரவும் அரிதுபெறு சிறப்பில் காமத்து இயற்கையும்"[66] என நினைந்து நினைந்து வருந்துவதும் தலைவனின் தவிப்புணர்வைக் காட்டுகின்றது. தலைவன்–தலைவியை விட பொருளை–பொருள் ஈட்டுதலை உயர்வாகக் கருதியதை, "இவளினும் சிறந்தன்று, ஈதல் நமக்கு"[67] என்று கூறும் தலைவனின் மன உணர்வு, அவனிடம் 'விரைவு' என்ற மெய்ப்பாட்டு உணர்வு உள்ளதைக் காட்டுகின்றது.

**"களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல்**
**இழந்தநாடு தந்தன்ன**
**வளம் பெரிது பெறினும், வாரலென் யானே" (அகம். 199:22-24, ப. 179)**

என்று நெஞ்சிடம், நன்னனோடு போர்புரிந்து தான் இழந்த நாட்டை பெற்ற களங்காய்க் கண்ணி நார்முடிச் சேரல் பெற்ற இன்பமே கிடைத்தாலும், நாட்டினை ஒத்த பெருஞ்செல்வமே கிடைத்தாலும் தலைவியை விட்டுப் பிரிந்து வரமாட்டேன் என மறுக்கின்ற நிலையில் 'வருத்தம்' எனும் மெய்ப்பாடு கொண்டு விளங்குவதைக் காணமுடிகிறது. இத்தகைய உணர்வு கொண்ட தலைவனுக்கு, பொருள் தேடப் பிரிவது நன்று என வலியுறுத்தும் நெஞ்சினை,

"....   ....   .....   பிறர்போல்
செல்வேம் ஆயின், எம்செலவுநன்று என்னும்
ஆசை உள்ளம் அசைவின்று துரப்ப
நீசெலற்குஉரியை நெஞ்சே!" (அகம். 199:13-16, ப. 179)

என்று தலைவன் இடித்துரைக்கின்றான். இதுபோன்று பொருள் தேட துணியும் நெஞ்சிற்கு தலைவன் மறுத்துரைக்கும், இடித்துரைக்கும் நிலையை அகப்பாடல்கள் உணர்த்துகின்றன.[68] இங்கு தலைவன் தனது உணர்வுகளை வெளிப்படுத்தும் ஆளுமைத்திறன் கொண்டவனாகக் காணப்படுகிறான்.

பொருள் சேர்க்க விரும்பித் தலைவியைவிட்டுப் பிரிந்து செல்லக் கருதிய தலைவன், தன் நெஞ்சிற்குச் சொல்லி பிரிவைத் தடுக்கின்றான்; பயணத்தை நிறுத்துகின்றான். இதனை,

"....   ....   ....   ....   மாமலர்
மணிஉரு இழந்த அணிஅழி தோற்றம்
கண்டே கடிந்தனம், செலவே ஒண்டொடி
உழையம் ஆகவும் இணைவோள்
பிழையலள் மாதோ,பிரிதும் நாம் எனினே" (அகம். 5:25-28, ப.13)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் தலைவனின் பிரிவை உணர்ந்த தலைவி, பிரிவை விரும்பாமல் பெருமூச்செறிந்தாள். அச்சூடான காற்று பட்டு தன் புதல்வனின் தலையில் இருந்த பூவின் நிறம்மாறியது கண்டு, தலைவியின் உணர்வைப் புரிந்து கொண்டவனாய் செலவைத் தவிர்க்கின்றான். தலைவனின் இத்தகைய அருள் உணர்வினை அகநானூற்று பாலைத்திணைப் பாடல்கள் பெரிதும் வெளிப்படுத்துகின்றன.[69]

பொருள் தேடும் பொருட்டுத் தலைவியைப் பிரிய துணிந்த தலைவன், தலைவியை நினைந்து வருந்தி பிரிவைத் தவிர்க்கின்றான். ஆயினும் அவனது மனம் தற்போதைக்கு தலைவியுடன் தங்கி பின்னர் பிரியப் போவதைத் தலைவிக்கு உணர்த்த விரும்புகிறது. இதனை,

"அருள்அன்று ஆக ஆள்வினை, ஆடவர்
பொருள்என வலித்த, பொருள்அல் காட்சியின்
மைந்துமலி உள்ளமொடு துஞ்சல் செல்லாது" (அகம். 75:1-3, ப. 170)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் ஆடவர்க்கு முயற்சியே சிறந்த மூலதனம் எனத் துணிந்த உள்ளத்தால் சோம்பலின்றிப் பொருள்தேடப் பிரிந்து செல்லும் வழியில் (இடைச்சுரத்தில்) தலைவியை நினைந்து வருந்துகின்றான். அவ்வருத்தத்தை வெளிப்படுத்த தனது நெஞ்சினை ஒரு கருவியாக பயன் படுத்திக் கொண்டதைப் பாடல்கள் மூலம் அறிய முடிகிறது. இத்தகையச் சூழல்களில் தலைவன் தன் நெஞ்சை இகழ்ந்தும்,

புகழ்ந்தும் கூறும் தலைவனின் உணர்வு இருநிலைகளில் வெளிப்படுவதை அகப்பாடலில் காணமுடிகிறது.[70] சூழலுக்குத் தக்கவாறு தலைவன் தன் மனஉணர்வை வெளிப்படுத்துகின்றான். தலைவன் மகிழ்ச்சியில் இருக்கும் போது நெஞ்சைப் புகழ்வதும் வருந்திய நிலையில் நெஞ்சை இகழ்வதும் போன்ற இரு எதிரெதிர் உணர்வுகளை வெளிப்படுத்துகின்றான். தலைவன் தன்நெஞ்சை,

**"செலவுஅருங் குரைய என்னாது சென்றவள்**
**மலர்பாடு ஆன்ற, மைஎழில், மழைக்கண்**
**தெளியா நோக்கம் உள்ளினை, உளிவாய்**
**வெம்பரல் அதர குன்றுபல நீந்தி**
**யாமே எமியம் ஆக, நீயே"** (அகம். 33:8-13, ப. 75)

என்று இகழ்ந்து கூறுகின்றான். இதில் கடுமையான வழியைக் கடந்து வந்து பொருள் தேடத் துணியும் போது மீண்டும் தலைவியிடம் செல்லச் சொல்லும் உனது செயல் இகழத்தக்கது என்று தலைவன் தன் நெஞ்சை இகழும் தன்மையைக் காணமுடிகிறது. இங்கு தலைவன் தன் மனதில் தோன்றும் உணர்வுகளைக் கட்டுப்படுத்தும் 'அடக்கம்' எனும் மெய்ப்பாடு கொண்டவனாகக் காணப்படுகிறான்.

தலைவியை விட்டுப் பிரிந்த தலைவன் இடைச்சுரத்தில் தலைவியின் நினைவு வர அதை எண்ணி மகிழ்கின்றான். கடத்தற்கரிய பாலைவழியில் பல்வேறு கொடுமையான செயல்களைக் கண்டு அச்சம் கலந்த மருட்கை உணர்வுடன் வருகின்ற நேரத்திலும் தலைவியை அவள் உருவத்தை தன் கண்முன் கொண்டு வந்து நிறுத்தும் நெஞ்சைப் புகழ்ந்து மகிழ்கிறான். இதனை,

**".... நெஞ்சே! போது எனப்**
**புலம்கமழ் நாற்றத்து இரும்பல் கூந்தல்,**
**நல்எழில், மழைக்கண் நம்காதலி**
**மெல்இறைப் பணைத்தோள் விளங்கும்மாண் கவினே"**
(அகம். 291:22-25, ப. 388)

என்று தலைவியின் நினைவால் மகிழ்ந்தும் அவள் படும் துயரை எண்ணி வருந்தி அதனைத் தீர்க்கவும் தலைவனின் மனம் முற்படுகிறது. பொருள் வயிற் பிரிந்து செல்கின்ற போது இடைவழியில்,

**''ஈட்டு அருங்குரைய பொருள்வயிற் செலினே**
**நீட்டுவிர் அல்லீரோ, நெடுந்தகையீர் எனக்**
**குறுநெடும் புலவி கூறி''** (அகம். 239, ப. 271)

என்று தலைவி சிறு கோபத்துடன் கூறியதும், அவளது நினைவும் துன்பத்தைத் தந்தாலும் அதனை நினைத்துப் பார்த்து தலைவி தன்மீது கொண்ட காதலையும் தலைவி மீது தான் கொண்ட காதலையும் எண்ணித் தலைவனின் உள்ளுணர்வு மனம் இன்பம் எய்தும் நிலையை,

**''சேயர் எண்ணாது அன்புமிகக் கடைஇ**
**எய்தவந் தனவால் தாமே நெய்தற்**
**கூம்புவிடு நிகர்மல ரன்ன**
**ஏந்தெழில் மழைக்கணெம் காதலி குணனே'' (அகம். 83, ப. 187)**

என்ற பாடல் வெளிப்படுத்துகின்றது. இங்ஙனம் இடைச்சுரத்தில் தலைவன் – தலைவியை எண்ணி வருந்துவதும், மகிழ்வதும், அவளது துயரைத் துடைக்கவும் தலைவனின் உள்ளம் துடிக்கின்றதை அறிய முடிகிறது. இங்கு 'வருத்தம்' எனும் மெய்ப்பாட்டினைத் தலைவன் வெளிப்படுத்துகிறான்.

தலைவன் – தலைவி சந்தித்து மகிழ்தலில் இடையூறு ஏற்பட்டதால், உடன்போக்கு நிகழ்த்துவர் தலைவன், தலைவிக்கு வழிநடை வருத்தம் தோன்றாதிருக்க, வழியில் பல்வேறு காட்சிகளைக் காட்டி தலைவியை மகிழ்விக்கிறான். இதனை,

**"..... கானம் நயவரும் அம்ம,**
**கண்டிசின் வாழியோ குறுமகள் நுந்தை**
**அடுகளம் பாய்ந்த தொடிசிதை மருப்பின்" (அகம். 99:10-13, ப. 222)**

என்ற பாடலடிகள் மூலம் அழகிய பூக்கள் நிறைந்து மணக்கும் இக்காடு உன் தந்தையுடையது. இதன் அழகைக் கண்டு மகிழ்ந்தவாறே என்னுடன் வருக என்று குறிப்பிடுகின்றான். இதில் தலைவன் தலைவியை மகிழ்விக்கும் உணர்வு கொண்டவனாகக் காணப்படுகின்றான். இச்சூழலுக்கு இன்னொரு பாடலும் (அகம். 257) சான்று பகர்கின்றது.

வினை முற்றிய தலைவனின் நெஞ்சம், அவனுக்கு முன்பாக தலைவியை விரைந்து சென்று அடைந்ததைத் தேர்ப்பாகனிடம், "எம்மினும், விரைந்துவல் எய்தி"[71] என்று கூறுவதிலிருந்து அறியமுடிகிறது. தலைவியிடம் திரும்பி வந்த தலைவனிடம், தலைவியைப் பிரிந்து எவ்வாறு ஆற்றியிருந்தான் என்பதை தோழிக்கு, தலைவியது இடையையும் கடந்து தாழ்ந்து தொங்கி அசையும் கருநாகம் போன்ற சடையின் அழகைக் காணவிரும்பிய தலைவனைக் கண்டு தலைவி நாணம் கொண்டாள் என்று கூறுகின்றான். இதில் தலைவன், தலைவியின் அழகைக் கண்டு வியந்து மயங்கும் உணர்வு கொண்டவனாகவும் 'மருட்கை' மெய்ப்பாடும் கொண்டவனாகவும் காணப்படுகின்றான்.[72]

பொருள் தேடிக் கொண்டு திரும்பி வந்த தலைவனிடம், தலைவி இதுவரை என்னை நினையாமல் இருந்தீரோ என வினவ, தலைவன், 'நீர் இல்லாத ஆற்றில் சிக்கித் தவிக்கும் ஓடம் போல், நம்மை இகழாதபடி பொருள் ஈட்டி வரத் தங்கியபோது என் உடல் அங்கேயும், உயிர் நெஞ்சு உன்னிடத்தேயும் இருந்து சிக்கித் தவித்ததை உணராமல் கேட்கிறாயே" என்று எண்ணி வருந்துகின்றான். இதனை,

**“எள்ளல் நோனாப் பொருள்தரல் விருப்பொடு**
**நாணுத்தளை ஆக வைகி, மாண்வினைக்கு**
**உடம்புஆண்டு ஒழிந்தமை, அல்லதை**
**மடம்கெழு நெஞ்சம் நின்உழை யதுவே”** (அகம். 29:20-23, ப. 67)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் தலைவன் பொருள் ஈட்டலுக்கும் தலைவிக்கும் இடையில் சிக்கித் தவிக்கும் தவிப்புணர்வு கொண்டவனாகவும், தலைவி தன் மனதைப் புரிந்து கொள்ளாததை எண்ணி வருந்துபவனாகவும் இளிவரல் மெய்ப்பாட்டு உணர்வைக் கொண்டவனாகக் காணப்படுகிறான். இதே கருத்தினை அகம் – 39 வது பாடலும் வலியுறுத்துகின்றது.

தலைவன், தலைவியின் பேதைமை என்னும் அறிவின்மையால் எழும் நகையுணர்வை, அச்சந்தரும் காட்டுவழியில் செல்லும் தலைவனுடன் தலைவியும் வரக் கருதியதை எண்ணித் தலைவன்,

**‘‘நாம் நகையுடையம் நெஞ்சே நம்மொடு’’** (அகம். 121, ப.1)

என்று தலைவியின் பேதைமையைக் கண்டு நகைக்கும் ‘நகை’ மெய்ப்பாட்டை வெளிப்படுத்துகின்றான். மேலும் தலைவியின் அறியாமையைக் கண்டு நகைத்தாலும் அதனை போக்கும் உணர்வினனாகத் திகழ்கிறான்.

பொருள் தேடப் பிரிந்து சென்று மீண்ட தலைவன், தலைவியுடன் இல்லறம் நடத்தினான். அவன் நெஞ்சம் மீண்டும் பொருள் தேடத் தூண்டிற்று அதனை உணர்ந்து தலைவன்,

**‘‘அரிதுபெறு சிறப்பின் காமத்து இயற்கையும்**
**இந்நிலை அறியாய் ஆயினும்’’** (அகம். 353, ப. 131)

என்று தன் நெஞ்சிடம், நாள்கள் கழிவதும், மூப்பின் வருகையும், காமத்தின் தன்மையும் கழிந்து போகக் கூடியது. இதனை உரையாமல் பொருள் தேடத் துடிக்கின்றாய். இதன் வலி உனக்கு இப்போது தெரியாது, நாள்கள் சென்று நாடி, நரம்புகள் தளர்ந்து, காம (காதல்) உணர்வு குறைந்து மூப்பெய்தும் நிலையில் நீ வருந்துவாய். ஆகையால் தலைவியுடன் இப்போதே தங்கி இருந்து இளமைக்கால இன்பத்தை நுகர்ந்து வாழ்வாயாக என்று குறிப்பிடுவதில் தலைவன் காலத்தின் அருமையையும், இளமையின் நிலையாமையையும் உணர்ந்து ‘இளிவரல்’ மெய்ப்பாட்டை வெளிப்படுத்துகின்றான்.

பாலைத் திணையில் தலைவன், தலைவியைப் பெற்றுவிட்டோம்’ என்றும் தலைவியின் துணிச்சலை எண்ணியும் வியக்கும் ‘மருட்கை’ மெய்ப்பாட்டுஉணர்வு கொண்டவன், ‘புணர்வு’ எனும் ‘உவகை’ மெய்ப்பாட்டுணர்வு கொண்டவன், தலைவியை இடரின்றி தன் ஊருக்கு அழைத்து வந்த பெருமித மெய்ப்பாட்டுணர்வு கொண்டவன், காதலா கடமையா என ஆராய்ந்து காதலே என இடைக்கால முடிவெடுக்கும் ஆராய்ச்சி உணர்வினன்,

தன்னிலையில் தாழ்ந்து தன் நெஞ்சை இகழும் ‘அசைவு’ மெய்ப்பாட்டு உணர்வினன், பொருளை ஈட்டும் ‘உடைமை’ எனும் மெய்ப்பாட்டு உணர்வினன், வறுமையால் வரும் இளிவரலைக் கண்டு அஞ்சும் உணர்வினன், தலைவியின் மீது இரக்கம் கொள்ளும் அன்பு, ‘அருள்’ மெய்ப்பாட்டு உணர்வினன், அன்பு அளவில் மிகுந்த ‘கைம்மிகல்’ எனும் மெய்ப்பாட்டு உணர்வினன், பொருள் வயிற் பிரியக் கருதும் தலைவனின் உள்ள ஊசலாட்டத்தினால் ‘கையாறு’ எனும் மெய்ப்பாட்டு உணர்வினனாகக் காணப்படுகின்றான்.

புறக்காட்சிகளைக் கண்டு தன் மனதில் உறைந்து கிடக்கும் அக உணர்வுகளை வெளிப்படுத்தும் உணர்வினன். தலைவியின் துயரைப்போக்கி, உள்ளம் உவப்பதைக் கண்டு இரசிக்கும் உவகை உணர்வினன், தலைவியை விட்டு பிரிய இயலாத தவிப்பினால் வருத்தம் கொள்ளும் ‘இளிவரல்’ மெய்ப்பாட்டுணர்வினன், தலைவியைப் பிரிய அஞ்சும் வெரூஉதல் மெய்ப்பாட்டுஉணர்வினன், செய்யத் தகுவனவும் தவிரத் தகுவனவும் வரைந்து ஒழுகும் ‘விரைவு’ எனும் மெய்ப்பாட்டு உணர்வினன், இவ்வுலகத்துப் பயன் முழுவதும் கிடைப்பதானாலும் தலைவியைப் பிரியமாட்டேன் என்று வெகுளும் வெகுளி மெய்ப்பாட்டுணர்வினன், பொருள் வயிற் பிரிந்த நிலையில் தலைவியை நினைந்து மகிழும் ‘நினைத்தல்’ மெய்ப்பாட்டு உணர்வினன், வினை முடித்து விரைந்து மீள எண்ணும் ‘விரைவு’ மெய்ப்பாட்டுணர்வினன், தலைவியை நோக்கிச் செல்லும் நெஞ்சினை அடக்கும் மனமொழி மெய்யினடங்குதலாகிய ‘அடக்கம்’ எனும் மெய்ப்பாட்டுணர்வினனாகக் காணப்படுகின்றான்.

**பாலைத்திணையில் தலைவன் கூற்றில் ஆடவர் பின்வரும் உணர்வுநிலைப் பட்டவர்களாகக் காணப்படுகின்றனர்**

- தலைவன், தலைவியின் அழகு, துணிச்சலை எண்ணி வியக்கும் உணர்வினன் **(நற். 384,113,190, ஐங். 321,322, நற். 9, குறுந். 37, ஐங். 360)**
- தலைவன், தலைவியுடன் இன்ப வாழ்வினை மேற்கொள்ள விரும்பும் உணர்வினன். (நற். 202,384,264,52, குறுந். 256,267,274)
- தலைவன் பொருள்தேடும் வேட்கைக்கும், தலைவியை அடையும் உணர்வுக்கும் இடையில் சிக்கித் தவிக்கும் தவிப்புணர்வு கொண்டவன் (நற். 3 குறுந். 71, 151, 168, அகம். 29,199,225)
- தலைவன், தலைவியின் களைப்பைப் போக்கும் உணர்வினன். (நற். 9,76,362 ஐங். 361,395, அகம். 257,99)
- தலைவன், தலைவியின் துயரை எண்ணி வருந்தி, விரைந்து சென்று துயரைப் போக்கும் உணர்வினன். (நற். 62,126,141,308,312,366,42,106, குறுந். 56,250, அகம். 43.)

- தலைவன் தான்நினைத்ததை உறுதியாக முடிக்கும் உணர்வினன் (நற். 298, குறுந். 189)
- தலைவன், தலைவியைத் தேற்றி சமாதானப் படுத்தும் உணர்வினன். (நற். 166,256)
- தலைவன், தன் காதலுணர்வைத் தானே கட்டுப்படுத்தும் உணர்வினன். (நற். 105, 284. 346, 352.
- தலைவன் தலைவிமீது இரக்க உணர்வு கொண்டவன். (நற். 157, ஐங். 323,326,327,328,330)
- தலைவன் பொருளைவிட தலைவியுடனான இன்பத்தை விரும்பி செலவினைத் தவிர்க்கும் உணர்வினன். (ஐங். 355, அகம். 41, 57, 149, 167, 191, 193, 289, 297, 353, 361, 371)
- தலைவன் தன்நெஞ்சை இகழ்ந்தும் புகழ்ந்தும் சூழலுக்குத் தக்கவாறு மன உணர்வை மாற்றிக்கொள்ளும் இயல்பினன்.

  (நற். 137, ஐங். 323,329, அகம். 3,21,33, 47,79, 83,87, 93, 109, 123, 169, 181, 239, 279, 287, 291, 299, 327, 335, 337, 343, 339, 351, 365, 377, 379, 373, 381)
- தலைவன், குடும்பத்தின் எதிர்காலத் தேவையைக் கருத்தில் கொள்ளும் நிலையில் பொருள் தேடத் துணிபவன். (நற். 205, அகம். 75, 131 நற். 262)
- தலைவன், தலைவியின் மனதைத் தன்வயப்படுத்தும் உணர்வினன் (குறுந். 137, அகம். 5,245)
- தலைவன். பொருள்தேடும் வேட்கை மேலோங்கும் நிலையிலும் தலைவியைக் குறித்த நினைவு மாறாதவன், தடுமாறாத உள்ளமும், தடம் மாறாத உறுதியும் கொண்டவன். (குறுந். 209,235, 237, ஐங். 365,325,326, அகம். 9,261)

### 5. நெய்தல் திணையில் தலைவன் கூற்றில் வெளிப்படும் ஆடவரின் மனஉணர்வுகள்

சங்க அகநூல்களில் நெய்தல் திணைப் பாடல்கள் மொத்தம் 344, அவற்றுள் தலைவன் கூற்றாக 28 பாடல்கள் இடம்பெற்றுள்ளன. நற்றிணை –6, குறுந்தொகை –3, ஐங்குறு நூறு –11, கலித்தொகை – 3, அகநானூறு – 5, என்ற எண்ணிக்கையில் அமைந்துள்ளன. [73]

நெய்தல் திணையில் தலைவன், தலைவியை நினைந்து அவள் அழகைக் கண்டு வியந்து பாராட்டுதலும், அவள்மீது கொண்ட காதல் உணர்வு மிகுதியால் இரங்கித் தவிப்பதும் மடல் ஏறத் துணிவதும், தலைவியின் மன நிலையை அறிய முற்படுவதும்,

பொருள் கடைக்கூட்டிய நெஞ்சிற்குச் செலவழுங்குதல் போன்ற தலைவனின் உணர்வுகளை வெளிப்படுத்துவனவாக நெய்தற் பாடல்கள் அமைந்துள்ளன. தலைவன் பரதவர் மகளைக் கண்டு காதல் வசப்பட்டு தவிக்கும் நிலையை இப்பாடல்கள் சித்தரிக்கின்றன.

**அ) நற்றிணை**

நற்றிணையில் நெய்தற் திணையில் தலைவன் கூற்றாக ஆறு பாடல்கள் இடம் பெற்றுள்ளன.[74] தலைவியைக் கண்டு மகிழ வாய்ப்பில்லாமல் தவிக்கும் தலைவன், தோழியின் நட்பைப் பெற்று இரங்கத்தக்க தனது நிலையைக் கூறல், தலைவியின் அழகை வியந்து பாராட்டுதல், தலைவியின் மனநிலையை அறிதல், பொருள் கடைக் கூட்டிய நெஞ்சிடம் செலவழுங்குதல் போன்ற நிலைகளில் ஆறுபாடல்களும் அமைந்துள்ளன.

தலைவன், தலைவியைத் தான் கண்ட இடத்தில் மீண்டும் அவளைக் கண்டபோது மனம் மகிழ்ந்து, 'கண்டோர் தண்டா நலத்தைப்' பெற்ற நீ தெய்வ மகளோ என்று வியந்து,

**"முள்எயிற்று முறுவலும் திறந்தன**
**பல்இதழ் உண்கணும் பரந்தவால் பனியே"** (நற். 155, ப. 207)

என்று வியக்கும் உணர்வினனாகவும், அச்சங்கலந்த 'மருட்கை' என்றும் மெய்ப்பாடு வெளிப்படுத்துபவனாகத் தலைவன் காணப்படுகிறான். தலைவியைக் கண்டவர் மீண்டும் மீண்டும் காணத் தோன்றும் அழகுடையவள் அத்தகையள் தன் மீது அன்பு பொழிவதைக் கண்டு தலைவனின் உள்ளம் பெருமிதம் கொள்கிறது.

தலைவன், தலைவி மீது கொண்டிருந்த காதலைத் தோழியிடம் கூறி, அவளுடன் இருந்தபோது புலவுநாறும் கடற்கரை இனிதாக இருந்தது. அவளைக் கண்டு மகிழ வாய்ப்பில்லாத இந்த நேரத்தில்

**"துறைநணி இருந்த பாக்கமும் உறைநனி**
**இனிதுமன் அளிதோ தானே துனிதீர்ந்து**
**அகன்ற அல்குல் ஐதுஅமை நுசுப்பின்**
**மீன்எறி பரதவர் மடமகள்**
**மானமர் நோக்கம் காணா ஊங்கே"** (நற். 101:5-9, ப. 132)

என்று தோழியிடம் இரங்கத் தக்க தனது நிலையைக் கூறுகிறான். இதில் தலைவன், தலைவியைக் காணத் துடிக்கும் உணர்வினனாகத் திகழ்கிறான். நெய்தற் நிலத் தலைவன், தலைவியின் மனதில் தான் உள்ளானா என்பதை அறியத் துடிக்கின்றான். எனவே,

**"கடுந்தேர் ஏறியும் காலின் சென்றும்**
**கொடுங்கழி மருங்கின் அரும்புமலர் கொய்தும்**
**கைதை தூக்கியும், நெய்தல் குற்றும்**

**புணர்ந்தாம் போல, உணர்ந்த நெஞ்சமொடு**

**....     .....     .....     ....     .....     ....**

**.....     .....     .....     ....     .....     ....**

**பின்னிலை முனியா நம்வயின்**

**என்என நினையும் கொல் பரதவர் மகளே?"** (நற். 349:1-4, 9-10, ப. 466)

என்று தலைவியின் மனநிலையை அறிய தோழியிடம் இரந்து நிற்பவனாகக் காணப்படுகிறான். இங்கு தலைவனின் மனம் இரங்கத் தக்க உணர்வுடன் இளிவரல் மெய்ப்பாட்டினை வெளிப்படுத்துகிறது.

தலைவியின் காதலை அறிந்து அவளின் பெற்றோரால் இற்செறிக்கப்பட்டத் தலைவியை நினைந்து மிகுந்த வருத்தமடைந்து, தன் நெஞ்சிடம்,

**"மீன்கண் துஞ்சும் பொழுதும்,**
**யான்கண் துஞ்சேன்; யாது கொல் நிலையே?"** (நற். 319:6-11, ப. 425)

என்று அணங்குகள் திரியும் இரவு நேரத்தில், இருள் மண்டிக்கிடக்கும் வேளையில் கொல்லிப் பாவை போன்ற பருத்த தோளையும், இளமை குடிகொண்டிருக்கும் உடலையும் எண்ணி எண்ணி மீன்கள் துஞ்சுகின்ற நேரத்தில் தான் தூங்காமல் ஏங்கித் தவிப்பதாக உள்ளம் இரங்கிக் கூறுகிறான். இதில் தலைவன் தலைவியை எண்ணி ஏங்கித் தவிக்கும் அச்சங்கலந்த தவிப்புணர்வு கொண்டவனாகக் காணப்படுகிறான்.

தலைவன், தலைவி மீதான தன்னுடைய காதல் உணர்வை தலைவியிடமும், தோழியிடமும் கூறி அதற்கு தலைவி இசைய மறுத்ததால், மனம் நொந்து காதல் உணர்வு மிகுதியான நிலையில்,

**"மடலே காமம் தந்தது; அலரே,**
**மிடைபூ எருக்கின் அலர்தந் தன்றே;**
**இலங்குகதிர் மழுங்கி எல்விசும்பு படரப்**
**புலம்புதந் தன்றே; புகன்று செய் மண்டிலம்**
**.... ..... .... ... .... ..... .... ...**
**யாங் குவென்கொல்? அளியேன் யானே"** (நற். 152;1-9, ப. 203)

என்று தலைவனை மடலேறத் துணியச் செய்கிறது. தலைவியின் மீதான காதலுணர்வு, அலர் எழவும் வாய்ப்பாக அமைகிறது. இதில், தலைவியை அடைய மடலேறத் துணியும் தலைவனின் துணிவுள்ளம் புலப்படுகிறது. இங்கு தலைவன், காதல் உணர்வு மிகுதியான நிலையில் 'கைம்மிகல்' என்றும் மெய்ப்பாட்டு உணர்வினை வெளிப்படுத்துகிறான். வாழ்க்கைத் தேவையை பூர்த்தி செய்யும் பொருளைத் தேட தலைவன் தயாராகும் போது,

**"புணரின் புணராது பொருளே பொருள்வயின்**
**பிரியின் புணராது புணர்வே ஆயிடைச்**

**சேர்பினும் செல்லாய் ஆயினும் நல்லதற்கு**
**உரியை வாழிஎன் நெஞ்சே"** (நற். 16:1-4, ப.21)

என்று நெஞ்சை வாழ்த்துகிறான். இதில் தலைவன் பொருளுக்கும் காதலுக்கும் இடையில் சிக்கித் தவிப்பவனாகவும், 'புணர்வு' எனும் 'உவகை' மெய்ப்பாட்டுணர்வு நிறைந்தவனாகவும் காணப்படுகிறான்.

**குறுந்தொகை**

குறுந்தொகை நெய்தற் திணையில் தலைவன் கூற்றாக மூன்று பாடல்கள் இடம் பெற்றுள்ளன.[75] இதில் உணர்ப்புவயின் வாரா ஊடலில் தலைவன் கெஞ்சுதல், தலைவியை நாடிச் செல்லும் தலைவனைக் கடிந்துரைக்கும் பாங்கனுக்கு கூறுதல், பொருள் வலிக்கும் நெஞ்சிற்கு செலவழுங்குதல் போன்ற நிலைகளில் பாடல்கள் அமைந்துள்ளன.

நெய்தல் நிலத் தலைவனிடம் ஊடல் கொண்ட தலைவியிடம், தலைவன் தன்னிடம் குற்றமில்லையென்று கெஞ்சி, தலைவியுடன் கூடிவாழத் துடிக்கும் தலைவனின் காதல் உணர்வை,

**"சேயள் அரியோள் படர்தி**
**நோயை நெஞ்சே நோய்ப்பா லோயே"** (குறந். 128, ப. 168)

என்ற பாடல் வெளிப்படுத்துகின்றது. இதில் தலைவன், எட்டாத தூரத்தில் உள்ள தலைவியை அடைய நினைப்பதால் நெஞ்சு துன்புறும் என்று குறிப்பிடுகிறான். தலைவியின் ஊடல் தீராததால், தலைவியைக் கூடி வாழ இயலாமல் உள்ளம் வருந்தும் உணர்வினனாகக் காணப்படுகிறான். இங்கு தலைவன், 'வருத்தம்' எனும் 'இளிவரல்' மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துபவனாகக் காணப்படுகிறான்.

நுண்ணிய வலையினையுடைய பரதவரின் இளமை வாய்ந்த மகளின் கண்வலையில் அகப்பட்டு மாண்புகள் நிறைந்த தலைவனின் நெஞ்சம் அங்கேயே தங்கிவிட்டது என்று தன்னைக் கடிந்துரைத்த பாங்கனிடம் கூறுகிறான். இதனை,

**"அறிகரி பொய்த்தல் ஆன்றோர்க்கு இல்லை**
**குறுகல் ஓம்புமின் சிறுகுடிச் செலவே**
**இதற்குஇது மாண்டது என்னாது அதற்பட்டு**
**ஆண்டொழிந் தன்றே மாண்தகை நெஞ்சம்"** (குறுந். 184, ப. 228)

என்ற பாடல் உணர்த்துகின்றது. இதில் தலைவன் தலைவியின் கண் வலையில் சிக்கித் தவிக்கும் இரங்கத் தக்கவனாகக் காணப்படுகிறான். இளிவென்னும் பிறர் தன்னை எளியன் ஆக்குதல் என்ற 'அழுகை' மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துகிறான். தலைவியுடன் சேர்ந்து வாழத் தேவையான பொருளைத் தேடிச் செல்ல எண்ணிய நெஞ்சிடம்,

**"மன்னுயிர் அறியாத் துன்னரும் பொதியில்**
**சூருடை அடுக்கத்து ஆரம் கடுப்ப**
**வேனி லானே தண்ணியள்; பனியே**
**வாங்குகதிர் தொகுப்பக் கூம்பி ஐயென**
**அலங்குவெயிற் பொதிந்த தாமரை**
**உள்ளகத் தன்ன சிறுவெம் மையளே"** (குறுந். 376, ப. 439)

என்று, வெம்மையில் குளிர்ச்சியையும், குளிரில் வெம்மையையும் தரும், தலைவியைப் பிரிந்து செல்ல இயலாது என தன் நெஞ்சிற்குரைத்து செலவழுங்குகிறான். பொருள் தேடுவதைக் கடமையாகத் தலைவன் கொண்டிருந்தாலும் அப்போதைக்குத் தலைவியைத்தனித்து தவிக்குமாறு செய்யாமல் உடன்தங்கி தலைவியை மகிழ்வித்து தானும் மகிழும் உணர்வு கொண்டவனாகக் காணப்படுகின்றான். இங்கு தலைவன், 'புணர்வு' எனும் 'உவகை' மெய்ப்பாட்டுணர்வு வெளிப்படுத்துபவனாகத் திகழ்கிறான்.

**ஐங்குறுநூறு**

ஐங்குறுநூறு நெய்தல் திணையில் தலைவன் கூற்றாக பதினொரு பாடல்கள் இடம் பெற்றுள்ளன.[76] அவை தலைவியின் அழகையும் பண்பையும் எண்ணி வியத்தல், தலைவி சொன்ன குறியிடம் சென்று, தலைவியைக் கண்டு மகிழ்தல், தலைவியை அடைய தோழியிடம் இரந்து குறை கூறுதல், விருந்துவாயிலாக ஊடல் தவிர்த்தல், வரைவிடை வைத்து பொருள் வயிற் பிரியக்கருதிய நெஞ்சிற்கு உரைத்தல் என்ற அமைப்பில் இடம் பெற்றுள்ளன.

தலைவன், தலைவியைக் கண்டு இருவரும் உள்ளம் கலந்த உணர்வினராய் இடையீடு இல்லாமல் ஒலிக்கும் கடல்ஒலிபோல், பிறவிதோறும் தலைவியுடன் காதல் தொடர்போடு அன்பும் கலந்து வரும் என்று எண்ணி, தன் நெஞ்சம் கவர்ந்தவளைத் தலைவன்,

**"தொண்டி அன்ன பணைத்தோள்**
**ஒண்தொடி அரிவைஎன் நெஞ்சுகொண் டோளே"** (ஐங். 171, ப. 207)

என்றும்,

**"உரவுக் கடலொலித் திரையென**
**இரவி னானும் துயிலறியேனே"** (ஐங். 172; ப. 208)

என்று கூறியதில் தலைவியை எண்ணியபடி இரவிலும் உறக்கம் அற்று காணப்படுகிறான். இங்கு 'மருட்கை', 'அழுகை' எனும் மெய்ப்பாட்டு உணர்வுகளை வெளிப்படுத்துகிறான்.

தலைவன், தலைவியுடன் கூடி மகிழ பாங்கனின் நட்பைப் பயன்படுத்தி உதவுமாறு கேட்கும்பொழுது பாங்கன், தலைவி குறித்த குறியிடம் சென்று அங்கு தலைவி, தலைவனுக்காகக் காத்திருப்பதைத் தலைவனிடம் கூறுகிறான். அங்கு செல்லக் கருதிய தலைவன்,

**"பொங்கரி பரந்த உண்கண்**
**அங்கலிழ் மேனி அசைஇய எமக்கே"** (ஐங். 174, ப. 210)

என்று தலைவியுடன் கூடி மகிழ ஒரு இடம் குறித்ததை எண்ணி மகிழ்கிறான். பாங்கனின் உதவியால் தலைவியைக் கண்டு மகிழ்ந்த தலைவன்,

**"எமக்கு நயந்து அருளினை ஆயின் பணைத்தோள்"** (ஐங். 175, ப. 211)

என்று தலைவியை, ஐம்பொறிகளாலும் ஆரத்துய்க்கும் இன்பத்தைத் தந்தாய் என உள்ளம் மகிழ்ந்து குறிப்பிடுகின்றான். இங்கு தலைவன், 'புணர்வு' எனும் 'உவகை' 'பெருமிதம்' 'மருட்கை' மெய்ப்பாடுகள் வெளிப்படுமாறு காணப்படுகிறான். மேலும் தனது உள்ளத்தையும், உறக்கத்தையும் கவர்ந்து கொண்ட தலைவிக்கு,

**"ஐதுஅமைந்து அகன்ற அல்குல்**
**கொய்தளிர் மேனி கூறுமதிதவறே"** (ஐங். 176, ப. 212)

என்று தான் செய்த தவறு யாது என வெகுண்டு வெகுளி மெய்ப்பாட்டுணர்வோடு காணப்படுகிறான். இங்ஙனம் என்னை மாற்றிய தலைவியோடு தான் கூடி மகிழ முடியாமல் இருக்கும் தன் குறையை நீக்குமாறு தோழியிடம்,

**"எற்கண்டு நயந்து நீ நல்காக் காலே"** (ஐங். 178, ப. 215)

என்று தோழியிடம் இரந்து நிற்கும் நிலையில் தலைவன் காணப்படுகிறான். இதில் தலைவன், தலைவியின் அழகிலும், பண்பிலும், அன்புணர்விலும் கட்டுண்டு, தலைவியைக் கண்டு கூடி மகிழும் உணர்வைக் கொண்டவனாகக் காணப்படுகிறான், தலைவியின் நலனை நுகருவது ஒன்றையே நோக்கமாகக் கொண்டு செயல்படுவதை அறிய முடிகிறது. இங்கு தன்னிலையில் தாழும் அசைவு எனும் மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துகிறான்.

தலைவன், தலைவியின் ஊடலைத்தவிர்க்கும் பொருட்டு விருந்தினை வாயிலாகக் கொண்டு இல்லில் நுழைகின்றான். இல்வாழ்வில் முக்கியமான விருந்தோம்பல் பண்பு நிறைந்தவளாகத் தலைவி விருந்து வருவதைக் கண்டு,

**"வைகறை மலரும் நெய்தல் போலத்**
**தகைபெரி துடைய காதலி கண்ணே"** (ஐங். 188, ப. 225)

என்று தலைவி மலர்ந்த முகம் கொண்டு வரவேற்கும் இல்லறச் சிறப்பு கண்டு மகிழ்கிறான். இதில் தலைவன் 'பெருமிதம்', 'இன்புறல்' எனும் மெய்ப்பாடுகள் உடையவனாகவும் காணப்படுகிறான். நெய்தற் நிலத் தலைவன் களவு காலத்தில் வரைவிடை வைத்து தலைவியைப் பிரிந்தான் இடையில் தனியே இருக்க முடியாமல், பிரிவைப் பொறுக்க முடியாமல்,

**"வளைபடு முத்தம் பரதவர் பகரும்**
**கடல்கெழு கொண்கன் காதல் மடமகள்**

**கெடல் அரும் துயரம் நல்கிப்**
**படல்இன் பாயல் வெளவி யோளே''** (ஐங். 195, ப. 233)

என்று பிரிவுத் துயரம் அடைந்து, உறக்கத்தை இழந்து தவிக்கின்றான். இங்கு 'இழவு' என்ற மெய்ப்பாட்டுணர்வு புலப்படுகிறது. பொருள் தேட வேண்டும் என்ற எண்ணம் ஒரு புறமும், தலைவியின் பிரிவைப் பொறுக்க முடியாமல் தவிக்கும் உணர்வு எதிர்ப்புறமும் செல்வதால் தலைவன் ஆற்றாமல் புலம்புகின்றான். தலைவன் இருவேறு உணர்வுகளுக்கிடையில் சிக்கி அல்லல் பட்டு துயரமடையும் உணர்வு கொண்டவனாகக் காணப்படுகிறான்.

**கலித்தொகை**

கலித்தொகை, நெய்தற் திணையில் தலைவன் கூற்றாக மூன்று பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அவை, தலைவி மீது காதல் கொண்ட தலைவன் தோழியின் வாயிலாகத் தலைவியைச் சந்தித்துப் பின்னர் முறைப்படி அவளைத் திருமணம் செய்ய இயலாத போது மடல் ஊர்ந்து பிறர் உதவிமூலம் தலைவியை அடைந்த தலைவன், அந்நிகழ்வைத் தன் நண்பர்களிடம் கூறுகின்றான். தலைவன்,

**"உரிதுஎன் வரைத்துஅன்றி ஒள்ளிழை தந்த**
**பரிசுஅழி பைதல்நோய் மூழ்கி எரிபரந்த**
**நெய்யுள் மெழுகின் நிலையாது பைபயத்**
**தேயும் அளித்து என்உயிர்"** (கலி. 139:20-23, ப. 540)

என்று தலைவித் தன் உள்ளத்தைக் கொண்டு சென்று விட்டாள். அவளைக் காண்பதே அரிதாயிற்று என்கிறான். இங்கு 'இழவு' என்னும் மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துகிறான். அவளை அடைய வேறு வழியின்றி மடலேறத் துணிந்ததும்,

**"இளையாரும் ஏதிலவரும் உளைய யான்**
**உற்றது உசாவும் துணை;**
**என்றுயான் பாடக் கேட்டு**
**அன்புறு கிளவியாள் அருளிவந்து அளித்தலின்**
**துன்பத்தில் துணையாய மடல்இனி இவட்பெற**
**இன்பத்துள் இடம்படல் என்று இரங்கினள்"** (கலி. 139:24-29, ப. 540)

என்று கூறி மடலேறியதைக் கண்ட தலைவி என்மீது இரக்கம் கொண்டு முன்னை அன்பை நினைவு கூர்ந்து எனக்கு அருள் செய்தாள். எனவே நான் அளவில்லாத மேன்மையையுடைய அரிய தவத்தையுடையோர் பெறும் விண்ணுலக வாழ்வை பெறுவதுபோல் இன்பத்தை எனக்கு அளிக்க தலைவி இரங்கினாள். இதில் தலைவனின் துணிவுள்ளமும் எண்ணியதை எண்ணியபடி அடையும் திண்மை பெற்றவனாகக் காணப்படுகிறான். இங்கு அளவில் மிகுந்த இன்ப உணர்வினால் தலைவன் 'கைம்மிகல்' என்னும் மெய்ப்பாட்டு உணர்வினை வெளிப்படுத்துகிறான்.

"காதல் நோயினால் வந்த துன்பம் நீங்க எனக்கு அருள் செய்யவேண்டும். அது உங்களின் கருணைமட்டுமன்று, அறமும் ஆகும்" என்று ஊர்மக்களிடம் தனது துன்பத்தைப் போக்குமாறு வேண்டுகிறான். இதே போன்று மடலேறுகின்ற தலைவன்,

சான்றோரிடம்,

**"சான்றவர்! வாழிய சான்றவர்! என்றும்**
**பிறர் நோயும் தம்நோய்போல் போற்றி அறனறிதல்**
**சான்றவர்க் கெல்லாம் கடனானால் இவ்விருந்த**
**சான்றீர்! உமக்கு ஒன்று அறிவுறுத்துவேன்" (கலி. 139:1-4, ப. 540)**

என்று கூறி தான் அடைந்த காதல் நோயை,

**'யாமத்தும் எல்லையும் எவ்வத் திரையலைப்ப**
**மாமேலேன் என்று மடல்புணையா நீந்துவேன்**
**தேமொழி மாதர் உறாஅது உறீஇய**
**காமக் கடலகப் பட்டு,**
**உய்யா அருநோய்க்கு உயலாகும் மையல்**
**உறீஇயாள் ஈத்தஇம் மா" (கலி. 139;14-19, ப. 540)**

என்று தான் அடைந்த காமநோயைத் தீர்ப்பது தங்களின் கடமை என சான்றோரிடம் குறிப்பிடுகின்றான். தானே தலைவியை அடைய முடியாத நிலையில் ஊர்மக்களிடமும், சான்றோரிடமும் உதவியை நாடுகின்றான். அவர்கள் தன்னைத் தலைவியோடு சேர்த்து வைப்பர் என்ற எண்ணம் கொண்டவனாகக் காணப்படுகின்றான். இங்கு தலைவன், தலைவியைப் பெற சான்றோரை நெருக்குகின்ற நிலையில் 'நலிதல்' என்னும் மெய்ப்பாடு அடைந்தவனாக காணப்படுகிறான்.

இந்நிலை இருக்கும் போது மடல் ஊர்ந்து தலைவியை எய்திய தலைவன், தான் மடல் எய்தியதையும் அவளை அடைந்த செய்தியையும் தன் நண்பர்களுக்கு தெரிவித்தல், மடலேறும் தலைவன் சான்றோர்க்கும், கண்டோர்க்கும் கூறுவது போல் அமைந்துள்ளது, மூன்று பாடல்களும் இரங்கத்தக்க மடற்பாடல்களாக அமைந்துள்ளன.

நெய்தற் நிலத் தலைவன், தன் உள்ளத்தைக் கொள்ளை கொண்ட தலைவியை அடைய எதனையும் செய்யத் துணிபவன். எனவே, மடலேறத் துணிந்து ஊர்மக்களிடம்,

**"கண்டவி ரெல்லாம் கதுமென வந்தாங்கே**
**பண்டறி யாதீர்போல நோக்குவீர்! கொண்டது**
**மாஎன்று உணர்மின்" (கலி. 140, 1-3, ப. 544)**

**"என்கண் இடும்பை அறீஇயினென்; நும்கண்**
**தெருளுற நோக்கித் தெரியுங்கால் இன்ன**

**மருளுறு நோயொடு மம்மர் அகல**
**இருளுறு கூந்தலாள் என்னை**
**அருளுறச் செயின் நுமக்கு அறனுமார் அதுவே"** (கலி.140,30-35, ப. 544)

என்று கூறி வருந்துகிறான். இதில் தலைவன், தலைவியை அடைய ஊர் மக்களின் உதவியை நாடுபவனாகக் காணப்படுகின்றான். ஊர்மக்களிடம் தலைவன், என் துன்பத்தை உமக்கு அறிவித்துவிட்டேன், நீங்கள் தெளிவாகச் சிந்தித்து மயக்கம் பொருந்திய தலைவியிடம் என்னைச் சேர்க்க வேண்டும் என்று சான்றோரின் உதவியை நாடுகின்றான். இங்கு ஊர்மக்களை நெருக்கி 'நலிதல்' என்னும் மெய்ப்பாட்டு உணர்வை வெளிப்படுத்துகிறான்.

**அகநானூறு**

அகநானூறு நெய்தற் திணையில் தலைவன் கூற்றாக ஐந்து பாடல்கள் இடம் பெற்றுள்ளன.[77] அவை தலைவன் தன் ஆளுமைத்திறனை மறந்து தலைவி மீது காதல் கொண்டு மயங்கியதை இடித்துரைத்த பாங்கனை எதிர் மறுத்துரைத்தல், தலைவியைக் கண்டு, அவளது காதலை உணர்ந்த தலைவன் நெஞ்சுக்குள் கூறுவது, நெய்தல் நில மகளை மணந்ததைப் பாணற்கு உரைத்தல் என்ற நிலைகளில் ஐந்து பாடல்களும் அமைந்துள்ளன.

தலைவன், தலைவியைக் கண்டு மயங்கி, மீண்டும் மீண்டும் தலைவியைக் காண செல்வதால் தலைவனுடைய பண்புகளை, செயல்பாடுகளை மறந்து இருக்கும் நிலையை பாங்கன் இடித்துரைத்தபோது,

**"வண்டு வாய் திறந்த வாங்குகழி நெய்தற்**
**போதுபுறங் கொடுத்த உண்கண்**
**மாதர் வாள்முகம் மதைஇய நோக்கே"** (அகம். 130:12-15, ப. 22)

என்று பாங்கனிடம் தலைவன், தலைவியைப் பற்றிக் குறிப்பிடுகின்றான். மேலும்,

**"மதர்கயல் மலைப்பின் அன்ன கண்எமக்கு**
**இதைமுயல் புனவன் புகைநிழல் கடுக்கும்**
**மாமூ தள்ளல் அழுந்திய சாகாட்டு**
**எவ்வம் தீர வாங்கும் தந்தை"** (அகம். 140:14-15, ப. 45)

என்று தலைவியிடம் கொண்ட காதலைப் பற்றிக் கூறி அவள் எனக்குக் கிடைப்பளா என எண்ணி துன்புறும் துன்பத்தை நீ அறிந்து நீக்குவாயாக, என்று பாங்கனின் துணையை நாடுகின்றான். தலைவன் தன் காதல் உணர்வை பாங்கனுடன் பரிமாறிக் கொள்ளும் நட்புணர்வு கொண்டவனாகவும் தன்னிலையில் தாழ்ந்து 'அசைவு' என்னும் மெய்ப்பாடு கொண்டவனாகவும், எளியனாகி 'இளிவு' எனும் மெய்ப்பாடு கொண்டவனாகவும் காணப்படுகிறான்.

தலைவனும், தலைவியும் களவொழுக்கத்தில் விளையாடும் போது, தலைவியுடன் சொல்லாடல் நிகழ்த்தி அவளுக்குத் தன் மீதுள்ள காதல் உணர்வை, காமக் குறிப்பைக் கண்டு தன் நெஞ்சிடம் கூறுவது போல்,

**"....   .....   .....   எனையதூஉம்**
**இம்மனைக் கிழமை எம்மொடு புணரின்**
**தீதும் உண்டோ"** (அகம். 230:8-10, ப. 252)

என்று தலைவியிடம் கேட்டு மெல்ல அணுகியதும் தன் கருத்தை அறிந்த தலைவி ஆனந்தக் கண்ணீரும், நாணமும் வந்து தலையைக் குனிந்தாள். அந்த அழகுக் காட்சியில் அவள் அன்பை உணர்ந்தவனாகக் காணப்படுகிறான்.

தலைவியைக் காண வந்த தலைவன், அவளைக் காண முடியாததால் மனம் கலங்கியபடி, தன் நெஞ்சுக்குள், தன்னோடு உழைத்த பணியாளர்களுக்குப் பகுத்துக்கொடுக்கும் பண்பினை உடைய தலைவியின் தந்தையோடு சேர்ந்து

**"....   ....   .... அவனொடு**
**இருநீர்ச் சேர்ப்பின் உப்புடன் உழந்தும்**
**பெருநீர்க் குட்டம் புனையொடு புக்கும்**
**படுத்தனம், பணிந்தனம், அடுத்தனம் இருப்பின்**
**தருகுவன் கொல்லோ தானே"** (அகம். 280:7-11, ப. 365)

என்று அவர் மனமறிந்து நடந்தும், பணிவு காட்டியும் அவரைச் சார்ந்தும் இருந்தால் தன் நேர்மைப் பண்பைக் கண்டு தனக்கு தலைவியைத் தருவானோ? என்று எண்ணி ஏங்குகிறான். இதில் தலைவன், தலைவிக்காக அவள் பெற்றோரிடம் பணிந்தும், சார்ந்தும் வாழ முற்படும் பண்புடையவனாகக் காணப்படுகின்றான். இங்கு "அடக்கம்" என்ற மெய்ப்பாட்டுணர்வு கொண்டவனாகக் காணப்படுகிறான். அவ்வாறு தலைவன், தலைவியிடம் தன் உள்ளத்தை இழந்த நிகழ்வைப் பாணனிடம்,

**"மூரல் முறுவலள் பேர்வனள் நின்ற**
**சில்நிரை வால்வலைப் பொலிந்த**
**பல்மாண் பேதைக்கு ஒழிந்தது என் நெஞ்சே"** (அகம். 390:12-17, ப. 215)

என்று குறிப்பிடுகின்றான். இதில் இளநகை உடைய தலைவியின் பொருட்டு தன் நெஞ்சம் தன் வலிமையினை இழந்துவிட்டுத் தவிக்கும் தலைவனைக் காணமுடிகிறது.

நெய்தல் திணையில் தலைவன், தலைவியைத் தெய்வ மகளோ என எண்ணி வியக்கும் 'அச்சங்கலந்த மருட்கை உணர்வினன், தலைவியின் நினைவால் வருந்தும் போது அவளின் நிலை என்னவோ என ஐயுறும் ஐயவுணர்வு கொண்டவன், தலைவியின் மீதான காதல் உணர்வு மிகுதியால் 'கைம்மிகல்' எனும் மெய்ப்பாட்டுணர்வினன், தலைவியைக் கூடி வாழ இயலாதநிலையில் உள்ளம் வருத்தும் 'இளிவரல்' உணர்வினன்,

தலைவியின் கண் வலையில் சிக்கித் தான் எளியனாகும் அழுகை உணர்வினன், தலைவியுடன் தங்கி மகிழும் புணர்வு எனும் உவகை உணர்வினன், தலைவியை எண்ணி இரவிலும் உறக்கம் அற்ற உணர்வினன், தலைவியுடன் கூடி மகிழ்ந்த பெருமித உணர்வினன், தலைவியைக் காண முடியாத நிலையில் உள்ளம் வெகுண்டு தோழியிடம் தன்னிலையில் தாழ்ந்து இரக்கும் அசைவு உணர்வினன், தலைவியின் இல்லறச் சிறப்பு கண்டு பெருமிதம் கொள்ளும் உணர்வினன், பொருள் தேடலுக்கும் தலைவியின் பிரிவுக்கும் இடையில் சிக்கி அல்லல்படும் அழுகை உணர்வினன், தலைவியின் அருளால் அவளை அடைந்த தலைவன் இன்ப உணர்வினால் இன்புறுதல் என்னும் மெய்ப்பாட்டு உணர்வினனாகக் காணப்படுகிறான்.

தலைவியைப் பெற சான்றோரிடம் ஊர்மக்களிடமும் முறையிட்டு மடலேறத் துணியும் உள்ளத்துடன் அவர்களை நெருக்குகின்ற 'நலிதல்' எனும் மெய்ப்பாட்டுணர்வினன், தன் காதல் உணர்வைத் தன்னிலையில் தாழ்ந்த பாங்கனிடம் பகிர்ந்து கொள்ளும் அசைவு உணர்வினன், பிறர் துன்பத்தை உணரும் நல்லுணர்வினன் தலைவியின் பெற்றோரைச் சார்ந்தும் பணிந்தும் வாழத்துணியும் நிலையில் பணிந்து மொழியும் அடக்கம் எனும் மெய்ப்பாட்டு உணர்வினனாகக் காணப்படுகிறான்.

**நெய்தல் திணையில் தலைவன் கூற்றில் தலைவன் பின்வரும் உணர்வுநிலைப் பட்டவனாகக் காணப்படுகின்றான்**

- தலைவன் தலைவியின் அன்பைக் கண்டு வியக்கும் பெருமித உணர்வு கொண்டவன். (நற். 155, ஐங். 171, 172, 185, 191, 197, அகம். 230)
- தலைவியின் நலன் காக்கும் உணர்வினன்
- தலைவன் தலைவியைக் காணத் துடிக்கும் உணர்வினன். (நற். 101)
- தலைவன், தலைவியை எண்ணி தூங்காமல் ஏங்கி நிற்பவன். (நற். 319)
- தலைவன், தலைவியின் ஊடலைத் தணித்து வாழ இயலாத உணர்வினன். பொருளுக்கும் தலைவியின் அன்பிற்கும் இடையில் சிக்கித் தவிப்பவன். (நற். 16, ஐங். 195)
- தலைவன், தலைவியின் கண்வலையில் சிக்குண்டு வலிமையை இழந்து தவிப்பவன். (குறுந். 184, அகம். 390)
- தலைவன், பொருள் தேடுவதைவிட, தலைவியுடன் கூடி இன்புறும் விருப்பமுடையவன். (குறுந். 376)
- தலைவன், தலைவியை அடைய, தோழி பாங்கனின் நட்பை நாடுபவன். (ஐங். 174, 175, 176, 178, நற். 349, அகம். 130,140)
- தலைவன் தலைவியின் ஊடலைத் தணிக்க விருந்தினை வாயிலாகப் பயன்படுத்துபவன். (ஐங். 188.)

- தலைவன், தலைவிக்காக, அவளது பெற்றோரைப் பணிந்தும், சார்ந்தும் வாழத் துணியும் பண்பினன். (அகம். 280.)

கற்பிலும், களவிலும் ஆடவர் தங்களைத் தாங்களே நிலைநிறுத்தும் தன்மையினையும், மற்றவரின் உதவியின்றி தவிக்கும் நிலையினையும் காணமுடிகின்றது. இதன் மூலம் சங்க கால ஆடவர் தன்னிலை தாழாமல் உணர்வுகளைக் காக்கும் பண்பினராகக் காணப்படுகின்றனர் என்பதைக் கண்டறிய முடிகின்றது.

**அ. அன்பின் ஐந்திணையில் வெளிப்படும் பிற ஆடவரின் மன உணர்வுகள்**

எட்டுத்தொகை நூல்களில் ஐந்திணைகளில் இடம்பெற்றுள்ள ஆடவரின் கூற்றுகளில் வெளிப்படும் தலைவனின் மன உணர்வோட்டங்களை ஆராயும் வகையில் இவ்வியலின் முற்பகுதி அமைகின்றது. அதன் தொடர்ச்சியாக எட்டுத் தொகைப் பாடல்களில் கூற்று நிகழ்த்தியுள்ள பிற ஆடவர்களான தேர்ப்பாகன், பாங்கன், பாணன், கண்டோர், உழையோர் போன்றோரின் கூற்றுகளில் வெளிப்படும் தலைவன் மற்றும் பிற ஆடவரின் மன உணர்வோட்டங்களை ஆராயும் வகையில் இப்பகுதி அமைந்துள்ளது.

**குறிஞ்சித் திணை**

குறிஞ்சித் திணையில் பாங்கன் கூற்றாக மூன்று பாடல்கள் உள்ளன. நற்றிணையில் ஒரு பாடலும், குறுந்தொகையில் இரண்டு பாடல்களும் இடம்பெற்றுள்ளன.

**அ. பாங்கன் - நற்றிணை**

தலைவனைப் பற்றி நன்கு அறிந்த நண்பன் பாங்கன். தலைவனுக்குத் தேவையான நேரத்தில் அறிவுரை கூறியும், இடித்துரைத்தும், உதவி செய்தும் தலைவனுடன் இருக்கும் பாங்கனை நற்றிணை காட்டுகின்றது. தலைவியைக் கண்டு தன்னிலை மறந்த நிலையில் இருக்கும் தலைவனிடம், நயனும், நண்பும், நாணும், பயனும், பண்பும், பாடறிந்து ஒழுகுதலும் ஆகிய பெருமிதத் தன்மைகள் நிறைந்தவனாய் இருந்தாய் ஆனால் இன்றோ ஒரு பெண்ணின் இளமையும் அழகும் உன்னை அக்குணங்களை இழக்கச் செய்துவிட்டனவே என்று எள்ளி நகையாடுகிறான். அதற்குத் தலைவன்,

> **“திருநுதல் பொலிந்த தேம்பாய் ஓதி**
> **முதுநீர் இலஞ்சி பூத்த குவளை**
> **எதிர்மலர்ப் பிணையல் அன்னஇவள்**
> **அரிமதர் மழைக்கண் காணாஊங்கே”** (நற். 160:7-10, ப. 214)

என்று தலைவியின் அழகைக் காண்பதற்குமுன், நயமாக எல்லோரிடமும் பேசும் தன்மையும், சுற்றத்தைக் காப்பாற்றுகின்ற உணர்வும் தனக்கு ஈடுஇணை இல்லாதவரிடம் கெஞ்சி நில்லாத தன்மான உணர்வும், தன்னிலையில் தாழாது பிறர்க்கு உதவும் உணர்வும், தீயவை

கண்டவிடத்து கொதித்து எழுகின்ற உணர்வும், பிறர் துன்பத்தைக் கண்டவிடத்து அதனை நீக்க விரையும் உணர்வும், பாங்கனைவிட தான் அதிகமாகப் பெற்றிருந்ததாக தலைவன் தறுகண்மை தோன்ற கூறுகின்றான். தன்னுடைய இத்தகையப் பண்புகளை இழக்கச் செய்த தலைவியை அடைந்தால் மீண்டும் அத்தகைய குணங்கள் எனக்குத் தோன்றும் என்றுதனது ஆழ்மனப் பதிவை, உள்ளத்துணர்வை பாங்கனிடம் பகிர்ந்து கொள்கிறான். இதில் தலைவன் தன் அஞ்சாத மன உணர்வை பாங்கனுக்கு உணர்த்தும் திண்மை வாய்ந்தவனாகக் காணப்படுகிறான். பாங்கன் தலைவனின் மன உணர்வினை, உணர்வோட்டத்தினை உணரும் தன்மை கொண்டவனாகக் காணப்படுகிறான்.

**'நகுதற் பொருட்டன்று நட்டல் மிகுதிக்கண்**
**மேற்சென்று இடித்தல் பொருட்டு'' (திருக். 784)**

என்ற வள்ளுவர் வாக்கிற்கிணங்க தலைவனை இடித்துரைத்து நேர்வழிப்படுத்தும் உள்ளத் துணிவுள்ளவனாகவும் காணப்படுகிறான். இதில் பாங்கனிடம் எள்ளல் நிலைக்களன் பெற்ற நகை எனும் மெய்ப்பாடு வெளிப்படுவதை உணர முடிகிறது.

**குறுந்தொகை**

தலைவன், தலைவியை நினைந்து வருந்துவதைக் கண்ட பாங்கன், காமம் என்னும் காதல் உணர்வானது உன்னைப் பற்றிக் கொண்டது. அது பேதைமையை உடையது, நொந்து வெறுக்கத் தக்கது. எனவே விழிப்பாய் இரு, அவ்வுணர்விற்கு பலியாகாதே என்று குறிப்பாய் உணர்த்துகின்றான். இதனை,

**"நோதக் கன்றே காமம் யாவதும்**
**நன்றுஎன உணரார் மாட்டும்**
**சென்றே நிற்கும் பெரும்பே தைமைத்தே" (குறுந். 78, ப. 114)**

என்ற பாடலடிகள் மூலம் தலைவனின் மனதில் காதல் உணர்வு துளிர்விடும் வேளையில், அவ்வுணர்வால் விளையும் தீமையை முன்னுணர்ந்து எடுத்துரைக்கும் பாங்கனைக் காண்கிறோம். இங்கு பாங்கன் 'ஆராய்ச்சி' எனும் மெய்ப்பாட்டு உணர்வினை வெளிப்படுத்துகிறான். தலைவி மீது காதல் உணர்வு மிகுந்து அவளன்றி வாழும் தன்மையை இழந்த தலைவனின் நிலையைக் கண்டு,

**"காமம் காமம் என்ப காமம்**
**அணங்கும் பிணியும் அன்றே; நினைப்பின்**
**முதைச்சுவற் கலித்த முற்றா இளம்புல்**
**மூதா தைவந் தாங்கு**
**விருந்தே காமம் பெருந் தோளோயே" (குறுந். 204, ப. 248)**

என்று தலைவனிடம் காம (காதல்) உணர்வு நமக்குள் தோன்றி துன்புறுத்தும் நோயன்று. தழைத்த, முற்றாத இளம்புல்லை, பசு நாவால் தடவி இன்புற்றாற் போலவும் நாளும் புதிய விருந்துபோல் இன்பந்தருவது என்று கூறுவதை அறிய முடிகிறது. இதில் பாங்கன் தலைவனை விழிப்படையச் செய்யும் நோக்கில் காதல் உணர்வு துன்புறுத்தும் என்றும், தலைவி மீதான உண்மையான ஆழமான காதல் உணர்வினை அறிந்தபின் அவ்வுணர்வு இன்பம் பயக்கும் விருந்து போன்றது என தலைவனுக்கு ஊக்கமளிக்கும் வகையில் கூறுகிறான்.

**''உடுக்கை இழந்தவன் கைபோல ஆங்கே**
**இடுக்கண் களைவதாம் நட்பு''** (திருக். 788)

என்ற வள்ளுவர் வாக்கிற்கிணங்க பாங்கன் தலைவனைத் தேவையான நேரத்தில் நெறிப்படுத்தியும், தோள் கொடுத்து ஊக்கப்படுத்தியும் நல்ல நட்புணர்வுடன் இருப்பதை அறியமுடிகிறது.

**முல்லைத்திணை**

முல்லைத் திணையில் தேர்ப்பாகன் கூற்று ஒன்று, கண்டார் கூற்று ஒன்று, சுற்றத்தார் கூற்று இரண்டு, பாணன் கூற்று ஒன்று, உழையோர் கூற்று மூன்று என்ற எண்ணிக்கையில் இடம்பெற்றுள்ளன. அவை நற்றிணையில் இரண்டு பாடல்களும், கலித்தொகையில் இரண்டு பாடல்களும், அகநானூறில் நான்கு பாடல்களும் இடம்பெற்றுள்ளன.

முல்லை நிலத்து மக்கள் தங்கள் ஆயர் குடியில் ஏறுதழுவல் விழாவை நடத்துவர். அவ்விழாவில் ஆடவர் பங்கேற்று தங்கள் வீரத்தை வெளிப்படுத்தி வெற்றி பெறுவர். இதனை,

**"கொலைமலி சிலைசெறி செயிர்அயர் சினஞ்சிறந்து**
**உருத்தெழுந்து ஓடின்று மேல்**
**எழுந்தது துகள்**
**ஏற்றனர் மார்பு**
**கவிழ்ந்தன மருப்புக்**
**கலங்கினர் பலர்**
**அவருள், மலர்மலி புகல்எழ அலர்மலிர் மணிபுரை நிமிர்தோள் பிணைஇ**
**எருத்தொடு இமிலிடைத் தோன்றினன், தோன்றி**
**வருத்தினான் மன்றஅவ் ஏறு"** (கலி. 102:19-27, ப. 392)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இங்ஙனம் சினம் மிகுந்த ஏறினை அடக்கிய தலைவனைக் கண்ட சுற்றத்தார் மனமுவந்து உவகை உணர்வால் நிரம்பி தலைவியை மணம் முடித்துத் தர ஒப்புக்கொள்கின்றனர். இதனை,

**"திண்தோள் திறல்ஒளி மாயப் போர் மாமேனி**
**அம்துவ ராடைப் பொதுவனோடு"** (கலி. 102:36-37, ப. 392)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதன்மூலம் எட்டுத்தொகை ஆடவர் தங்களது வீரத்தை, போர்த்திறமையைப் பயன்படுத்தி பெண்டிரை மணம் முடித்ததை அறிய முடிகிறது. இதில் ஆடவர் வீர உணர்வுடனும், தலைவியை அடைந்த பெருமித மெய்ப்பாடும் கொண்டு திகழ்ந்தனர் என்பதை அறிய முடிகிறது.

இங்ஙனம் ஏறுதழுவி, இவள் கணவன் கொல்லேற்றைத் தழுவினான் என்று புகழும் புகழ்ச்சிக்கும் உரியவராக ஆடவர் திகழ்ந்ததை அறிய முடிகிறது. இதன் மூலம் எட்டுத்தொகை ஆடவர், வீரத்துடனும் தலைவியின் சுற்றத்தார் முன் பெருமைக்குரியவராகவும் விளங்கினர் என்பதை அறியமுடிகிறது.

**அ. தேர்ப்பாகன்**

வினைமுடித்து மீண்ட தலைவன், தலைவியை எண்ணிப் பெரிதும் கவலையுற்ற நிலையில் தேர்ப்பாகன், தலைவனின் மனஉணர்வினை உணர்ந்து,

**"வெவ்விருந்து அயரும் மனைவி**
**மெல்இறைப் பணைத்தோள் துயில்அமர் யோயே"**

(நற். 121:11-12, ப. 159)

என்று கூறி, தலைவன் தன் தலைவியை இன்றே காணுமாறு தேரினை விரைந்து செலுத்தி தலைவியுடன் சேர்ந்து இன்புற்று வாழுமாறு வாழ்த்துகிறான். இதில் தேர்ப்பாகன் தலைவனின் உள்ளக்குறிப்பை அறிந்து செயல்படுபவனாகவும், தலைவன் தலைவியோடு இன்புற்று வாழ வாழ்த்தும் உணர்வு கொண்டவனாகவும் காணப்படுகின்றான். இதில் தேர்ப்பாகன் பிறர் இன்பத்தில் இன்பம் கொள்பவனாகவும், பிறர் துன்பத்தில் துன்பம் கொள்பவனாகவும் காணப்படுகின்றான். இதன்மூலம் வினைவல்ல ஆடவர் பிறர் உள்ளக்குறிப்பை அறியும் ஆற்றல் படைத்தவராக இருந்ததோடு, விரைந்து செயலாற்றும் செயல்வீரர்களாகவும் இருந்தனர் என்பதையும் 'விரைவு' எனும் மெய்ப்பாட்டுணர்வு கொண்டவராகவும் விளங்கினர் என்பதை அறிய முடிகிறது.

**ஆ. கண்டோர்**

தலைவனும் தலைவியும் பாலை நிலத்தின் வழி உடன்போக்கு மேற்கொண்டனர். அக்கொடுமையான பாலை நிலத்தின் வழியே தலைவியை அழைத்துச் செல்லும் தலைவனை,

**"வையெயிற்று ஐயள்மடந்தை முன்னுற்று**
**எல்லிடை நீங்கும் இளையோன் உள்ளம்**
**காலொடு பட்ட மாரி**
**மால்வரை மிளிர்க்கும் உருமினும் கொடிதே"** (நற். 2, ப. 2)

என்ற நற்றிணைப் பாடலில் தலைவனை இடியினைக் காட்டிலும் அதிரச் செய்யும் கொடிய உள்ளம் கொண்டவனாகக் கண்டோர் கூறுகின்றனர். இப்பாடலின் மூலம் கண்டோர் உள்ளதை உள்ளவாறே உரைப்பவராகவும், உணர்ந்தவாறே உரைப்பவராகவும் காணப்படுகின்றனர். அருளற்றவர் மீது சீறும் உணர்வும், அருள் வேண்டியவனிடம் இரக்க உணர்வும் கொண்டவர்களாகத் திகழ்கின்றனர். மேலும் தலைவன் தலைவியைப் பிரிந்து அவள் பெற்றோர் படும் வேதனையை உணராத உள்ளம் கொண்டவனாகவும் பரற்கற்கள் நிறைந்த பாலை நிலத்தைப் பாவையின் பாதம் தாங்காது என்ற அருள் உள்ளம் (தலைவியின் மேல்) அற்றவனாகவும் கண்டோரால் தலைவன் இயல்பு, மன உணர்வு பதிவு செய்யப்படுகின்றது. போர்க்களத்தில் வெற்றிவாகை சூடி மீண்ட தலைவனைக் கண்டோர்,

> **"........................................... மார்பின்**
> **குறும்பொறிக் கொண்ட சாந்தமொடு**
> **நறுந்தண் ணியன்கொல்; நோகோ யானே?"** (நற். 394, ப. 528)

என்று தங்களுக்குள், மேட்டுநிலத்தில் தேர்ச்சக்கரங்கள் வன்மையான பரற்கற்கள் மீது அதிரும்படி ஏறி முன்பனிக் காலத்தில் சென்றவன் பருவநிலை மாறி குளிர்ந்த தடத்தின் வழியே மார்பில் சந்தனப் பூச்சுடன் வெற்றிபெற்று மகிழ்ச்சியுடன் திரும்பி வருவதைக் கண்டு மகிழ்ச்சி கொண்டு வாழ்க என்று மனதார தலைவனை வாழ்த்துகின்றனர். இதன்மூலம் எட்டுத்தொகை ஆடவர் வினையே உயிர் என்று கருதும் உள்ளமும் வினை முடிந்த நிலையில் தலைவியின் நினைவே முதல்நினைவாகக் கொள்ளும் உள்ளமும் கொண்டவராகக் காணப்படுகின்றனர். ஆடவர் கடமை உணர்வும், காதலுணர்வும் ஒருசேர கொண்டவர் என்பதை அறியமுடிகிறது. வினைமுடித்து வெற்றியோடு திரும்பும் தலைவனை வாழ்த்தும் உணர்வினராகவும் கண்டோர் காணப்படுகின்றனர்.

**இ. உழையோர்**

மன்னனுக்கு உதவியாய்ப் போர்க்களம் செல்லும் பொருட்டுத் தலைவியைப் பிரிந்த தலைவன், போரில் வெற்றி பெற்ற பின்னர் தலைவியை நினைந்து வருந்துவதைக் கண்ட உழையோர்,

> **"மதவலி யானை மறலிய பாசறை**
> **இடிஉமிழ் முரசம் பொருகளத்து இயம்ப,**
> **வென்றுகொடி எடுத்தனன்"** (அகம். 354:1-3, ப. 134)

என்று தலைவனின் வினைமுடித்த வெற்றியைப் பாராட்டி, இனி தலைவிக்கு படர்ந்த பசலை நோய் தீர்ந்து தலைவனுடன் சேர்ந்து விருந்து உபசரிக்கும் பொறுப்பேற்று மனமகிழ்வாள் என்று கூறினார்கள். இதன்மூலம் உழையோர் தலைவன் போரில் வெற்றி பெற்று திரும்பியதைக் கண்டு வியந்து பாராட்டும் உணர்வும், மருட்கை மெய்ப்பாட்டினையும் வெளிப்படுத்துகின்றவராகவும். தலைவன், தலைவி இருவரின் மகிழ்ச்சியில், தாங்களும் வாழவேண்டும் என்று மகிழ்பவராகவும் காணப்படுகின்றனர்.

**மருதத் திணை**

மருதத் திணையில் சான்றோர் கூற்றாக கலித்தொகையில் இரண்டு பாடல்கள் இடம்பெற்றுள்ளன.

**சான்றோர்**

அரசனாக விளங்கும் தலைவன், தன் தலைவியைப் பிரிந்து இருந்தான். அதன் காரணமாகத் தலைவி கொண்ட ஊடல் அவனால் தணிக்கப் பெறாமல் நீண்டுசெல்ல, தலைவியால் அதனைப் பொறுத்துக் கொள்ள இயலாமல் பசலை நோய் படர்ந்தும் தோள்கள் மெலிந்து அழகு குன்றி வருந்துவதையும் கண்ட சான்றோர் தலைவனிடம்,

> **"பொய்யாமை நுவலும்நின் செங்கோல்; அச்செங்கோலின்**
> **செய்தொழிற்கீழ்ப் பட்டாளோ இவள்?" (கலி. 99:11-12, ப. 379)**

என்றும்,

> **"'ஐயம்தீர்ந்து யார்கண்ணும் அருந்தவ முதல்வன்போல்**
> **பொய்கூறாய்' என நின்னைப் புகழ்வது கெடாதோதான்?"**
> **(கலி. 100:7-8, ப. 382)**

என்று தலைவனின் புகழையும், பெருமையையும் எடுத்துக்கூறி, தலைவியின் மன வருத்தத்தை நீக்குமாறு அறிவுரை கூறுகின்றனர். இதன்மூலம் சான்றோர், தலைவன், தலைவி இருவரும் சேர்ந்து வாழவேண்டும் என்ற விருப்புணர்வும், நல்வழிப்படுத்தும் நல்லுணர்வும் நன்னடையால் வரும் பெருமித மெய்ப்பாடும் கொண்டு விளங்கியதை அறியமுடிகிறது.

> **''தம்மின் பெரியார் தமரா ஒழுகுதல்**
> **வன்மையுள் எல்லாம் தலை'' (திருக். 444)**

என்ற வள்ளுவர் வாக்கிற்கிணங்க வான்றோர் சொல் கேட்கும் உணர்வு கொண்டவன் தலைவன் என்பதை, தலைவிக்கு அறிவுறுத்தும் உணர்வு கொண்டவராகச் சான்றோர் இருப்பதையும் அறியமுடிகிறது.

**நெய்தல் திணை**

நெய்தல் திணையில், பாங்கன் கூற்று ஒன்றும், கண்டோர் கூற்று ஒன்பதும், வாயில்கள் கூற்று இரண்டும் இடம்பெற்றுள்ளன. ஐங்குறு நூற்று, கலித்தொகையில் இக்கூற்றுகள் அமைந்துள்ளன. இக்கூற்றுகள் தலைவியின் காதல் உணர்வை, தலைவனைப் பிரிந்து வாடும் வருத்தத்தைக் கண்டு வருந்திய கண்டோர் மற்றும் வாயில்கள் கூற்றாக இடம்பெற்றுள்ளன.

**அ. பாங்கன்**

தலைவன், தலைவியைப் பற்றிக் கூறியதும், தலைவன் குறிப்பிட்ட வழிச்சென்று தலைவியைக் கண்ட பாங்கன்,

> **"இரவினானும் இன்துயில் அறியாது**
> **அரவுறு துயரம் எய்துப"** (ஐங். 173, ப. 209)

என்று தலைவியிடம் இரவிலும் இனியதுயில் பெறாது தவிக்கும் தலைவனின் மன வருத்தத்தை, உணர்த்துகிறான். இதன்மூலம் பாங்கன், தலைவனின் உள்ள உணர்வை மதித்து புரிந்துகொள்ளும் பண்பினனாக விளங்கியதை அறியமுடிகிறது.

**ஆ. கண்டோர்**

தலைவன் பிரிந்த போது தலைவி கொண்ட வருத்தம், மாலை நேரத்தில் அவள் உற்ற பெருந்துன்பம் ஆகியவற்றைக் கண்டோர், தலைவன் வரவைக் கண்டு அகம்மலரும் தலைவியின் உணர்வைப் புரிந்து அவர்களும் மகிழ்ந்தனர். இதனை,

> **"இடன்இன்று அலைத்தரும் இன்னாசெய் மாலை**
> **துனிகொள் துயர்தீரக் காதலர் துனைதர,**
> **மெல்லியான் பருவத்து மேல்நின்ற கடும்பகை**
> **ஒல்லென நீக்கி ஒருவாது காத்து ஓம்பும்**
> **நல்இறை தோன்றக் கெட்டாங்கு**
> **இல்லா கின்றால் இருள்அகத்து ஒளித்தே"** (கலி. 120:20-25, ப. 477)

என்று தலைவனின் வருகையைப் பார்த்து மகிழ்கிறார்கள்.

தலைவன் வருகையால் மாலைநேரம் அஞ்சி இருளில் மறைந்து போனது என்று கூறி மகிழும் கண்டோர் தலைவன், தலைவியும் சேர்ந்து வாழ வேண்டும் என்ற நல்லுள்ளம் கொண்டு திகழ்ந்ததை அறியமுடிகிறது. இதே கருத்தினை கலித்தொகை **(141–148)** எட்டு பாடல்கள் உணர்த்துகின்றன. இங்கு கண்டோர் 'இன்புறல்' எனும் மெய்ப்பாடுடையவராகக் காணப்படுகின்றனர்.

**இ. வாயில்கள்**

தலைவன் தலைவியிடம் கூறவிரும்பும் செய்தியை ஊடற்காலத்தில் தலைவிக்குக் கூறும் தூதராக வாயில்கள் விளங்கினர். சூரியன் மறைந்த மாலை வேளையில் காமநோயால் துயருறுகின்ற தலைவியைத் தலைவன் வந்து சேர்ந்ததைக் கண்ட வாயில்கள்,

> **"படுசுடர் மாலையொடு பைதல்நோய் உழப்பாளைக்**
> **குடிபுறங் காத்தோம்பும் செங்கோலான் வியன்தானை**
> **விடுவழி விடுவழிச் சென்றாங்கு, அவர்**
> **தொடுவழித் தொடுவழி நீங்கின்றால் பசப்பே"** (கலி.130:17-21, ப. 509)

என்று மகிழ்கிறார்கள். இதன்மூலம் தலைவன், தலைவியைத் தீண்டுந்தோறும் அவளது நெற்றியில் படர்ந்திருந்த பசலை படிப்படியே நீங்குவதைக் கண்டு மகிழும் வாயில்களின் உள்ளம் பெருமித மெய்ப்பாட்டினை வெளிப்படுத்துவதை அறியமுடிகிறது.

**பாலைத்திணை**

பாலைத்திணையில், குறுந்தொகையில் கண்டோர் கூற்று மூன்றும், கலித்தொகையில் கண்டோர் கூற்று ஒன்றும், பாணன் கூற்று ஒன்றும் இடம்பெற்றுள்ளது. ஐங்குறுநூறில் கண்டோர் கூற்று ஆறும், அந்தணர் கூற்று ஒன்றும், பாணன் கூற்று ஒன்றும் இடம்பெற்றுள்ளது. அகநானூறில் கண்டோர் கூற்று ஒன்றும் இடம்பெற்றுள்ளது.

**அ. பாணன்**

தலைவனின் பிரிவால் வருந்தும் தலைவியின் துயரைக் கண்டு பாணன், பாசறையிலிருக்கும் தலைவனைக் கண்டு அவளுற்ற துயரை எடுத்துக்கூறி அதனைப் போக்குமாறு கூறுகின்றான். இதனை,

> **"தணியாநோய் உழந்துஆனாத் தலையவள் தகைபெற,**
> **அணிகிளர் நெடுந்திண்தேர் அயர்மதி! பணிபுநின்**
> **காமர் கழல்அடி சேரா**
> **நாமம்சால் தெவ்வரின் நடுங்கினள் பெரிதே"** (கலி. 30:18-21, ப. 100)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதன்மூலம் தீராப் பிரிவுத் துன்பம் கொண்டிருக்கும் தலைவி, உன்னைப் பணிந்து வணங்காத, பிறர்க்கு அச்சம் உண்டாக்குகின்ற பகையரசர், உன் பெயர் கேட்டவுடன் நடுங்குவதுபோல, பிரிவுத் துன்பத்தால் நடுங்குகின்ற தலைவியின் துன்பத்தைக் களைய தலைவனிடம் தூதாக செல்லும் பாணன், 'வாழ்த்தல்' என்னும் மெய்ப்பாடு கொண்டு திகழ்வதை அறியமுடிகிறது.

இவ்வாறு பாசறைக்குத் தூது சென்று தலைவனிடம் தலைவியின் வருத்தத்தை எடுத்துரைத்த போதும், தலைவன் தான் சென்ற வினை முடியாததால், திரும்பிவந்து தலைவியின் துன்பத்தைப் போக்க இயலாதபோது பாணன்,

> **"நினக்கியாம் பாணரும் அல்லேம் எமக்கு**
> **நீயும் குருசிலை அல்லை"** (ஐங். 480, ப. 528)

என்று தலைவனிடம், இனி தலைவனைப் பாராட்டி பாடமாட்டேன். தலைவன் தனக்கு உதவும் நண்பனும் அல்ல என்று தன் கோபத்தை வெளிப்படுத்துகின்றான். தலைவனை இரக்கமில்லாதவன் என்றும் இகழும் தன்மை கொண்டவனாகக் காணப்படுகின்றான். இதன்மூலம் பாணனின் உள்ளம் வெகுளி மெய்ப்பாட்டினை வெளிப்படுத்துகிறது.

இங்கு தவறு செய்பவர், தன்னிலும் மேலான தலைவனாக இருந்த போதிலும் பாணன் அஞ்சாமல் அவனிடம் தன் மன உணர்வை வெளிப்படுத்தும் பாங்கு அறியத்தக்கது.

**ஆ. கண்டோர்**

தலைவியைத் தலைவன் உடன்போக்கில் கூட்டிச்சென்று கொண்டிருக்கும் போது வழியிடையில் கண்டோர்,

> **"யார்கொல் அளியர் தாமே வார்சிறைக்**
> **குறுங்கால் மகன்றில் அன்ன**
> **உடன்புணர் கொள்கைக் காத லோரே"** (ஐங். 381, ப. 431)

என்றும்,

> **"யார்கொல் அளியர் தாமே! ஆரியர்**
> **கயிறாடு பறையில் கால்பொரக்கலங்கி**
> **வாகை வெண்நெற்று ஒலிக்கும்**
> **வேய்பயில் அழுவம் முன்னியோரே"** (குறுந். 7, ப. 30)

என்று தலைவனும் தலைவியும், அச்சம் மிகுந்த காட்டு வழியில் அச்சமின்றி செல்கின்ற இவர்கள் பார்ப்பதற்கு நல்லவர்களாக இருக்கிறார்கள் என்று தங்களது கழிவிரக்க உணர்வை வெளிப்படுத்துகிறார்கள்.

இவ்வாறு இரக்கப்பட்டவர்கள் பின்பு தலைவன் தலைவி இருவரும் ஒருவரையொருவர் சார்ந்து மகிழ்ச்சியுடன் செல்லும் காட்சியை வியப்புடன் கண்டு அவர்களும் மகிழ்கிறார்கள். இதனை,

> **"துணைமலர்ப் பிணையல் அன்னஇவர்**
> **மனமகிழ் இயற்கை காட்டி யோயே"** (குறந். 229, ப. 273)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. மேலும் அவர்கள் செல்லும் வழி கள்வர்களால் தீமை ஏற்படும். எனவே இவ்வழியில் செல்லாதீர் என்று தடுக்கின்றனர். இதனை,

> **"எல்லும் எல்லின்று; பாடும் கேளாய்**
> **செல்லா தீமோ சிறுபிடி துணையே"** (குறுந். 390, ப. 454)

என்ற பாடலடிகள் மூலம் உணரலாம். பாலை வழியில் சென்ற தலைவன், தலைவியைக் கண்டோர் அவளது தாயிடம் சென்று அச்சம் மிக்க காட்டுவழியை தன் காதலுடன் கடந்துவிட்டாள். இனி கவலை வேண்டாம் என்று ஆறுதல் கூறுகிறார்கள் (ஐங்.**386**) பின் சென்ற செவிலியிடமும் தலைவி தலைவனுடன் மகிழ்ச்சியாக துன்பமின்றி சென்றதைக் கூறுகிறார்கள் (ஐங்.**390**, அகம்.**165**). இங்ஙனம் பாலை வழியில் தலைவன் தலைவி செல்லும் போது வழியில் கண்டோர், அவர்களைக் கண்டு இரக்கப்பட்டும், மகிழ்ந்தும், துன்பத்திலிருந்து தடுத்தும், அவர்களைக் காக்கின்றனர். மேலும் தலைவியைப் பிரிந்து வாடும் தாய்க்கும், செவிலிக்கும் தலைவியின் நிலையை அறிவித்து ஆறுதல் படுத்துபவராகவும் விளங்குகின்றனர்.

இங்கு, "அறிவினால் ஆவதுண்டா பிறிதின் நோய் தன் நோய் போல் போற்றாக் கடை" என்னும் வள்ளுவர் வாக்கிற்கிணங்க பிறிதின் நோய் உணர்ந்தவர்களாகவும், விரைந்து சென்று நோய் தீர்க்கும் பண்பாளராகவும் காணப்படுகின்றனர். மேலும் "சொல்லாமல் செய்யும் பெரியராகவும்" திகழ்கின்றனர். இதன் மூலம் கண்டோர் அருள் எனும் மெய்ப்பாடும், 'விரைவு' எனும் மெய்ப்பாடும் கொண்டு விளங்கியதை அறிய முடிகிறது.

பிற ஆடவரின் கூற்றுகளில் ஆடவர் அஞ்சாத தறுகண்மை உணர்வினர், எள்ளல் நிலைக்களனால் நகை உணர்வினர், தவறைக் கண்டவிடத்து இடித்துரைக்கும் 'ஆராய்ச்சி' மெய்ப்பாட்டுணர்வினர். தேவையான நேரத்தில் நெறிப்படுத்தியும், தோள்கொடுத்து ஊக்கப்படுத்தியும் உதவும் நட்புணர்வினர், நன்னடையால் வரும் புகழ்ச்சியை விரும்பும் இசைமை எனும் பெருமித உணர்வினர், தோழனின் துயரைப்போக்க விரைந்து செல்லும் 'விரைவு' மெய்ப்பாட்டு உணர்வினர், தலைவன், தலைவியைக்கண்டு அவர்களை வாழ்த்துகின்ற வாழ்த்துதல் என்னும் மெய்ப்பாட்டுணர்வினர், தலைவன் வெற்றி பெற்றதைக் கண்டு வியக்கும் மருட்கை உணர்வினர், தலைவன் தலைவி இருவரும் சேர்ந்து வாழவேண்டும் என்ற விருப்புணர்வும், நன்னடையால் வரும் பெருமித உணர்வும் கொண்டவர் தலைவியின் நினைவால் இனிய துயில் பெறாது தவிக்கும் உணர்வினர் அந்நிலையில் 'அரற்றுதல்' எனும் உணர்வினர், தலைவன், தலைவியைக் கண்டு மகிழும் 'இன்புறல்' என்னும் மெய்ப்பாட்டு உணர்வினர், தலைவியின் துயரைவிரைந்து வந்து போக்காத தலைவனிடம் சினம் கொள்ளும் வெகுளி உணர்வினர், தன்னிலும் மேலான தலைவனுக்கு அஞ்சாமல் நெறிப்படுத்தும் உணர்வினர், தலைவன் தலைவியை உடன்போக்கில் கண்டபோது அவர்கள் மீது இரக்கம் கொள்ளும் 'அருள்' உணர்வினர், அவர்களின் நிலையைப் பெற்றோர்க்கு விரைந்து சென்று அறிவித்து ஆறுதல்படுத்தும் உணர்வினர் என்பதை அறியமுடிகிறது.

இங்ஙனம் எட்டுத்தொகை அகநூல்களில், ஐந்திணைப் பாடல்களைக் கொண்டு, தலைவன், தேர்ப்பாகன், பாங்கன், கண்டோர் போன்ற ஆடவரின் கூற்றுகளில் வெளிப்பட்ட மன உணர்வுகளை, உணர்வு ஓட்டங்களை ஆராய்ந்து தொகுத்துத் தரப்பட்டுள்ளன. ஆடவரின் மனஉணர்வு திணைக்கு திணை மாறுபட்டிருப்பதும், அவை மாறுபட்ட நாகரிக நிலைக்கு ஆடவரைக் கொண்டு சென்றன என்பதையும் இவ்வியல் மூலம் கண்டறியப்பட்டுள்ளது.

**பரிபாடல்**

பாரிபாடலில் திருமாலின் இயல்பு, பெருமை, முருகனின் இயல்பு பெருமை, வீரம், வையையாற்றின் தன்மை, பாடல்களில் புனலாகும் தலைவன் தலைவியின் உணர்வுகள், இசை, நாட்டியம், ஓவியம் போன்ற கலைகள் மூலம் அக்கால மக்களின் வழிபாடு, வாழ்க்கை முறை, போன்றவற்றை இயற்றமிழ், இசைத்தமிழ் மூலம் விளக்கப்பட்டுள்ளது.

அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கில் இன்பத்தையே பொருளாகக் கொண்டு இறைவனை வணங்கி வாழ்ந்தனர். இறை வழிபாட்டில் பெண்கள் மட்டுமன்றி ஆண்களும் இடம்பெற்றிருந்தனர்.

தலைவன், தலைவியிடையே ஏற்படும் ஊடலைத் தீர்க்கும் வாயிலாகவும் தலைவன், தலைவியின் காதல் உணர்வுகளை வெளிப்படுத்துவதற்கான கருவியாகவும் வையையாறு விளங்குகிறது. காமத்தையும் கள்ளையும் ஒன்றாகக் கலந்து தரும் மகளிர் யாவரும் பாராட்டத் தாம் விரும்பிய காதலரொடு புனல் ஆடுமாறு, முன்பிரிந்த அக்காதலரைக் கொண்டுவந்து கூட்டுதல் பூக்கள் நிறைந்த வையையாற்றின் இயல்பு. இதனை,

**''நாமமர் ஊடலும் நட்பும் தணப்பும்**
**காமமும் கள்ளும் கலந்துடன் பாராட்டத்**
**தாம்அமர் காதலரொடு ஆடப்புணர்வித்தல்**
**பூமலி வையைக்கு இயல்பு''** (பரி. 20:108:111, ப. 266)

என்ற பாடல்கள் விளக்குகின்றன. தலைவன், தலைவியின் காதல் உணர்வை,

**''விருப்பு ஒன்று பட்டவர் உளநிறை உடைத்தென''** (பரி. 6:21, ப. 102)
**''இரவிற் புணர்ந்தோர் இடைமுலை அல்கல்''** (பரி. 6:54, ப. 103)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. காமத்தைவிடச் சிறந்தது காதலையுடைய காமம் என்பது இருவர் உள்ளத்தால் அன்பொத்தும் பின் மெய்யுற்றுப் புணர்வதாகும். உள்ளன்பு ஒவ்வாத கற்பு, புலத்தலால் சிறந்தது. அப்புலவி பரத்தையற் பிரிவால் தோன்றும் என்பதை,

**''காதற் காமம் காமத்துச் சிறந்தது;**
**விருப்புஓர் ஒத்து மெய்யுறு புணர்ச்சி;**
**புலத்தலிற் சிறந்தது கற்பே; அதுதான்**
**இரத்தலும் ஈதலும் இவைஉள் ளீடாப்**
**பரத்தையுள் ளதுவே பண்புறு கழறல்''** (பரி. 9:14-18, ப. 141)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. அப்பரத்தையற் பிரிவு வாயில் வேண்டல், வாயில் நேர்தல் என்னும் வகைகளைச் சார்ந்தது.

**''தோள்புதிது உண்ட பரத்தையிற் சிவப்புற**
**நாளணிந்து உவக்கும் சுணங்கறை யதுவே;**
**கேள்அணங்கு உறமனைக் களிந்துள சுணங்கறை,**
**சுணங்கறைப் பயனும் ஊடலுள் ளதுவே;**
**அதனால், அகறல் அறியா அணியிழை நல்லார்''**
**(பரி. 9:19-23, ப. 142)**

என்ற பாடலடிகளில் தலைவன் பரத்தையற் பிரிந்த காலத்தில், தலைவியின் பூப்பை அறிவிக்க வந்த தோழியைத் தான் செய்யும் தவறை இடித்துரைக்கிறாள் என எண்ணித்

தலைவியை நாடிச் செல்லும் உணர்வினனாகக் காணப்படுகிறான். தன் தவறைத் உணரும் உணர்வினனாகக் காணப்படுகிறான்.

காதலருக்கு, களவிற் புணர்ச்சியும், கற்பிற் புணர்ச்சியும் அளிக்கும் பரங்குன்றம் ஆடவர் 'புணர்வு' எனும் உவகை மெய்ப்பாட்டுணர்வை அடைய துணை புரிகின்றது. இதனை,

**''... .... .... .... குறுந்தொடி மகளிர்**
**ஆராக் காமம் ஆர்பொழிற் பாயல்,**
**வரையகத்து இயைக்கும் வரையா நுகழ்ச்சி,**
**முடியா நுகழ்ச்சி முற்றாக் காதல்**
**அடியோர் மைந்தர் அகலத்து அகலா**
**அலர்ஞெமல் மகன்றில் நன்னர்ப் புணர்ச்சி**
**புலரா மகிழ்மறப்பு அறியாது நல்கும்**
**சிறப்பிற்றே தண்பரங் குன்று''** (பரி. 8:39-46, ப. 127)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. தலைவன் – தலைவி இருவர்க்கிடையே ஊடல் அதிகரிக்கும் பொழுது அதனைத் தீர்க்கும் வாயிலாக வையையாறு, இடம்பெற்றுள்ளது. மயிலின் சாயலை ஒத்த தலைவியை எண்ணிக்கொண்டிருக்கும் தலைவனை, தலைவி வேறொரு பெண்ணை எண்ணிக் கொண்டிருக்கிறான் என ஊடல் கொண்டு 'உன் உள்ளக் கருத்தை ஒளிவு மறைவு இன்றி உரைப்பாயாக' எனக்கேட்டாள். அதற்குத் தலைவன்,

**''நின்இயல் களவெண்ணிக் களிமகிழ்**
**பேதுற்ற இதனைக்கண்டு யான்நோக்க, நீ எம்மை**
**ஏதிலா நோக்கி''** (பரி. 18:11-13, ப. 242)

என்று தெளிவாகக் கூறித் தலைவியின் ஊடலைப் போக்குகிறான். இத்தகு தலைவனின் உள்ளம் தலைவியின் ஊடலைப் போக்கும் தன்மை பரிபாடலில் நிறைந்து காணப்படுகிறது. தலைவியின் ஊடலைத் தணித்து அவளுடன் சேர்ந்து இன்புறும், 'உவகை' மெய்ப்பாடு உணர்வினனாகத் தலைவன் திகழ்கிறான்.

தலைவனிடம் ஊடல் கொண்டிருந்த தலைவியின் ஊடலைப் போக்கத் தோழியின் உதவியை நாடுகிறான். தோழியிடம்,

**''யார்பிரிய, யார்வர, யார்வினவ, யார் செப்பு,**
**நீர்உரைசெய் நீர்மையில் சூள்என்றி''** (பரி. 8:72-72, ப. 129)

என்று தன்மனம் இருதலைப்புள்ளின் ஓர் உயிர்போல வாழும் என்னிடம் பிரிவும் வருகையும் வினா வும் விடையும் எவ்வாறு நிகழும் என்பதை எண்ணிப்பார்க்காமல் தான் கூறியதை பொய் என இகழ்கிறாய், இதனை உண்மை என்று எண்ணி பொய்ச்சூள் என்று துணிந்து இறைவன் தன்னை வருத்துவதற்கு முன் அவன் சினத்தை தணித்து தன் உண்மைத் தன்மையை உள்ளப் போராட்டத்தை இறைவனுக்கு உணர்த்துமாறு தோழியிடம் தன்னிலைத் தாழ்ந்து இரந்து வேண்டுகிறான். இதனை,

**‘‘இடுதுனி கையறா என்துயர் கூரச்**
**சுடும்இறை ஆற்றிசின்; அடிசேர்ந்து சாற்றுமின்’’** (பரி. 8:78-79, ப. 129)

என்று கூறுவதில் தலைவன் ‘அசைவு’ என்னும் மெய்ப்பாட்டுணர்வினனாகக் காணப்படுகிறான். மேலும் தலைவனது உள்ளம் தலைவியின் ஊடலைப் போக்க எந்நிலைக்கும் தாழ்ந்து செல்லும் நிலையில் இருப்பதை,

**‘‘தொழுது பிழைகேட்கும் தூயவனை’’** (பரி. 12:61, ப. 191)

**‘‘உறைத்தும் செறுத்தும் உணர்த்து வானை’’** (பரி. 12:66, ப. 191)

**‘‘... ... ... பகையின்று உளஞ்சோர,**
**நில்லாது நீங்கி நிலஞ்சோர, அல்லாந்து**
**மல்லார் அகலம் வடுஅஞ்சி மம்மர் கூர்ந்து**
**எல்லாத் துனியும் இறப்பதன்’’** (பரி. 12:70-73, ப. 192)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. தலைவியின் ஊடலைப் போக்க எண்ணும் தலைவன், தான்கூறுவது உண்மையென வலியுறுத்தியும், சீற்றமுற்றும் ஊடலைத் தணிவிக்க முயல்கிறான். அவ. மேலும் புலந்து சினக்கும் போது, அவள்மேல் பகைகொள்ளாமல் மனம் நெகிழ்ந்து நிலத்தில் வீழ்ந்து அடிபணியும் தலைவனின் மனம் ‘அசைவு’ எனும் மெய்ப்பாட்டையும் ஊடலைப் போக்கிய பெருமித உணர்வையும் வெளிப்படுத்துகின்றது.

தலைவன், தலைவி இருவரும் வையையாற்றில் புனலாடியபோது, தலைவியின் கண்கள் சிவந்ததைக் கண்டு அவள் அழகைப் புகழ்ந்து பலவாறு பாடினான். அதனைக் கேட்ட இன்னொரு பெண் தன்னைப் பாடுவதாக எண்ணி மனம் வருந்தினாள் அதனைக் கண்ட தலைவி பகை கொண்டு தன் மாலையை அறுத்தெறிந்தாள். இதனைக் கண்ட தலைவன் தனக்கு என்ன துன்பம் நேருமோ என எண்ணி அஞ்சி நடுக்கமுறும் நிலையை

**‘‘நன்ஞெமர் மார்பன் நடுக்குற’’** (பரி. 7:69, ப. 118)

என்ற பாடலடி உணர்த்துகின்றது.

இத்தகைய நிலையில் தலைவியைத்தலைவன், தன் உடல் நிலத்தில் தோய அடிப்பணிந்தான், ஆனால் அவளோ, தலைவனின் தலையில் உதைத்து சினம் தணியாமல் ஊடலுறுகிறாள். இதனை,

**‘‘.... .... .... .... நனிவெகுண்டு**
**யாறுஆடு மேனி அணிகண்ட தன்அன்பன்**
**சேறுஆடு மேனிதிரு நிலத்துய்ப்பக் சிரம்மிதித்துத்**
**தீர்வுஇல தாகச் செருவுற்றாள்’’** (பரி. 7:72-75, ப. 118)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இங்கு தலைவன் தலைவியைக் கண்டு அச்சம் கொண்டு தலைவியை இழந்துவிடுமோ என எண்ணி நடுக்கமுறும் 'நடுக்கம்', 'இழவு', 'வியர்த்தல்' எனும் மெய்ப்பாட்டுணர்வினனாகவும். தன்னிலையில் தாழ்ந்து அடிபணியும் 'அசைவு' உணர்வினனாகவும் காணப்படுகின்றான்.

தலைவன், பரத்தையருடன் சேர்ந்து புனலாடி புணர்வு, விளையாட்டு எனும் மெய்ப்பாட்டுணர்வைக் கொண்டவனாகக் காணப்படுவதை,

**''பல்வரி வண்டினம் வாழ்சூழ் கவினொடும்**
**செல்நீர் வீவயின் தேன்சோரப் பல்நீர்**
**அடுத்தடுத்து ஆடுவார்ப் புல்லக் குழைந்து**
**வடுப்படு மாமன்தச் சார்ந்தார் அகலத்தான்''** (பரி. 16:41-44, ப. 227)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. தலைவன் வண்டினம் மொய்க்கும் அழகுடன் தலைமுடியினின்று விழும் பூக்களின் தேன் ஒழுக, ஆற்றில் புனலாடும் பரத்தையை அடுத்தடுத்துத் தலைவன் கூடி மகிழ்பவனாகத் தலைவன், பரத்தையருடன் கூடி மகிழ்வதற்கு பொன், பொருள் கொடுத்ததை எண்ணி நாணும் உணர்வினனாகக் காணப்படுகின்றான். இங்கு தலைவன் 'இழிவு' என்னும் இளிவரல் மெய்ப்பாட்டுணர்வினனாகக் காணப்படுகிறான்.

தலைவன், தலைவி இருவரும் புனலாடிய போது, குழந்தையைச் சிலர் அழவைத்து மகிழ்வது போலச் சிலர் அன்புடையவரின் சிறு துயர் கண்டு மகிழ்ந்து துயரை நீட்டிக்க விடாது உடனே துன்பம் தீர்த்து உவகையுறும் நிலையில் தலைவன்,

**''அருநிலை நீரின் அவள்துயர் கண்டு,**
**கொழுநன் மகிழ்தூங்கி''** (பரி. 21:43-44, ப. 279)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றனர். இங்ஙனம் பரிபாடலில் இடம்பெற்ற (தலைவன்) ஆடவர் அகத்தில் பரத்தையர் தொடர்பு கொண்டு பொன் பொருளைக் கொடுத்து இன்பம் கொள்ளும் உணர்வினராகவும் பின் அச்செயலைத் தலைவி காணும் போது நாணுபவராகவும், தலைவியின் ஊடலைப் போக்கும் உணர்வினராகவும், தலைவிக்காகத் தன்னிலையில் தாழ்ந்து அவள் பாதம் பணியவும் துணியும் உணர்வினராகக் காணப்படுகின்றனர்.

### இ. கைக்கிளைப் பெருந்திணையில் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வுகள்

**'கைக்கிளை முதலாப் பெருந்திணை இறுவாய்**
**முற்படக் கிளந்த எழுதிணை என்ப''** (தொல். அகத். நூ. 1,3, ப. 6)

என்று முதன்மை பெறுகின்ற ஒழுக்க வகைகள், அகத்திணைகள் ஏழென்று தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். தலைமகள் தலைமகனை எதிர்ப்பட்டு அவனை விரும்புவது அகத்திணை

என்று கைக்கிளையின் குறிப்பாகத் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். காமம் அமையாத இளமையோள் மீது அன்பு கொண்டு பெருமையில்லாத துன்பம் எய்தி, புகழ்தலும் பழித்தலுமாகிய இருதிறத்தால் தனக்கும் அவளுக்கும் ஒத்தனவாகிய சொற்களைச் சொல்லி, அவளிடமிருந்து பதில் பெறாதவனாய்த் தான் மட்டும் இன்புறுவானாகிய செயல்கள் கைக்கிளையின் குறிப்பாகத் தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார்.

**காமஞ்சாலா இளமையோள்**

தலைவன், காமஞ்சாலா இளமையோளிடம் தன் காதலைக் கூறும் பாடல்கள் கலித்தொகையில் இடம் பெற்றுள்ளன. இதனை,

**"முகன்அமர்ந் தீங்கே வருவா ளிவள்யார்கொல்"** (கலி. 20:5, ப. 205)

**"இவளைச் சொல்லாடிக் காண்பேன் தகைத்து"** (கலி. 20:13, ப. 205)

என்ற பாடல்வரிகள் தலைவன் உள்ளத்தில் தோன்றும் வியப்புணர்வையும் 'மருட்கை' மெய்ப்பாட்டையும் வெளிப்படுத்துகின்றன. தலைவன் துடிக்கும் தவிப்பினை,

**"நிற்கண்டார்ப் பேதுறூஉ மென்பதை அறிதியோ அறியாயோ"**

(கலி. 20:16-17, ப. 205)

**"பேதுற்றாய் போலப் பிறரெவ்வம் நீ அறியாய்"**

(கலி. 20:27, ப. 205)

என்ற பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன. இதன்மூலம் தலைவியின் பேதைப் பருவத்தினையும் வருந்தும் தலைவனின் இளிவரல் மெய்ப்பாட்டு உணர்வினையும் அறியலாம்.

**ஏமஞ்சாலா இடும்பை**

காமஞ்சாலா இளமையோளிடத்துக் காதல் கொண்டு அவளறியாது அவள் எழில்நலம் கண்டு வியப்புற்று, அதன் காரணமாகத் தலைவன் அடையும் துயர நிலையினையே தொல்காப்பியர் 'ஏமஞ்சாலா இடும்பை' என்கின்றார்.[83] தன் துன்பம் அறியாது செல்கின்ற தலைவியிடம் கூறுவது போலத் தலைவன்,

**"... ... ... ... கேளினி**
**நீயுந் தவறிலை நின்னைப் புறங்கடைப்**
**போதர விட்ட நுமருந் தவறிலர்**
**நிறையழி கொல்யானை நீர்க்குவிட் டாங்குப்**
**பறையறைந் தல்லது செல்லற்க வென்னா**
**இறையே தவறுடை யான்"** (கலி. 20:29-34, ப. 205)

என்று கூறுவதில் எய்தவனிருக்க அம்பை நோவானேன் என்தற்கேற்ப அவனுற்ற துயர உணர்விற்கு மூல காரணம் அறிந்து நோகும் தலைவனின் மனம் இடுக்கண் எனும் மெய்ப்பாட்டு உணர்வினையும் 'ஆராய்ச்சி' என்னும் மெய்ப்பாட்டு உணர்வினையும் வெளிப்படுத்துவனவாக அமைகின்றன.

காமஞ்சாலா இளமையோளிடத்துக் காதல் கொண்டு அவள் எழில்நலம் கண்டு வியந்து,

**"பணையமை பாய்மான்றோர் அவன்செற்றார் நிறம்பாய்ந்த**
**கணையினும் நோய்செய்தல் கடப்பன்றே கனங்குழாய்"**
**(கலி. 21:14-15, ப. 209)**

**"நேர்சிலம் பரியார்ப்ப நிரைதொடிக்கை வீசினை**
**ஆருயிர் வௌவிக்கொண் டறிந்தீயா திறப்பாய்கேள்**
**உளனாவென் றுயிரையுண் குயவுநோய் கைம்மிக" (கலி. 22:5-7, ப. 213)**

**"நடைமெலிந் தயர்வுறீஇ நாளுமென் நலியுநோய்" (கலி. 22:11, ப. 213)**

**"அல்லல் கூர்ந் தழிவுற அணங்காகி அடகுநோய்" (கலி. 22:15, ப. 213)**

என்று தலைவனின் உணர்வினை, தலைவி அறியாததால், தான் நோயுற்று அல்லல் படுவதாகக் குறிப்பிடுகின்றான். அக்காதல் நோய் தலைவன் தன் பகைவர் மீது எறிந்த அம்பை விடவும் கொடிய நோயினைத் தந்ததாகும். தன் ஆருயிரை வௌவிக் கொண்டதாகவும், தான் அயர்வுற்று அல்லலுறுவதாகவும் கூறி தான் அடைந்த நோயினை, அடைந்த துன்ப உணர்வினை வெளிப்படுத்துகிறான். இதில் தலைவன், தலைவியை நினைந்து வருந்தும் உணர்வினனாகக் காணப்படுகின்றான். மேற்குறிப்பிட்ட பாடல்களில் தலைவன் 'மருட்கை' வருத்தம் கலந்த 'இளிவரல்', மெய்யினால் வருந்தும் 'இடுக்கண்' எனும் மெய்ப்பாட்டு உணர்வினனாகத் திகழ்ந்ததை அறியமுடிகிறது.

**சொல்லெதிர் பெறாமை**

தலைவன்–தலைவியால் தானுற்ற நோயினை பலவாறு கூறி நிற்கவும், தலைவியிடமிருந்து பதில் ஏதும் பெறாத நிலையினை தொல்காப்பியர் "சொல்லெதிர் பெறான்" என்று குறிப்பிடுகின்றார். எனவே தன்னிடம் இருந்து தோன்றிய ஒன்றினை எண்ணித் தானே மகிழும் மன இயல்பே, உணர்வோட்டமே கைக்கிளையாகிறது. இதனை "சொல் எதிர்பெறாஅன் சொல்லி இன்புறல்"[84] எனத் தொல்காப்பியர் குறிப்பிடுகின்றார். இவ்வாறு "தனக்குள் எழுந்த விருப்பத்தை, புகழை, ஓர் எழுச்சியைத் தானே எண்ணி மகிழ்வது மெச்சிக் கொள்வது, அந்த அளவிலேயே இன்பம் காண்பது என்பன எல்லாம் கைக்கிளையின் உளஇயல்பாகும்"[85] என்பர் அ. ஞானப்பிரகாசம்.

எனவே தன் மனநிறைவுக்காகத் தானே ஏற்படுத்திய ஒருநிலையே கைக்கிளை என்பது பெறப்படுகிறது. தலைவனின் இத்தகைய நிலையினை,

**"யாதொன்றும் வாய்வாளா திறந்தீவாய்" (கலி. 20:27-29, ப. 205)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. தலைவன் சொல்லெதிர் பெறாது சொல்லி இன்புறுதல் என்ற இன்ப உணர்வு உடையவனாகக் காணப்படுகின்றான். பிறிதோரிடத்தில் தலைவன் தானுற்ற துயரைக் கூறும்போது தலைவி ஆயத்தாரோடு மலையகம் புகுந்ததைக் கண்டு,

**"இணையன கூற இறைஞ்சுபு நிலநோக்கி**
**நினையுபு நெடிதொன்று நினைப்பாள்போல் மற்றாங்கே**
**துணையமை தோழியர்க் கமர்ந்த கண்ணள்**
**மனையாங்கும் பெயர்ந்தாளென் னறிவகப் படுத்தே"**
**(கலி. 21:21-24, ப. 209)**

என்று ஏமஞ்சாலா இடும்பையெய்தி, அதன் விளைவாகப் பலபட உரைத்தும் சொல்லெதிர் பெறாத தலைவனின் நிலை வருந்தத் தக்கதாக உள்ளது. இதில் தலைவனின் மனம், உளைச்சல் அடைகின்றது. துன்பம் எய்தி வருந்தும் வருத்தம் எனும் இளிவரல் மெய்ப்பாட்டு உணர்வினனாகக் காணப்படுகின்றான்.

**ஏறா மடல்திறம்**

தலைவன் மடல் ஏறியதைக் கூறுவது பெருந்திணை. ஆனால் மடல் ஏறாது அம்மடல் ஏறுவேன் என்று மட்டும் கூறுவது கைக்கிளையாகும். தலைவிக்கு ஏற்பட்ட பழியினைப் போக்கத் தலைவன்,

**''மற்றிந்நோய்**
**பொறுக்கலாம் வரைத்தன்றிப் பெரிதாயிற் பொலங்குழாய்**
**மறுத்திவ்வூர் மன்றத்து மடலேறி**
**நிறுக்குவென் போல்வல்யான் நீபடு பழியே'' (கலி. 22:20-23, ப. 213)**

என்று கூறி மடலேறப் போவதாகக் கூறுவதால் இது ஏறாமடல்திறமாகிய கைக்கிளையாயிற்று. இதில் தலைவிக்கு ஏற்படும் பழிச்சொல்லைப் போக்கும் உணர்வினனாகத் தலைவன் காணப்படுகின்றான். தமக்கும் பிறர்க்கும் பழிவருவன செய்யாமை எனும் 'நாணல்' மெய்ப்பாட்டுணர்வு கொண்டவனாகக் காணப்படுகின்றான்.

**இளமை தீராத்திறம்**

இளமை தீராத்திறமாவது, தலைவியின் அழியா இளநலம் பாராட்டுதலாகும் என்று இளம்பூரணர் விளக்கம் தருகின்றார். தலைவன்–தலைவியின் கண்ணோக்கும், உறுப்பு வனப்பும் கண்டவர் தம் உயிரை வாங்கும் எழில் நலம் படைத்தவை என்பதை,

**"வாருறு வணரைம்பால் வணங்கிறை நெடுமென்றோள்**
**பேரெழின் மலருண்கண் பிணையெழின் மானோக்கின்**
**காரெதிர் தளிர்மேனிக் கவின்பெறு சுடர்நுதற்**
**கூரெயிற்று முகைவெண்பற் கொடிபுரையு நுசுப்பினாய்"**
**(கலி. 22;1-4, ப. 213)**

என்று தலைவியின் இளமை அழகினைப் பாராட்டும் உணர்வினனாகவும் 'மருட்கை' எனும் மெய்ப்பாட்டுணர்வு கொண்டவனாகவும் தலைவன் திகழ்கிறான்.

**தேறுதல் ஒழிந்த காமத்து மிகாத்திறம்**

தலைவன்-தலைவியைப் புணராமையால் தலைமகன் இரங்கிக் கூறுதலே தேறுதல் ஒழிந்த காமத்து மிகாத் திறமாகும். தலைவியால் மன உளைச்சலுக்கு உள்ளான தலைவன், அவளிடம் "நீயோ அருள்செய்து உதவாது இருக்கின்றாய்; சேயிழையே! நீ செய்த இக்கொடுஞ் செயல் உனக்கு உரிய பயனைத் தராமல் போகாது. அருள் கொள்ளாயாயின் உனக்கோர் நன்மையும் விளையாது" என்று கூறுமிடத்தில் தலைவியை அச்சுறுத்துகின்றவனாகக் காணப்படுகின்றான். இதனை,

**"அனையவை யுளையவும் யான்நினக் குரைத்ததை**
**இனையநீ செய்ததுத வாயாயிற் சேயிழாய்**
**செய்ததன் பயம்பற்று விடாது**
**நயம்பற்று விடினில்லை நசைஇயோர் திறத்தே"**
**(கலி. 23:23-26, ப. 217)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இங்கு தலைவன், தலைவி மீதான அன்புணர்வு அளவின் மிகுதலால் 'கைம்மிகல்' எனும் மெய்ப்பாடும், தன் விருப்பத்திற்கு இடைஞ்சல் ஏற்படும் போது 'வெகுளி' மெய்ப்பாடும் கொண்டு திகழ்கிறான்.

**மிக்க காமத்தின் திறம்**

தலைவி மீதான பெருவிருப்பத்தைத் தலைவன் குறிப்பாகவும் வெளிப்படையாகவும் உணர்த்துதலே மிக்க காமத்தின் திறமாகும். இத்தகைய மிகுவிருப்பம் கொண்ட தலைவன்.

**"மயிர்வார்ந்த வரிமுன்கை மடநல்லாய்-நிற்கண்டார்**
**உயிர்வாங்கு மென்பதை உணர்தியோ உணராயோ"**
**(கலி. 20:25,-26, ப. 205)**

என்று கூறுவதன் மூலம், தலைவன் குறிப்பாகத் தன்னுணர்வை வெளிப்படுத்துபவனாகக் காணப்படுகின்றான். தலைவனின் உணர்வோட்டத்திற்கு உயிராக இருப்பவள் தலைவியும், அவளின் நினைவுகளுமே ஆகும். அத்தகைய மிகு விருப்ப உணர்வு கொண்டவனாகவும் அவளையே நினைந்து மகிழ்பவனாகவும் வருந்துபவனாகவும் காணப்படுகின்றான். இங்கு தலைவன் 'கைம்மிகல்' எனும் மெய்ப்பாட்டுணர்வும் 'வருத்தம்' எனும் 'இளிவரல்' மெய்ப்பாட்டுணர்வும் கொண்டவனாகவும் காணப்படுகிறான்.

எனவே, கைக்கிளையில் ஆடவர், பெண்டிரின் அழகைக் கண்டு வியக்கும் உணர்வுடன் 'மருட்கை' எனும் மெய்ப்பாட்டுணர்வும், தலைவியை நினைந்து வருந்தும் இளிவரல் என்னும் மெய்ப்பாட்டுணர்வும், தலைவியால் ஏற்பட்ட நோயின் துன்பத்தினால் 'இடுக்கண்' என்னும் மெய்ப்பாட்டுணர்வும், தமக்கும் பிறர்க்கும் பழிவருவன செய்யாமை என்னும் 'நாணல்' என்னும் மெய்ப்பாட்டுணர்வும், தலைவியின் மீதான அன்புணர்வு அளவின் மிகுதலால் உண்டாகும் 'கைம்மிகல்' எனும் மெய்ப்பாட்டுணர்வும் தன் விருப்பத்திற்கு தடை ஏற்படும் போது 'வெகுளி' மெய்ப்பாட்டுணர்வும் கொண்டவர்களாகத் திகழ்ந்தனர் என்பது புலனாகின்றது.

**பெருந்திணையில் வெளிப்படும் ஆடவரின் மனஉணர்வுகள்**

தொல்காப்பியர் "அகத்திணை ஏழனுள் பெருந்திணையும் ஒன்று"[86] என்று கூறுகின்றார். "கைக்கிளையைப் போல் பெருந்திணையும் எல்லா நிலத்தும் எல்லாக் காலத்தும் வருதலின் இதற்குத் தனியாக நிலமும் பொழுதும் வகுத்தோதப் படவில்லை"[87] என்பர்.

"களவை நாணின்றி வெளிப்படுத்திக் கற்பு நிலைக்குக் கொணரப் பெற்றதனால் ஐந்திணை ஆகாமல் பெருந்திணை ஆயிற்று"[88] என்பர் ந. சுப்புரெட்டியார். இங்ஙனம் பல்வேறு விளக்கங்களைப் பெற்றுத் திகழும் பெருந்திணையில், ஏறிய மடற்றிறம், தேறுதல் ஒழிந்த காமத்து மிகுதிறம் என்ற நிலைகளில் தலைவன் வெளிப்படுத்திய உணர்வினையும் மனதில் நினைத்த உணர்வோட்டத்தினையும் ஆராய்வதே இப்பகுதியின் நோக்கமாகும்.

'பெருகுதல்' என்பது மங்கல வழக்கில் இழிவு, இழப்பு ஆகிய பொருள்களில் பயின்று வருகின்றது. எனவே பெருந்திணை என்பதில் உள்ள பெருமை உயர்ச்சியைக் குறிக்காது. மங்கல வழக்காகி இழிவை அல்லது இழப்பைக் குறிக்கும் என்பது புலனாகின்றது. எனவே இழிந்த காமம் என்பதே பெருந்திணைக்குரிய பொருள் என கருதலாம். தலைவனின் நெஞ்சம் தலைவியிடம் சென்றதாலும் அவளோடு கூடப் பெறாமையுமே தான் மடன் மாவூர்வதற்குக் காரணம் என,

> **'மான்ற**
> **துளியிடை மின்னுப்போல் தோன்றி யொருத்தி**
> **ஒளியோ டுருவென்னைக் காட்டி அளியளென்**
> **நெஞ்சாறு கொண்டாள் அதற்கொண்டுந் துஞ்சேன்''**
> **(கலி. 22:4-6, ப. 540)**

என்று தலைவன், கண்ணை மறைத்துப் பெய்யும் மழையில் மின்னும் மின்னல் போல, ஒளியும் எழிலுமுடையாள் ஒருத்தி வந்து, எனக்கு அருள்செய்து என் நெஞ்சில் இடங்கொண்டாள். அதனால் பலநாள் உறக்கமின்றி வருந்தி, அவளைப் பெற வேறு வழியின்மையால் மடலேறத் துணிந்தேன் என்று குறிப்பிடுகின்றான். இதே உணர்வினை,

**"படரும் பனைஈன்ற மாவும் சுடரிழை**
**நல்கியாள் நல்கி யவை" (கலி. 21:12-13, ப. 536)**

**"பூளை பொலமலர் ஆவிரை வேய்வென்ற**
**தோளாள் எமக்கீத்த பூ" (கலி. 21:18-19, ப. 536)**

**"... .... .... மையல்**
**உறீஇயாள் ஈத்தஇம் மா" (கலி. 22:18-19, ப. 540)**

**"நேரிழை ஈத்தஇம் மா" (கலி. 21, ப. 550)**

**"எழில்நுதல் ஈத்தஇம் மா" (கலி. 25, ப. 224)**

**"வணர்ந்தொலி யைம்பாலாள் செய்த**
**இக்காமம்" (கலி. 23, ப. 544)**

**"செறிந்தேர் முறுவலாள் செய்த**
**இக்காமம்" (கலி. 23:27, ப. 544)**

என்ற பாடலடிகள் மூலம் உணரலாம். தலைவன், தலைவியோடு சேராததால், தானுற்ற நோய்க்கு வடிகாலாய் மடலூர்தலை மேற்கொள்கிறான் என்பதை வலியுறுத்துகின்றான். இப்பாடலடிகள் மூலம் தலைவன்–தலைவியை அடைய மடலேறத் துணியும் துணிவுணர்வு கொண்டவனாகக் காணப்படுகின்றான்.

மேலும், தலைவியின் தமர் வரைவு மறுத்ததாலும் தலைவன் மடலேறத் துணிகின்றான் என்பதை,

**"ஓரொருகால் உள்வழிய ளாகி நிறைமதி**
**நீருள் நிழல்போல் கொளற்கரியள் போருள்**
**அடன்மாமேல் ஆற்றுவேன் என்னை மடன்மாமேல்**
**மன்றம் படர்வித் தவள்" (கலி. 24:7-10, ப. 547)**

என்று தலைவன், தலைவி சிலவேளை என் நினைவில் அகலாது நின்றும், உண்மையில் நீரில் தோன்றும் நிழலைப் போலப் பற்றுதற்கு அரியவளாயிருக்கின்றாள். போர்க்களத்தில் வெற்றி வாய்ந்த குதிரையின் மீதேறி வீரச் செயல்புரியும் தன்னை அவள் இம்மடற்குதிரை மேல்ஏறி மன்றத்தின் கண் நிற்கச் செய்து விட்டாள் என்று தலைவன் தன் செய்கை இகழ்ச்சிக்குரியது என்று எண்ணி வருந்துகின்றான். தலைவியை அடைய எத்தகைய முறையையும் பின்பற்றத் துணியும் தலைவனின் உள்ளம் அச்செயல் இகழத்தக்கது என்பதையும் நினைந்து வருந்தும் உணர்வோட்டம் கொண்டவனாகக் காணப்படுகின்றான். தலைவன்–தலைவிக்காக மடலூர்ந்து சென்ற கோலத்தை,

**"மணிப்பீலி சூட்டிய நூலொடு மற்றை**
**அணிப்பூளை ஆவிரை எருக்கொடு பிணித்தியாத்து**
**மல்லலூர் மறுகின்கண் இவட்பாடும் இஃதொத்தன்**
**எல்லீரும் கேட்டிமின் என்று" (கலி. 21:8-11, ப. 536)**

**“அணியிலங் காவிரைப் பூவோ டெருக்கின்**
**பிணையலங் கண்ணி மிலைத்து மணியார்ப்ப**
**ஓங்கிரும் பெண்ணை மடலூர்ந்து” (கலி. 22:8-10, ப. 540)**

**“கொண்டது**
**மாவென் றுணர்மின் மடலன்று மற்றிவை**
**பூவல்ல பூளை யுமிஞையோடி யாத்த**
**புனவரை யிட்ட வயங்கு தாா்ப் பீலி**
**பிடியமை நூலொடு பெய்ம்மணி கட்டி**
**அடர்பொன் அவிரேய்க்கும் ஆவிரங்கண்ணி” (கலி. 23:2-7, ப. 544)**

என்று தலைவன் ஏறிய பனைமாவின் இயல்பினையும் பனைமாவின் மீது பூளை, ஆவிரை, எருக்கு, மயிற்பீலி ஆகியவைச் சூடிவரும் தலைவனின் கோலத்தை மேற்கூறப்பட்ட பாடலடிகள் புனைந்துரைக்கின்றன. இப்பாடலடிகள் தலைவனின் மாவேறும் கோலத்தைக் காட்டினாலும் அவனது உள்ளம் தலைவியை அடையும் நோக்கத்தையும் எண்ணியே செயல் படுவதை உணர முடிகிறது. மேற்கூறப்பட்ட பாடல்களில் தலைவன் தன்னிலையில் தாழ்தல் என்றும் ‘அசைவு’ மெய்ப்பாட்டுணர்வும், தன்னை எளியனாக்கும் ‘இளிவு’ மெய்ப்பாட்டுணர்வும் கொண்டவனாகக் காணப்படுகிறான்.

மாவூர்ந்து மல்லன் மறுகின் கண் வருபவன் “எல்லீருங் கேட்டீமின்”[89] என்று தானுற்ற நோயை உரைக்கத் தொடங்குகின்றான். “கண்டவர் யாவரும் கதுமென வந்தாங்கே பண்டறியாதார் போல நோக்குகின்றனர்.”[90] அவருள்ளும் சான்றோரை நோக்கித் தலைவன் உரைக்கின்றான். பிறர் நோயைத் தம்நோய் போல் கருதும் பேராண்மை சான்றவர்க்குரிய குணமாதலின் தன் நோயைத் தீர்க்கத் தக்கவர் அவரே என்று தெரிந்தவனாக அத்தலைவன் சான்றோரை நோக்கி

**“சான்றோர் வாழியோ சான்றவிர் என்றும்**
**பிறர்நோயுந் தந்நோய்போற் போற்றி அறனறிதல்**
**சான்றவர்க் கெல்லாங் கடன்” (கலி. 22:1-3, ப. 540)**

என்றும்,

**“சான்றீர் உமக்கொன் றறிவுறுப்பேன்” (கலி. 22:4, ப. 540)**

**“ஓங்கிரும் பெண்ணை மடலூர்ந்தென் எவ்வநோய்**
**தாங்குதல் தேற்றா இடும்பைக் குயிர்ப்பாக**
**வீங்கிழை மாதர் திறத்தொன்று நீங்காது**
**பாடுவேன் பாய்மா நிறுத்து” (கலி. 22:10-14, ப. 540)**

என்று தலைவன், தலைவியால், தலைவியின் நினைவால் ஏற்பட்ட துன்பத்தையும், மடலேறத் துணிந்ததையும் சான்றோரிடம் முறையிடுகின்றான். மேலும்,

**“ஒண்டொடி நோய்நோக்கிற் பட்டஎன் நெஞ்சநோய்**
**கண்டுங்கண் ணோடாதிவ் வூர்”** (கலி. 23:19-20, ப. 544)

**“வளர்ந்தொலீ யைம்பாலாள் செய்தஇக் காமம்**
**உணர்ந்தும் உணராதிவ் வூர்”** (கலி. 23:23-24, ப. 544)

**“இருளுறு கூந்தலாள் என்னை**
**அருளுறச் செயின்நுமக் கறனுமா ரதுவே”** (கலி. 23:33-34, ப. 544)

என்று தலைவனின் நோய்க்கும், துன்பத்திற்கும் தலைவியே காரணம் என்று கூறி தன்னை தலைவியுடன் சேர்த்து வைக்குமாறு சான்றோரிடம் முறையிடுகின்றான். இதில் தலைவன், தலைவியைத் தன் துணைவியாக்க கடுமையான செயல்கள் புரிந்தும் சான்றோரிடம் முறையிட்டும் வழிதேடத் துடிக்கும் மனஉணர்வு கொண்டவனாகக் காணப்படுகின்றான். இங்கு தலைவன் ‘இடுக்கண்’ எனும் மெய்ப்பாட்டுணர்வும் பணிந்து மொழியும் ‘அடக்கம்’ எனும் மெய்ப்பாட்டுணர்வும் கொண்டவனாகத் திகழ்கிறான்.

தலைவன்–தலைவியைத் தன்னோடு சேர்க்குமாறு சான்றோரை வேண்டிக் கொண்டு, அவர்களைச் சேர்த்து வைப்பதே சான்றோர்க்கு அறன் என்று வலியுறுத்துகின்றான். மடன்மாஏறி சான்றோரிடம் முறையிட்டதும் சான்றோர் தலைவியின் தமரிடம் அறன் எதுவென அறிவுறுத்தி அவளை அவனோடு சேர்ப்பிப்பார்கள். இதனை,

**“வருந்தமா ஊர்ந்து மறுகின்கண் பாடத்**
**திருந்திழைக் கொத்த கிளவி கேட்டாங்கே**
**பொருந்தாதார் போர்வல் வழுதிக் கருந்திறை**
**போலக் கொடுத்தார் தமர்”** (கலி. 24:22-25, ப. 547)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. தலைவன் தலைவிக்காக மாவூர்ந்து பாடி வரப் பாண்டிய மன்னனுக்கு அவன் பகைவர்கள் திறைகொடுப்பதுபோலத் தலைவியை அவள் தமர் தலைவனுக்குக் கொடுத்தனர் என்பதை அறிய முடிகிறது. இங்ஙனம், தலைவியைக் கூடப் பெறாததாலும் தலைவனுக்கு வரைவு மறுத்தலினாலும், தலைவன் மாவூர்ந்து மறுகில் வர, சான்றோர் தலைவன்–தலைவியை சேர்த்து வைப்பர் என்பதை அறிய முடிகிறது. இங்கு தலைவன் தலைவியைப் பெற எந்நிலைக்கும் தாழ்ந்து முயன்று பெறும் உணர்வினனாகவும் ‘அசைவு’ எனும் மெய்ப்பாட்டுணர்வினனாகவும் காணப்படுகிறான்.

“பெருந்திணையுள் முதலாவதாகிய மடல் ஏறுதல் பெண்டிர்க்கு எக்காலத்தும் இல்லை என்பதால் பெருந்திணை, பெரிதும் ஆடவர்க்கே உரியது என்பது தெளிவாகிறது. இளமை போர்வயின் வம்பு செய்வான் ஆடவனே என்ற குறிப்பு கைக்கிளை நூற்பாவில் கிடைக்கிறது. போர்ப்பணிக்கு உரியவர் ஆடவரே என்ற பொதுக் கருத்தோடு கைக்கிளை, பெருந்திணை இரண்டும் ஆடவர்க்கே உரியபோர் ஒழுக்கங்கள்”[91] என்பர் க.ப. அறவாணன்.

**"ஏவல் மரபின் ஏனோடும் உரியர்**
**ஆகிய நிலைமை அவரும் அன்னர்"** (தொல். அகத். நூ. 24, ப. 12)

என்ற நூற்பாவில் ஏவுதலை மரபாக உடைய அரச மறவரும் கைக்கிளை, பெருந்திணைக்கு உரியர். அவரைப்போல பிறரை ஏவிக்கொள்ளும் தன்மை உடையவரும் கைக்கிளை, பெருந்திணைக்கு உரியர் என குறிப்பிட்டுள்ளார்.

கைக்கிளை களவுச் செயல். பெருந்திணையில் பெரும்பாலானவை கற்புச் செயல்களே. பெருந்திணையின் முதல் கூறு, மடல் ஏறிய தலைவன் தன்நிலை கூறுவது. மடலேறித் தலைவியைப் பெற்ற நிலையைக் கூறுவது ஏறிய மடல் திறத்தைப் போலவே, ஏனைய மிகு வயதாகி மனைவி மாட்டும் மற்றோர் மாட்டும் இன்பம் துய்த்தல், அளவிற்கு அடங்காக் காமம், காமவெறியால் வலிதிற் புணர்தல் ஆகியனவும் மணத்திற்குப் பின் நிகழும் நிகழ்வுகள் பெருந்திணையைச் சார்ந்ததாகும். இவை அனைத்தும் ஆடவர் பக்கமே நிகழ்வனவாகும். உணர்வுகள் இருபாலார்க்கும் பொதுவாயினும், உணர்த்துதல் இருபாலார்க்கும் பொதுவானது அல்ல. கடல் அன்ன காமம் உழந்தும் பெண் தன் உடல் தினவை வெளிப்பட முழங்காள். பெருந்திணையில் தலைமையான, மடல் ஏற்றம் பெண்டிர்க்கு எக்காலத்தும், எவ்விடத்தும் இல்லை என்பது தொல்காப்பியர் கருத்து.[92] எனவே பெருந்திணைக் கூறுகள் ஆடவர்க்கே உரியது என கருதலாம்.

புறநானூற்றில் இடம்பெற்றுள்ள பெருந்திணைப் பாடல்கள் ஐந்தும் (143–147) பரத்தை வழி நிலைத்துவிட்ட பேகனை மீட்கும் நோக்கமுடையது. பரத்தையை நாடிச் சென்று அங்கேயே தங்கிவிட்ட பேகனை எண்ணித் தலைவி (கண்ணகி) வருந்தி துயரமடையும் நிலையே இடம்பெற்றுள்ளது.

பேகனின் பெருமையைக்கூறி, அவன் தலைவியைத் தவிக்கவிட்டுச் சென்ற சிறுமையை எடுத்துக்கூறி அவன் மனைவியுடன் சேர்ந்து வாழுமாறு புலவர் பாடியுள்ளார். பேகனின் பெருமையை,

**''. . . சினப்போர்க்**
**கைவள் ஈகைக் கலிமான் பேக''** (புறம். 143, ப. 257)

**''மடத்தகை மாமயில் பனிக்குமென்று அருளிப்**
**படாஅம் ஈத்த கெடாஅ நல்லிசைக்**
**கடாஅ யானைக் கலிமான் பேக''** (புறம். 145, ப. 257)

என்று பேகனின் சினத்தால் செய்யும் போரையும் கைவண்மையால் கொடுக்கும் கொடையையும் உடைய பெருமைக் குரியவன் என்றும் மெல்லிய தன்மையுடைய மயிலின் நடுக்கத்திற்கு போர்வை வழங்கிய புகழையும் மதயானையையும் உடைய பெருமைக்குரியவன் என்று பாடினர்.

பேகனின் சிறுமைச் செயலாக அவனின் பரத்தை ஒழுக்கத்தைக் குறிப்பிட்டு, தலைவனின் அவ்வொழுக்கத்தால் வருந்தும் தலைவியின் துயரைப் போக்க,

**“இகுத்த கண்ணீர் நிறுத்தல் செல்லாள்**
**முலையகம் நனைப்ப விம்மிக்**
**குழல்இனை வதுபோல் அழுதனள் பெரிதே”** (புறம். 143:13-15, ப. 257)

**“அறஞ்செய்து ஈமோ அருள்வெய் யோய்என**
**இஃதியாம் இரந்த பரிசில் அஃதுஇருளின்**
**இனமணி நெடுந்தேர் ஏறி**
**இன்னாது உளைவி அரும்படர் களைமே”** (புறம். 145:7-10, ப. 259)

என்று தலைவனிடம் கூறி கண்ணகியுடன் சேர்ந்து வாழுமாறு அறிவுறுத்துகின்றனர். தலைவனைப் பிரிந்த தலைவியின் உணர்வுகள் வெளிப்பட்ட போதிலும் தலைவன் சிறந்த வீரனாகவும் ஈகை செய்யும் புகழையும் பெருமையும் கொண்டவனாகக் காணப்படுகின்றான். அதே வேளையில் அவனது பெருமையும், புகழும் கெடுமாறு பரத்தையை நாடிச் செல்லும் உணர்வினனாகக் காணப்படுகின்றான். தலைவன் தன்னை எளியனாக்கும் இளிவரல் என்னும் மெய்ப்பாட்டு உணர்வை வெளிப்படுத்துபவனாகக் காணப்படுகிறான்.

பெருந்திணையில் ஆடவர், தன்னிலையில் தாழ்தல் எனும் அசைவினால் உண்டாகும் அழுகை மெய்ப்பாட்டுணர்வும், தன்னை எளியனாக்கும் இளிவு எனும் மெய்ப்பாட்டுணர்வும் தலைவியின் நினைவால் துன்பப்படும் உணர்வால் ‘இடுக்கண்’ எனும் மெய்ப்பாட்டுணர்வும் சான்றோரைப் பணிந்து மொழியும் உணர்வினால் ‘அடக்கம்’ எனும் மெய்ப்பாட்டு உணர்வும், தலைவியைப் பெற எந்நிலைக்கும் தாழும் உணர்வுடன் அசைவு எனும் அழுகை மெய்ப்பாட்டுணர்வும், தன் புகழ் கெட பரத்தையை நாடும் உணர்வு தன்னை எளியனாக்கும் இளவிரல் மெய்ப்பாட்டுணர்வும், கொண்டவராகக் காணப்படுகின்றனர்.

அன்பின் ஐந்திணைகளில் இடம்பெற்றுள்ள ஆடவரிடம் ஏற்பட்ட நகையுணர்வோ, பெருமித உணர்வோ, உவகை உணர்வே கைக்கிளைப் பெருந்திணை ஆடவரிடம் காணப்படவில்லை.

**கைக்கிளைப் பெருந்திணைகளில் புலப்படும் ஆடவர் பின்வரும் உணர்வு நிலைப்பட்டவர்களாகக் காணப்படுகின்றனர்:**

- பெண்ணிடம் தனது காதல் உணர்வை நேரடியாக வெளிப்படுத்தும் உணர்வினன். (குறிஞ்சி கலி– 13,20,21,22)
- தனது காதலை, அன்பை, விருப்ப மிகுதியை உணராத பேதைப் பருவத்தினளாய் பெண் இருப்பதை உணர்ந்து துயரடையும் உணர்வினன். (குறிஞ்சி கலி–20,21,22)

- ஆடவன் தனது காதலையும், துயரையும் வெளிப்படுத்தும்போது பெண்ணிடமிருந்து அதற்கு எந்த பதிலும் வராதபோதும் அதனைத் தானே நினைந்து இன்புறும் உணர்வினன். (கலி.கு.கலி–20,21)
- பெண்ணின் அழகைப் பாராட்டும் உணர்வினன். (கலி.கு.கலி–22)
- பெண்ணின் மீது காம உணர்வு மிகுந்தவன். (கலி.கு.கலி–23)
- விரும்பியப் பெண்ணை அடைய மடலேறத்துணிந்த துணிவுணர்வு கொண்டவன் (கலி. நெய்.கலி. 22,21,23,24)
- பெருந்திணைப்பாற்பட்ட ஆடவன் தான் விரும்பும் துணையை அடைய சான்றோரின் துணையை நாடும் உணர்வினன் (கலி. நெ.கலி. 23–24)

**தொகுப்புரை**

- அகத்திணைகளில் வெளிப்படும் ஆடவரின் மனஉணர்வுகள் எனும் இப்பகுதியில் ஒவ்வொரு திணையிலும் ஆடவரின் மனஉணர்வுகள் வெளிப்படும் தன்மையை பாடல்கள்வழி இனங்காட்டப்பட்டுள்ளன.
- குறிஞ்சித் திணையில் ஆடவர் பெண்ணைக் கண்டு உள்ளத்தைப் பறிகொடுத்து அவளை எவ்வாறேனும் அடைய வேண்டும் என்பதில் உறுதி கொண்ட உணர்வினராகக் காணப்படுகின்றனர். பெண்ணின் மீது கொண்ட காதல் உணர்வைத் தன் நண்பனிடம் பகிர்ந்து கொண்டும், அவர்களின் உதவியை நாடுபவராகவும் காணப்படுகின்றனர்.
- முல்லைத் திணையில் ஆடவர், தங்கள் மனைவியை மறந்தும் பிரிந்தும் செல்ல இயலாத உணர்வினராகவும், வினைமுடித்து விரைந்து சென்று மனைவியுடன் சேர்ந்து வாழும் உணர்வினராகவும் காணப்படுகின்றனர்.
- மனைவி, மகன் என்று தன்குடும்பத்தினருடன் சொன்னச் சொல்லை மதிக்கும் உணர்வினராகவும் உலக இயல்பை மதித்து ஏற்கும் உணர்வினராகவும், தனக்கு உதவும் நண்பர்களுக்கும் அஃறிணை உயிர்களுக்கும் நன்றி கூறும் நன்றியுணர்வு கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.
- மருதத் திணையில் ஆடவர் பல்வேறு சூழல்களில் பரத்தையை நாடினாலும் மனைவியோடு சேர்ந்து வாழும் இன்பத்தை, இல்லற வாழ்வைப் பெரிதும் விரும்புபவராகக் காணப்படுகின்றனர். மனைவியுடனான ஊடலைத் தவிர்க்க மகன் போன்றோரை வாயிலாகப் பயன்படுத்தி மனைவியோடு சேர்ந்து வாழத் துடிப்பவாராகக் காணப்படுகின்றனர். களவுக் காலத்தைவிட கற்புக் காலத்தை விரும்புபவராகவும் காணப்படுகின்றனர்.
- பாலைத் திணையில் ஆடவர் மனைவியின் / தலைவியின் அழகு, துணிச்சலை எண்ணி வியந்தும் களைப்பினைப் போக்கி மகிழ்விக்கும் உணர்வினராகக் காணப்படுகின்றனர். பொருள் தேடும் வேட்கை உணர்விற்கும் தலைவி மீதான காதல் உணர்விற்கும் இடையில் சிக்கித் தவிக்கும் உணர்வினராகக் காணப்படுகின்றனர். வினை முடித்து விரைந்து செல்லும் உணர்வினராகவும், தன்நெஞ்சை இகழ்ந்தும் புகழ்ந்தும் சூழலுக்குத் தக்கவாறு மன உணர்வை மாற்றிக் கொள்ளும் இயல்பினராகவும் காணப்படுகின்றனர்.
- பொருள் தேடும் வேட்கை மேலோங்கும் நிலையிலும் தலைவியைக் குறித்த நினைவு மாறாமல் தடுமாறாத உள்ளமும் தடம் மாறாத உறுதியும் கொண்டவராகக் காணப்படுகின்றனர்.

- நெய்தற் திணையில் ஆடவர் பெண்ணின்/தலைவியின் அன்பைக் கண்டு வியக்கும் பெருமித உணர்வு கொண்டவராகவும் பொருள் தேடுவதைவிடதன் மனைவியுடன் கூடி இன்புறும் விருப்பமுடையவராகவும், தோழி, பாங்கன் போன்றோரின் நட்பை நாடுபவராகவும் காணப்படுகின்றனர். தலைவியை அடைய மடலேறத் துணியும் துணிவுணர்வு கொண்டவராகக் காணப்படுகின்றனர்.
- கைக்கிளை, பெருந்திணைகளில் தலைவியை எண்ணி வருந்துபவனாகவும், தலைவியை அடைய எதையும் செய்யத் துணியும் துணிவுர்வும் மடலேறித் தனது உரிமையைப் பெற்று மகிழ்பவராகவும், தலைவியை அடைய சான்றோரின் உதவியை நாடுபவராகவும் காணப்படுகின்றனர்.
- ஐந்திணைகளில் பாங்கன், பாணன், தேர்ப்பாகன், கண்டோர், உழையோர் போன்றோர் தலைவனுக்கு உதவும் உள்ளமும் அவர்களை வாழ்த்தும் மன உணர்வும் கொண்டு காணப்படுகின்றனர்.
- பரிபாடலில் ஆடவர் பரத்தையருடன் சேர்ந்து புலைாடும் உணர்வினராகவும், அதனால் ஏற்படும் தலைவியுடனான ஊடலைத் தணிக்க வையையாறு, பரங்குன்றம் போன்றவற்றை வாயிலாகப் பயன்படுத்தித் தலைவியுடன் சேர்ந்து வாழத் துடிக்கும் மனஉணர்வினராகவும் தலைவியின் காலில் விழவும் தயங்காதவராகவும் காணப்படுகின்றனர். பரத்தையரிடம் சென்றாலும் தலைவியை நாடி வரும் இயல்பு கொண்டு மகனுடன் சேர்ந்து வாழத்துடிக்கும் உணர்வினராகக் காணப்படுகின்றனர்.
- எட்டுத்தொகை அகப்பாடல்களில் இடம்பெற்ற ஆடவர் நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்னும் எண்வகை மெய்ப்பாட்டுகளையும், விரைவு, நினைத்தல், கையாறு, இடுக்கண், ஆராய்ச்சி, உடைமை, அன்பு, கைம்மிகல், அருள், வெரூஉதல், வரைவு, அடக்கம், ஐயம், துஞ்சல், நலிதல், வாழ்த்துதல் போன்ற மெய்ப்பாட்டு உணர்வுகளை வெளிப்படுத்துபவராகவும் காணப்படுகின்றனர்.
- மேலும் உள்ள இறுக்கம், உள்ளத் துணிவு, ஆளுமைத்திறன், விரைந்து வினை முடிக்கும் உணர்வு, மன உளைச்சல், உள்ளப் போராட்டம், உள்ளத் தெளிவு, ஆழ்மனப் பதிவுகள், சிக்கலைத் தீர்க்கும் துணிவுணர்வு, நட்புணர்வு போன்ற உணர்வுகளை வெளிப்படுத்து பவர்களாகவும் காணப்படுகின்றனர்.
- இத்தகு உணர்வுகளில் மருட்கை, இளிவரல், அழுகை, பெருமிதம், அன்பு, அருள், கையாறு, கைம்மிகல், நினைத்தல், விரைவு, வாழ்த்துதல், ஆராய்ச்சி, உடைமை போன்ற மெய்ப்பாட்டுணர்வுகள் ஆடவரிடம் மேலோங்கியும், நகையும், உவகையும், வெகுளியும் அதைத் தொடர்ந்தும் வரக் காணலாம். அச்சம், இடுக்கண், வெரூஉதல், வரைவு, அடக்கம், ஐயம், நலிதல், போன்ற உணர்வுகள் பிற உணர்வுகளைக் காட்டிலும் அருகியும் இருப்பதைக் காணலாம்.

- குறிஞ்சி, முல்லை, மருதத்திணையில் ஆடவர் தலைவியைப் பிரிந்து சென்று மீண்டும் வந்து பார்ப்பது உறுதி என்பதால் தவிப்புநிலை சீராக அமைந்துள்ளது. நெய்தல், பாலைத்திணைகளில் தலைவியைப் பிரிந்து செல்லும் நிலையில் தலைவியை மீண்டும் காணச்செல்வது நிலையில்லாததால் தலைவனின் உள்ளம் அதிகஅளவில் துடிக்கின்ற வருத்த உணர்வைக் கொண்டுள்ளது. பிரிவினால் தலைவி எவ்வாறு தூங்காது தவிக்கிறாளோ அதேபோன்று ஆடவரும் தவிக்கும் ஒத்த உணர்வினராகக் காணப்படுகின்றனர்.



**அடிக்குறிப்பு**

1. தொல்காப்பியம், செய்யுளியல், பேராசிரியர் உரை, ப. 396.
2. பகவதி கோவிந்தன், ச., தொல்காப்பியக் கொள்கைகளும் கலித்தொகையும், ப. 169.
3. தொல்காப்பியம், அகத்திணையியல், இளம்பூரணர் உரை, ப. 16.
4. தொல்காப்பியம், களவியல், நூற். 1,45, செய்யுளியல் நூற். 178, இளம்பூரணர் உரை.
5. தொல்காப்பியம், களவியல், இளம்பூரணர் உரை, ப. 155.
6. தொல்காப்பியம், பொருளதிகாரம், நச்சினார்க்கினியர் உரை, ப. 336.
7. தொல்காப்பியம், களவியல், நூற். 23, ப. 60.
8. தொல்காப்பியம், களவியல், நச்சினார்க்கினியர் உரை, ப. 9.
9. கருணாநிதி, ந., தெல்காப்பியம், கற்பியல் நூற். 1, வசந்தா பதிப்பகம், ப. 43.
10. சுப்புரெட்டியார், ந., தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, ப. 177.
11. சஞ்சீவி, ந., சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை, சென்னைப் பல்கலைக்கழகம், ப. 306.
12. மேலது., ப. 150.
13. இராமகிருட்டினன், ஆ., அகத்திணை மாந்தர் ஒய்வு, ப. 164.
14. கருணாநிதி, ந., தொல்காப்பியம், களவியல் நூற். 11, வசந்தா பதிப்பகம், ப. 54.
15. மேலது., களவியல் நூற். 5, ப. 75.
16. மேலது., அகத்திணையியல், நூற். 14, ப. 9.
17. மேலது, செய்யுளியல், நூற். 184, ப. 193.
18. நற்றிணை, 6,44, 77,140, 204, 209, 265, 341, 356, 377.
19. மகாதேவன், கதிர்., நற்றிணை, 77, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 10.
20. மேலது., 146:1–4, ப. 194.
21. தமிழண்ணல், குறுந்தொகை, 142, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 183.
22. மேலது., 95, ப. 134.
23. மேலது., 72,95,100,129,136,206,272,29.
24. மேலது., 120, ப. 160.
25. மேலது., 182, ப. 226
26. மேலது., 222, ப. 268.
27. தொல்காப்பியம், நூற்பா. 256, இளம்பூரணர் உரை.
28. தமிழண்ணல், குறுந்தொகை–129, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 169.
29. சிங்கார வடிவேலன், அ., ஐங்குறுநூறு, 281, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 330.
30. மேலது., 58:6, ப. 212.
31. மேலது., 58:7, ப. 212.
32. மேலது., 58, 15, ப. 212.
33. மீனவன், நா., அண்ணாமலை, சுப., அகநானூறு–152:1, மணிமிடைப்பவளம், கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 73.

34. தமிழண்ணல், மீனவன், நா., அகநானூறு–322:3 நித்திலக்கோவை, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப–61.
35. மீனவன், நா., அண்ணாமலை, சுப., அகநானூறு–258:8, மணிமிடைப்பவளம், கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 316.
36. இராசமாணிக்கம், மு., உளவியல் துறைகள் இரண்டாம் தொகுதி, ப. 367.
37. சஞ்சிவி, ந., சங்க இலக்கிய ஆரய்ச்சி அட்டவணை, சென்னைப் பல்கலைக்கழகம், ப. 307.
38. ஔவையார், கொன்றை வேந்தன்.
39. பெரியகருப்பன், இராம., சங்க இலக்கியத்தில் தலைவன் கூற்று, ஆய்வுக்கட்டுரை, ப. 307.
40. மீனவன், நா., முருகசாமி, தெ., அகநானூறு– 24, களிற்றியானை நிரை, கோவிலூர், மடாலயப் பதிப்பு, ப. 57.
41. சிங்கார வடிவேலன், அ., ஐங்குறுநூறு–477, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 535.
42. கதிர்மகாதேவன், நற்றிணை –169, கோவிலூர் மடாலயப்பதிப்பு, ப. 226.
43. மேலது., 21, 59, பக். 27,78.
44. மேலது., 374, ப. 501.
45. தமிழண்ணல், குறுந்தொகை–162, கோவிலூர் மடாலயப்பதிப்பு, ப. 204.
46. மகாதேவன், கதிர்., நற்றிணை–139, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 183.
47. சிங்கார வடிவேலன், அ., ஐங்குறுநூறு–42, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 63.
48. மாயானந்தம், வீ., வினைமுற்றி மீள்வான் கூற்று–உளவியல் பார்வை, ப. 135.
49. நற்றிணை–21, 42, 54, 81, 106, 136, 142, 161, 221, 242, 321, 371, 374.
50. சிங்கார வடிவேலன், அ., ஐங்குறுநூறு–484, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 531.
51. மேலது., 491, 492, 493, 494, 495.
52. மேலது., 412, 413, 420.
53. அகநானூறு–244, 254, 274, 284, 334, 344, 374.
54. சஞ்சீவி, ந., சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை, சென்னைப் பல்கலைக் கழகம், ப. 308.
55. மேலது., ப. 308.
56. அகநானூறு–86, 126, 136.
57. சஞ்சீவி, ந., சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை, சென்னைப் பல்கலைக்கழகம், ப. 307.
58. மேலது.,
59. மகாதேவன், கதிர். நற்றிணை–3,8, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப.3.
60. சஞ்சீவி, ந., சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை, சென்னைப் பல்கலைக்கழகம், ப.307.
61. தமிழண்ணல், குறுந்தொகை–71, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 106.
62. மேலது., 56, ப. 89.
63. மேலது., 235, ப. 281.
64. மேலது., 326, 327, 328.
65. சஞ்சீவி, ந., சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை, சென்னைப் பல்கலைக் கழகம், ப. 307.
66. தமிழண்ணல், மீனவன், நா., அகநானூறு–353, நித்திலக் கோவை கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 131.

67. மீனவன், நா., அண்ணாமலை, சுப., அகநானூறு–131:5 மணிமிடைப்பவளம், கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 24.
68. அகநானூறு., 327, 335, 337, 377, 379, 3.
69. அகநானூறு., 41, 57,149,167,191,289,297,353,361,371.193.
70. அகநானூறு., 21, 33, 47, 79, 83, 87, 93, 109, 123, 169, 181, 299, 343, 339, 351, 365, 373, 381, 239, 279, 287, 291.
71. மீனவன், நா., முருகசாமி, தெ., அகநானூறு–9,17, களிற்றியானைநிரை, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 23.
72. மீனவன், நா., அண்ணாமலை, சுப., அகநானூறு–216, மணிமிடைப்பவளம், கோவிலூர் மடாலயப், பதிப்பு, ப. 322.
73. சஞ்சீவி, ந., சங்க இலக்கிய ஆராய்ச்சி ஆட்டவணை, சென்னைப் பல்கலைக்கழகம், ப. 307.
74. நற்றிணை., 16, 101, 152, 155, 319, 349.
75. குறுந்தொகை., 128, 184, 376.
76. ஐங்குறுநூறு., 171, 172, 174, 178, 185, 188, 191, 195, 197.
77. அகநானூறு, 130, 140, 230, 280, 390.
78. அறவாணன், க.ப., அற்றைநாட் காதலும் வீரமும், ப. 94.
79. தெல்காப்பியம், அகத்திணை, இளம்பூரணர் உரை, ப. 65.
80. மேலது., ப. 65.
81. மாணிக்கம், வ.சுப., தமிழ்க்காதல், ப. 225.
82. தொல்காப்பியம், அகத்திணை, இளம்பூரணர் உரை, ப. 26, நச்சினார்க்கியர் உரை, ப.53.
83. கருணாநிதி, ந., தொல்காப்பியம், அகத்திணை நூற். 50, வசந்தா பதிப்பகம், ப. 21.
84. தொல்காப்பியம்,அகத்திணை நூற் –50, ந.கருணாநிதி, வசந்தா பதிப்பகம், ப–21.
85. தொல்காப்பியமும் கைக்கிளையும், தொல்காப்பியச் சிந்தனைகள், பக். 165–166.
86. கருணாநிதி, ந., தொல்காப்பியம், அகத்திணை, நூற். 1, வசந்தா பதிப்பகம், ப. 6.
87. தொல்காப்பியம், அகத்திணை, இளம்பூரணர் உரை, ப. 10.
88. சுப்புரெட்டியார், ந., அகத்திணைக் கொள்கைகள், பாரிநிலையம், ப. 290.
89. அண்ணாமலை, சுப., கலித்தொகை–21:11, கோவிலூர், மடாலயப் பதிப்பு, ப. 536.
90. மேலது., 23:1–2, ப. 544.
91. அறவாணன், க.ப., அற்றைநாட் காதலும் வீரமும், ப. 125.
92. கருணாநிதி, ந., தொல்காப்பியம், அகத்திணை நூற். 35, வசந்தா பதிப்பகம், ப.15.

**இயல் நான்கு**

# புறத்திணைகளில் வெளிப்படும் ஆடவரின் மனஉணர்வுகள்

வாழ்வின் உண்மைகளை ஆழ்ந்து சிந்திக்கவும், இளமை, பொருள், யாக்கை என்பன நிலையாது கழியும் நிலையில் நிலைத்த பொருள் குறித்த எண்ணத்தைத் தூண்டவும் புறத்திணை இலக்கியமே வழிவகுக்கிறது. இறையுணர்வையும், சமய நம்பிக்கையையும், தோற்றுவிப்பதற்கும், வளர்ப்பதற்கும் துணை செய்தது புறத்திணை இலக்கியமாகும். இவற்றிற் கெல்லாம் மேலாக பண்டைக்காலத் தமிழக வரலாற்றையும், சமூக நிலையையும், மாந்தர்களின் உணர்வுகளையும் இன்று நம்முன் காட்டும் கண்ணாடியாகத் திகழ்வது புறத்திணை இலக்கியம்.

புறம் என்ற சொல் தொல்காப்பியத்திலும், சங்க இலக்கியங்களிலும் பலவிடங்களில் பயின்றுள்ளது. அகராதியில் இச்சொல், வெளியிடம், அந்நியம், பக்கம், முதுகு, அலர்மொழி, காலம் ஆகிய வெவ்வேறு பொருளைக் குறிக்கும் வகையில் இடம் பெற்றுள்ளது.[1] புறம் என்பது தத்தமக்குப் புலனாவதும், பிறர்க்குக் கூறப்படுவதும் புறம் எனப்படும்.

“புறத்திணை என்பது சமுதாயத்தில் ஓர் உறுப்பாக அமைந்த தனிமனிதனின் சமூகங் குறித்த நினைவுகளையும் உணர்வுகளையும் செயல்களையும் எடுத்துக்காட்டுவதாக அமைகிறது”[2] என்பர், செ. சண்முகம்.

புறத்தில் முதன்மைபெறும் மறவுணர்வு, மனிதன் தோன்றிய நாளிலிருந்து உடனிருந்து வரும் உணர்வாகும். கி.மு.ஐந்தாம் நூற்றாண்டினரான கிரேக்கத் தத்துவ அறிஞர் எம்பெடோகிள்ஸ்,

> *“போர்தான் யாவற்றிற்கும் தந்தை. எல்லோருக்கும் அரசன்;..... போராட்டத்தின் மூலம்தான் எல்லாப் பொருள்களும் உயிர்த்தன்மை அடைகின்றன” என்று கூறுவதைச் சமூக நூலார் எடுத்துக் காட்டுகின்றனர்.*[3]

ஒரு கூட்டம், மற்றோர் கூட்டத்தின் மேல் ஆளுமைச் செலுத்துவதும் அடிமை கொள்வதும் புதிய கற்காலத்திலேயே இருந்திருக்கின்றன.

> **“ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும்**
> **புதுவதன்று இவ்வுலகத் தியற்கை”** (புறம். 76:1-2, ப. 187)

என்பர் சங்கப் புலவர். மேலும்,

**"மன்பதை புரக்கும் நன்னாட்டுப் பொருநன்**
**உட்பகை யொருதிறம் பட்டெனப் புட்பகைக்**
**கேவா னாகலிற் சாவேம் யாமென"** (புறம். 53, ப. 156)

என்று மறவர் கூறுவராம். இப்பாடல்மூலம் போரையே தொழிலாகவும், போர்ச் சாவையே புகழுக்குரியதாகவும் பண்டைத் தமிழர் கருதியதை அறிய முடிகிறது.

புறத்தில் போர்புரிவதும், போரில் களிற்று யானைகளைக் கொல்வதும் வீரனுக்குரிய கடமைகளாகக் கூறப்படுகின்றன. போரில் இறந்துபடுதலைப் பெருமைக் குரியதாகத் தமிழ்ச்சமூகம் நினைந்திருக்கிறது. அரசக் குடியினர் களச்சாவே பெற வேண்டும் என்ற பெருமித நினைவு உடையவராக இருந்திருக்கின்றனர். வேந்தரும், வீரரும் மறவுணர்வு மிக்க தம் வீரப் புகழைப் புலவர் பாட வேண்டுமென விழைந்தனர். புலவர்களும் இத்தகைய வீரர்களை மற்றைய மனிதர்களிலிருந்து மிகவும் வேறுபடுத்திப் போற்றியுள்ளனர்.

அகமல்லாதன எல்லாம் புறமெனக் கொள்ளத் தகும் எனினும் மறவுணர்வே புலவர் பலராலும் புகழ்ந்து பேசப்பெறும் பாடுபொருளாயிருக்கிறது. தான் பெற்ற பெரு வெற்றியினைப் புகழ்ந்து பாடுதற்குப் பெருமைமிகு புலவர் கபிலர் இப்போது இல்லையே என அரசன் ஒருவன் வருந்துவதையும், அவ்வெற்றியினை யான் பாடுவேன் எனப் புலவர் ஒருவர் கூறுவதையும் புறநானூற்றில் காணலாம்.[4] ஆகவே வீரப் புகழ் விருப்பமே புறப்பாடல்கள் பலவற்றின் தோற்றத்திற்கு நிலைக்களனாக அமைந்திருப்பதை அறிய முடிகிறது.

இப்போர்க் குணம் மிக்க ஆடவரை வீரர், மறவர், மன்னர், பொருநர், மழவர் என பல சொற்களால் குறிப்பிட்டும், புலி, சிங்கம், சிறுத்தை ஆகியவற்றோடும், தீ ஆகியனவற்றோடு உவமித்தும் உருவகித்தும் புலவர் பாடுவர்.[5]

வீரர்களை மற்ற மனிதரிலிருந்து வேறுபடுத்திப் பாடுதல் இயல்பான உலக வழக்கமாக இருந்திருக்கிறது. உளச்செருக்கும் உடலுறுதியும் வாய்ந்த வீரனின் தொட்டில் பருவத்திலிருந்து, இறப்புவரை பல நிகழ்ச்சிகளில் அவன் தெய்வத்தை ஒத்தவனாகப் போற்றப்படுகின்றான். இத்தகைய வீரன் ஒருவனின் இறப்பும் இவ்வாறே புகழ் மிக்கதாகப் புனையப் படுகிறது.

**"செற்றன் றாயினும் செயிர்த்தன் றாயினும்**
**உற்றன் றாயினு முய்வின்று மாதோ**
**பாடுநர் போலக் கைதொழு தேத்தி**
**இரந்தன் றாகல் வேண்டும் பொலந்தார்**
**மண்டமர்க் கடக்குந் தானை**
**திண்டேர் வளவற் கொண்ட கூற்றே"** (புறம். 226:1-6, ப. 365)

எனப் பெருவீரனின் உயிரிழப்பும் அவனது கொடைப் பண்பினால் நேர்ந்ததாகப் பாடியுள்ளனர். வீரனின் களச் சாவு புகழிற்கும் மான மேம்பாட்டிற்கும் உரியதாகப் பேசப்

படுகின்றது. முகத்திலும் மார்பிலும் விழுப்புண் படுகின்ற அருஞ்செய் ஆடவர். உயர்ந்தோர் உலகத்தைச் சேர்வர் என்றும், அரசக் குடிப்பிறந்தார் இத்தகு இறப்படைதலை நேரிதன்றும், களச்சாவு பெறாது மூத்தும், நோயுற்றும் விரித்தாரை வாள்போழ்ந்தடக்குதல் வேண்டுமென்றும் புறப்பாடல்கள் தெளிவுபடுத்துகின்றன.

**போர்க்குரிய காரணங்கள்**

இங்ஙனம் போரை விரும்பும் ஆடவரிடையே எழும் போருக்குரிய காரணங்களாக, இயல்பான மறப்பண்பு, மண்ணாசை, இடஞ்சிறிதென்னும் ஊக்க மேலீடு, அரசர்க்கரசராகத் திகழும் உட்கோள், அரசுரிமை யார்க்கெனும் சிக்கல், மானக் குறைவு உண்டாக மற்றையோர் நடத்தல், மகள் மறுத்தல் ஆகிய காரணங்களால் போர் தோன்றக் கூடுமென்பர் அறிஞர் வித்தியானந்தன். [6]

**"எண்டேர் செய்யுந் தச்சன்**
**திங்கள் வலித்த காலன் னோனே"** (புறம். 87:3-4, ப. 197)

என தலைவனின் பேராற்றல் வெளிப் படுகிறது. வேந்தனாக இருப்பவன் தன் வாழ்நாளில் பற்பல போர் புரியவும், அதன் வழியே தலைமைப் புகழ் பெறவும் விரும்பியதை,

**"நல்லிசை வேட்டம் வேண்டி வெல்போர்ப்**
**பாசறை யல்லது நீயொல் லாயே"** (புறம். 31:3-6,ப.124)

என நகரின்கண் இருத்தலை விட்டுப் பாசறையிருப்பை விரும்பும் வேந்தன் 'இசைமை' என்னும் மெய்ப்பாட்டு உணர்வினை வெளிப்படுத்துபவனாகக் காணப்படுகிறான்.

அரசுகள் தோன்றுவதற்கு முன்னர், இனக்குழு மக்களிடையே செல்வப் பொருளாக விளங்கிய ஆநிரைகளைக் கவரும் மாடுபிடிச் சண்டையே அரசுகளும், அதிகாரமும் தோன்றிய பின்னர் பிரதேச உணர்வின் அடிப்படையில் நாடுபிடிச் சண்டையாகிருக்க வேண்டுமென்பதும் எண்ணுவதற்குரியது. [7]

**புறத்திணை**

தமிழர் வாழ்வின் இருகண்களில் ஒன்று புறத்திணை என்பது தொல்காப்பியத்தால் விளக்கமடையலாம். தமிழர் போர் என்று கேட்டால் அதனை விரும்பி ஆர்ப்பரிக்கும் சிவந்த கண்ணினர்![8] ஊரிலுள்ள பொது மன்றத்தில் தொங்கும் முழவு, காற்றுப்பட்டு ஒலி எழுப்ப, அதனைப் போர்ப் பறை ஒலி என மகிழ்வர்.[9] வீரர், போர் என்றவுடன் கிளர்ந்தெழுவர். பறவைகள் தீ நிமித்தம் உணர்ந்த மன்னன் போரைத் தவிர்ப்பான். வந்த போர் போனதே என்று வீரர் நொந்து போவர். மனம் நைந்து, தம்முடைய பூரித்தத் தோள்களைத் தட்டி ஒருவரோடொருவர் பொருது மடியவேண்டும் என்னும் மறப் பண்பு கொண்டு நிற்பர்.[10] மன்னர், தம் தலைநகரில் இருத்தலைவிட போர்ப் பாசறையின் கண் இருத்தலை மிக விழைவர்.[11] போர்க் காதல் இருத்தலால், அரசர் இரவிலும் உறங்கார்.[12] விழுப்புண் பெறாத நாட்களை எல்லாம் வீணாகிவிட்ட நாட்கள் என்று கருதுவர் [13] என்கிறது திருக்குறள்.

புறத்திணையை ஏழாகக் கூறுகின்றார் தொல்காப்பியர். ஏழு அகத்திணைகளுக்குப் புறமாக ஏழு புறத்திணைகள் அமையும் என்பது தொல்காப்பியர் கருத்து. இதனை,

**"அகத்திணை இலக்கணம் அரில்தப உணர்ந்தோர்**
**புறத்திணை இலக்கணம் திறப்படக் கிளப்பின்**
**வெட்சிதானே குறிஞ்சியது புறனே**
**உட்குவரத் தோன்றும் ஈரேழ் துறைத்தே"** ((தொல். புறத்.1,3, ப. 27)

என்ற நூற்பா மூலம் அறியலாம். குறிஞ்சித் திணையின் புறன் வெட்சி என்றும், முல்லைத் திணையின் புறன் வஞ்சி என்றும், மருதத் திணையின் புறன் உழிஞை என்றும், நெய்தல் திணையின் புறன் தும்பை என்றும், நிலபிரிவில் அக ஒழுக்கத்தில் பாலையைப் பிரிக்க முடியாததால் அதனை மறைமுகமாகப் போற்றுவதாலும் வாகை என்பது போர்ச் செயலன்று, போர்ப்பயன் எனவே பாலையின் புறன் வாகை என்றும் கைக்கிளைக்குப் புறன் பாடாண் என்றும் பெருந்திணைக்குப் புறன் காஞ்சி என்றும் குறிப்பிட்டுள்ளார்.

காதற் களவும் ஆநிரைக் களவும் நிகழும் ஒப்புமை பற்றி வெட்சி, குறிஞ்சிக்கு புறனென்றும், நிழலும் நீரும் உள்ள கால நிலையில் வஞ்சி முல்லைக்குப் புறனாயிற்று என்றும் கூறுவர் இளம்பூரணர்.

நில இயலும், கருப்பொருள் வளத்தால் அமையும் பொருளியல் நிலையும், இவற்றின் அடிப்படையில் அமையும் வாழ்க்கைப் போக்குகளும், மன உணர்வுகளும், போர்க்குரிய காரணங்களாக மலர்கின்றன என்பதை எண்ணும்போது புறத் திணைகளுக்கும் முதல், கரு, உரிப் பொருள்களுக்கும் உள்ள இயைபு புலனாகும். காதலரும் கள்வரும் மறைந்து ஒழுகுதற்குரிய மலைக்கான சூழல், இருவகைக் களவிற்கும் ஏற்ற வகையில் மக்கள் ஒடுங்கி உறைகின்ற கூதிர், முன்பனிக் கால நிலைகள், யாமப் பொழுது, கொண்டு செல்வாரின் விரைந்த உள்ள, உடலியக்கங்கள், பொருளுக்குரியாரின் சீற்றம், மீட்பு முயற்சி ஆகிய ஒவ்வொரு நிலையிலும் வெட்சியும் குறிஞ்சியும் இயைந்து வருவதைக் காணலாம்.

**அ. வெட்சித்திணையில் வெளிப்படும் ஆடவரின் மனஉணர்வுகள்**

தொல்காப்பியர் குறிப்பிடும் எழுதிணைப் பாகுபாட்டில் சங்க கால வேந்தர் போரிட்டதற்கான அகச் சான்றுகள் இல்லை. வெட்சி, கரந்தை ஆகிய இவ்விரு துறைகளைச் சார்ந்த புறநானூற்றுப் பாடல்கள் தன்னுறு தொழிலாய்ப் போர் மேற்கொண்ட மறவனின் மறப்பண்பை விளக்குவன. வேந்தர் ஆநிரை கவர்தலுக்காகவோ, ஆநிரை மீட்டலுக்காகவோ போர் மேற்கொண்டதற்கான சான்றுகள் சங்க இலக்கியத்தில் இல்லை என்பர் அரங்க இராமலிங்கம்.[14] புறத்திணைகளுக்கான பாடல் எண்ணிக்கையும் டாக்டர் ந. சஞ்சீவி அவர்களின் சங்க இலக்கிய அட்டவணையை அடியொற்றியே இந்த ஆய்வில் பின்பற்றப்பட்டுள்ளது.[15]

**புறநானூறு**

வெட்சி முதலாகிய ஏழு திணைகளில், உழிஞைத் திணை பற்றிய குறிப்பு இருப்பினும் அத்திணை பற்றிய பாடல் புறநானூற்றில் இல்லை. எஞ்சிய ஆறு திணைகள், வெட்சித் திணையில் ஐந்து பாடல்களும், வஞ்சித் திணையில் பதினோரு பாடல்களும், தும்பைத் திணையில் இருபத்தேழு பாடல்களும், வாகைத் திணையில் எழுபத்தேழு பாடல்களும், காஞ்சித் திணையில் முப்பத்தொரு பாடல்களும், பாடாண் திணையில் நூற்று நாற்பத்து மூன்று பாடல்களும், கரந்தைத் திணையில் பன்னிரண்டு பாடல்களும், நொச்சித் திணையில் ஆறு பாடல்களும், பொதுவியல் திணையில் எழுபது பாடல்களும் இடம்பெற்றுள்ளன.

புறநானூற்றில் வெட்சித் திணை சார்ந்த உண்டாட்டுத் துறையில் அரசன் ஆநிரைகளைக் கவர்ந்து வந்து ஊர்மக்களுக்கு அவற்றை பகிர்ந்தளித்ததை,

**"....................................... காலைப்**
**புல்லார் இனநிலை செல்புறம் நோக்கிக்**
**கையிற் சுட்டிப் பையென எண்ணிச்**
**சிலையின் மாற்றி யோனே; அவைதாம்**
**மிகப்பல ஆயினும் என்னாம் எனைத்தும்**
**வெண்கோள் தோன்றக் குழிசியொடு**
**நாளுறை மத்தொலி கேளா தோனே''** (புறம். 257:6-13, ப. 368)

என்ற புறப்பாடலில் காட்டை அரணாகக் கொண்டு வாழும் அரசன், காலையிலேயே பகைவர்களின் பசுக்கள் போகும் இடத்தைப் பார்த்துக் கையால் சுட்டிக்காட்டி தன் வில்லால் பசுக்களைத் திருப்பிக் கொண்டு வந்து, அப்பசுக்களை விடியலுக்கு முன்னே ஊர்மக்களுக்கு அவற்றைப் பகிர்ந்தளித்த அரசனின் துணிவு உணர்வையும் கொடை உணர்வையும் பகிரிந்தளிக்கும் மாண்பையும் இப்பாடலடிகள் மூலம் உணரமுடிகிறது.

வளமான ஊனைத்தின்று ஊன்நாறும் எச்சில் பட்ட ஈரக்கையுடன் வில்லை இறுகிப் பற்றி பகைவர்களின் பசுக்களைக் கவர்ந்து வந்து அவற்றைக் கொடுத்து கள் அருந்தி மகிழ்ந்ததை,

**"பச்சூன் தின்று பைந்நிணம் பொடுத்த**
**எச்சில் ஈர்ங்கை வில்புறம் திமிரிப்**
**புலம்புக் கனனே புல் அணற் காளை**
**ஒருமுறை உண்ணா அளவைப் பெருநிரை**
**ஊர்ப்புறம் நிறையத் தருகுவன் யார்க்கும்**
**தொடுதல் ஓம்புமதி முதுகள் சாடி**
**ஆதரக் கழுமிய துகளன்**
**காய்தலும் உண்டுஅக் கள்வெய் யோனே"** (புறம். 258:1-6, ப. 400)

என்ற பாடல்மூலம் அறியலாம். கள்ளுண்டு மகிழும் மன உணர்வினராகவும் கள் இல்லை எனில் கோபம் கொள்ளும் 'வெகுளி' மெய்ப்பாட்டுணர்வினராகவும் காணப்படுகின்றனர்.

பகைவரை அழித்து பசுவொடு வரும் தலைவனின் வீர உணர்வைக் கண்டு அவனின் பெருமையை உணர்ந்து சிறப்பிக்கும் வண்ணம்,

**"ஒன்னார் முன்னிலை முருக்கிப் பின்னின்று**
**நிரையொடு வரூஉம் என்னைக்**
**குழையோர் தன்னினும் பெருஞ்சா யலரே"** (புறம். 262:4-6, ப. 406)

என்று தலைவனின் களைப்பைப் போக்கும் நிலையினைக் காண முடிகின்றது. தலைவன் போரிட்டு ஆநிரைகளைக் கவரும் திண்மை உடையவனாகவும் வீர உணர்வு கொண்டவனாகவும் காணப்படுகிறான். மேற்குறிப்பிட்ட பாடல்களில் தலைவன் அஞ்சாமையாகிய, 'தறுகண்' என்னும் பெருமித மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துகிறான்.

**"மதுகையின்றி வயிற்றுத் தீத்தணியத்**
**தாமிரந் துண்ணு மளவை**
**ஈன்ம ரோவிவ் வுலகத்தானே''** (புறம். 74:5-7, ப. 185)

என்ற பாடலில் சிறையெடுக்கப்பட்டுப் பகைவரிடம் நீர் வேண்டி இரக்கும் நிலை அரசனுக்கு இழிவைத் தரும் நிலையில் தன்னிடத்துப் பிறந்த இழிவின் காரணமாக அழுகையுணர்வு வெளிப்பட்டதைக் காண முடிகிறது. இதில் தலைவன், பிறரிடம் இருக்க வேண்டிய சூழல் வந்ததால் மெய்வருந்தி 'அழுகை' மெய்ப்பாட்டுணர்வை வெளிப்படுத்துகின்றான். பிறரிடம் இரக்கும், தாழ்ந்து போகும் நிலையை விரும்பாத உணர்வினன் என்பதை அறியமுடிகிறது. இம்மெய்ப்பாட்டினை மேலும் பலபாடல்கள் உணர்த்துகின்றன.[16]

**பதிற்றுப் பத்து**

சேர மன்னனின் சிறப்பான ஆட்சியில் வெற்றிச் சிறப்பினையும், முரசு முழக்கத்தினையும் பெருஞ்சோறு வழங்கும் திறனையும் பதிற்றுப் பத்து வெட்சித் திணைப் பாடலில் காணலாம். அப்பாடலில்,

**"காந்தள்அம் கண்ணிக் கொலைவில் வேட்டுவர்**
**செங்கோட்டு ஆமான் ஊனொடு காட்ட**
**மதனுடை வேழத்து வெண்கோடு கொண்டு**
**பொன்னுடை நியமித்துப் பிழிநொடை கொடுக்கும்"**

(பதிற்று. 30:9-13, ப. 92)

என்ற பாடலடிகளில் ஆநிரையின் இறைச்சியை விலையாகக் கொடுத்து கள்ளுண்ணும் உணர்வினராக வேட்டுவர் இருந்ததை அறிய முடிகிறது. பெருஞ்சோற்று நிலை என்னும் வகையில்,

"பெருஞ்சோறு உகுத்தற்கு எறியும்
கடுஞ்சின வேந்தே! நின் தழங்குகுரல் முரசே!" (பதிற்று. 30:40-44,ப.93)

என்ற பாடலடிகள் சேரனின் முரசு, பகைவரிடம் புறங் கொடாத கொள்கையினையும், போரினை விரும்பும் வீரர்களின் வீர உணர்வினையும் ஊக்கப் படுத்தும் வகையில் பெருஞ்சோறு வழங்கியதைக் காணமுடிகின்றது. நாட்டின் மீது பற்று கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர். இங்கு தலைவன் தறுகண் என்னும் அஞ்சாத வீர உணர்வு கொண்டவனாகவும், 'கொடை' என்றும் மெய்ப்பாட்டுணர்வு கொண்டவனாகவும் காணப்படுகிறான்.

புறநானூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல் போன்ற நூல்களின் பாடல்கள் வழி புலனாகும் ஆடவரின் உணர்வுகளை ஆராய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

வெட்சித்திணையில் ஆடவர், நன்னடையால் வரும் புகழுணர்வு – இசைமை, அஞ்சாத வீர உணர்வு – தறுகண்மை, பொருள்களைக் கொடையளிக்கும் கொடையுணர்வு – கொடை, போன்ற நிலைக்களன்களைக் கொண்ட 'பெருமித' மெய்ப்பாட்டுணர்வு கொண்டவராகக் காணப்படுகின்றனர்.

தன்னை எளியனாக்கும், பொருள், உடைமை யாதானும் ஒன்றை இழக்கும் உணர்வு – இழிவு, தன்னிலையில் தாழும் உணர்வு – அசைவு, போன்ற நிலைக்களன்களைக் கொண்ட 'அழுகை' மெய்ப்பாட்டுணர்வினராகக் காணப்படுகின்றனர்.

**வெட்சித் திணை ஆடவர் பின்வரும் உணர்வுநிலைப் பட்டவராகக் காணப்படுகின்றனர்:-**

- துணிவுணர்வும், பகிர்ந்தளிக்கும் மாண்பும், கொடை உணர்வும் கொண்டவர். (புறம். 257, 258)
- கள்ளுண்டு மகிழும், மன உணர்வினர் (புறம். 258)
- பகைவரிடம் போரிட்டு ஆநிரைகளைக் கவரும் வீர உணர்வும், ஈர உணர்வும் கொண்டவர். (புறம். 262, 269, 297)
- வீரர்களை ஊக்குவித்து பெருஞ்சோறு அளிக்கும் பண்பும் நாட்டுப்பற்றுணர்வும் கொண்டவர். (பதிற்று. 30)

**ஆ. கரந்தைத் திணையில் வெளிப்படும் ஆடவரின் மனஉணர்வுகள்**

கரந்தை என்பது ஆநிரை மீட்டல் ஆகும். வெட்சிப் படையார் வேற்றுப் புலத்து வந்து நிரை கவர்வர். அப்பொழுது காத்திருக்கும் மறவர் கிளர்ந்தெழுந்து வெட்சியாரை வீழ்த்த முனைவர். தம் நிரையை மீட்கும் பரபரப்பில் மன்னனின் ஆணைக்குக் காத்திராமல் நிகழ்த்தும் போர் தன்னுறு தொழிலாக அமைகிறது. இதுவே கரந்தைத் திணையாகும்.

சீர்சால் வேந்தன் சிறப்பு எடுத்துரைத்தல், தலைத்தாள் நெடுமொழி தன்னொடு புணர்த்தல் என்பன ஆக்களை மீட்ட மகிழ்வில் கரந்தை மறவர் தமக்குள் மகிழ்ந்து ஆர்ப்பரிப்பதைக் குறிப்பிடுகிறது.

**புறநானூறு**

புறநானூற்றில் கரந்தைத் திணைப் பற்றி பதினொரு பாடல்கள் உள்ளன.[17] இவை தன்னுறு தொழிலும், மன்னுறு தொழிலுமாக அமைந்துள்ளன. தன்னுறு தொழிற் பாடலாக புறம்–**261, 263** பாடல்கள் அமைந்துள்ளன. புறநானூற்றுப் பாடலில் தன்னுறு தொழிலாய் அமைந்த பாடலில், பாணனிடம், இவ்வழியே நீ செல்கின்றாயாயின் வழியில் உடன் வந்த மறவர் அஞ்சி நீங்கவும், நீங்காது நின்று, வெட்சியாருடன் போரிட்டு நடுகல்லாகியவனைக் காண்பாய் என்று கூறுவதிலிருந்து அறிய முடிகிறது. இதனை,

**''நாகு முலைஅன்ன நறும்பூங் கரந்தை**
**விரகறி யாளர் மரபிற் சூட்ட**
**நிரை இவண் தந்து''** (புறம். 261:13-15, ப. 404)

என்ற பாடலடிகள் மூலம் உணரலாம். இதில் ஆடவர் வீர உணர்வுடன், வெட்சிப் படையாருடன் போரிடும் வல்லமை பெற்றவராக இருந்தனர் என்பதை அறிய முடிகிறது. புறநானூற்றில் கரந்தைத் திணைப் பாடல்களில் பெரும்பான்மை நடுகல் பற்றியவை.[18]

*"நடுகல் என்பது நிரை கவரும் போதோ, மீட்கும் போதோ இறப்பவர்க்கு எடுப்பவை, போர்க்களத்தில் போர் செய்து மடிந்த மறவர்க்கு எடுப்பவை, மானத்தின் காரணமாக வடக்கிருந்து உயிர் நீத்த மன்னவர்க்கு எடுப்பவை உண்ணா நோன்பு இருந்து உயிர் நீத்த சமண முனிவர்க்கு எடுப்பவை. மறப்பணி அல்லது மதிக்கும் பணியாற்றிய மகளிர்க்கு எடுப்பவை. மதிக்கும் பணியாற்றிய எவருக்கும் எடுப்பவை. இறந்தவர் அனைவர்க்கும் எடுப்பவை."[19] என்பர்.*

இங்ஙனம் எடுக்கப்படும் நடுகற்கள் பற்றிய செய்திகள் கரந்தைத் திணைப் பாடல்களில் காணப்படுகின்றன.

போர்க்களத்தில் புறப்புண்படாது, விழுப்புண் பெற்றும், வேறுவகையில் வீரத்துடன் போராடி நாட்டின் மானம் காக்கத் தம் இன்னுயிரை நீத்த வீரர்களுக்கு எடுக்கப்படும் நடுகல்லில் அவ்வீரனின் பெயர், பிறப்பு, இறப்பு, அவன் செய்த வீர தீரச் செயல்கள் பொறிக்கப்பட்டிருக்கும்.

**"அணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித்**
**தினிநட் டனரே கல்லும்"** (புறம். 26:3-4, ப. 407)

என்ற பாடலடிகள் மூலம் அறியலாம். நடுகல்லிற்கு மயிலிறகு சூட்டி, மதுவை வைத்துப் படைத்திருப்பதை,

**"நடுகல் பீலி சூட்டி நாரரி**
**சிறுகலத் துருப்பவுங் கொள்வன் கொல்லோ"** (புறம். 232:3-4, ப. 372)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. நடுகல்லினைத் தெய்வமாகவே மதிக்கும் உணர்வை,

**"கல்லே பரவி னல்லது**
**நெல்உகுத்துப் பரவுங் கடவுளு மிலவே"** (புறம். 335:11-12, ப. 477)

என்ற அடிகள் எடுத்துக் காட்டுகின்றன. புறநானூற்றில் இடம் பெற்றுள்ள கரந்தைத் திணையில்,

**"முருகுமெய்ப் பட்ட புலைத்தி போலத்**
**தாவுபு தெறிக்கும் மான்மேல்**
**புடை இலங்கு ஒள்வாள் புனைகழ லோயே"** (புறம். 259:5-7, ப. 401)

என்ற பாடலடிகளில் பசுக் கூட்டத்தினை, வெட்சிப் படையாரிடமிருந்து மீட்டு, வாளையும் வீரக் கழலையும் அணிந்தவனாய் வீர உணர்வினனாய்க் காணப்படுகின்றான். மேலும், தன்னுடைய ஊரில் மிகுதியான கூட்டத்தைக் கொண்ட வீரர் எய்த அம்பு வெள்ளத்தைத் தன் துடியை மிதவையாகக் கொண்டு வென்று பகையழித்து நிரையை, மீட்கிறான் இச்செலவு பாம்பின் பற்றுதலில் இருந்து மதியை மீட்டதுபோல் என்று உவமித்துக் கூறப்பட்டுள்ளது. இதில் ஆடவர் வீர உணர்வும், புகழுணர்வும் கொண்டவராக விளங்கியதைக் காண முடிகின்றது. மேலும் 'தறுகண்'; 'பெருமித' மெய்ப்பாட்டு உணர்வினராகவும் திகழ்ந்தனர். இங்ஙனம் வீரத்துடன் செயல்பட்டு ஆநிரைகளை மீட்ட வீரர்களின் வீர உணர்வை,

**"இனிநட்டனரே கல்லும் கன்றொடு**
**கறவை தந்து, பகைவர் ஓட்டிய**
**நெடுந்தகை கழிந்தமை அறியாது**
**இன்றும் வரும்கொல் பாணரது கடும்பே"** (புறம். 264:1-5, ப. 407)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. ஆநிரை மீட்டலுக்காகப் போர் புரிந்த வீரன் போர்க்களத்தில் மடிந்ததை,

**"பேர்அமர் உழந்த வெருவெரு பறந்தலை**
**விழுநவி பாய்ந்த மரத்தின்**
**வாள்மிசைக் கிடந்த ஆண்மையோன் திறத்தே"** (புறம். 270:11-13, ப. 412)

**"ஓடல் செல்லாப் பீடுடையாளர்"** (புறம். 287:7, ப. 428)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் ஆடவர் போர் புரியும் வீர உணர்வை வெளிப்படுத்துவதை விரும்பும் உணர்வினராகவும் போரில் புறமுதுகிடாமல் நேருக்குநேர் நின்று போரிடும் உள்ளத் துணிவு கொண்டவராகவும் அலைகொலை எனும் 'வெகுளி' மெய்ப்பாட்டு உணர்வினராகவும் காணப்படுகின்றனர்.

வேந்தனாக இருப்பவர் மட்டுமல்லாமல் படைத் தலைவர்களும் வீரர்களும் வழிவழியாக வந்து நாட்டைக் காக்கும் பற்றுடையவராகவும் தன் வீரத்தை நிலை நாட்டுபவராகவும் விளங்கினர் என்பதை,

**"நுந்தை தந்தைக்கு இவன் தந்தை தந்தை**
**எடுத்தெறி ஞாட்பின் இமையான் தச்சன்**
**அடுத்தெறி குறட்டின் நின்றுமாய்ந் தனனே;**
**மறப்புகழ் நிறைந்த மைந்தினோன் இவனும்**
**உறைப்புழி ஓலை போல**
**மறைக்குவன் பெரும நிற்குறித்து வரு வேலே" (புறம். 290:3-8, ப. 430)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இவற்றில் சங்க ஆடவர் வழிவழியாக வீரத்துடன் விளங்கியதையும் நாட்டையும் வேந்தனையும் காக்கும் கடமையுணர்வும் பொறுப்புணர்வும் கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர். மேலும் தறுகண், இசைமை என்னும் பெருமித மெய்ப்பாட்டுணர்வும் கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.

மன்னர்கள் தங்கள் வீரத்தை வெளிப்படுத்தும்போதும் தம் படையின் தலைவன் மற்றும் வீரர்களின் வீரத்தை மதிக்கும் உணர்வினராக இருந்ததை,

**''கொன்னும் சாதல் வெய்யோற்குத் தன்தலை**
**மணிமருள் மாலை சூட்டி, அவன்தலை**
**ஒருகாழ் மாலை தான்மலைந் தனனே'' (புறம். 291:6-8, ப. 432)**

என்ற பாடலடிகள் மூலம் அரசனின் வீரத்தை படைத்தலைவனும், படைத்தலைவனின் வீர உணர்வை அரசனும் மதித்து ஒருவருக்கொருவர் தங்களது மார்பில் இருந்த மாலைகளை மாற்றிக் கொண்டு இருவரும் போரிட்டதை அறிய முடிகிறது. அரசன், படைத்தலைவன் ஆகிய இருவரும் நாட்டைக் காக்கும் நாட்டுப் பற்றுணர்வுடன், வீரத்தை மதிக்கும் மதிப்புணர்வு கொண்டவராகவும் பெருமித மெய்ப்பாட்டுணர்வு கொண்டவராகவும் திகழ்ந்தனர்.

பாணர்களுக்கும் பொன்னும் பொருளும் கொடையளித்து வாழ்ந்த மன்னன் போரில் இறந்தான். அந்நிலையில் பாணன்,

**"அரிதுசெல் உலகில் சென்றனன் உடம்பே**
**கானச் சிற்றியாற் றருங்கரைக் காலுற்றுக்**
**கம்பமொடு துளங்கிய இலக்கம் போல**
**அம்பொடு துளங்கி ஆண்டு ஒழிந்தன்றே'' (புறம். 260:21-24, ப. 402)**

என்று வெளிப்படுத்துகின்றான். இங்கு அசைவு என்பதற்குத் தன்னிலை தாழ்தல் எனும் நிலையில் வெளிப்படும் 'அழுகை' எனும் மெய்ப்பாட்டு உணர்வு வெளிப்பட்டு நிற்கக் காணலாம்.

கொலை எனும் 'வெகுளி' மெய்ப்பாடு என்பது உயிரைக் கொல்லுதலை மட்டும் குறிக்காது. ஒருவரது தகுதியைக் கொல்வதுமாகும். தனது ஆற்றலை அழிக்க நினைத்தவனது ஆற்றலை அழிக்க வேண்டும் என்னும் சூளுரையை,

> **"ஆற்றலுடையோர் ஆற்றல் போற்றாதென்**
> **உள்ளம் எள்ளிய மடவோன் தெள்ளிதின்**
> **துஞ்சுபுலி இடறிய சிதடன் போல**
> **உய்ந்தனன் பெயர்தலோ அரிது''** (புறம். 73:5-8, ப. 184)

என்ற பாடல் உணர்த்துகின்றது. பல்வகைத் திறமும் உடையோர் திறத்தை மதியாமல் என் வலிமையை இகழ்ந்த அறிவில்லாதோன் உறங்கும் புலிமேல் காலிடறி வீழ்ந்த பார்வையற்றவன் போல தப்பிப் போக முடியாது என்று வெகுண்டு சூளுரைப்பதில் தலைவன் தன் ஆற்றலை இகழ்ந்த; அழிக்க நினைத்தவனை அழிக்க வேண்டும் என்ற எண்ணத்தினை கோபத்துடன் சூளுரையாக உரைத்து தன்மெய்யின் வழியாக 'வெகுளி' மெய்ப்பாட்டினை வெளிப்படுத்துகின்றான். இதில் தலைவன் தன் ஆற்றலையும் நாட்டையும் காக்கும் உணர்வு கொண்டவனாகக் காணப்படுகின்றான்.

கரந்தைத் திணையில் ஆடவர், அஞ்சாத வீரத்துடன் போர்புரியும் உணர்வு – தறுகண், நன்னடையால் பெற்ற புகமுணர்வு – இசைமை எனும் நிலைக்களன்களால் உணரப்படும் பெருமிதம் எனும் மெய்ப்பாட்டுணர்வு கொண்டவராகத் திகழ்ந்தனர்.

**கரந்தைத் திணை ஆடவர் பின்வரும் உணர்வுநிலைப் பட்டவராகக் காணப்படுகின்றனர்.**

- வெட்சிப் படையாருடன் போரிடும் வீர உணர்வும் புகழுணர்வும் கொண்டவர். (புறம். 261, 263, 264, 286)
- வீர உணர்வுடன் போரிட்டு வென்ற வீரர்களுக்கு, நடுகல் இட்டு தெய்வமாக மதிக்கப்படும் மதிப்புணர்வு பெற்றவர் (புறம். 335, 259, 260)
- போரில் புறமுதுகிடாமல் நேருக்கு நேர் நின்று போரிடும் துணிவுள்ளம் கொண்டவர். (புறம். 270)
- வேந்தர், வீரர் என்போர் மிகுந்த நாட்டுப்பற்றுணர்வு கொண்டு நாட்டைக்காக்கும் பொறுப்புணர்வு கொண்டவர். (புறம். 287, 290)
- ஒருவரை ஒருவர் மதிக்கும் உணர்வினர் (புறம். 291)

**இ. வஞ்சித் திணையில் வெளிப்படும் ஆடவரின் மனஉணர்வுகள்**

> **''எஞ்சா மண்நசை வேந்தனைவேந்தன்**
> **அஞ்சுதகச் சென்று அடல்குறித் தன்றே''** (தொல். புறத். 7, ப.30)

என்ற நூற்பா வஞ்சித் திணைக்கு இலக்கணம் சுட்டுகின்றது. தணியாத மண்ணாசை உடைய ஒரு வேந்தனை மறம் உடைய பிறிதொரு மன்னன், அவன் வஞ்ச நெஞ்சம் அஞ்சுமாறு தானே படையொடு மேற்சென்று வென்று அடக்குதலை இந்நூற்பா சுட்டுகிறது.

வஞ்சித் திணையில் குறிக்கப்படும் போர்ச்செயல், வேந்தர் இருவர்க்கும் உரியது. ஆனால் அவர்களின் வேட்கையும் உணர்வும் வேறுபட்டவை. ஒருவன் மண்மீது கொண்ட வேட்கை உணர்வும், மற்றொருவன் அதனைக் காக்கும் கடமை, பொறுப்புணர்வும் கொண்டு விளங்குகின்றான். இங்கு வேட்கையால் 'உடைமை' எனும் மெய்ப்பாட்டுணர்வும், கடமை, பொறுப்பினால் வரும் நன்னடையால் 'பெருமிதம்' எனும் மெய்ப்பாட்டுணர்வும் வெளிப்படுகிறது.

**புறநானூறு**

புறநானூற்றுப் பாடல்களில் வஞ்சித் திணைக்குரியவை பன்னிரண்டு பாடல்களாகும்[20] என்பர் சங்க இலக்கிய ஆய்வறிஞர் ந. சஞ்சிவி அவர்கள்.[21] வஞ்சித் திணை சார்ந்த பாடல்கள் பண்டைத் தமிழரின் போர் அறத்தை விளக்கும் வகையில் அமைந்துள்ளன. வஞ்சித் திணை மன்னனின் படை எடுப்பால், ஊர்கள் எரிக்கப்பட்டு, மக்கள் அழுது அரற்றும் நிலையினை,

**"எல்லையும் இரவும் எண்ணாய் பகைவர்**
**ஊர்சுடு விளக்கத்து அழுவிளிக் கம்பலை"** (புறம். 7, ப. 85)

என்ற பாடலடிகளும், அவ்வூரை எரிக்கும் செந்தீ ஞாயிறு போலத் தோன்றும் என்பதை,

**"எல்லுப்பட விட்ட சுடுதீ விளக்கம்**
**செல்சுடர் ஞாயிற்றுச் செக்கரில் தோன்ற"** (புறம். 16:7-8, ப. 97)

என்ற பாடலடிகளும், "நனந்தலைப் பேரூர் எரியும் நைக்க"[22] என்ற பாடலடியும் பகைவர் தம் ஊரினை எரித்த செய்தியை அறிய முடிகிறது. சங்க ஆடவர் மண்ணாசையின் காரணமாக பகைவரின் ஊரினை எரிக்கும் வஞ்சினம் உடையவராகக் காணப்பட்டனர். எனினும் போர் அறத்துடன் செயல்பட்டனர். மேலும் பகைவரின் கரும்பு வயல்களை அழித்து நெல் வயல்கள் கவரப்படுவதையும் காண முடிகின்றது. இதனை,

**"கரும்பல்லது காடறியாப்**
**பெருந்தண்பனை பாழாக**
**ஏம நன்னாடு ஒள்ளெரி ஊட்டினை**
**நாம நல்லமர் செய்ய**
**ஓராங்கு மலைந்தன பெருமநின் களிறே''** (புறம். 16:9-19, ப. 97)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. மண்ணாசையால் போரிடும் மன்னனின் செருக்கினை அடக்கும் உணர்வு கொண்டவனாகவும் அவன் நாட்டை அழித்து

வளங்களைக் கவர்ந்து தனது வீர 'வெகுளி' மெய்ப்பாட்டு உணர்வினை வெளிப்படுத்து கின்றவனாகவும் ஆடவன் காணப்படுகின்றான். அவ்வீரனை எதிர்த்த பகைவனிடம் இழத்தல் எனும் 'இழிவு' மெய்ப்பாட்டுணர்வும், 'அரற்றுதல்' எனும் மெய்ப்பாட்டுணர்வும் வெளிப்படுகிறது.

இத்தகைய வஞ்சினம் கொண்ட மன்னனை அறத்துடன் போரிட புலவர் வழி நடத்திச் செல்வதை,

**"பிறர்நாடு கொள்ளும் காலை அவர் நாட்டு**
**இறங்குகதிர்க் கழனிநின் இளையரும் கவர்க;**
**நனந்தலைப் பேரூர் எரியும் நைக்க**
**மின்னுநிமிர்ந் தன்னநின் ஒளிறிலங்கு நெடுவேல்**
**ஒன்னார் செகுப்பினும் செகுக்க; என்னதூஉம்**
**கடிமரம் தடிதல் ஓம்பு; நின்**
**நெடுநல் யானைக்குக் கந்துஆற் றாவே"** (புறம். 56:5-11, ப. 160)

என்று அறிவுரை வழங்கும் புலவரின் செயல் பாட்டினையும், நாட்டையும், நாட்டு மன்னனையும் அற வழியில் நெறிப்படுத்தும் உணர்வினையும் காண முடிகின்றது. அரசன் பகைவர் நாட்டின் வளத்தைக் கவர்ந்தாலும், ஊரினை எரியூட்டினாலும், பகைவரை அழித்தாலும், பகைவரின் காவல்மரத்தை மட்டும் வெட்டுவதைக் கைவிடுக என்று புலவர் அரசனுக்கு அறிவுறுத்தி வழி நடத்துகின்றார். இங்கு புலவரின் அறிவுரைப்படி அறத்துடன் போர்புரியும் மன்னர்களின் அற உணர்வையும் காணமுடிகின்றது. கிள்ளி வளவன் கருவூரை முற்றுகையிட்ட போது புலவர்,

**"நெடுமதில் வரைப்பில் கடிமனை இயம்ப**
**ஆங்கினிது இருந்த வேந்தனோடு ஈங்குநின்**
**சிலைத்தார் முரசம் கறங்க**
**மலைத்தனை என்பது நாணுத்தக வுடைத்தே"** (புறம். 36:10-13, ப. 133)

என்று கிள்ளிவளவனிடம், நினது வீரத்தை அறிந்த உனது பகை மன்னன் கோட்டையின் உள்ளே அஞ்சி அடக்கிக் கிடக்கும் அவனை முற்றுகை இடுவது உன் போன்ற வீரனுக்கு நாணத்தைத் தரும் செயல். எனவே அவன்மீது போர்புரிவதை விடுவாயாக என்றார். அஞ்சி அடங்கிக் கிடக்கும் மன்னர்கள் மீது போரிடுவது நாணம் மிக்க செயல் என்பதை அறிந்து போர்புரியும் உணர்வினைக் கைவிடும் மன்னர்களின் இரக்க உணர்வினையும் புலவரின் அறிவுரையை மதித்து ஏற்கும் உணர்வினையும் பாடல் வெளிப்படுத்துகிறது. மேலும், புலவர்கள் மன்னர்களை இடித்துரைத்து நல்வழிப்படுத்தும் அறவுணர்வு கொண்டவராகத் திகழ்ந்ததையும் 'நடுவுநிலை' எனும் மெய்ப்பாட்டுணர்வு கொண்டிருந்ததையும் அறியமுடிகிறது.

**'இடிப்பாரை யில்லாத ஏமரா மன்னன்**
**கெடுப்பா ரிலானும் கெடும்''** (குறள்.448)

என்ற குறட்பாவின் மூலம், கண்டித்துச் சொல்லும் பெரியவரின் பாதுகாப்பு இல்லாத மன்னன் பகைவர் இல்லாமலே கெட்டுப்போவான் என்னும் வள்ளுவனின் வாக்கு இங்கு நினைவு கூரத் தக்கது.

மண்ணாசையால் வேற்று நாட்டு மன்னன் படையெடுப்பது போல், ஒரே குடியைச் சேர்ந்த, ஒரே நாட்டில் உள்ள இருவேந்தர்கள் தங்களுக்குள் பகை உணர்வு கொண்டு போரிடுவதும் வஞ்சித் திணை சார்ந்த செயற்பாடேயாகும். இத்தகைய இரு வேந்தரின் செய்கை அவர்களின் பகைவர்க்கு இன்பம் தரும் என்பதை,

**"ஒருவீர் தோற்பினும் தோற்பது குடியே**
**இருவீர் வேறல் இயற்கையும் அன்றே; அதனால்**
**குடிப்பொருள் அன்றுநும் செய்தி; கொடித்தேர்**
**நும்மோர் அன்ன வேந்தர்க்கு**
**மெய்ம்மலி உவகை செய்யும்இவ் இகலே"** (புறம். 45:5-9, ப. 147)

என்று புலவர் இருவேந்தர்க்கும் அறிவுரை கூறி போரைக் கைவிடச் செய்தார். போரில் இருவரும் வெல்வது இயற்கை இல்லை. எனவே உங்கள் செயல் குடியை உயர்த்திப் பெருமை சேர்ப்பது ஆகாது என்று கூறும் புலவர், நாட்டின் மீதும், அரசர்களின் குடிப்பெருமையின் மீதும் அக்கறை கொண்ட உணர்வினராக இருந்ததைக் காணமுடிகிறது. அரசரும் புலவரின் அறிவுரைக்கு அடிபணிந்து செயல்படும் உணர்வினராகத் திகழ்ந்தனர்.

இதே போன்று தந்தை தன் மக்களை (மகன்களை) எதிர்த்துப் போரிடத் துணிந்த போது,

**"இகழுநர் உவப்பப் பழிஎஞ் சுவையே**
**அதனால், ஒழிகதில் அத்தைநின் மறனே வல்விரைந்து**
**எழுமதி வாழ்கநின் உள்ளம் அழிந்தோர்க்கு**
**ஏமம் ஆகுநின் தாள் நிழல் மயங்காது**
**செய்தல் வேண்டுமால் நன்றே வானோர்**
**அரும்பெறல் உலகத்து ஆன்றவர்**
**விதுப்புறு விருப்பொடு விருந்தெதிர் கொளற்கே"** (புறம். 213:18-24)

என்று அவனது செயலையும், அச்செயல் பகைவர் மகிழும் பழியை உலகில் நிலைநிறுத்தி விடும். எனவே போரைக் கைவிடு. உனக்கு அஞ்சி வாழும் பகைவர்க்கு இது பாதுகாப்பாக அமைந்து விடும். எனவே, பெறுதற்கரிய விண்ணுலகில் உன்னை விருந்தினராக வரவேற்கும் வகையில் நற்செயல்களைச் செய்வாய். புதல்வர்கள் மீது போர்புரியும் எண்ணத்தை மாற்றிக் கொண்டு நாட்டுக்கும், புதல்வர்களுக்கும் நல்ல பாதுகாப்பினை அளித்துக் காக்க வேண்டும் என்று கூறும் புலவரின் நாட்டுப் பற்றுணர்வு இப்பாடலில்

காணப்படுகின்றது. அரசர்கள் தங்கள் புதல்வர் எனினும், தந்தை எனினும், தமையன் எனினும் மண்ணாசையால் உறவை மறந்து தமது வெஞ்சினத்தை நிலைநாட்டும் பண்பினராகத் திகழ்ந்தனர். மண்ணாசைக் கொண்டவரின் செருக்கினை அழிக்கும் உணர்வினராகவும் திகழ்ந்தனர். புலவர்கள், அரசனின் குடிப்புகழ் காக்க, கோல் கோடாமல் அரசாட்சி செய்ய இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்ற நல்லறத்தை எடுத்துரைக்கும் அருளுணர்வு கொண்டவராகத் திகழ்ந்தனர்.

சங்க கால குறுநில மன்னர்கள் தங்கள் நாட்டின் பரப்பளவை அதிகரித்து, பேரரசனாக விருப்பம் கொண்டவராகவும், தங்கள் நாட்டின்மீது படையெடுக்கும் பகைவரையும் அவரது மண்ணாயையும் அடக்கும் உணர்வினராகவும் திகழ்ந்தனர் அவர்கள் 'வெகுளி', 'உடைமை', குடிகோள் போன்ற மெய்ப்பாட்டு உணர்வு கொண்டிருந்தனர் என்பதையும் அறியமுடிகிறது.

வேந்தர்க்கும் மாந்தர்க்கும் போர் உணர்வு பொதுவானது. ஒருவனை ஒருவன் அடுதலும் தொலைதலும் புதியதல்ல; உலக இயற்கை. அதுவே அரச அறமும் ஆகும்.

வஞ்சித்திணையில் ஆடவர், நன்னடையால் வரும் புகழ் உணர்வு – இசைமை என்னும் 'பெருமித' மெய்ப்பாட்டுணர்வு கொண்டவராகவும், யாதானும் ஒன்றினால் இகழப்படும் உணர்வு – இழிவு என்னும் 'அழுகை' மெய்ப்பாட்டுணர்வு கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.

மேலும் தம் நாட்டைக் காக்கும் உணர்வு, பகைவர் நாட்டைக் கொள்ளும் உணர்வாகிய 'உடைமை' என்ற மெய்ப்பாட்டுணர்வு கொண்டவராகவும் 'ஆரற்றுதல்' என்னும் மெய்ப்பாடும், யாதானும் ஒருவருக்காகச் செயல்படாமல் பொதுவாகச் செயல்படும் உணர்வாகிய 'நடுவுநிலைமை' என்னும் மெய்ப்பாட்டுணர்வு கொண்டவராகவும் – குடிகோள் (கீழ்வாரை நலிதல்) என்னும் மெய்ப்பாட்டுணர்வு கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.

**வஞ்சித் திணை ஆடவர் பின்வரும் உணர்வுநிலைப் பட்டவராகக் காணப்படுகின்றனர்.**

- அரசர் குடிப்புகழ் காக்க, கோல் கோடாமல் ஆட்சி செய்யும் உணர்வினர். (புறம். 45).
- வஞ்சினம் கொண்டு பகைவரின் ஊரினை எரிக்கும் உணர்வு கொண்டவர். (புறம். 7)
- மண்ணாசையால் உறவை மறந்து தமது வஞ்சினத்தை நிலைநாட்டும் பண்பினர் (புறம். 213)
- அடங்கா வெகுளி கொண்டு போரிட்டாலும் அறவழியில் போர்புரியும் அற உணர்வினர். (புறம். 56)
- பிறருக்கு அறிவூட்டுபவராக ஆடவர் திகழ்ந்தனர். (புறம். 56)
- புலவரின் அறிவுரைக்கு பணியும் உணர்வு கொண்டவர். (புறம். 45, 213.)

- புலவர்கள் இடித்துரைத்து நல் வழிப்படுத்தும் அற உணர்வுகொண்டவர். (புறம். 36)
- புலவர்கள் இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்ற நல்லறத்தை வேந்தர்க்கு எடுத்துரைக்கும் மறவுணர்வு கொண்டவர் (புறம். 213)

**ஈ. காஞ்சித் திணையில் வெளிப்படும் ஆடவரின் மனஉணர்வுகள்**

காஞ்சித் திணையில் போர்க்களத்தில் இறவாமல் இயல்பாக இறந்துபட்டோரின் இழவும், அதற்குரிய வருத்தமும் பேசப்படுகின்றன. காஞ்சித்திணை பெருந்திணைக்குப் புறனாவது. பல நெறியாலும் நில்லா உலகத்தைப் பொருந்திய நெறியை மொழிவது இதன் இலக்கணமென்பர். காஞ்சித் திணையில் வஞ்சினக் காஞ்சி, மகட்பாற் காஞ்சி ஆகிய இருதுறைகளைத் தவிர ஏனையவை இழவைப் பற்றியது. இதனை,

**"பலர்செல செல்லாக் காடு வாழ்த்தொடு**
**நிறையறஞ் சிறப்பின் துறையிரண் டுடைத்தே"** (தொல்.புறத்.நூ.24,ப. 39)

என்ற நூற்பாவின் மூலம் அறியலாம். இவற்றில் பெருங்காஞ்சி, முதுகாஞ்சி, மறக்காஞ்சி, பேய்க்காஞ்சி, மன்னைக் காஞ்சி, வஞ்சினக் காஞ்சி, தொடாக் காஞ்சி, ஆஞ்சிக் காஞ்சி, மகட்பாற்காஞ்சி, தலையொடு முடிதல் ஆகிய பத்தும் போர்ப்பண்பு மிக்க அரசர்க்கும் வீரர்க்கும் உரிய துறைகளாகும். இங்கு இழவு குறித்து அழுகையை காண்பதரிது. உயிர் இழப்பதற்கு அஞ்சாது போர் விருப்பம் மிகுதியுடைய அரசரையும், அவரைச் சார்ந்த வீரரையும் இப்பகுதியில் காண முடிகின்றது. இளமை நிலையாமை, யாக்கை நிலையாமை, செல்வ நிலையாமை ஆகிய நிலையாமைகளைப் பாடுவதே இத்திணையின் நோக்கம். இதனை,

**"பாங்கருஞ் சிறப்பின் பல்லாற் றானும்**
**நில்லா வுலகம் புல்லிய நெறித்தே"** (தொல். புறத். நூ. 23, ப. 37)

என்ற நூற்பா உணர்த்துகின்றது. போருக்குச் செல்லும் முன் வேந்தரும், வீரரும் வஞ்சினம் உரைத்தல் மரபு. வேந்தர் உரைக்கும் வஞ்சினம் படைவீரர்களை ஊக்கப்படுத்தி, சிறந்த முறையில் போரிடச் செய்யும். தாம் எண்ணிய இலக்கை அடைவதற்கும், உள்ளத்தின் உறுதி குலையாமல் இருப்பதற்கும் வஞ்சினம் பயன்பட்டது. வேந்தர் உரைக்கும் வஞ்சினத்தை,

**"இன்னது பிழைப்பின் இதுவாகிய ரெனத்**
**துன்னருஞ் சிறப்பின வஞ்சினத்தானும்"** (தொல்.புறத்.நூ.24:8-9, ப. 38)

என்பர் தொல்காப்பியர். இவ்வஞ்சினம் வேந்தர்களின் பண்பு நலனையும் ஒழுக்க மேம்பாட்டினையும், வேட்கையினையும், வெளிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளன. புறநானூற்றில் வஞ்சினக் காஞ்சி எனும் துறையில் ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன், சோழன் நலங்கிள்ளி

போன்றோர் வஞ்சினம் உரைத்துள்ளனர். ஒல்லையூர் தந்த பூதப்பாண்டியன், சிங்கம் போன்று சினங்கொண்டு தணியா உள்ளமுடைய அளவறிந்த படையை உடைய வேந்தர்கள் கூடி தன்னிடம் போரிட வருவர் என்று வஞ்சினம் உரைக்கின்றான். தனது படை வலிமையால், வீரத்தால் பகைவரை புறமுதுகிட்டு ஓடச் செய்யாவிடில் தன் மனைவியைப் பிரிவேன் என்றும், அறநெறி மாறாத அன்புடையோர்க்குரிய அவையில் தகுதி இல்லாத ஒருவனை அமர்த்தி முறைகெட்டு கொடுங்கோல் ஆட்சி செய்தவன் ஆவேன் என்றும், ஆத்தை, அந்துவஞ்சாத்தன், ஆதன் அழிசி, இயக்கன் என்ற தன் கண்ணைப் போல் போற்றிப் பழகும் நண்பர்களுடன் நட்பு பாராட்டும் நலம் இழந்த வனாவேன் என்றும்,

> **"மன்பதை காக்கும் நீள்குடிச் சிறந்த1:1**
> **தென்புலம் காவலின் ஒரீஇப்பிறர்**
> **வன்புலம் காவலின் மாறியான் பிறக்கே"** (புறம். 71:17-19, ப. 181)

என்றும் வஞ்சினம் உரைக்கும் வேந்தன், தனது வீர உணர்வால் உடல், மன வலிமையால் பகைவரை வெல்ல முடிய வில்லையெனில் அவன் இன்பமாய் வாழ்ந்துவரும் வாழ்வினை இழந்து வருந்தும் நிலைக்கு தள்ளப்படுவான் என்பதை எடுத்துரைகின்றான். போரில் தோற்றால் நாணும் உணர்வினைக் கொண்டவராகவும் தன்னிலை கண்டு தானே இகழும் உணர்வினராகவும் திகழ்ந்தனர். இங்கு இழத்தல் எனும் 'இழவு' மெய்ப்பாட்டு உணர்வும், 'நாணல்' என்னும் மெய்ப்பாட்டுணர்வும் கொண்டிருந்தனர் என்பதை அறிய முடிகிறது.

தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியன் தனது வலிமைக்கு அஞ்சாமல் பகைசீற்றம் கொண்டு வரும் பகைவேந்தரை சிதறி ஓடுமாறு போரிட்டு அவர் முரசத்துடன் சிறைப்படுத்துவேன் என்று வஞ்சினம் உரைக்கிறான். இதனை 'முரசமொடு'

> **"ஒருங்கு அகப்படேஎன் ஆயின் பொருந்திய**
> **என்நிழல் வாழ்நர் செல்நிழல் காணாது**
> **கொடியன் எம் இறையெனக் கண்ணீர் பரப்பிக்**
> **குடிபழி தூற்றும் கோலேன் ஆகுக"** (புறம்.72 : 9-12,ப.183

என்றும்,

> **"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி**
> **மாங்குடி மருதன் தலைவன் ஆக**
> **உலகமொடு நிலைஇய பலர்புகழ் சிறப்பிற்**
> **புலவர் பாடாது வரைக என் நிலவரை"** (புறம்.72 :13-16,ப.183)

என்றும் வஞ்சினம் உரைக்கின்றான். என் நாட்டு மக்கள் தன்னைக் கொடுங்கோலன் என்று கூறி கண்ணீர் வடித்துப் பழிக்கும் நிலைக்கு ஆளாவேன்; உயர்ந்த சிறப்பும் மேலான கேள்வி அறிவும் உடைய புலவர்கள் தன்னையும் தன்நாட்டின் பெருமையையும் பாடாத நிலையையும் அடைவேன் என்றும்,

> ''புரப்போர் புன்கண் கூர
> இரப்போர்க்கு ஈயா இன்மையான் உறவே'' (புறம்.72 : 17-18, ப,183)

என்று தன்னிடம் இரப்பவர்க்கு உதவ முடியாத வறுமை நிலைக்குத் தள்ளப்படுவேன் என்றும் தன்னிலைத் தாழும் நிலையைக் கூறி அவ்வாறு நிகழாவண்ணம் பகைவரிடம் போரிட்டு தன் மக்களையும், புலவர்களையும், செல்வத்தையும் காக்கும் பொறுப்பும் கடமையுணர்வும் கொண்டவனாகக் காணப்படுகின்றான். பகைவரை வெல்லும் வீரஉணர்வும் உடல் திண்மையும் கொண்டவராகத் திகழ்ந்தான் என்பதை அறிய முடிகிறது. இதன்மூலம் மக்களின் தூற்றுதலுக்கு அஞ்சுகின்ற அச்ச உணர்வும், புலவரின் போற்றுதலை விரும்பும் 'இசைமை' மெய்ப்பாட்டு உணர்வும் கொண்டு விளங்குகின்றான். சமுதாயத் துலங்கலை வேண்டும் ஆடவரின் உள்ளத்தின் இரு நிலைகளை வெளிப்படுத்துகின்றது.

சோழன் நலங்கிள்ளி வஞ்சினமுரைக்கும்போது அவனின் பண்புநலன்கள் வெளிப்படுவதை,

> ''மெல்ல வந்துஎன் நல்அடி பொருந்தி
> ஈ என இரக்குவர் ஆயின் சீருடை
> முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம்
> இன்னுயிர் ஆயினும் கொடுக்குவென்''புறம்.73 :1-4,ப.184)

என்று தன்னிடம் தஞ்சமாக வந்து கொடு என இரப்பவர்க்குத் தன்னுயிரையும் கொடுப்பேன் என்றும் அவ்வாறு இல்லாமல் தனது திறத்தை மதியாமல் தனது வலிமையை இகழும் அறிவில்லாதோன் உறங்கும் புலிமேல் காலிடறி வீழ்ந்த பார்வையற்றவன் போலத் தப்பிப் போக முடியாது. அவன் வருந்துமாறு அவனிடம் போரிட்டு அவனது செருக்கை அடக்கவில்லை எனில்,

> ''........................ பொருந்திய
> தீதில் நெஞ்சத்துக் காதல் கொள்ளாப்
> பல்இருங் கூந்தல் மகளிர்
> ஒல்லா முயக்கிடைக் குழைக என்தாரே'' புறம்.73 : 11-15,ப.184)

என்று வஞ்சினம் உரைக்கின்றான். இதன் மூலம் சோழன் நலங்கிள்ளி இரப்பவர்க்குத் தன்னுயிரைக் கொடுக்கும் பண்பினன் என்பதும் தன்னை இகழ்ந்து போரிடும் பகைவரை வென்று தன் வீரத்தை நிலை நாட்டும் மனத்திண்மை உடையவன் என்பதையும் அறிய முடிகிறது. பரத்தையரை நாடுவது இயல்பாக இருந்த சங்க காலச் சமூகத்தில் அதனை இகழ்ச்சிக்குரியதாக எண்ணும் சோழன் நலங்கிள்ளியின் மன உணர்வினையும் இங்கு தமக்கு பழிவருவனச் செய்யாமையாகிய நாணல் எனும் மெய்ப்பாட்டு உணர்வினை கொண்ட மன்னனைக் காணமுடிகிறது.

மறக்குடி தலைவனது மகளை மணம்முடிக்க எண்ணிய தலைவன், மகட்கொடை மறுப்பால் போர் தொடங்கும் சூழலில் மணமா மரணமா என்னும் இருநிலைகளில் மனம் செயல்படுகிறது. இதனை,

**“சணங்கணி வனமுலை அவளொடு நாளை**
**மணம்புகு வைகல் ஆகுதல் ஒன்றோ**
**ஆரமர் உழக்கிய மறங்கிளர் முன்பின்**
**நீளிலை எஃகம் அறுத்த உடம்பொடு**
**வாரா உலகம் புகுதல் ஒன்று”** (புறம்.341 : 10-15,ப.485)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் போரில் வென்றால் மறக்குடி தலைவியொடு மணம், தோற்றால் மறப்பெருமை வெளிப்பட மரணம் என்ற இருநிலைகளில் இயங்குவதை உணரலாம்.

இங்ஙனம் வஞ்சினமுரைக்கும் வேந்தர்கள் தங்களது பண்பு நலன்களும், நாட்டு வளத்தையும், இன்பமான வாழ்வையும் எடுத்துக்கூறி பகைவரிடம் தோற்றால் அத்தகைய நிலையை இழந்து வருந்தும் நாணம், நாட்டுப்பற்று, பொறுப்பு, மானம் போன்றவற்றைக் காக்கும் உணர்வினராகத் திகழ்ந்ததைக் காண முடிகின்றது. இங்கு இழத்தலாகிய ‘இளிவரல்’ மெய்ப்பாடும், நாட்டுப்பற்று, பொறுப்பு, மானம் போன்றவற்றைக் காக்கும் ‘பெருமித’ மெய்ப்பாடும் வெளிப்படுகிறது.

காஞ்சித் திணையில் ஆடவர், இழத்தலாகிய உணர்வைக் கொண்ட அழுகை மெய்ப்பாட்டு உணர்வும், ‘இசைமை’ ‘கொடை’ உணர்வால் வரும் பெருமித மெய்ப்பாட்டுணர்வும், அணங்கினால் வரும் அச்ச மெய்ப்பாட்டுணர்வும் தவிப்புணர்வினால் வரும் ‘இளிவரல்’ மெய்ப்பாட்டுணர்வும், பழிவரும் செயல்களைச் செய்ய நாணும் உணர்வு – ‘நாணல்’ என்னும் மெய்ப்பாட்டு உணர்வு கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.

**காஞ்சித்திணை ஆடவர் பின்வரும் உணர்வுநிலைப் பட்டவராகக் காணப்படுகின்றனர்.**

- வஞ்சினம் மூலம் வேந்தர்களின் பண்புநலன்களையும் ஒழுக்க உணர்வு வேட்கை, உணர்வினை வெளிப்படுத்தும் உணர்வினர். (புறம். 71,72,73)
- போரில் தோற்றால் நாணும் உணர்வினர் (புறம். 71)
- தன்னிடம் தஞ்சம் என வந்து இரப்பவர்க்கு தன்னுயிரையும் கொடுக்கும் உணர்வினர். (புறம். 73)
- தன்னை மதியாமல் இகழ்பவரை போரிட்டு அவனது செருக்கை அழிக்கும் உணர்வினர். (புறம். 73)

**உ. உழிஞைத் திணை**

உழிஞைத் திணை, என்பது முழுமுதல் அரணம் முற்றல், கோடல் போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டது. உழிஞைத் திணை மருதத்திற்கு புறனாக அமைகின்றது. இருபக்க வேந்தர் கலந்து கொள்ளும் போர் உழிஞைத்திணைப் போர். உழிஞையில் கோட்டையை முற்றியோன் புறத்திருக்கவும், கோட்டையான் அகத்திருக்கவும், போர்க்குரிய நாள், பொழுது, நிமித்தம் போன்ற நம்பிக்கைகள் இடம்பெற்றுள்ளன. "மனித வாழ்வின் தொடக்கத்திலிருந்தே, இத்தகைய நம்பிக்கைகள் தொடர்ந்து வருவன என்றும் மக்கள் வாழ்வோடு ஒன்றிப் போயின என்றும் ஆய்வறிஞர் கருதுவர்." [23]

**பதிற்றுப்பத்து**

உழிஞைத் திணையின் நிலைக்களனான கோட்டையை முற்றுகையிட்டு பகைவர்களை வென்று துணங்கை கூத்து ஆடுவர், வெற்றிக் களிப்பில், படைவீரர்கள் கெட்டோட, பகையரசர்கள் போர்க்களத்தில் இறந்துபடுமாறு கொன்று, தோள் உயர்த்தி ஆடிய, வென்று ஆடும் துணங்கை ஆட்டமுடையவராய் உழிஞைத்திணை ஆடவர் காணப்படுகின்றனர். மகள் மறுத்தல் எனும் துறைசார்ந்த நொச்சித் திணைப்பாடல்கள் புறத்தில் பாரியின் வீரத்தை, வலிமையை, அஞ்சா நெஞ்சத்தைப் பறைசாற்றுகின்றன. புறநானூற்றில் இடம் பெற்றுள்ள (109,110,111) மூன்று பாடல்களும் பாரியின் வலிமையையும் அவனது கொடை மற்றும் இரக்க உணர்வையும் படம் பிடித்துக் காட்டியுள்ளன. நடுக்குதல் மிக்க முரசையுடைய மூவேந்தர் முற்றுகை இட்டாலும் உழவர் உழாமல் தரும் நான்கு விளைவுகளையுடைய வளமான பறம்பு மலையை, ஆங்குள்ள மரங்கள் தோறும் யானையைக் கட்டுவீர் என்றாலும், இடமெல்லாம் தேரினை நிறுத்துவீர் என்றாலும் உங்கள் வலிமையால் பாரியிடம் போரிட்டும் பெறமுடியாது என்று கபிலர் குறிப்பிடுவதிலிருந்து அறிய முடிகிறது. இதனை,

> **''மரந்தொறும் பிணித்த களிற்றினர் ஆயினும்**
> **புலந்தொறும் பரப்பிய தேரினிர் ஆயினும்**
> **தாளில் கொள்ளலிர்; வாளில் தாரலன்;''** **(புறம்.109 : 11-13,ப.220)**

என்றும், வீர உணர்வுடன் இருந்ததை,

> **''மன்பதை பெயர. அரசுகளத்து ஒழியக்**
> **கொன்றுதோள் ஓச்சிய வென்றுஆடு துணங்கை''** **(பதிற்று.77 : 3-4,ப.274)**

என்ற பாடல்வரிகள் மூலம் உணரலாம். இதில் சேர மன்னன் மற்றும் படைவீரர்கள் அனைவரும் வீரஉணர்வும், நாட்டை வெல்லும் வேட்கை உணர்வும் கொண்டு விளங்கியதையும் அறியமுடிகிறது. மேலும் வஞ்சினங் கொண்ட 'வெகுளி' மெய்ப்பாட்டு உணர்வும் 'உடைமை' எனும் மெய்ப்பாட்டுணர்வும் கொண்டு விளங்கியதை அறியமுடிகிறது.

உழிஞைத்திணையில் ஆடவர், நாட்டைக் கைப்பற்ற போர் புரியும் வீர உணர்வும், 'உடைமை' எனும் மெய்ப்பாட்டுணர்வும் கொண்டு உடைமையை அடையத்துடிக்கும், வெகுண்டு எழும் 'வெகுளி' மெய்ப்பாட்டு உணர்வினராகக் காணப்படுகின்றனர்.

**உழிஞைத் திணை ஆடவர் பின்வரும் உணர்வுநிலைப் பட்டவராகக் காணப்படுகின்றனர்.**

- நாட்டை வெல்லும் வேட்கை உணர்வும், வீர உணர்வும் கொண்டவர். (பதிற்று. 77)

**ஊ. நொச்சித்திணையில் வெளிப்படும் ஆடவரின் மனஉணர்வுகள்**

கோட்டையை முற்றுகையிடத் துணியும் உழிஞைத் திணையாரிடமிருந்து கோட்டையைக் காக்க போர் புரிவது நொச்சித்திணையாகும். உழிஞை வீரரால் வளைக்கப்பட்ட அகத்தலைவன் இறந்து பட்டதைக் கூறுவது நொச்சித்திணையைச் சார்ந்ததாகும். போரில் ஒரு மறவன் அணிந்திருந்த நொச்சி மாலை அவன் பகைவர் வாளால் வெட்டுண்டு வீழ்ந்தபோது அறுப்புண்டு அவன் குருதியிற் படிந்து உருமாறிப் போயிற்று, இதனை,

**''காப்புடைப் புரிசை புக்குமாறு அழித்தலின்**
**ஊர்ப்புறங் கொடாஅ நெடுந்தகை**
**பீடுகெழு சென்னிக் கிழமையும் நினதே''** (புறம். 272:6-8, ப. 413)

என்ற பாடலடிகளும்,

**''வெருவரு குருதியொடு மயங்கி உருவுகரந்து**
**ஒறுவாய் பட்ட தெரியல் ஊன்செத்துப்**
**பருந்து கொண்டு உகப்பயாம் கண்டனம்,**
**மறம்புகல் மைந்தன் மலைந்த மாறே''** (புறம். 271:50-9, ப. 413)

என்ற பாடலடிகளும் நொச்சிமாலை அணிந்து போரிட்ட வீரர்களின் வீர உணர்வை வெளிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளன. இங்கு 'உறுப்பறை' என்னும் 'வெகுளி' மெய்ப்பாட்டு உணர்வு வெளிப்படுகிறது. எட்டுத் தொகை ஆடவர் வீர உணர்வு மேலோங்கியவர் என்பதை பறைசாற்றும் வகையில் இப்பாடலடிகள் இடம்பெற்றுள்ளன.

**''கடந்தடு தானை மூவிரும் கூடி**
**உடற்றினிர் ஆயினும் பறம்புகொளற் கரிதே''** (புறம். 110:1-2, ப. 221)

**''வேலின் வேறல் வேந்தர்க்கு அரிதே;''** (புறம். 111:2, ப. 222)

என்ற பாடலடிகள் மூலம் பாரியின் வீரத்தை, போரில் வெல்ல முடியாத வரிமையைக் காணமுடிகிறது. பாரியின் வீரஉணர்வை புலப்படுத்தும் இப்பாடலிலேயே அவனது

வளம்மிக்க பறம்புமலையைப் பெறவேண்டுமானால், பதமாகக் கட்டப்பட்ட நரம்பினையுடையை சிறிய யாழை மீட்டிக் கொண்டு, மணமிக்க நீண்ட கூந்தலையுடைய விறலியர் ஆடியும் பாடியும் சென்றால் பறம்பு மலையையும் நாட்டையும் மொத்தமாக வழங்கும் கொடை உணர்வு நிரம்பியவன். இரவலர்க்கு ஈயும் ஈகையுணர்வு கொண்டவன் என்பதை,

**''கிர்புரி நரம்பின் சீறியாழ் பண்ணி,**
**விரையொலி கூந்தல்நும் விறலியர் பின்வர,**
**ஆடினிர் பாடினிர் செலினே**
**நாடும் குன்றும் ஒருங்கீ யும்மே''** (புறம்.109 : 15-19,ப.220)

என்ற பாடலடிகளும்,

**''குன்றும் உண்டுநீர் பாடினிர் செலினே''** (புறம்.110 : 6,ப.221)

**''நீலத்து இணைமலர் புரையும் உண்கண்**
**கிணைமகட்கு எளிதால் பாடினள் வரினே''** (புறம்.111:3-4, ப. 222)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் பாரி மன்னன் இரவலராக வருபவர்க்கு இரக்க உணர்வுடன் தன் நாடு, மலையைக் கொடையாக அளிக்கவல்லவன் எனினும் போர் எனும்போது தனது வீரஉணர்வை வெளிப்படுத்தித் தனது நாடு, மலையைத் தக்க வைத்துக் கொள்ளும் உரமுடைய நெஞ்சுடையவன் என்பதையும் பாரியின் வீரத்தை விஞ்சும் வியன்கலை (இசை) உணர்வால் நாட்டை ஈயத்துணியும் துணிவுணர்வு கொண்டவன் என்பதையும் அறியமுடிகிறது. இத்தகைய மன்னர்களின் ஈகை மற்றும் துணிவுணர்வினை புறம், **110**, **111**, **299** பாடல்களிலும் காணப்படுவதை அறியமுடிகிறது. மேற்குறிப்பிட்ட பாடல்களில் தன்னை எளியன் ஆகும். 'இளிவு' என்னும் மெய்ப்பாடும் ஈகையினால் வரும் கொடை எனும் பெருமிதம் மெய்ப்பாடும் வெளிப்படுவதை அறியமுடிகிறது.

நொச்சித் திணையில் ஆடவர், பகைவரின் உடலுறுப்புக்களைச் சினத்தினால் அறுக்கும் உறுப்பறை எனும் வெகுளி மெய்ப்பாட்டுணர்வு கொண்டும் பகைவர்களை எளியனாக்கி இழிவுபடுத்தும் உணர்வினால் இளிவென்றும் அழுகை மெய்ப்பாட்டுணர்வு கொண்டும், பொருள்களை இரந்தவர்களுக்கும, பகை மன்னர்களை மன்னித்தும் அளிக்கும் கொடை உணர்வால் பெருமித மெய்ப்பாடும் கொண்டு விளங்குகின்றனர்.

**நொச்சித் திணை ஆடவர் பின்வரும் உணர்வுநிலைப் பட்டவராகக் காணப்படுகின்றனர்.**

- வீர உணர்வும், அஞ்சாநெஞ்சமும் கொண்டவர். (புறம். **109,110,111**)
- இரவலர்க்கு ஈயும் ஈகையுணர்வு கொண்டவர். (புறம். **109**)
- வீரத்தை விஞ்சும் வியன் கலையுணர்வு கொண்டவர். கலைக்காக நாட்டையும் ஈயத் துணியும் துணிவுணர்வு கொண்டவர். (புறம். **109**)

**எ. தும்பைத் திணையில் வெளிப்படும் ஆடவரின் மனஉணர்வுகள்**

தும்பைத் திணை நெய்தல் என்னும் அகத்திணைக்குப் புறனாய் அமைவது. மைந்து பொருளாக வந்த வேந்தனைச் சென்று தலையழிக்கும் செய்கையைக் கூறுவதாகும். கண்டார்க்கு அச்சஞ் தருகின்ற இப்போர்த்திணையின் செயலைத் தனி நூற்பாவில்,

**''கணையும் வேலும் துணையுறமொய்த்தலின்**
**சென்ற உயிரின் நின்ற யாக்கை**
**இருநிலந் தீண்டா அருநிலை வகையொடு**
**இருபாற் பட்ட ஒருசிறப் பின்றே''** (தொல்.புறத்.நூ.16, ப.33)

என்று தொல்காப்பியர் குறிப்பிட்டுள்ளார். இத்தும்பைத்திணைப் போரின் மிகக்கடுமையான உச்சநிலை எனலாம். களரும் மணலும் பரந்த நெய்தற் பெருவெளியாகி செருக்கி வந்த வேந்தனைச் சென்றழித்தலை இத்திணை வலியுறுத்துகிறது. இத்தும்பைத் திணை, தனிமனித வீரத்தைப் புகழ்வதாக அமைகின்றது என்பதை சங்கப்பாடல்கள்மூலம் அறியலாம். வேந்தர்களின் தலைமையிலும், வீரர்களின் தனித்த பேராற்றலே சிறப்பாகப் போற்றப்படுமாறு,

**''வேல்மிகு வேந்தனை மொய்த்தவழி ஒருவன்**
**தான் மீண்டு எறிந்த தார்நிலை''** (தொல்.புறத்.நூ.17:3-4, ப. 34)

**''ஒருவன் ஒருவனை உடைபடைபுக்குக்**
**கூழை தாங்கிய பெருமை''** (தொல்.புறத்.நூ.17:6-9, ப. 34)

**''செருவகத்து இறைவன் வீழ்வுறச் சினைஇ**
**ஒருவனை மண்டிய நல்லிசை நிலை''** தொல்.புறத்.நூ.17:14-15, ப. 34)

**''ஒள்வாள் வீசிய நூழில்''** (தொல். புறத். நூ. 17:17, ப. 34)

என்ற தொல்காப்பிய நூற்பா மூலம் அறியலாம். இந்நூற்பாக்கள் தனிமனிதனின் வீர ஆற்றலை வெளிப்படுத்தும் துறைகளாக அமைந்துள்ளன.

தமர் இறந்துபடின் அஞ்சிப் பெயர்தலும் போரை வெறுத்தலுமில்லாத சமூகம், போர்ச் சாவை மிக விரும்பித் தொடர்ந்து போர் புரிந்த நிலையையும், போரில் உயிர் நீத்தலின் வழியே பெரும்பெயர் உலகத்தை எய்தல் வேண்டும் என்ற அவாவின் அடிப்படையிலும் எட்டுத் தொகை ஆடவர் இருந்ததை இத்தும்பைத் திணைப் பாடல்கள் மூலம் அறியலாம். புறநானூற்றில் எருமை மறம் கூறும் மூன்று பாக்கள் உள்ளன.'[25] சோழன் முக்காவல் நாட்டு ஆமூர் மல்லனை பொருது நின்ற திறத்தை,

**''இன்கடும் கள்ளின் ஆமூர் ஆங்கண்**
**மைந்துடை மல்லன் மதவலி முருக்கி**
**ஒருகால் மார்பு ஒதுங்கின்றே; ஒருகால்**
**வருதார் தாங்கிப் பின்ஒதுங் கின்றே;''** (புறம். 80:1-4, ப. 192)

என்று குறிப்பிடுவதிலிருந்து அறிய முடிகிறது. இதில் ஆமூரில் வலிமை மிகுந்த மற்போராளனின் மிக்க வலிமையைத் தொலைத்து, ஒருகால் மார்பில் அழுத்தியது; மற்றொரு கால் அவன் செய்யும் சூழ்ச்சியை அழித்து முதுகுப்பக்கம் அழுத்தியது போரில் வல்ல தித்தன் விரும்பினாலும் விரும்பாவிடினும் இதைக் காண்பானாக என்று,

**"இருதலை ஓசிய ஏற்றிக்**
**களம்புகு மல்லற் கடந்தடு நிலையே''** (புறம். 80:7-8, ப. 192)

என்று, பசிமிக்கு மூங்கிலைத் தின்னும் யானைபோலக் காலும் தலையும் வளைத்துத் தாக்கிக் களரியில் புகுந்த மள்ளனின் வீரத்தை, இப்பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன. இதில் ஆடவரின் வீர உணர்வும், கோப உணர்வும் வெளிப்படுவதை உணர முடிகிறது.

போரின் கண் மறவன் ஒருவன் இடையில் கச்சையால் இறுக்கிய உடையும் தலையில் மயிற்பீலியால் தொடுக்கப்பட்ட கண்ணியும் உடையனாய், வேலேந்தி நின்று கடும்போர் புரிந்தான். அப்போது அவன்மேல், பெரிய களிறொன்று அடக்க வந்தது. உடனே அவன் தன் கை வேலைக் களிற்றின் நெற்றியில் பாய்ச்சினான். வேல்பட்ட யானை வீழ்ந்துபட்டது. இதற்கிடையில் பகைவர் பலர் பொராது வேலேந்தி அவன்பக்கம் வந்தனர். அவனோ அவர்தம் வேல் எறிதலை முறித்தான்; அவர்தம் தலைவனையும் தோளுறப் பற்றினான்; நிலத்தில் மோதினான். அவன் உயிர்போக்கி, உடலைத் தூக்கி நின்றான். இத்தகைய எட்டுத்தொகை ஆடவர் போரில் சிறந்து வீர உணர்வு கொண்டவராக விளங்கினாலும் போரில் பெருந்தன்மை கொண்டவராகவும் விளங்கியதை,

**''நீலக் கச்சைப் பூவார் ஆடைப்**
**பீலிக் கண்ணிப் பெருந்தகை மறவன்**
**மேல்வரும் களிற்றொடு வேல்துரந் தினியே**
**தன்னும் துரக்குவன் போலும்; ஒன்னலர்**
**எஃகுடை வலத்தர் மாவொடு பரத்தரக்**
**கையில் வாங்கித் தழீஇ**
**மொய்ம்பின் ஊக்கி மெய்க் கொண் டனனே''** (புறம். 274:1-7, ப. 415)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. போர்க்களத்தில் பெரிய போரைச் செய்யும் மறவன் ஒருவன், தன் தோழன் பிறிதொரு புறத்தே பகைவர் வளைத்துக் கொள்ள அவர் நடுவே நின்று பொருவது கண்டான். உடனே அதற்குத் துணை செய்யக் கருதி, நெடிய வேலைக் கையில் ஏந்திக் கொண்டு விரைந்து சென்றான். கன்றை விரும்பும் பசுவைப் போல விரைந்தான். விரைந்தவன் கால்கள் சங்கிலி பூட்டல் போலப் பின்னின. பகைவர், அவனைத் தடுத்தனர். அத்தடையைத் தாண்டி நண்பனின் இருப்பிடம் அடைந்து நண்பனுக்கு உதவும் உணர்வு கொண்டு விளங்கியதை,

**“தொடர்கொள் யானையிற் குடர்கால் தட்பக்**
**கன்றமர் கறவை மான**
**முன்சமத்து எதிர்ந்ததன் தோழற்கு வருமே’’** (புறம். 275:7-9, ப. 416)

என்ற பாடலடிகள் எட்டுத்தொகை ஆடவரின், நட்புணர்வை, வீரஉணர்வை வெளிப்படுத்துகின்றன. இதில் ‘பெருமிதம்’ என்னும் மெய்ப்பாடு வெளிப்படுவதை உணரலாம்.

புறநானூற்றில் தும்பைத் திணை சார்ந்த களிற்றுடனிலை (புறம் 307) தொகைநிலை (62,63), நூழிலாட்டு (309,310), தானைமறம் (87, 88, 89, 90, 294, 300, 301), குதிரை மறம் (273,302,303,304), உவகை கலுழ்ச்சி (277,278,295); பாண் பாட்டு (283,284,311) மூதின் முல்லை (288) போன்ற துறைகள் இடம் பெற்றுள்ளன.

புறநானூற்றில் அரசர்கள், போர் புரியும் வீர உணர்வுடனும், களிறு, குதிரை போன்ற வலிமை மிகுந்த படைகளும் பெற்று விளங்கினர். வலிமை மிகுந்த யானைகளையுடைய வேந்தராக இருப்பினும் பகைவரிடம் போரிட்டு மடிவதைப் பெருமையாகக் கருதினர். இதனை,

**‘‘வெஞ்சின யானை வேந்தனும் இக்களத்து**
**எஞ்சலிற் சிறந்தது பிறிதொன்று இல்லெனப்**
**பண்கொளற் குஅருமை நோக்கி**
**நெஞ்சற வீழ்ந்த புனரமை யோனே’’** (புறம். 307:11-14, ப. 447)

என்று குறிப்பிடுவதில் அரசர்கள் உயிர்மேல் பற்றில்லாமல் நாட்டைக் காக்கும் உணர்வுடன் தன் உயிரை இழக்கத் துணியும் துணிவுணர்வு பெற்று ‘பெருமிதம்’ மெய்ப்பாட்டுணர்வுடன் விளங்கியதை உணர முடிகின்றது.

சேரலாதனும், கிள்ளியும் போர்ப்புறத்துப் பொருது வீழ்ந்தபோது, இனி போர் புரிதலும் படையைத் தலைமை தாங்குதலும் இன்றி இருக்கும் நிலையை தொகைநிலை என்பர். இத்தொகை நிலையை,

**“......... தானையொடு செருமுனிந்து**
**அறத்தின் மண்டிய மறப்போர் வேந்தர்**
**தாம்மாய்ந் தனரே; குடைதுளங் கினவே;**
**பன்னூறு அடுக்கிய வேறுபடு பைஞ்ஞீலம்**
**இடம்கெட ஈண்டிய வியன்கண் பாசறைக்**
**களம் கொளற்கு உரியோர் இன்றித் தெறுவர**
**உடன்வீழ்ந் தன்றால் அமரே’’** (புறம். 62:4-12, ப. 169)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் அறநெறியில் போர்புரிந்த இரு வேந்தரும் இறந்தனர். அவர்கள் குடைகள் கவிழ்ந்து முரசுகள் முழக்கப்படா நிலையில் உள்ளன. இரு வேந்தரும், நாட்டுப்பற்றுணர்வால் போரிட்டு தங்கள் உயிரைக் கொடுக்கும் துணிவுள்ளம் கொண்டோராய் வாழ்ந்து இறந்ததை அறிய முடிகிறது. இத்தகைய போர்க்கக் காட்சியினை புறம் – 63வது பாடலிலும் காண முடிகின்றது.

மன்னர்கள் போர்புரியும் போது பிறரினும் தம் மன்னர், தம் தலைவன் உயர்ந்தவன் என்பதைக் குறிப்பிடுவது நூழிலாட்டுத் துறையாகும். இத்துறையில் புறம் 309,310 போன்ற பாடல்களில் உள்ளன. வெற்றிமிக்க ஒப்பில்லாப் பெருமை மிக்க தன் தலைவனைப் பற்றி,

**''இரும்புமுகம் சிதைய நூறி ஒன்னார்**
**இருஞ்சமம் கடத்தல் ஏனோர்க்கும் எளிதே;**
**நல்அரா உறையும் புற்றம் போலவும்**
**கொல்ஏறு திரிதரும் மன்றம் போலவும்**
**மாற்றரும் துப்பின் மாற்றோர் பாசறை**
**உளன்என வெரூஉம் ஓர்ஒளி**
**வலன்உயர் நெடுவேல் என்னைகண் ணதுவே''** (புறம். 309:1-7, ப. 449)

என்று குறிப்பிடுவதில், படைக்கலங்களின் கூர்மழுங்கி ஒடியுமாறு பகைவரை அழித்துப் போரில் வெல்லுதல் அனைத்து வீரர்களாலும் முடியும். ஆனால் அஞ்சும் ஒப்பிலாப் பெருமை, வெற்றிமிக்க நெடிய வேலையுடையவன் எம் தலைவன் நல்ல பாம்பு குடியிருக்கும் புற்று போல, கண்டாரைக் கொல்லும் காளை திரியும் மன்றம் போலவும் வெல்லுதற்கு அரிய வலிமையமைந்த பகைவர் பாசறையிலே உள்ளான் என்று கேட்டேன் என்பதன் மூலம் அஞ்சாமல் பகைவரை அவர்கள் பாசறையிலேயே சென்று தாக்கும் தலைவன் வீர உணர்வு, போர் புரியும் வலிமையும் அஞ்சா நெஞ்சமும் உடையவன் என்பதோடு 'தறுகண்மை', 'இசைமை' என்னும் பெருமித மெய்ப்பாட்டுணர்வும் கொண்டிருந்ததையும் அறிய முடிகிறது.

வீரமறவரின் மகன், இளமையில் பாலைக் கொண்டு ஊட்டவும் உண்ணான்; ஆகவே சினம் கொள்ளாமல் சினந்தாற்போல் ஓங்கிய சிறிய கோலுக்கு அஞ்சி உண்டவன், இப்பொழுது,

**"புகர்நிறம் கொண்ட களிறுஅட்டு ஆனான்,**
**முன்னாள் வீழ்ந்த உரவோர் மகனே;**
**உன்னிலென் என்னும் புண்ணொன்று அம்பு**
**மான்உளை யன்ன குடுமித்**
**தோல்மிசைக் கடந்த புன்அண லோனே''** (புறம். 310:4-8, ப. 450)

என்று, முன்னாளில் பகைவரோடு போரிட்டுப் புகழ் உண்டாக இறந்த வளமையோர் மகன் என்பதற்கு ஏற்றவாறு புள்ளி பொருந்திய நெற்றியையுடைய யானையைக் கொன்றும், மார்பில் புண்ணாக்கி ஊன்றிக் கொண்டு நிற்கும் அம்பை அறியாதவன் போல் உள்ளான் என்பதைக் கண்டு பெருமிதம் கொள்வதிலிருந்து, வீர உணர்வும், குடிப்பெருமைகாக்கும் உணர்வு கொண்டவனாகவும் விளங்குவதை அறிய முடிகிறது.

உயிருக்கு அஞ்சாத வீர உணர்வும், வலிமையும் நிறைந்த வீரர்களின் வீரத்தை, நெஞ்சுரத்தை, படைவலிமையை எடுத்துரைப்பது தானைமறம் எனும் துறையாகும். இத்துறையில் புறப்பாடல்கள் ஏழு இடம்பெற்றுள்ளன.[25] போர் வெற்றி விழாக்களில்

சிறந்தவனும் முரசம் போல் தோளை உடையவனுமாக வலிமை மிக்கவன் எம் தலைவன் என்றும்,

**“எறிகோல் அஞ்சா அரவின் அன்ன**
**சிறுவன் மள்ளரும் உளரே; அதாஅன்று,**
**பொதுவில் தூங்கும் விசியுறு தண்ணுமை**
**வளிபொரு தெண்கண் கேட்பின்**
**அது‘போர்’ என்னும், என்ஐயும் உளனே’’** (புறம்.89:5-9, ப. 199)

என்றும் கூறுவதில். தன் தலைவனின் வீரத்தை, உள்ளத்தன்மையை வெளிப்படுத்துவதை அறிய முடிகிறது. இதில் ஆடவர், அடிக்கோலுக்கு அஞ்சாத அரவம் போன்ற இளைய வலிய வீரராகவும், காற்று மோதலால் உண்டாகும் பறையொலியைப் போர்ப்பறை என்று எண்ணிப் போருக்குத் தயாராகும் வீரராகவும் இருந்தனர் என்பதை அறிய முடிகிறது. எந்நாளும் விழிப்புணர்வோடு செயல்பட்டனர் என்றும் அறியமுடிகிறது.

போர்புரியும் வீரர்களுக்கு வலிமைமிக்க குதிரைகள் பெருந்துணையாய் அமைந்திருந்தன. குதிரையின் மேல் சென்று பகைவரிடம் போரிட்டு வெல்லும் திறனைக் குதிரைமறம் என்பவர். இத்துறையில் புறநானூற்றில் நான்கு பாடல்கள் உள்ளன.[26] குதிரைகளின் துணைகொண்டு போர்புரிந்து வெற்றியுடன் வரும் வீரனை,

**“நிலம்பிறக் கிடுவது போல்குளம்பு கடையூஉ**
**உள்ளம் ஒழிக்கும் கொட்பின் மான் மேல்**
**எள்ளுநர்ச் செகுக்கும் காளை கூர்ந்த**
**வெந்திறல் எஃகம் நெஞ்சுவடு விளைப்ப**
**ஆட்டிக் காணிய வருமே’’** (புறம்.305:1-5, ப.445)

என்ற பாடலடிகளில், நிலம் பின்னிடுவது போலக் குறம்பை ஊன்றிக் காண்பவர் உள்ளத்தின் ஊக்கத்தை அழிக்கும் விரைவுடைய குதிரையின் மேல் பகைவரை அழிக்கும் காளை போன்றவன் கூர்மையான கொடிய வலிமை கொண்ட வேலால் எதிர்ப்பட்டவர் மார்பைக்குத்திப் புண்படுத்தி அதிரச் செய்து வருகின்றான் என்று தலைவனின் வீரத்தை, வலிமையை வெளிப்படுத்த குதிரைகள் துணையாயிருந்தமையை அறியமுடிகிறது. மேற்கூறப்பட்ட பாடல்களில் தறுகண்மை, பெருமிதம் மெய்ப்பாட்டு உணர்வு வெளிப்படுவதை உரை முடிகிறது.

குடிகோள் எனும் நிலைக்களனில் வெகுளி மெய்ப்பாடு தோன்றும் என்பர் தொல்காப்பியர். குடிகோள் என்பது தன் குடிக்குப் பழி சூழும் உணர்ச்சியால் பிறப்பதாகும். மறவன் ஒருவன் தன் தமையனைக் கொன்று, தன் குடிக்குக் கேடு விளைவித்தவனைப் பழிவாங்கும் வெகுளியால் துடிக்கின்றான். இச்சூழலை,

**“தோறா தோறா வென்றி தோலொடு**
**துறுகல் மறையினு முய்குவை போலாய்**
**நெருந லெல்லைநீ யெறிந்தோன் றம்பி**
**அகற்பெய் குன்றியிற் சுழலுங் கண்ணன்**
**பேரூ ரட்ட கள்ளிற்கு**
**ஓர்இல் கோயின் தேருமால் நின்னே’’** (புறம். 300:1-6, ப.440)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் மறவனுக்கு பழிவாங்கும் எண்ணம் ஓங்கி வெகுளியாக கண்கள் சிவந்து நரம்புகள் முறுக்கேறி கோபத்தை வெளிப்படுத்துகிறது. நேற்று நீ கொன்றவனின் தம்பி, அகலில் போடப்பட்ட குன்றிமணிபோல் சுழலும் கண்ணுடன் உன்னைத் தேடுகிறான் என்று தன்னுள் உண்டாகிய ‘வெகுளி’ மெய்ப்பாட்டினை கண்ணினால் வெளிப்படுத்துகின்றான். இதில் தலைவன் பழிவாங்கும் உணர்வும், தன் குடியைக் காக்கும் பொறுப்புணர்வும் கொண்டவனாகத் திகழ்கிறான்.

எட்டுத் தொகைப் பாடல்களில் ஆடவர், வீர உணர்வுடன் இருந்ததோடு, உயிருக்கு அஞ்சாமல், புற முதுகிடாமல், மார்பில் புண் பட்டும், மார்பு பிளந்து உயிர் விட்டு தமக்கும் தம் குடிக்கும், பெருமை சேர்த்த தன்மையினை, உவகை கலுழ்ச்சி எனும் துறை விளக்குகின்றது. இத்துறைகள் புறத்தில் மூன்று பாடல்களில் இடம்பெற்றுள்ளது.[27]

தன் மகனின் வீரத்தைக் கண்டு உவமை கொள்ளும் தாய், தான் ஈன்றபோது மகிழ்ந்ததை விட யானையை அழித்துத் தானும் இறந்தான் என கேட்ட போது பெரிதும் மகிழ்கின்றாள். இதனை,

**“களிறு எறிந்து பட்டனன் என்னும் உவகை**
**ஈன்ற ஞான்றினும் பெரிதே;’’** (புறம். 277:4-5, ப. 418)

என்று உவகை உணர்வு பெற்றவராகவும், தன் மகன் வலிய போர் கண்டு அஞ்சி இறந்தான் என்று உண்மை அறியாமல் பலர் வந்து சொல்லிய போது, வலிய போர்கண்டு அஞ்சி என் மகன் இறந்தான் என்பது உண்மையானால், அவன் பாலுண்ட தன் மார்பை அறுத்தெரிவேன் என்று சினந்துரைத்து, வாளைக் கையில் ஏந்திப் போர்க்களம் சென்று அங்கே இறந்துகிடக்கும் வீரர் பிணங்களைப் பெயர்த்துப் பெயர்த்துப் பார்த்து, மார்பில் புண்பட்டு வேறுவேறாகத் துண்டு பட்டுக் கிடக்கும் தன் மகனைக் கண்டு,

**“மண்டமர்க்கு உடைந்தனன் ஆயின் உண்டஎன்**
**முலை அறுத் திடுவென் யான் எனச்சினைஇக்**
**கொண்ட வாளொடு படுபிணம் பெயராச்**
**செங்களம் துழவுவோள் சிதைந்து வேறாகிய**
**படுமகன் கிடக்கை காணூஉ**
**ஈன்ற ஞான்றினும் பெரிதுவந் தனளே’’** (புறம். 278:4-9, ப. 418)

என்று உவகை கொள்ளும் நிலையினை, உணர்வினால் பெற்ற தாய்க்குத் தரும் பெருமை வாய்ந்தவராக சங்க ஆடவர் திகழ்ந்தனர் என்பதை அறிய முடிகிறது.

மேலும், போரில் பகைவரின் படையைப் பிளந்து வாய்ப்பாகப் போரிடுமாறு இடமாக்கித் தடுத்துப் படையின் ஊடுகளத்தில் துண்டுபட்டு வேறுவேறாகக் கிடந்த சிறப்பாளனின் பெருமிதத்தைக் கண்டு வற்றிப் போன மார்புகள் பாலூறிச் சுரந்தன புறமுதுகிடாக கொள்கை கொண்ட வீரனைப் பெற்ற தாய்க்கு. இத்தகைய பெருமித உணர்வை,

**“வருபடை போழ்ந்து வாய்ப்பட விலங்கி**
**இடைப்படை அழுவத்துச் சிதைந்துவேறாகிய**
**சிறப்புடை யாளன் மாண்பு கண்டு அருளி**
**வாடுமுலை ஊறிச் சுரந்தன**
**ஓடாப் பூட்கை விடலை தாய்க்கே’’ (புறம். 295:4-8, ப. 436)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. ஈன்ற பொழுதினும் பெரிதுவக்கும் உவகை உணர்வைத் தன்னைப் பெற்றோர்க்கு அளிக்கும் வீர உணர்வினராகவும் பெற்றோர்க்கு பெருமை சேர்க்கும் பண்பாளராகவும் சங்க ஆடவர் விளங்கியதை அறிய முடிகிறது.

இத்தகைய வீரர்களின் வீரத்தை, வலிமையை தோற்றத்தைப் புகழ்ந்து பாடும் துறை பாண்பாட்டு என்பதாகும். இத்துறையில் புறப்பாடல்களில் மூன்று இடம் பெற்றுள்ளன.[28]

இங்ஙனம் பகைவரிடம் போரிட்டு வென்றும், நாணத்தால் உயிர்துறந்தும் பெருமை பெற்ற வீரர்களினிடையே பகைவரின் வலிமையான வேல் பாய்ந்ததால் நாணங்கொண்ட நெஞ்சுடன் உயிர் துடிக்கும் நிலையினை மூதின் முல்லைத் துறை விளக்குகின்றது. புறத்தில் இம்மூதின் முல்லைத் துறையில், வலிய கட்டு அமைந்த முரசு போர்க்களத்திடையே முழங்கத் தடுத்தற்கு அரிய போர்க்களத்தில், வெகுட்சித் தோன்றப் பகைவர் எறிந்த வேல் வந்து பாய்ந்ததால், நாணங்கொண்ட நெஞ்சுடன், குருதி ஒழுகுவதுடன் அசையும் மார்பை மனையோள் தழுவ இடம் தராது உயிர்துறந்த நிலையை,

**“திண்பிணி முரசம் இடைப்புலத்து இரங்க**
**ஆர்அமர் மயங்கிய ஞாட்பில் தெறுவர**
**நெடுவேல் பாய்ந்த நாணுடை நெஞ்சத்**
**தருகுறை.... மன்ற**
**குருதியொடு துயல்வரு மார்பின்**
**முயக்கிடை ஈயாது’’ (புறம். 288:4-9, ப. 429)**

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன, பகைவரின் வேல் பாய்வதால் நாண உணர்வு கொண்டு உயிர் துறக்கும் ஆடவரின் தன்மான உணர்வை இப்பாடலடிகள் வெளிப்படுத்துகின்றன. இங்கு ‘அசைவு’ என்னும் தன்னிலையில் தாமும் ‘அழுகை’ மெய்ப்பாடும், ‘இளிவரல்’ மெய்ப்பாடும் வெளிப்படுகிறது.

**பதிற்றுப் பத்து**

சேர மன்னர்கள், தங்களின் வலிமை பொருந்திய பகைவர்களை வென்று உயர்வினை எய்தும் நிலையை வீரனின் ஆற்றலை வலிமையைப் புகழ்ந்து பாடுவது தும்பை அரவம் எனும் துறையாகும். இத்துறை பதிற்றுப்பத்தில் மூன்று பாடல்களில் இடம்பெற்றுள்ளன.[29]

சேரமன்னனின் ஆற்றலைப் புகழும் பதிற்றுப்பத்தில், தேரின் மீதேறியும், யானையின் மேலும் ஏறியும் போர் புரிய வரும் பகைவர்கள், போரில் பின் வாங்காத உணர்வு கொண்டவர். தங்கள் எதிரே நிற்கும் படைநிலை அழியும்படியும், முரசறைவோர் சிதறும் படியும், வீரர்களின் ஆரவாரம் மிகும்படியும் போர் புரிவர். அத்தகைய வீரர்களைக் கொண்டபகை மன்னர்கள் இறந்துபடுமாறு, சிவந்த தலையாட்டம் அமைந்த குதிரையின் மேலேறிச் சென்று, எதிர்நின்று போர் செய்து வெல்லும் ஆற்றலுடைய, உயர்ச்சி பொருந்தியவன் சேர வேந்தன் என்கிறது பதிற்றுப்பத்துப் பாடல்கள். மேலும்,

**"மாறா மைந்தர் மாறுநிலை தேய**
**முரசுஉடைப் பெருஞ்சமம் ததைய ஆர்ப்பு எழ**
**அரைசுபடக் கடக்கும் ஆற்றல்**
**புரைசால் மைந்தநீ ஓம்பல் மாறே''** (பதிற்று. 34:4-12, ப. 113)

என்ற பாடலடிகளில் சேர வேந்தனின் ஆற்றலையும் வீர உணர்வையும் வெளிப்படுத்துவதை உணர முடிகிறது.

சேர வேந்தனின், படையைக் கண்டு அவனொடு நட்புக் கொண்டவர்களுக்கு இனியவனாகவும் தன்னோடு மாறுபட்டவர்க்குத் துன்பம் செய்யும் இயல்பினன் என்பதை,

**"கொல்களிறு மிடைந்த பல்தோல் தொழுதியொடு**
**நெடுந்தோர் நுடங்குகொடி அவிர்வரப் பொலிந்து**
**செலவு பெரிது இனிதுநின் காணு மோர்க்கே**
**இன்னாது அம்மஅது தானே பன்மா**
**நாடுகெட எருக்கி நன்கலம் தரூஉம்நின்**
**போர்அரும் கடுஞ்சினம் எதிர்ந்து**
**மாறுகொள் வேந்தர் பாசறையோர்க்கே''** (பதிற்று. 83:3-10, ப. 295)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இங்ஙனம், தும்பைத் திணையில் ஆடவர், வீர உணர்வும், வலிமையும், போரில் வெற்றி பெற வேண்டும் என்ற வேட்கை உணர்வும், பகைவரின் 'வெகுளி' மெய்ப்பாட்டு உணர்வும், குதிரை, யானை போன்றவற்றை தனக்குதவியாகப் பயன்படுத்தும் சாதுரிய உணர்வும் கொண்டவர் மேலும் பெற்றோருக்கு உவகை உணர்வைத் தரும் பேராளனாகவும், பகைவரின் வேல்பாய்ந்தால் நாணி உயிர்விடும் இளிவரல் மெய்ப்பாட்டு உணர்வினராகவும் திகழ்ந்ததை அறிய முடிகிறது.

தும்பைத் திணையில் ஆடவர், எந்நேரமும் வஞ்சினத்துடன் கூடிய கோப உணர்வு கொண்ட வெகுளி மெய்ப்பாட்டுணர்வு கொண்டவராகவும், அஞ்சாத வீர உணர்வும், புகழுணர்வும் கொண்டு பெருமித மெய்ப்பாட்டுணர்வுடனும், பகைவர்களை அழித்து வெற்றி பெற்ற உவகை மெய்ப்பாட்டுணர்வுடனும் தன்னிலையில் தாழும் 'அசைவு' என்னும் அழுகை மெய்ப்பாட்டுணர்வுடனும் காணப்படுகின்றனர்.

**தும்பைத் திணை ஆடவர் பின்வரும் உணர்வுநிலைப் பட்டவராகக் காணப்படுகின்றனர்**

- வீர உணர்வும் கோப உணர்வும் கொண்டவர். (புறம். 72, 80,274,309,305, பதிற்று. 34)
- நட்புணர்வு கொண்டவர் (புறம். 275)
- நாட்டுப்பற்றுணர்வால் தன் உயிரைக் கொடுக்கும் துணிவுள்ளம் கொண்டவர். (புறம். 307,62,63).
- குடிப்பெருமை காக்கும் உணர்வு கொண்டவர் புறம். 310.
- ஈன்ற பொழுதினும் பெரிதுவக்கும் உவகை உணர்வை பெற்றோர்க்கும் அளிக்கும் உணர்வினர். (புறம். 277,278,295)
- நாணத்தினால் உயிர்துரக்கும் தன்மான உணர்வு கொண்டவர். (புறம். 288)
- நட்பு கொண்டோர்க்கு இனியவராகவும் தன்னோடு மாறுப்பட்டவர்க்கு துன்பம் செய்யும் உணர்விணராகவும் விளங்குகின்றனர். (பதிற்று. 83)

**ஏ. வாகைத் திணையில் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வுகள்**

மாற்றார் மேற்சென்ற வேந்தன், அவனுடன் பொருது வெற்றி கண்டான். அரசன் தான் மேற் கொண்ட கொள்கையை மிகுதிப்படுத்தி வெற்றி கொண்டமை வாகைத்திணை எனப்படும். அரசர் அன்றி, அந்தணர், வேளாளர், வணிகர் ஆகியோரும் தத்தம் கொள்கையை மிகுதிப்படுத்திக் கொள்ளுதலும் வாகைத் திணைக்கண் அடங்கும். இச்செய்தி, புறத்திணையியலில் இதுவரை போர்குறித்த செய்திகளே அமைய, இத்திணையில் மறத்துறையல்லாத அறத்துறைக்கு உரிய வெற்றி வீறுகளும் பேசப்படுகின்றன.

மறத்துறையில் வெற்றி வீறுடைய மன்னனின் ஒழுகலாறுகள் பற்றியும் அறத்துறையில் அரசர் முதலாகிய அனைவரும் பேணத் தகும் வாழ்வியல் நெறிகளை வகுத்தளிக்கின்றன. அறநெறி பொருந்திய இல்லறம் புரிந்து, ஐம்புலன்களை அடக்கி, வெகுளாமை, பொறையுடைமையொடு கூடி வாழ்வின் மெய்யுணர்ந்து அருளுடைமை பூண்டு, பற்று நீங்கி இருத்தலே வாகை எனக் காட்டப்பெறுகின்றது.[30]

**புறநானூறு**

புறநானூற்றில் வாகைத்திணை சார்ந்த பாடல்கள் 78 உள்ளன. அவை அரசவாகை (35 பாடல்கள்) இயன்மொழித்துறை (2பாடல்கள்) நல்லிசை வஞ்சி (1 பாடல்), மழபுலவஞ்சி (1 பாடல்), முதல்வஞ்சி (1 பாடல்), மறக்கள வேள்வி (1 பாடல்), மறக்கள வழி (4 பாடல்கள்) சால்பு முல்லை (1 பாடல்) வல்லாண்முல்லை (18 பாடல்கள்), மூதின் முல்லை (14 பாடல்கள்), ஏறான் முல்லை (2 பாடல்கள்), தாபத வாகை (1 பாடல்), பார்ப்பன வாகை (2 பாடல்கள்), தானை மறம் (1 பாடல்), பாணாற்றுப் படை (1 பாடல்) போன்ற துறைகளைக் கொண்டு அமைந்துள்ளன.

வாகைத் திணையின் அரச வாகைத் துறையில் அரசனின் வீரம், பெருமை, படைச்சிறப்பு ஆற்றல் வெற்றி, சினம், அறம், போர்த்திறன், ஒழுக்கம், ஈகை குடிப்பெருமை, போன்றவற்றை எடுத்துரைக்கும் வகையில் பாடல்கள் அமைந்துள்ளன.

சேரமான் யானைக்கட் சேய் மாந்தரஞ்சேரல் இரும் பொறையை, குறுங் கோழியூர் கிழார், அவனது குடிப்பெருமை அவனது அருள் நெஞ்சம், சினம், கொடைச் சிறப்பு போன்றவற்றை புலப்படுத்தும் வகையில் பாடியுள்ளார். அவனது குடிப் பெருமையை,

**“கொடிதுகடிந்து கோல் திருத்திப்**
**படுவது உண்டு பகலாற்றி**
**இனிதுருண்ட சுடர்நேமி**
**முழுதாண்டோர் வழி காவல’’** (புறம். 17:5-8, ப. 98)

என்று, தீமையை நீக்கிச் செங்கோல் செலுத்தி உரிய வரியைப் பெற்று நடுவுநிலையோடு ஆட்சி நடத்திய வேந்தர்களின் வழியில் வந்தவனே என்று குடிப்பெருமையைப் பாடுகின்றார். அவனது குடிப்பெருமையைக் காக்கும் வகையில்,

**“பலர்நாப்பண் மீக்கூறலின்**
**உண்டாகிய உயர்மண்ணும்**
**சென்றுபட்ட விழுக்கலனும்**
**பெறல்கூடும் இவன்நெஞ்சு உறப்பெறின்’’** (புறம். 17:23-26,ப.98)

என்று சேரனின் அருள் நெஞ்சை, படம்பிடித்துக் காட்டுகின்றார். பாண்டியனால் சிறைப்படுவதற்கு முன்பு உன்னால் அழிக்கப்பட்டு அரசை இழந்தவர்கள், உன் வருகையைக் கண்டு, இவன் அருள் செய்யின் இழந்த நாடும், அணிகலன்களையும் பெறக்கூடும் என்று சேரனது அருள் உணர்வைக் கண்டு அறியமுடிகிறது.

சேரமன்னன் சினம் கொண்டு பாண்டியர்களை நோக்கினால், பகைவர் நமக்குப் பணிசெய்வதைத் தொடங்குவர். இதனை,

**“...... ....... ........ ........ ....... இவன்**
**உடன்று நோக்கினன் பெரிதுஎனவும்**
**வேற்றரசு பணிதொடங்கும்’’** (புறம்.17:29-31, ப.98)

என்ற பாடலடிகள் சேரனின் சின உணர்வினை வெளிப்படுத்துகின்றன. இங்ஙனம் சேரனின் குடிப்பெருமை அருள் உணர்வையும் கூறி அவனது வலிமையையும் புகழையும் பாராட்டும் புலவர்களுக்கு, கொடையளித்து தனது ஈகையுணர்வினை வெளிப்படுத்துகின்றான். மேற்குறிப்பிட்ட பாடல்களில் நடுவுநிலைமை என்னும் மெய்ப்பாடும், அருள், பெருமிதம், வெகுளி எனும் மெய்ப்பாடுகளும் வெளிப்படுவதை அறிய முடிகிறது.

இவ்வாறு காணப் பேரெயில் கடந்த உக்கிரப் பெரு வழுதி (21), மாந்தரஞ்சேரல் இரும்பொறை (17,20,22,53), பாண்டியன் நெடுஞ்செழியன் (19,23,24,25,26,76,77,78,79), சோழன் நலங்கிள்ளி (31,33), குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளிவளவன் (37,42), மாவளத்தான் (43), நெடுங்கிள்ளி (44), மாறன் வழுதி (51,52), சேரமான் குட்டுவன் கோதை (54), இலவந்திகைப் பள்ளித் துஞ்சிய நலங்கிள்ளி சேட்சென்னி(61), கரிகால் பெருவளத்தான் (66) கோப்பெருநற்கிள்ளி (80,81,82) அதியமான் நெடுமான் அஞ்சி (93,94,98,99,100,104), மலையமான் திருமுடிக்காரி (125), ஏனாதி திருக்கிள்ளி (167) போன்ற அரசர்களின் வீரம், குடிப்பெருமை, சிறப்பு, படைவலிமை, அருள் உணர்வு, கொடை உணர்வு போன்றவற்றை புறப்பாடல்களில் அறிய முடிகிறது. அரசவாகை எனும் இத்துறை அரசராய் இருந்த ஆடவரின், புகழ், பெருமை, வீரம், இரக்கம், கொடை போன்ற உணர்வுகளை வெளிக்காட்டியுள்ளன.

வாகைத் திணையில், இயன் மொழித்துறையில் ஆடவர் சுற்றத்தைக் காக்கும் உணர்வு கொண்டு விளங்கியதை,

**“வேந்துதந்த பணிதிறையால்**
**சேர்ந்தவர் கடும்பார்த்தும்**
**ஓங்கு கொல்லியோர் அடு பொருந’’** (புறம். 22:26-28, ப. 109)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில். பகையரசன் பணிந்து தந்த கப்பத்தைக் கொண்டு தம்மை நம்பி வந்த சுற்றார்த்தார்க்கு அளித்து அவர்களைக் காக்கும் உணர்வு குடிகோள் என்னும் மெய்ப்பாடும் கொண்ட ஆடவராகத் திகழ்ந்ததைக் காணமுடிகின்றது.

நல்லிசை வஞ்சி எனும் துறையில், பாண்டியன் தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ்செழியனின் போர்த்திறனை,

**“துன்னல் போகிய துணிவி னோன்என**
**... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...**
**... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ... ...**
**கால முன்பநின் கண்டனென் வருவல்’’** (புறம். 23:14-17, ப. 110)

என்ற பாடலடிகள் மூலம் நெடுஞ்செழியன், உலகம் தாங்காத பெரும் படையை உடைய தலையாலங்கானத்துப் போரை எதிர்நின்று அழித்த எமன் போன்று வலிமையானவன் என்பதையும் 'பெருமிதம்' என்னும் மெய்ப்பாட்டுணர்வு கொண்டு விளங்கியதையும் அறிய முடிகிறது.

மறக்கள வேள்வி எனும் துறையில், இறுக்கிக் கட்டப்பட்ட தடாரிப் பறையை முழங்க அறைந்து உன்னை வாழ்த்தி வந்ததெல்லாம், பெரிய வாள் வெற்றியுண்டாக மின்னலிட்டு அம்பாகிய மழைத்துளி பொழிந்த அகன்ற பாசறையில் மனம் இணையப் பகைவர்களின் தலையை அடுப்பாக்கி, கூவிள விறகைக் கொண்டு ஆக்கிய கூழில் குடல்கள் நெளியப் பெரிய மண்டை ஓட்டினை அகப்பையாகவும், வன்னிக் கம்பைக் காம்பாகவும் கொண்ட துடுப்பினால் பேய்மகள் சமைத்த, விலங்கும் விரும்பா உணவைப்பேய்மகள் பரிமாறும் திருமண விழாவைப் போல, புலால் மணக்க களவேள்வியை விளங்கச் செய்தவன் என்று பாண்டியனை, பாண்டியனது வீரத்தையும், போர் வலிமையைக் கொண்டு செய்த களவேள்வியை பற்றி

**"வதுவை விழவில் புதுவோர்க்கு எல்லாம்**
**வெவ்வாய்ப் பெய்த புதுநீர் சால்கெனப்**
**புலவுக்களம் பொலிய வேட்டோய்''** (புறம். 372:10-12, ப. 525)

என்று ஆடவரின் வீர உணர்வு வெளிப்படுத்தப்பட்டுள்ளது. மறக்களவழி எனும் துறையில் புறநானூற்றில் நான்கு பாடல்கள் அமைந்துள்ளன.[31] போர்க்களக் காட்சியை, ஆடவரிடையே வெளிப்பட்ட வீர உணர்வை, வலிமையைப் வெளிக்காட்டும் வகையில் இத்துறைப்பாடல்கள் அமைந்துள்ளன. சேரமான் கடலோட்டிய வேல் கெழு குட்டுவனை, அவனது போர்க்களக் காட்சியைப் பரணர்,

போர்க்களத்தை ஏர்க்களமாக உருவகப்படுத்தி, விசையமைந்த வலிய வில்லில் செறித்த நாணில் இருந்து வெளிப்பட்ட அம்பு மழை பொழிந்த அகன்ற களமாகிய ஈரப்பதம் வாய்ந்த வயலில் தேர், ஏர் ஆகவும், விடியல் பொழுதில் புகுந்து நீண்ட படைக்கலங்களை ஏந்தி, உன் போர்ப்படை விளங்கும் நேரிய வளமான சால் அடித்து ஏவும் வேலும் கணையும் விதையாகத் தெளித்து, வலிய தலைகளைக் கவியச் செய்த அஞ்சத்தக்க பயிரின் பேய்மகளால் பற்றப்பட்ட பிணம் நிரம்பிய பல போர்களில், கூட்டமாகிய நரிகளொடு, கழுகுகள் மொய்க்க, பூதங்கள் காவல் புரிய விளங்கும் களத்தைத் தழுவி பாடுபவர்க்கு வாய்ப்பளித்த, பெருமைக்குரியவனே என்ற அவனது வீரத்தையும், அஞ்சாநெஞ்சம் கொண்ட உணர்வினையும் 'தறுகண்மை' என்னும் மெய்ப்பாட்டு உணர்வினையும் வெளிப்படுத்துகின்றார்.[32]

''நல்லிசை வேட்டம் வேண்டி''[33] மன்னன் பாசறையில் தூங்காமல் இருக்கின்றான். இத்தகைய ஆற்றல் மிக்க மன்னர்களின் பகையை எண்ணிப் பிறர் தூங்க இயலாமல் நடுங்கி

இருக்கின்றனர். இதனை, “நெஞ்சு நடுங்கு அவலம் பாயத் துஞ்சாக் கண்ண”[34] என்று அஞ்சிய உள்ளம் அலமலந்து தவிப்பதைக் கோவூர்கிழார் பாடியுள்ளார். இதன்மூலம் போர்வழிவரும் புகழ்வேட்கை உணர்வு கொண்டவர்களாகவும் ‘நடுக்கம்’, ‘இளிவரல்’ என்றும் மெய்ப்பாட்டு உணர்வு கொண்டவராகவும் ஆடவர்கள் இருந்தனர் என்பதை அறிய முடிகிறது. இதனை உளவியலார், ஒரு சமூகக் குழுவில் வெறும் உறுப்பினராவதில் மட்டும் ஆடவர் மனம் நிறைவு கொள்வதில்லை. பிறர் தம்மைத் தெரிந்து மதித்துப் போற்றி ஏற்க வேண்டும் என விரும்புகின்றனர்.[35] ஆகவேதான் சமூகம் தன்னை ஏற்றுக்கொள்ளும் முயற்சிகளில் மக்கள் ஈடுபட்டு மகிழ்கிறார்கள்.

புதுமையைக் கண்டு வியக்கும் ‘மருட்கை’ எனும் மெய்ப்பாட்டுணர்வை, ஏனாதி திருக்கிள்ளியின் வீரத்தைக் கண்டு உலகமே வியக்கும் நிலையினை,

**“நீயே அமர்காணி னமர் கடந்தவர்**
**படைவிலக்கி யெதிர் நிற்றலின்**
**.... .... ..... ..... ..... வெல்போர்க்**
**கழல்புனை திருந்தடிக் கடுமான் கிள்ளி**
**நின்னை வியக்குமிவ் வுலகம்’’** (புறம். 167:1-11, ப. 292)

என்ற பாடலில் உலகம் வியக்கும் வியப்புணர்வு வெளிப்படுகிறது. இதில் தலைவன், உலகமே வியக்கும் பண்பினனாகவும் வீரவுணர்வு கொண்டவனாகவும் காணப்படுகின்றான்.

சிறுமை என்னும் நுண்ணியது கண்டு வியக்கும் ‘மருட்கை’ மெய்ப்பாட்டை இடைக்குன்றூர்கிழார், நெடுஞ்செழியன் இளமையாய் இருக்கும் போதே செய்த போர்த்திறனைக் கண்டு மருட்கையுற்றதை.

**“கிண்கிணி களைந்தகா லொண்கழ றொட்டுக்**
**குடுமி களைந்த நுதல் வேம்பி னொண்டளிர்**
**நெடுங்கொடி யுழிஞைப் பவரொடு மிலைந்து**
**குறுந்தொடி கழித்தகைச் சாபம் பற்றி**
**நெடுந்தோர்க் கொடிஞ்சி பொலிய நின்றோன்’’** (புறம்.77:1-5, ப.189)

என்ற பாடல் சிறுமையினால் தோன்றும் மருட்கையுணர்வை வெளிப்படுத்துகின்றன. இதில் தலைவன் இளமைப் பருவத்தில் செய்த போர்கண்டு அவனின் வீரத்தைக் கண்டு வியக்கும் புலவரின் ‘மருட்கை’ மெய்ப்பாட்டுணர்வு வெளிப்படுகின்றது. தலைவன் இளமைப் பருவத்திலிருந்த போதே வீர உணர்வுடன் இருந்ததை அறியமுடிகிறது.

அணங்கு அச்சம் தோன்றும் நிலைக்களனாய் அமைந்துள்ளதை,

**“விழுத்தலை சாய்த்த வெருவெரு பைங்கூழ்ப்**
**பேய்மகள் பற்றிய பிணம்பிறங்கு பல்போர்பு**
**கணநரி யோடு கழுதுகளம் படுப்பப்**

பூதங் காப்பப் பொலிகளந் தழிஇப்
பாடுநர்க் கிருந்த பீடுடையாள'' (புறம். 369:14-18, ப. 519)

என்று சேரமான் கடலோட்டிய வெல்கழுகுட்டுவனைப் பரணர் பாடிய பாடல் சான்றாக அமைகின்றது. இப்பாடலில் பெருந்தலைகளை வெட்டிச் சாய்த்து மூளை, நிணம் என்பவை குழம்பிப் பிணங்களே பயிர்களாகக் கண்டவர்க்கு அச்சத்தைத் தோற்று விக்கின்றன. பேய் மகளிர் சூழும் பிணங்கள் உயர்ந்த போர்க்குவியல்களை நரிகளும் பேய்களும் இழுத்து உண்ண, பூதங்கள் காவல் செய்யும் போர்களத்தைக் கண்டால் அச்ச உணர்வு ஏற்படுவதை இப்பாடலில் காணமுடிகிறது. இதில் அரசன் வீரஉணர்வு வெளிப்படப் போர் புரியும் சிறந்த வீரனாகக் காணப்படுகின்றான். இத்தகைய அச்ச மெய்ப்பாட்டினை பொதுவியல், தும்பை, வாகைத் திணைகளிலும் காணலாம்.[36]

இங்ஙனம் அரசர்களின் வீரத்திற்குப் பரிசாய் விளைந்த போர்க்களக் காட்சிகளைக் கண்முன் நிறுத்தும் புலவர்களின் பாடல்களில் அரசனது வீர உணர்வும், புலவர்களின் கவியுணர்வும் வெளிப்படுகின்றன. இப்புகழ்ச்சியை விரும்பும் அரசர்கள், புலவர்களுக்குப் பரிசில் நல்கி தங்களது ஈகை, கொடையுணர்வினை வெளிப்படுத்துவதை உணர முடிகின்றது. மூதின் முல்லை எனும் துறையில் புறநானூற்றில் பதினான்கு பாடல்கள் இடம்பெற்றுள்ளன. மூதின் முல்லைத் துறையில், ஒரு குடும்பத்தில் தாத்தா, தந்தை, போன்றோர் போரில் இறந்துபடினும், தானும் போருக்கு செல்லும் உணர்வு கொண்டவராக உருவாக்கும் தாயின் துணிவும், வீர உணர்வும், தனக்கே பொருள் இல்லாத வறுமை நிலையிலும் பிறருக்குக் கொடுத்து உதவும் கொடையுணர்வும், ஆடவரின் கடமை உணர்வும், பகைவரிடமிருந்து கவர்ந்து வந்த பொருள்களைக் கொடையாக வழங்கிய செய்தியும் இத்துறையில் இடம்பெற்றுள்ளன.

சங்க காலப் பெண் தனது மகனுக்குக் கொடுக்கும் ஊக்கம் கடுமையானதாக இருப்பினும் அதனை ஏற்று வழி நடக்கும் ஆடவரின் வீரச்செயல் போற்றத்தக்கதாகும். இதனை,

"வேல்கைக் கொடுத்து வெளிதுவிரித்து உடீஇப்
பாறுமயிர்க் குடுமி எண்ணெய் நீவி
ஒருமகன் அல்லது இல்லோள்,
செருமுகம் நோக்கிச் செல்கென விடுமே'' (புறம். 279:8-11, ப. 419)

என்ற பாடலடிகள் ஒரு தாய் மகனை, நாட்டுக்காக நாட்டுப்பற்றுணர்வு கொண்டவனாக மாற்ற ஊக்கப்படுத்தும் திறனைவெளிப்படுத்துகின்றது. இப்பாடலில் மாற்ற அதனை ஏற்று செல்லும் மகனின் நாட்டுப்பற்று வீர உணர்வு வெளிப்படுவதோடு தாய்சொற்கேட்டு நடக்கும் பணிவுணர்வும் புலப்படுகின்றது.

தாய், தனது மகனுக்குப் போர்புரியவும், வீரத்துடன் செயல்படுவதற்கும், போர்க்கடமையைச் சுட்டுவதற்கும் ஊக்கப்படுத்துவதற்கும் தயங்குவதில்லை. மகனைப் பெற்று வளர்த்ததல் தாயின் கடமையாகவும், மகனை வீரனாக்குதல் தந்தைக்குக் கடமையாகவும், போர்க்கு வேண்டும் கருவியை ஆக்கிக் கொடுத்தல் கொல்லரின் கடமையாகவும், நல்ல விளைநிலங்களைப் பரிசாக வழஙகுதல் ஆள்வோனுக்குக் கடமையதுவும் ஒளி விளங்கும் கருவியொடு வெல்லுதற்கு அரிய போரில் யானையை அழித்து வெற்றியுடன் திரும்புதல் வீரர்க்குக் கடமை என கூறி ஊக்கப்படுத்தும் தன்மையினைக் காணமுடிகின்றது ஆடவர் எந்நிலையிலும், எப்பருவத்திலும், நாட்டுக்காகவும் நாட்டு மக்களுக்காகவும் போரிடவும், காக்கவும் தங்களை அர்ப்பணித்து செயல்படும் தன்மையினர் என்பதை,

**"ஈன்று புறந்தருதல் என்தலைக் கடனே;**
**சான்றோன் ஆக்குதல் தந்தைக்குக் கடனே;**
**வேல்வடித்துக் கொடுத்தல் கொல்லற்குக் கடனே;**
**நன்னடை நல்கல் வேந்தற்குக் கடனே;**
**ஒளிறுவாள் அருஞ்சமம் முருக்கிக்**
**களிறு எறிந்து பெயர்தல் காளைக்குக் கடனே''** (புறம். 312:1-6, ப. 452)

இப்பாடலில் தந்தை, கொல்லன் வேந்தன், காளையாகிய வீரன் போன்ற பலநிலை சார்ந்த ஆடவரின் கடமை உணர்வை வெள்ளிடைமலையென அறியமுடிகிறது.

வீரர்கள் காடுகள் நிறைந்த வழியிடை கொண்ட பகைநாடு சென்று போர்புரியும் வீர உணர்வை,

**"போரெனின் புகலும் புனைகழல் மறவர்**
**காடிடைக் கிடந்த நாடுநனி சேய**
**செல்வேம் அல்லேம் என்னார்"** (புறம். 31:9-11, ப. 124)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. புள்நிமித்தம் கருதிப் போருக்கு ஏவாத காலத்தும் "சாவோம் யாமென"[37] வீரம் நீங்கா மறவர் வீங்குதோள் புடைக்கச் செயல்பட்டதைக் காணலாம். மேற்குறிப்பிட் பாடல்களில் 'தறுகண்மை', 'பெருமிதம்' எனும் மெய்ப்பாட்டுணர்வு வெளிப்படுவதை அறியமுடிகிறது.

சங்க காலத்தில் ஆண், பெண் இருபாலாரும் பிறருக்குக் கொடுத்து உதவுவதில் சிறந்து விளங்கினர், விருந்து உபசரிப்பதில் பெண்டிரும், பரிசில் நல்குவதில் ஆடவரும் சிறப்பிடம் பெற்றிருந்ததை.

**"அருஞ்சமம் ததையத் தாக்கிப் பெருஞ்சமத்**
**தண்ணல் யானை அணிந்த**
**பொன்செய் ஓடைப் பெரும்பரி சிலனே''** (புறம். 326:13-15, ப. 467)

என்ற பாடலடிகள் மூலம், கடத்தற்கு அரிய போர் அழியுமாறு தாக்கிப் பெரிய போரில் யானை அணிந்திருந்த பட்டம் போன்ற பொன்னைப் பரிசாக அளிக்கும் உணர்வு கொண்டவன் என்பதை அறியமுடிகிறது.

சங்க கால இளைஞரின் நெஞ்சுரம் வலிமை மிக்கது. தனது வயலில் விளைந்த வரகினை, கடன்காரர்க்கும், பாணர்க்கும் கொடுத்து உதவுவான். மேலும் சுற்றத்தார் வறுமை என வரும்போது, தன் ஊரில் உள்ள, உதவும் உள்ள கொண்டோரிடம் கேட்டு வாங்கித் தருவான்.

இத்தகைய பெருந்தகையாளன், அரசே வந்தாலும் அதனைத் தாங்கும் வலிமையாளன் என்பதை,

**"எருதுகால் உறாஅது இளைஞர் கொன்ற**
**சில்விளை வரகின் புல்லென் குப்பை**
**தொடுத்த கடவர்க்குக் கொடுத்த மிச்சில்**
**பசித்த பாணர் உண்டுகடை தப்பலின்**
**ஒக்கல் ஒற்கம் சொலியத் தன்னூர்ச்**
**சிறுபுல் லாளர் முகத்தளவ கூறி**
**வரகுகடன்இரக்கும் நெடுந்தகை**
**அரசுவரில் தாங்கும் வல்லா என்னே"** (புறம். 327:1-8, ப. 468)

என்ற பாடலடிகள் மூலம் உணரலாம். இங்ஙனம் ஆடவர், பெற்றக் கடனைத் திருப்பிக் கொடுக்கும் உணர்வினர், பாணர்க்கு அளித்து மகிழும் அருளாளர். தன்னிடம் பொருள் இல்லையெனினும் உதவும் உள்ளம் கொண்டோரிடம் சென்று யாசித்து வறியவர்க்கு (சுற்றத்தார்க்கு) வழங்கும் வள்ளண்மை கொண்டவர் என்பதை அறிய முடிகிறது.

இத்தகைய ஈகை உணர்வு கொண்டு விளங்கிய ஆடவர், வளமாக வாழ்ந்த சிற்றூரில் வலிமையான ஆடவர் வறுமைப்பட்டாலும் கோலால் தீ உண்டாக்கும் இடையனைப் போல வேண்டியதைக் குறிப்பாக அறிந்து இல்லாதவற்றை உண்டாக்கிக் கொள்ளும் வல்லமையாளர்கள். இருப்பது மிகச்சிறிய அளவினதே எனினும் மிகப் பலர்க்கு வழங்க வேண்டுமே என்று வருந்தாமல்,

**"தவச்சிறி தாயினும் மிகப்பலர் என்னான்**
**நீள்நெடும் பந்தர் ஊண்முறை ஊட்டும்**
**இற்பொலி மகடூஉப் போலச் சிற்சில**
**வரிசையின் அளிக்கவும் வல்லன் உரிதினில்**
**காவல் மன்னர் கடைமுகத் துஉகுக்கும்**
**போகுபலி வெண்சோறு போலத்**
**தூவவும் வல்லனவன் தூவும் காலே"** (புறம். 331:7-13, ப. 472)

என்று பெரிய பந்தலில் உண்ணத்தக்காரை அறிந்து உண்ணும்முறையில் உண்ணச் செய்யும் குடும்ப பெண்ணைப் போல சிறிது சிறிதாக அவரவர் வரிசை அறிந்து கொடுக்கும் வல்லமையாளன். அதே வேளை அரண்மனை வாயிலில் கொடுக்கப்படும் நிரம்பிய உணவைப் போலக் கொடுக்கும் வலிமை பெற்றவன் ஆவான். எனவே, ஆடவர், வழங்கும் பொருளை தேவையறிந்து வழங்கும் உணர்வு கொண்டவராகத் திகழ்ந்தனர் என்பதையும் பொருள் இருக்கும் போது வாரி வழங்கும் உணர்வினராகவும், பொருள் இல்லாத நிலையில் உள்ள பொருள் அளவுக்கு வழங்கி மகிழும் அருளாளர் என்பதையும் இப்பாடலின் மூலம் உணரலாம். வல்லாண் முல்லைத் துறையில், புறநானூற்றில் பதினெட்டுப் பாடல்கள் இடம்பெற்றுள்ளன. வல்லாண் முல்லைத் துறையில் ஆடவர் பாணர், விறலியர் போன்றோரை வரவேற்று உணவளித்து, பரிசில்களையும் அளிக்கும் கொடையுணர்வு கொண்டவர்களாகவும், போர்க்களத்தில் பெரியோர் அச்சமுடையவராய்ப் புறங்கொடுத்து ஓடும்போது அவர்க்குப் பாதுகாப்பாக இளைஞர்கள் இருந்ததையும், மன்னர்களும் வேண்டிய வீரர்களை வாளொடு வழங்கி, அமைச்சனாக கருத்து வழங்கியும், அரசனுக்கு வேண்டியனவெல்லாம் கொடுத்து உதவும் பேராண்மையராகவும் காணப்படுகின்றன. விருந்தோம்பல் பண்பினைக் காக்கும் உணர்வினராகவும் இரவலர்க்கு ஈயும் ஈகையுணர்வு கொண்டவராகவும் விளங்கியதை அறிய முடிகிறது.

பாண்டியன் கீரஞ்சாத்தன் என்பவன், அவனைக் காண வந்த பெரியோர்களை மதித்து உணவளிக்கும் தன்மை கொண்டவன். ஆனால் பகைவர் படைகள் கலக்கும் அச்சமிக்க போர்க்களத்தில்,

> **“கள்ளுடைக் கலத்தர் உள்ளூர்க் கூறிய**
> **நெடுமொழி மறந்த சிறுபே ராளர்**
> **அஞ்சி நீங்கும் காலை**
> **ஏமமாகத் தான்முந் துறுமே’’** (புறம்.178:8-11, ப. 307)

என்ற பாடலடிகளில் கள்ளுண்ட மயக்கத்தில் பகைவர்களின் படையைக் கண்டு அஞ்சி புறமுதுகிடும் பெரியோரை காக்கும் பொறுப்புணர்வு கொண்டவனாகத் திகழ்கிறான்.

உலகில் கொடை வள்ளல்கள் இறந்தபோதும், தன்னொடு மாறுபட்டோரின் வலிய கட்டமைந்த முரசத்தொடு அவர் மண்ணையும் கொண்ட, திருமகள் விரும்பும் அழகிய அணிகளை அணிந்த பாண்டிய அரசனின் மறவன் ஒருவன், அரசனுக்குப் படைவேண்டிய போது வாளொடு வீரரை உதவினான்; அரசியல் கடமை வேண்டியபோது அமைச்சன் எனக் கருத்து உதவினான்; இவ்வாறு அரசன் வேண்டுவனவெல்லாம் உதவினன்; வண்டியில் வைக்கப்பட்ட பாரத்தை அசைவில்லாது தாங்கிச் செல்லும் காளை போன்றவன் தோல்வி காணாத நல்ல புகழாளன்; நாலை என்னும் ஊரின் தலைவன்; பருந்தின் பசி தீர்க்கும் போரைச் செய்யும் நல்ல வேலையுடையவன். இங்ஙனம் மன்னனுக்கு உதவிசெய்த மறவனின் உணர்வுகளை,

**"படைவேண்டுவழி வாளுதவியும்**
**வினைவேண்டுவழி யறிவு உதவியும்**
**வேண்டுப வேண்டுப வேந்தன் தேஎத்து**
**அசைநுகம் படாஅ ஆண்டகை உள்ளத்துத்**
**தோலா நல்லிசை நாலை கிழவன்**
**பருந்துபசி தீர்க்கும் நற்போர்த்**
**திருந்துவேல் நாகற் கூறினர் பலரே''** (புறம். 179:6-12, ப. 309)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. சங்க ஆடவர், பாணர், இரவலர் போன்றோருக்கு உதவுதல் அல்லாமல் வேந்தர்களுக்கும் உதவும் பேராண்மைக் கொண்டவராகத் திகழ்ந்தனர் என்பதை புறம் 13–ம் பாடல் மூலம் அறியமுடிகிறது.

நெடுமான் அஞ்சி மிகுதியான செல்வத்தை உடையவன் என்றாலும், பரிசிலர்க்குத் தந்து மிகுந்ததை உண்ணுவான். உணவு குறைவாக உடையவன் என்றால் பரிசிலர்க்குத் தந்து, தான் உண்ணாதும்இருப்பான் தான் தரக் கடன்பட்டவர்க்குத் தருவதைக் காட்டிலும் மிகுதியாக இரவலர்க்குத் தரும் உணர்வு கொண்டவன். அவன் வீட்டு இறைப்பில் செருகப்பட்ட தீக்கடைகோல் போல வெளிப்படாதும், அக்கோலைக் கடையும்போது வெளிப்படும் சுடர்த்தீ போல வெளிப்பட்டுத் தோன்றும் இயல்பு கொண்டவன். என்பதை,

**"மடவர் மகிழ்துணை நெடுமான் அஞ்சி**
**இல்இறைச் செரீஇய ஞெலிகோல் போலத்**
**தோன்றாது இருக்கவும் வல்லன்; மற்றதன்**
**கான்றுபடு கனைஎரி போலத்**
**தோன்றவும் வல்லன் தான் தோன்றும் காலே''** (புறம். 315:1-7,ப.454)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் நெடுமான் அஞ்சி, தக்க வீர வெளிப்பாடும், அடக்கமும் கொண்டு 'பெருமித' மெய்ப்பாட்டு உணர்வுடன் செயல்படுவதை அறிய முடிகிறது.

ஆடவரின் ஈகையுணர்வுக்கு, புலியால் கொல்லப்பட்ட மானின் குட்டிக்கு சினமற்ற பசுதன் கன்றோடு சேர்த்துப் பாலூட்டுவது போல, பரிசில் வேண்டி வருவார் நினைத்தவற்றை வழங்கும் பெருங்கொடையுணர்வை,

**''புலிப்பால் பட்ட வாமான் குழவிக்குச்**
**சினம்கழி மூதாக் கன்றுமடுத்து ஊட்டும்**
.... .... .... .... .... .... .... ....
**உள்ளியது சுரக்கும் ஓம்பா ஈகை''** (புறம். 323:1-4, ப. 463)

என்ற பாடலடிகள் மூலம் அறியமுடிகிறது. பெரும் படைகளையுடைய பெரும் வேந்தர்களுக்குத் தக்க நேரத்தில், அவன் அல்லல்படும் போது அவனொடு அல்லல்படும் மனமறிந்த துணையாக சீறூர் மன்னன் இருந்ததை,

**''வலம்படு தானை வேந்தற்கு**
**உலந்துழி உலக்கும் நெஞ்சறி துணையே''**(புறம்.324:13-14, ப. 465)

என்ற பாடலடிகள், ஆடவர் ஒருவருக்கொருவர் உதவியாகவும், உற்ற துணையாகவும் இருந்தனர் என்பதை அறியமுடிகிறது.

வல்லாண் முல்லையும் தானைமறமும் சேர்ந்த துறையில் ஆடவர், பாணர், விறலியர் போன்ற இரவலர்க்கு விருந்தோம்பலின் போது மென்மையானவராகவும், பகைவர்க்கு இரும்பைப் பயன்படுத்தும் வலிய கையையுடைய தாங்கும் பட்டடைக்கல் போல் வலிய ஆண்மையுடையவராக விளங்கியதை, புறம் – 120ஆம் பாடல் சான்று பகர்கின்றது.

ஏறாண் முல்லை எனும் துறையில் பகை வேந்தனை அழிக்காமல் வீடு திரும்ப மாட்டேன் என்னும் ஒரு ஆடவனின் வீர உணர்வை, சூளுரையை,

**''வேந்துடன் றெறிவான் கொல்லோ**
**நெடிதுவந் தன்றால் நெடுந்தகை''** (புறம்.296:4-5, ப. 437)

என்ற பாடலடிகள் மூலம் உணரலாம். பகைவரிடம் போரிட்டு, அவர்கள் விடுத்த அம்புகள் மொய்த்த நிமிர்ந்த தோளுடையவனைக் கண்டு, அவன், இரவலர்க்கு நிலம் தந்த ஈகையுணர்வைப் புகழ்ந்து பாடுகிறார். அது கேட்டு தலை தாழ்ந்தான். புகழுரைக்குத் தலைதாழ்ந்து பணியும் பண்பினர் ஆடவர் என்பதை,

**''... பரந்தோர் எல்லாம் புகழ தலைபணிந்து**
**இறைஞ்சி யோனே''** (புறம். 285:13-14, ப. 426)

என்ற பாடலடிகள் சான்று பகர்கின்றன. இங்கு ஈகை, இசைமை எனும் மெய்ப்பாட்டுணர்வு வெளிப்படுகிறது. இதில் தாபதவாகை எனும் துறையில் ஆடவர், வீரத்தை வெளிப்படுத்தும் புறத்தில் நடைபெறும் போர் முதலான செயல்களில் ஈடுபட்டு கம்பீரமாக தன் வீரத்தை வெளிப்படுத்தி வெல்லும் இவன் முன்பு, ஓவியம் போன்ற, அழகிய இல்லில் அழகிய பதுமை போன்றிருந்த தலைவி, இவனை நினைத்து ஏங்கி அணிகலன்கள் கழலுமாறு செய்தவன், மேலும் மயிலை ஒத்த மனைவியை வயப்படுத்தும் சொல்லாகிய வலையை உபயோகப்படுத்துபவனாக இருந்தான் என்பதை,

**''இல்வழங்கு மடமயில் பிணிக்கும்**
**சொல்வலை வேட்டுவன் ஆயினன் முன்னே''** (புறம். 251:1-4, ப. 394)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் ஆடவர் அகத்தில் தலைவியைப் பிரியாமல், தன்னிடம் தக்க வைத்துக்கொள்ளும் நிலையில் அன்புணர்வு கொண்டு சொல்வலை வேட்டுவனாகத் திகழ்ந்தவன், புறத்தில் பெரும்படையை வெல்லும் வலிமைமிகுந்த வீர உணர்வினனாகக் காணப்படுவதை அறிய முடிகிறது.

வாகைத் திணையில் பார்ப்பன வாகை எனும் துறையில் சிறந்த வீரமும் புகழும் உடைய வேந்தர்களைப் புகழ்ந்தும் வாழ்த்தியும், இருமன்னர்களிடையே போர் நிகழாமல் தடுக்க எண்ணி ஒற்றாகி போர் ஒழித்த நிலையையும் காணமுடிகின்றது.

இருவேந்தர்களுக்கு இடையே, தளர்ந்த நடையும், சுருங்கிய இடுப்பையும் கொண்ட பார்ப்பான் ஒற்றனாக வந்து சொல்லிய சொற்களைக் கேட்டு போர் ஒழிந்த நிலையை,

**''எல்லி வந்து நில்லாது புக்குச்**
**சொல்லிய சொல்லோசிலவே; அதற்கே**
**ஏணியும் சீப்பும் மாற்றி**
**மாண்வினை யானையும் மணிகளைந் தனவே''** (புறம். 305:3-6, ப.445)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. அரசனின் புகழ், வீரம், கொடை போன்ற உணர்வுகளை எண்ணி பார்ப்பனர்,

**''கழைவளர் இமயம் போல**
**நிலீஇயர் அத்தைநீ நிலமிசை யானே''** (புறம். 166:31-34, ப. 289)

என்று வாழ்த்தி மகிழ்கின்றனர். ஆடவர் சிறந்த வலிமைமிக்க வீரஉணர்வுடனும், இரவலர்க்கு ஈயும் ஈகையுணர்வும், பெரியோரைக்காக்கும் பொறுப்புணர்வும், அகத்தில் தலைவியோடு இணைந்துவாழும் இன்ப உணர்வும், பார்ப்பனர் போற்றும் அகவுணர்வும், பார்ப்பனர் அறிவுரை கேட்டு மதிக்கும் உணர்வும் கொண்டவராகத் திகழ்ந்தனர். இங்கு, பெருமிதம், உவகை, இன்புறல், போன்ற மெய்ப்பாட்டுணர்வுகள் வெளிப்படுவதை அறிய முடிகிறது.

**பதிற்றுப் பத்து**

பதிற்றுப்பத்தில் வாகைத் திணை சார்ந்த பாடல்கள் ஆறு உள்ளன[38] வாகைத் திணையின் களவழித் துறையில் களங்காய்க் கண்ணி நார்முடிச்சேரல் என்னும் சேர மன்னின் போர், போர் புரியச் செல்லும் அவனது தோற்றும், போர்க்களக்காட்சி விவரிக்கப்பட்டுள்ளது. குரவை நிலை என்னும் துறையில் ஆடுகோட்பாட்டுச் சேரலாதனின் வெற்றி, ஈகை உணர்வு பற்றி இடம்பெற்றுள்ளது. முல்லைத் துறையில் இளஞ்சேரல் இரும் பொறையின் சிறப்பு குறித்தும், காவல் முல்லைத்துறையில் அவனது ஆட்சியில் விளைந்த பயன் குறித்தும் பாடப்பட்டுள்ளது.

வலிமையின் கூறுபாடுகள் விளங்க, சினந்து வந்த பகைவர்கள், அஞ்சத்தக்க போரில் அலறும்படி பெரிய முரசு முழங்கும். அந்தப் பெருமுரசம் இடிபோல அதிர்ந்து முழங்க போர்ச்செயலில் ஈடுபட்டு பகைவர்களின் அரண்களை அழித்துக் கூற்றுவனைப் போல சினத்தையும் வலிமையும் கொண்டு திகழும் களங்காய்க்கண்ணி நார்முடிச் சேரலினை,

**''துப்புத்துறை போகிய வெப்புடைத் தும்பைக்**
**கறுத்த தெவ்வர் கடிமுனை அலற**
**எடுத்து எறிந்து இரங்கும் ஏவல் வியன்பணை**
**உரும்என அதிர்பட்டு முழங்கிச் செருமிக்கு**

**அடங்கார் ஆர்அரண் வாடச் செல்லும்**
**காலன் அனைய கடுஞ்சின முன்ப''** (பதிற்று. 39:3-8, ப. 125)

என்ற பாடலடிகள் கண்முன் நிறுத்துகின்றன. குரவை நிலைத் துறையில் ஆடுகோட்பாட்டுச் சேலராதனின் வெற்றி, ஈகை, மென்மை, வலிமை போன்ற உணர்வுகளைவும் பெருமிதம், 'உவகை' எனும் மெய்ப்பாட்டு உணர்வுகளையும் வெளிப்படுத்தும் வகையில் பதிற்றுப்பத்துப் பாடல்கள் அமைந்துள்ளன. அஞ்சாமை மிக்க வீரர்களின் துணையொடு பகை நாட்டு வீரர் பலர் வானுலகம் அடையும் படியாகச் செய்து, அறநெறி நின்று எதிர்த்துப் போர்புரிந்து வென்றதை,

**''முன்சமத்து எழுதரும் வன்கண் ஆடவர்**
**தொலையாத் தும்பை தெவ்வழி விளங்க**
**உயர்நிலை உலகம் எய்தினர்''** (பதிற்று. 52:7-9, ப. 181)

மேலும் அவன் இடியை ஒத்துப் பெருமை கொண்ட அவனது கை, இரப்பவர்களுக்குக் கொடுப்பதற்காகக் கவிழுமேயல்லாமல், பிறரிடம் இரப்பதற்காக ஏந்தி நிற்காது என்ற பிறர் அவனது பெருமையை எண்ணி வியக்கின்றனர். பகைவரிடம் போரிடும் மிகுந்த சினத்துடனும் வீர உணர்வுடனும் செயல்படும் ஆடவர் ஈகை எனும் போது மிகவும் மென்மையான உள்ளம் கொண்டு இரக்க உணர்வு மேலிட்டவர்களாகவும் 'பெருமித' மெய்ப்பாட்டுணர்வு கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.

சேரவீரர்கள், மிக இருண்ட இரவு நேரத்திலும், வீர வாளை ஒளிவீசும்படி குளிர் மிகுதியால் தம் தோளின் மேல் பிணித்த கைகளையுடையவர்களாய்ப் போர் விருப்பம் மிகுந்து, நாள் தோறும் தாம் மேற்கொள்ளும் போர் வெற்றியடைவதில் வேட்கையுடையவர்களாய், வஞ்சினம் கூறிபுகழ்மிக்க தம் குடிப் பெருமைகளைக்காக்கும் பொருட்டு, இயங்கி பகைவர்களின் நாடுகளைக் கைப்பற்றியதை,

**''மாஇருங் கங்குலும் விழுத்தொடி சுடர்வரத்**
**தோள்பிணி மீகையர் புகல்சிறந்து நாளும்**
**முடிதல் வேட்கையர் நெடிய மொழியூஉக்**
**கெடாஅ நல்இசைத் தம்குடி நிறுமார்**
**இடாஅ ஏணி வியல்அறைக் கொட்ப**
**நாடுஅடிப் படுத்தலின்''** (பதிற்று. 81:10-15, ப. 287)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் ஆடவர் வலிமையும் வீரமும் மிகுந்து நாட்டைப் பெற வேண்டும் என்ற வேட்கையுணர்வு, போர் விருப்ப உணர்வு, குடிப்பெருமை காக்கும் பொறுப்புணர்வு கொண்டவர்களாகத் திகழ்ந்ததை அறியமுடிகிறது.

இங்ஙனம் பதிற்றுப்பத்து வாகைத்திணையில் சேரமன்னர்களின் வீரம், படைச்சிறப்பு, ஆற்றல் வீரர்களின் சினம், வேட்கை, பொறுப்பு, அவனது வெற்றி, போர்க்களக் காட்சி

போன்றவற்றில் தங்களது உணர்வுகளை வெளிப்படையாக வெளிப்படுத்தியுள்ளதை அறிய முடிகிறது. மேலும் உடைமை, 'பெருமிதம்', 'வெகுளி', 'உவகை' போன்ற மெய்ப்பாட்டு உணர்வினை வெளிப்படுத்துபவர்களாகவும் காணப்படுகின்றனர்.

வாகைத் திணையில் ஆடவர், பகைவரை அழித்தல் எனும் வெகுளி மெய்ப்பாட்டுணர்வுடனும் அஞ்சாத வீரம், நிலையான புகழுணர்வும் கொண்ட பெருமித மெய்ப்பாடும், வியப்பினால் உண்டாகும் 'மருட்கை' மெய்ப்பாடும், வருத்தத்தினால் வெளிப்படும் 'இளிவரல்' மெய்ப்பாடும், அணங்கினால் உண்டாகும் 'அச்ச' மெய்ப்பாடும், வெற்றி பெற்றதால் உண்டாகும் 'உவகை' மெய்ப்பாடும் கொண்டு திகழ்ந்தனர்.

மேலும் பகைவரைக் கண்டு நடுங்கும் உணர்வாகிய 'நடுக்கம்' எனும் மெய்ப்பாட்டுணர்வும், பகைவர்க்கு இரக்கங்காட்டும் 'அருள்' மெய்ப்பாட்டுணர்வும், வெற்றி வாகை சூடி 'இன்புறல்' மெய்ப்பாட்டுணர்வும், பகைநாட்டைக் கைப்பற்றிய உடைமை மெய்ப்பாட்டுணர்வும், ஒருபக்கம் சாராத நடுவுநிலைமை மெய்ப்பாட்டுணர்வும் கெண்டவராகக் காணப்படுகின்றனர்.

**வாகைத்திணை ஆடவர் பின்வரும் உணர்வுநிலைப் பட்டவராகக் காணப்படுகின்றனர்**

- குடிப்பெருமை காக்கும் உணர்வு கொண்டவர். (புறம். 17)
- புகழ், பெருமை, வீரம், இரக்கம், கொடை போன்ற உணர்வினைக் கொண்டவர், (புறம். 21,17,20,22,53, 19,23–26, 76–79,31,33,37,42,51,52,66,80–82,93,94, 98–100, 104,125, 167, 308, பதிற்று. 39,36,52.)
- சுற்றத்தைக் காக்கும் உணர்வு கொண்டவர். (புறம். 22)
- போர் விருப்ப உணர்வு கொண்டவர். (புறம். 23,31, 372, 369, 373)
- நாட்டுப்பற்றுணர்வும், பெற்றோர், சான்றோர் போன்றோரை மதிக்கும் உணர்வினர். (புறம். 279, 312)
- பெற்ற கடனைத் திருப்பிக் கொடுக்கும் உணர்வினர். பொருள் இல்லை எனினும் உதவும் உள்ளம் கொண்டோரிடம் சென்று யாசித்து வறியவர்க்கு (சுற்றத்தார்க்கு வழங்கும் வள்ளண்மை கொண்டவர். (புறம். 32,6,327, 329)
- பொருள் இருக்கும் போது வாரி வழங்கும் உணர்வினர். பொருள் இல்லாத நிலையில் உள்ள பொருள் அளவுக்கு வழங்கி மகிழும் அருளாளர். (புறம். 331)
- புறமுதுகிடும் பெரியோரைக் காக்கும் பொறுப்பு உணர்வு கொண்டவர். (புறம். 178)
- வேந்தர்க்கு உதவும் பேராண்மையர். (புறம். 179)

- உணவு குறைவாக இருப்பினும் சிலர்க்குத் தந்து தான் உள்ளது இருக்கும் இயல்பினர். (புறம். 315)
- ஒருவருக்கும் ஒருவர் உதவியாகவும், உற்ற துணையாகவும் இருக்கும் பண்பாளர். (புறம். 320, 323, 324)
- விருந்தோம்பலில் மென்மையும் போரில் வன்மையான மனவுணர்வும் கொண்டவர். (புறம். 170)
- புகழுரைக்குப் பணியும் பண்பாளர். (புறம். 296, 285)
- அகத்தில் அன்புணர்வும் புறத்தில் வீர உணர்வும் கொண்டவர். (புறம். 251)
- தன் பேச்சைக் கேட்டு போர் ஒழித்த அரசரை வாழ்த்தும் உணர்வினர். (புறம். 166)

**ஐ. பாடாண் திணையில் வெளிப்படும் ஆடவரின் மனஉணர்வுகள்**

"பாடாண் பகுதி கைக்கிளைக்குப் புறனே
நாடுங்காலை நாலிரண் டுடைத்தே'' (தொல்.புறத்.நூ.25,ப.39)

என்பர் தொல்காப்பியர். வெட்சி முதலாகப் பல திணைகள் போர்ச் செயல்களைக் கூறப் பாடாண், வீரர்களின் பெருமையும் புகழும் பேசுவதாக அமைகிறது. வீர வெற்றியை நேராகப் புகழ்ந்தால் அது வாகையாம். எனவே இலக்கிய உத்திகள் அமைய துயிலெடை நிலையாகவும், தேவபாணி, கைக்கிளை, ஆற்றுப்படையாகவும், பரிசின் நிலையாகவும் பாடுவதன் வழி ஆடவரின் ஈர வீரப் பண்புகளைப் போற்ற முனைதலேயாகும்.

அகத்திணை போலப் புனைவுக்கும், கற்பனைக்கும் ஓரளவு வாகைத்திணையும் பேரளவு பாடாண் திணையும் இடந்தரும். ஒருவனின் குறித்த ஒரு களவெற்றியையும் குடிபுரக்கும் ஆண்மை நிகழ்ச்சியினையும் கண்டு அச்சமயத்தில் அவன் வீரச் சால்பைப் பாடுவது வாகையெனவும், பொதுவான எக்களவெற்றி நிகழ்ச்சியையும் குறியாது ஒருவனின், வீரத்தன்மையையும், கொடைப் பண்பையும், பயன்கருதிப் போற்றல் பாடாண் திணையாகவும் கொள்ளப்படுகின்றது.

இவ்வேறுபாடு இன்றேல் இருதிணையும் ஒன்றாகிவிடும். "வெட்சித்திணையில் ஆகோள் மறவரின் ஆண்மையும், தும்பையில் தனி வீரர்களின் போர் அஞ்சாத திண்மையும் பேசப்பட்டமை போல ஈண்டு எளிய மனிதர்களின் நிலையைப் பேசும் துறைகள் இல்லை. வேந்தனின் பெருமையும் செல்வ வளமையுமே மிகப் பெரிதும் பேசப்படுகின்றன. வேந்தனை உறங்கச் செய்வதும், துயிலெழுப்புவதும் கூடத் துறை பொருளாகின்றன. 'புகழுக்கும் போற்றுதலுக்கும் வீரம் மட்டுமன்றிப் பிறந்த குடிப்பெருமையும் செல்வ வளமும் காரணமாக அமைந்தன'[39] என்று டாக்டர் கைலாசபதி குறிப்பது இங்கு எண்ணுதற்குரியது.

**புறநானூறு**

புறநானூற்றில் பாடாண் திணைச் சார்ந்த பாடல்கள் மொத்தம் 139 பாடல்கள் உள்ளன. அவை, வாழ்த்தியல் (9), இயன்மொழி (53), செவியறிவுறூஉ (6), பூவை நிலை (3), உடன்நிலை (1), குடைமங்கலம் (1), வாள்மங்கலம் (1), புலவராற்றுப்படை (2), விறலியாற்றுப் படை (4), பாணாற்றுப்படை (5), பரிசில் துறை (15), பரிசில் கடாஅநிலை (16), பரிசில் விடை (7), கடைநிலை (11) என்ற துறைகளைக் கொண்டு அமைந்துள்ளன.

பாடாண் திணையின் வாழ்த்தியல் துறையில் மன்னர்களின் கொடைத் திறனையும் வீரத்தையும் பாராட்டும் வகையில் புலவர்கள் பாடியுள்ளனர். சேரன் அந்துவஞ்சேரல் இரும்பொறை, அதியமான் நெடுமான் அஞ்சி, குமணன், சேரன் மாவண்கோ, பாண்டியன் உக்கிரபேர்வழுதி, சோழன் பெருநற்கிள்ளி, ஆய்அண்டிரன், அம்பர்கிழான், கிள்ளிவளவன், செல்வக் கடுங்கோ வாழியாதான் போன்றோர்களின் கொடையைப் புகழ்ந்தும் வீரத்தினைப் போற்றியும் பாடுவது வாழ்த்தியல் துறையாகும்.

சேரன் அந்துவஞ் சேரல் இரும்பொறை, கூரிய வாள்களையுடைய வீரர்களையுடைவன் என்று வாழ்த்துவதை,

> **''பன்மீன் நாப்பண் திங்கள் போலவும்**
> **சறவினத் தன்ன வாளோர் மொய்ப்ப''** (புறம். 13:2-7)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. சாதல் நீக்கும் நெல்லிக்கனியைத் தனக்கு தந்த அதியமான் நெடுமான் அஞ்சியைப் புகழ்ந்து,

> **"போர்அடு திருவில் பொலந்தார் அஞ்சி**
> **பால்புரை திருநுதல் பொலிந்த சென்னி**
> ... ... ... ... ... ... ...
> ... ... ... ... ... ... ...
> **சிறியிலை நெல்லித் தீம்கனி குறியாது**
> **ஆதல் நின்அகத்து அடக்கிச்**
> **சாதல் நீங்க எமக்குஈத் தனையே''** (புறம். 91:4-11, ப. 201)

என்று, ஔவையார் புகழ்ந்து பாடியுள்ளார். இதில் அதியமான் கொடை உணர்வு கொண்டவனாகவும் புலவர்கள் அழிவின்றி வாழவேண்டும் என்ற உணர்வு கொண்டவனாகவும் தனக்கு சாதல் நேரிடினும் புலவருக்குச் சாதல் நேரிடக் கூடாது என்னும் 'கைம்மிகல்' என்னும் மெய்ப்பாட்டு உணர்வும் கொண்டவனாகத் திகழ்வதைக் காண முடிகின்றது.

கடையெழு வள்ளல்கள் இறந்தபின், கொடை அளிக்க யாருமில்லை என்று வருந்திய போது, பாணர், கூத்தர் முதலானோர், 'இருந்துவந்தவர் துயரம் தீர்க்கின்றாய்' என்று கூற, விரைவாக உன்னை நினைத்து வந்தேன். உனது கொடை உள்ளத்தைக் கண்டு

மகிழ்ந்தேன் என்று பெருஞ்சித்திரனார், குமணனைப் புகழ்ந்து, பாடுவதிலிருந்து, குமணன் கடையெழு வள்ளல்களைப் போல கொடையளிக்கும் வள்ளல் தன்மை பெற்று விளங்கியதை (புறம். 158) உணர்த்துகின்றது.

சேரன் மாவண்கோவும், பாண்டியன் உக்கிரப் பெருவழுதியும், சோழன் பெருநற் கிள்ளி போன்ற மூவேந்தர்களையும் ஒருங்கே கண்ட ஔவையார்,

"வாழச் செய்த நல்வினை அல்லது
ஆழும் காலைப் புணைபிறி தில்லை;" (புறம். 367:9-10, ப. 516)

என்று பாடும் புறப்பாடலில் விண்ணுலகம் ஒத்த பகுதிகளையுடைய மண்ணுலகம் தம்முடையதே ஆயினும் தாம் இறந்து செல்லும் போது அதுவும் கூடவராது. பிறர் எனினும் வலிமையாளர்க்கு உரியதாய் அமையும். எனவே இரந்து வந்த பார்ப்பார்க்கு அவர் நினைந்த கைநிறையப் பொற்பூவும், பொன்னும் நீர்வார்த்துத் தந்து, மதுவைப் பருகி மகிழ்ந்து இரவலர்க்கு அணிகலன்களைக் குறையாமல் வழங்கி வாழவேண்டும். இவ்வுலகில், வாழ்வதற்காக வகுக்கப்பட்ட எல்லை அளவும்; நன்கு வாழ்வதற்கு வாய்ந்த நல்வினை ஒன்றுமேயல்லாது, பிறவிக்கடலில் ஆழும் காலத்தில் அதனைக் கடப்பதற்கு நல்வினையே துணையாய் நிற்கும். அந்தணர் வளர்க்கும் மூன்று தீயையும் போல வெண்குடையையும், கொடித் தேரையும் உடைய வேந்தர்களே,

"................................... வானத்து
வயங்கித் தோன்றும் மீனினும், இம்மென
இயங்கு மாமழை உறையினும்,
உயர்ந்துமேந் தோன்றிப் பொலிகநும் நாளே" (புறம்.367:15-18, ப. 516)

என்று வாழ்த்துவதன் மூலம் மூவேந்தர்களும் புலவர்களின் அறிவுரையை ஏற்று, வாழ்வியல் தத்துவங்களை உணர்ந்து வாழும் பண்பினராக இருந்ததை அறிய முடிகிறது. நன்னடையால் வரும் புகழ் எனும் இசைமை மெய்ப்பாட்டு உணர்வினராக இருந்ததை அறிய முடிகிறது.

பாடாண் திணையில் இயன்மொழித் துறை புறநானூற்றில் ஐம்பத்து மூன்று பாடல்கள் அமைந்துள்ளன. அவை மன்னர்களின் வீரம், குடிப்பெருமை, அறத்துடன் போர் புரிந்த நிலை, புகழ், கொடை போன்ற செய்திகளை உள்ளடக்கியுள்ளன. அதியமான் நெடுமானஞ்சியின் போர் வலிமையை, படை ஆற்றலை, வீரத்தை நன்கு அறிந்த ஔவையார்,

"ஆயிடை, உடன்றோர் உய்தல் யாவது? தடம்தாள்
பிணிக்கதிர் நெல்லின் செம்மல் மூதூர்
நுமக்கு உரித்தாகல் வேண்டின் சென்றுஅவற்கு
இறுக்கல் வேண்டும் திறையே;" (புறம். 97:17-21, ப. 207)

என்று, அஞ்சியின் சினத்துக்கு ஆளாகியவர் தப்ப முடியாது. தாளையும் பின்னிக் கிடக்கும் கதிர்களையும் உடைய நெல்லையுடைய பழமையான உங்கள் ஊர் உங்களுக்கு உரியதாய் இருக்க வேண்டுமானால், அவனுக்கு வரியை செலுத்த வேண்டும்; என்று கூறும் ஔவையாரின் அறிவுரையின் மூலம் திறை செலுத்தாத குறுநில மன்னரை ஒறுக்கும் உணர்வினர் என்பதை அறியமுடிகிறது. கொடையளிக்கும் வள்ளல் தன்மை வாய்ந்த வேள்பாரியை, கபிலர்,

> **"....................................... அறம் பூண்டு**
> **பாரியும் பரிசிலர் இரப்பின்**
> **வாரேன் என்னான் அவர்வரை யன்னே"** (புறம். 108:4-6, ப. 219)

என்று பாரியின் கொடைத்திறனைப் பாடுகின்றார். இதில் பாரி இரவலர் தன்னைக் கேட்டாலும் அளித்து பின் அவர்களின் ஆணைப்படி நடக்கும் உணர்வு கொண்டவன். தன்னையே இரவலர்க்கு ஈயும் பெருந்தன்மை கொண்ட கொடையுணர்வும் பெருமித மெய்ப்பாடும் பாரியிடம் வெளிப்படுவதை உணரமுடிகிறது.

ஆய் அண்டிரன் என்னும் வள்ளல், தன்னிடம் பரிசில் வேண்டி அடைந்தவர்க்கு, வழங்கிய யானைகளை கணக்கிடல் அரிது. முகில் மூடாமல் வானத்தில் ஓரிடமும் கருமையின்றி முழுமையாக வெள்ளி முளைப்பின் அவ்விண்மீன் தொகை அந்த யானைகளுக்குச் சமமாகும், என்கிறது புறம். 129-ம் பாடலடிகள் ஆய்அண்டிரன் ஈகையுணர்வை, அளவிட முடியாத வகையில் வழங்கும் வள்ளல் தன்மையை எடுத்துரைக்கின்றது.

ஈகையுணர்வு என்பது, மற்றவர்க்கு வலது கை கொடுப்பது, இடது கைக்குத் தெரியக்கூடாது என்பர். யாருக்குப் பரிசில் தந்தோம் என்பதை மறக்க வேண்டும் என்ற அரிய கருத்திற்குச் சான்றாக,

> **"பெறுதற்கரிய வீறுசால் நன்கலம்**
> **மார்பில் பூண்ட வயங்குகாழ் ஆரம்**
> **மடைசெறி முன்கைக் கடகமோடு ஈத்தனன்;**
> **'எந்நா டோ'என நாடும் சொல்லான்;**
> **'யாரீ ரோ'வென பேரும் சொல்லான்;"** (புறம். 150:19-23, ப. 264)

என்ற பாடலடிகளில் கண்டீரக் கோப்பெரு நற்கிள்ளியின் ஈகைத் திறத்தை வன்பரணர் குறிப்பிட்டுள்ளார். இதில் பெறுவதற்குரிய சிறந்த அணிகலம் வேறு இல்லை என்று சொல்லித் தன்மார்பில் அணிந்திருந்த முத்துமாலையை, மூட்டில் அணிந்த கைக் கடகத்தொடு கொடுத்து, ஊரையும் பேரையும் சொல்லாமல் சென்றான். அவனது ஈகை உணர்வு போற்றத்தக்க வண்ணம் உள்ளதையும் 'பெருமித' மெய்ப்பாட்டுணர்வையும் அறிய முடிகிறது.

நாட்டு மக்களைக் காக்கும் அரசனை, இரவின் கடைசிப் பொழுதாகிய வைகறையில் பலரும் உறங்கவும் அவன்மட்டும் உறங்காதவனாய் உலகைக் காக்கும் உணர்வுடன் இருந்ததை,

> **"கடைத்தோன்றிய கடைக்கங்குலால்**
> **பலர்துஞ்சவும் தான்துஞ்சான்**
> **உலகுகாக்கும் உயர்கொள்கைக்**
> **கேட்டோன்"** (புறம். 400:5-8)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இதில் சோழன் நலங்கிள்ளி, நாட்டின் மீதும், நாட்டு மக்கள் மீதும் அன்பு கொண்டவனாய் அவர்களைக் காக்கும் பொறுப்புணர்வுடன் செயல்பட்டதை அறியமுடிகிறது.

பாடாண் திணையின் செவியறிவுறூஉ துறையில் புறநானூற்றில் ஆறு பாடல்கள் இடம்பெற்றுள்ளன. அக்கால அரசர்களுக்குத் தேவையான நேரத்தில், புலவர்கள் அறிவுரை வழங்கி நல்வழிப்படுத்துவர். அத்தகைய அறிவுறுத்தலை சோழன் கிள்ளி வளவனுக்கு வெள்ளைக்குடி நாகனார்,

> **"மாரி பொய்ப்பினும் வாரி குன்றினும்**
> **இயற்கை அல்லன செயற்கையில் தோன்றினும்**
> **காவலர்ப் பழிக்கும்இக் கண்ணகல் ஞாலம்;**
> **அதுநற் கறிந்தனை ஆயின் நீயும்**
> **நொதும லாளர் பொதுமொழி கொள்ளாது**
> **பகடு புறந் தருநர் பாரம் ஓம்பிக்**
> **குடிபுறத் தருகுவை யாயின்நின்**
> **அடிபுறந் தருகுவர் அடங்கா தோரே"** (புறம். 35:27-34, ப. 132)

பாண்டியன் அறிவுடைநம்பிக்கு, அறிவுடைய ஆள்வோன் செய்யும் முறையறிந்து வரிகொள்வான் எனின், நாடு கோடிப் பொருளைத் தேடிச் சிறந்து விளங்கும்; ஆள்வோன் முறையறியான் ஆகி நாள்தோறும் தகுதியில்லா ஆரவாரக் கூட்டத்தோடு இரக்கம் இல்லாமல் எடுக்கும் பொருளை விரும்பினால், யானை தானே உண்ணப் புகுந்த நிலம் போலத் தானும் நுகரப் பெறாமல் உலகமும் கெடும் என்று பிசிராந்தையார் வலியுறுத்துவதைப் புறம். 35ம் பாடலடிகள் உணர்த்துகின்றன. புலவர்கள், அரசரிடம் தவறோ, நெறிபிறழ்தலோ ஏற்படும் போது உடனடியாக அதைக் கண்டித்து வழிநடத்தி நெறிப்படுத்தும் உணர்வினராகத் திகழ்ந்ததை அறிய முடிகிறது.

பூவை நிலை எனும் துறை, புறநானூற்றில் மூன்று பாடல்களில் அமைந்துள்ளது. இதில் அரசர்களின் வளமை, இளமையான தோற்றம், அறிவுரை, வாழ்த்து என்ற நிலைகளில் செய்திகள் இடம்பெற்றுள்ளன. நக்கீரனார், பாண்டியன் நன்மாறனை, "இரவலர்க்கு அருங்கலம் அருகாது ஈயா"[40] என்று ஈகையுணர்வுடன் செயல்பட வேண்டும் என்றும்,

**"ஆங்கினிது ஒழுகுமதி ஓங்குவாள் மாற,**
**அங்கண் விசும்பின் ஆரிருள் அகற்றும்**
**வெங்கதிர்ச் செல்வன் போலவும் குடதிசைத்**
**தண்கதிர் மதியம் போலவும்**
**நின்று நிலைஇயர் உலகமோடு உடனே"** (புறம். 56:21-25, ப. 160)

என்று புகழ்ந்துரைக்கின்றார். அரசன் நாட்டு மக்களுக்குப் பொருள்களை வழங்கிக் காத்து, அழகிய இடமகன்ற வானில் கப்பிய இருளை ஓட்டும் ஞாயிறு போலவும், மேல்பால் எழுந்த குளிர்ந்த மதியைப் போலவும் உலகம் உள்ளவரை வாழவேண்டும் என்று வாழ்த்தும் உணர்வு கொண்டவராகப் புலவர்கள் விளங்கினர்.

உடன்னிலை துறையில், சோழன் பெருந்திருமாவளவனும், பாண்டியன் பெருவழுதியும் ஒருங்கே இருந்த போது, காரிக் கண்ணனார், உங்களுள் ஒருவர்க்கு ஒருவர் உதவுங்கள். நீங்கள் இருவரும் கூடியிருக்கும் இந்நிலை மாறாமல் இருந்தால் கடல்சூழ்ந்த இப்பெரிய உலகம் கைவசமாகும். ஆதலால்,

**"............. நல்ல போலவும் நயவ போலவும்**
**தொல்லோர் சென்ற நெறிய போலவும்**
**காதல் நெஞ்சின்நும் இடைபுகற்கு அலமரும்**
**ஏதில் மாக்கள் பொதுமொழி கொள்ளாது**
**இன்றே போல்கநும் புணர்ச்சி; வென்றுவென்று**
**அடுகளத் துயர்கநும் வேலே;"** (புறம். 58:24-32, ப. 163)

என்று அவர்களுக்கு அறிவுறுத்தி வாழ்த்தும் புலவரின் உணர்வுகள் வெளிப்படுகிறது. இங்கு புலவர்களின் 'வாழ்த்துதல்' என்னும் மெய்ப்பாட்டுணர்வும், பெருமித மெய்ப்பாட்டுணர்வும் வெளிப்படுகிறது.

அரசர்களின் வீரத்தை வெளிப்படுத்தும் கருவியான வாள் பற்றி வாள் மங்கலம் துறையிலும் சேரமான் கோக்கோதையிடம் பரிசில் பெற புலவரை ஆற்றுப்படுத்துதல், புலவராற்றுப்படைத் துறையிலும், பரிசிலை வாரி வழங்கும் ஈகை உணர்வு கொண்ட மன்னர்களிடம் விறலியர், பாணர் போன்றோரை ஆற்றுப்படுத்தும் பாடல்களும் இடம்பெற்றுள்ளன.

புறநானூற்றில் பரிசில் கடாஅநிலைத் துறையில் பதினாறு பாடல்கள் இடம்பெற்றுள்ளன. இதில் அரசர்களிடம் புலவர்கள், விறலியர், பாணர் போன்றோர் சென்று வாழ்த்திப் பாடியும் ஆடியும் மன்னர்களை மகிழ்வித்துப் பரிசில் பெற்று வந்ததைக் காட்டுகின்றன.

சேரமான் பெருங்கடுங்கோவின் வீர உணர்வை, தனக்கு மனவெப்பத்தை உண்டாக்கி பகைவர் அரணை அழித்து, எதிர்த்தவரை புறங்காட்டி ஓடச் செய்தான். அவ்வீரத்தினைப் புகழ்ந்து பாடிய ஆடல் மகளுக்கு சிறந்த பொன்னால் செய்யப்பட்ட அணிகலன், பாணனுக்கு

பொன்னால் ஆக்கப்பட்டதும், வெள்ளி நாரால் தொடுக்கப்பட்டதும் ஆகிய தாமரைப் பூவையும் வழங்கினான். இத்தகு ஈகை உணர்வை,

**"இழைபெற்ற பாடினிக்குக்
குரல்புணர்சீர்க் கொளைவல் பாண்மகனும்மே
எனவாங்கு
ஒள்ளழல் புரிந்த தாமரை
வெள்ளி நாரால் பூப்பெற் றிசினே"** (புறம். 11:14-18, ப. 90)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. அதியமான் நெடுமான் அஞ்சியின் ஈகை உணர்வை பல நாள்கள் பலரொடு தொடர்ந்து போனாலும் யானை தன் கொம்புகளிடையே கொண்ட கவளம் வாய்க்குள் போவது போல் பரிசு பெறுவது உறுதி என்று ஔவையார்,

**"அதியமான் பரிசில் பெறூஉம் காலம்
நீட்டினும் நீட்டா தாயினும் யானைதன்
கோட்டிடை வைத்த கவளம் போலக்
கையகத் ததுஅது பொய் ஆகாதே
அருந்தஏ மாந்த நெஞ்சம்
வருந்த வேண்டா வாழ்கவன் தாளே"** (புறம். 101:5-10, ப. 213)

என்று அதியமானின் ஈகையுணர்வைப் புகழ்ந்து பாடுவதைக் காணமுடிகின்றது. குமணனிடம் தனது வறுமையை எடுத்துக்கூறி பரிசில் வேண்டி நிற்கும் பெருந்தலைச் சாத்தனார்,

**"ஆடுநனி மறந்த கோடுயர் அடுப்பின்
ஆம்பி பூப்பத் தேம்புபசி உழவாப்
பாஅல் இன்மையில் தோலொடு திரங்கி
இல்லி தூர்ந்த பொல்லா வறுமுலை
சுவைத்தொறு அழூஉம்தன் மகத்துமுகம் நோக்கி
நீரொடு நிறைந்த ஈரிதழ் மழைக்கண்என்
மனையோள் எவ்வம் நோக்கி நினைஇ
நிற்படர்ந்திசினே நற்போர்க் குமண"** (புறம். 164:1-8, ப. 287)

என்று தன் வறுமையைக் கூறி பரிசில் வேண்டுகிறார். இதில் புலவரின் வறுமை நிலை, வறுமையில் வாடும் அவரது குடும்ப உறுப்பினர்களின் துயரம் வெளிப்படுகிறது. இதில் 'அழுகை' எனும் மெய்ப்பாட்டில் நிலைக்களனான 'வருத்தம்' வெளிப்படுகிறது. இதனைப் போக்கும் குமணன் இரக்க உணர்வுடன் ஈகை செய்யும் பேராளனாக விளங்குவதைக் காண முடிகின்றது.

மேலும்,

**"புல்லென் கண்ணர் புரவலர்க் காணாது
கல்லென சுற்றமொரு கையழிந்து புலவர்''** (புறம். 240:11-12, ப. 383)

என்ற பாடலடிகள் பசியின் கொடுமையால் வருந்தும் புலவரின் அழுகை மெய்ப்பாட்டினை வெளிப்படுத்துகிறது. இதில் புலவர் பாடும் வல்லமை பெற்றதோடு குடும்ப வறுமையப் புரிந்து அதனைப் போக்கும் மன உணர்வு கொண்டவராக விளங்கினர்.

மூப்பு எனும் முதுமையை நிலைக்களனாகக் கொண்டு நிகழும் இளிவரல் மெய்ப்பாட்டின் கண் முதுமை காரணமாக எழும் தளர்ச்சியை, அதனால் வெளிப்படும் இளிவரலை,

**"நெடுநீர்க் குட்டத்துத் துடுமெனப் பாய்ந்து**
**குளித்துமணற் கொண்ட கல்லாவிளமை**
**அளிதோ தானே யாண்டுண்டு கொல்லோ**
**தொடித்தலை விழுத்தண் டூன்றி நடுக்குற்**
**றிருமிடை மிடைந்த சிலசொற்**
**பெருமூ தாளரே மாகிய வெமக்கே''** (புறம். 243:9-15, ப. 386)

என்ற பாடல் வெளிப்படுத்துகின்றது. மடுவில் பாய்ந்து மூழ்கிக் கீழே தரைக்குச் சென்று அங்கிருந்து மணலைக் கொண்டு காட்டியது இளமைப்பருவம். பூண் செறிந்த தலையையுடைய பருத்த தண்டு கோலையூன்றித் தளர்ந்து இருமலுக்கு இடையில் நெருங்கிய சொற்களையே பேசும் ஆற்றலை உடைய முதுமைப் பருவத்தில் இளமையை நினைந்து வருந்த வைக்கும் மூப்பினால் இளிவரல் மெய்ப்பாட்டினை வெளிப்படுத்துகிறது. இதில் தலைவன் உடல் முதுமைபெற்றாலும் மன உணர்வு இளமையோடு செயல்படும் தன்மை கொண்டவனாகத் திகழ்கிறான். இளிவரல் மெய்ப்பாட்டின் இரண்டாம் நிலைக் களனான பிணி என்பது நோயுடைமை என்பர். இதனை,

**" .... ..... .... பிணியுடை யீரும் பேணித்''** (புறம். 9:21, ப. 88)

**" யாங்குப் பெரிதாயினும் நோயன''** (புறம். 245:1, ப. 388)

போன்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. புலவர்கள் தங்கள் வறுமையைப் போக்கிக் கொள்ள அரசர்களை நாடிச் செல்வர். அப்புலவர்களின் நிலை அறிந்து அவர்கள் விரும்பியதை விட அதிகமாகவும், விரும்பும் அளவுடைய பொருளையும் அளிக்கும் மன்னர்களுக்கு இடையில், பாண்டியன் இலவந்திகைப் பள்ளி துஞ்சிய நன்மாறன், புலவரைக் கண்டு அவர் துயர் தீர்க்காததால், அப்புலவர்,

**"ஒல்லுவது ஒல்லும் என்றலும் யாவர்க்கும்**
**ஒல்லாது இல்லென மறுத்தலும் இரண்டும்**
**ஆள்வினை மருங்கில் கேண்மைப் பாலே;**
**ஒல்லா தொல்லும் என்றலும் ஒல்லுவது**
**இல்லென மறுத்தலும் இரண்டும் வல்லே**
**இரப்போர் வாட்டல் அன்றியும் புரப்போர்**
**புகழ்குறை படூஉம்"** (புறம். 196:1-7, ப. 325)

இரவலர்க்கு ஈயும் தன்மையைக் கடைபிடித்து வாழவேண்டும் என்று கூறுகிறார். அரசனுக்கு பரிசில் வழங்கும் அவசியத்தை உணர்த்தும் புலவரின் உணர்வு வெளிப்படுகிறது.

பரிசில்களை வழங்கி புலவர்களின் துயரைத் தீர்க்கும் அரசர்களின் வாழ்வு திருந்திய வாழ்வு என்றும் அவர்கள் அறிவில் சிறந்து விளங்குவர் என்றும் குறிப்பிட்டுள்ளார். ஆனால் வறுமையில் வாழும் எங்களுக்கு அவ்வறுமை அறிவை மழுங்கச் செய்கிறது. எனவே எங்களின் வறுமையை விரைந்து போக்கி, எங்களின் அறிவுத்திறனைக் காக்க வேண்டும் என வருந்துகின்றார். இதனை,

> **"................................... உள்ளிய**
> **விருந்துகண்டு ஒளிக்கும் திருந்தா வாழ்க்கைப்**
> **பொறிப்புணர் உடம்பில் தோன்றிஎன்**
> **அறிவுகெட நின்ற நல்கூர்மையே"** (புறம். 266:10-13, ப. 409)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. அக்கால அரசர்கள் புலவர்களின் வறுமையைப் போக்கி அவர்களின் புலமையைக் காக்கும் பொறுப்புணர்வு கொண்டவராக விளங்கியதைக் காணமுடிகின்றது.

பரிசில் துறையில் புறநானூற்றில் பதினைந்து பாடல்கள் இடம்பெற்றுள்ளன.[41] அரசர்களை நாடிவந்த புலவர்களுக்கு கொடையளிக்கும் உணர்வு கொண்டவர்கள் கொடையளிக்கும் வண்ணம் அவர்களைப் புகழ்ந்து பாடி பரிசில் பெற முனையும் நிலையே பரிசில் துறை ஆகும். முன்னர் அவர்கள் செய்த கொடையை நினைவுகூர்ந்து, புகழும் போது மன்னர்களின் மனம் குளிர்ந்து உவகையுணர்வு மேலிட்டவராய் பரிசில்களை வழங்குவர். எனினும் யாது காரணத்தாலோ பரிசில் வழங்க நீட்டித்தாலும், பரிசில் வழங்க முடியாத நிலையிலும் அரசர்கள் தவிக்கும் போது புலவர்கள் சினத்துடன், முன்செய்த கொடையை எண்ணி வந்தோம் என்று கூறி தங்கள் நிலையில் தாழாமல் மன்னர்களைப் புகழ்ந்து செல்வர்.

கண்டீரக் கோப்பெரு நள்ளியைப் புகழ்ந்து, அவன் நாட்டு வளத்தைப் பாராட்டி அவனது கொடையுணர்வை எண்ணி மனம் மகிழ்ந்து,

> **"நாள்தோறும் நன்கலம் களிற்றொடு கொணர்ந்து**
> **கூடுவிளங்கு வியனகர்ப் பரிசில்முற்று அளிப்பப்**
> **பீடுஇல் மன்னர்ப் புகழ்ச்சி வேண்டிச்**
> **செய்யா கூறிக் கிளத்தல்**
> **எய்யாது ஆகின்றுஎம் சிறுசெந் நாவே"** (புறம். 148:3-7, ப. 263)

என்று வன்பரணர் குறிப்பிடுவதில், அரசன் கொடையுணர்வு கொண்டவனாகவும், புலவர் தன்னிலை தாழாமல் அவரது புகழைச் செருக்குடன் கூறியதில் அவரின் 'வெகுளி' மெய்ப்பாடும், புலமையுணர்வும் வெளிப்படுவதை உணர முடிகிறது.

அலைமோதும் கடற்கரையை அடுத்துச் சென்றாலும் அறிந்தாரைக் கண்டால் நீர் வேட்கையைப் போக்கும் சிறிதாகிய ஊற்று நீரைக் கேட்பர் மாந்தர். அதுபோல் அரசர் பக்கத்திலே இருந்தாலும், குற்றமற்ற வள்ளல் தன்மையுடையோரைத் தேடியே புலவர் செல்வர்; அதனால் யானும் உன்னைத் தேடி வந்தேன். எனவே,

**"ஈயென இரத்தலோ அரிதே; நீஅது**
**நல்கினும் நல்காய் ஆயினும் வெல்போர்**
**எறிபடைக் கோடா ஆண்மை அறுவைத்**
**தூவிரி கடுப்பத் துவன்றி மீமிசைத்**
**தண்பல இழிதரும் அருவிநின்**
**கொண்பெருங் கானம் பாடலெனக்கு எளிதே''** (புறம்.154:8-13, ப. 271)

என்று கூறி, உன்னிடம் பரிசில் வேண்டி இரப்பது எனக்கு அரிதான செயல். ஆனால் உன்னையும், போரில் புறங்காட்டாத உனது ஆண்மையையும், உனது வளமான நாட்டையும் புகழ்ந்து பாடுவது எனக்கு எளிதானது என்பர் புலவர். இதில் புலவர்களின் 'பெருமித' மெய்ப்பாட்டு உணர்வு புலனாகிறது.

புரவலர்களாகத் திகழும் அரசர்கள், பொழிந்துவிட்டோம் என்று மழை பெய்யாது போயினும், முன்னே விளைந்துவிட்டோம் என்று நிலம் விளையாது போயினும் உயிர்களுக்கு எல்லாம் வாழ்வென்பது இல்லை. அதுபோல் எம்போன்ற புலவர்கள் கேட்பின் முன்னே பெற்றுக்கொண்டீர் என்று மறுப்பது கொடுமையான செயலாகும். ஆனால் நீ அத்தகையன் அல்லன். உன்னைப் புகழ்ந்து பாடுபவர்க்கு வழங்குதலைக் கடமையாகக் கொண்டு கொடுக்கும் வண்மையாளன், இரவலர்களைக் காப்பதே கடமை எனக் கொண்டு வாழ்பவன். எனவே எனக்கு பரிசில் கொடுத்து காப்பாயாக என்று புலவர் குறிப்பிட்டுள்ளார். இதனை,

**"கழிந்தது பொழிந்துஎன வான்கண் மாறினும்**
**தொல்லது விளைந்துஎன நிலம்வளம் கரப்பினும்**
**எல்லா உயிர்க்கும் இல்லால் வாழ்க்கை**
**இன்னும் தம்மென எம்மனோர் இரப்பின்**
**முன்னும் கொண்டிரென நும்மனோர் மறுத்தல்**
**இன்னா தம்ம............................"** (புறம். 203:1-6, ப. 336)

என்றும்,

**"பாண்கடன் இறுக்கும் வள்ளியோய்,**
**பூண்கடன் எந்தைநீ இரவலர் புரவே"** (புறம். 203:11-12, ப. 336)

என்ற பாடலடிகள் மூலம் உணர முடிகிறது. இதில் புலவர்கள் இரக்கும் போது, புரவலர் பரிசில் தரமறுத்துவிடக் கூடாது என்று அறிவுறுத்தும் புலவரின் மனஉணர்வு வெளிப்படுகிறது.

புலவர்கள், அரசர்களிடம் சென்று எனக்குப் பொருள் வேண்டும் என இரந்து கேட்பதை இழிவாக எண்ணி, அரசர்களே மனம் உவந்து பரிசில்களை அளிக்க வேண்டும் என எண்ணுபவர்கள், அவ்வாறு பரிசில் கிடைக்கவில்லை எனில் அரசர்களை இகழாமல், பறவைக் குறியையும், பொழுதையும் பழிப்பார்களே தவிர புரவலர்களை அல்ல என்று, தன் பெருந்தன்மையான உணர்வினை வெளிப்படுத்துகிறார். இதனை,

**"ஈயென இரத்தல் இழிந்தன்று அதனெதிர்**
**ஈயேன் என்றல் அதனினும் இழிந்தன்று"** (புறம். 204:1-2, ப. 337)

என்றும்,

**"புள்ளும் பொழுதும் பழித்தல் அல்லதை**
**உள்ளிச் சென்றோர்ப் பழியலர்; அதனால்,**
**புலவேன் வாழியர் ஓரி; விசும்பில்**
**கருவி வானம் போல**
**வரையாது சுரக்கும் வள்ளியோய் நின்னே"** (புறம்.204:10-15, ப. 337)

என்ற பாடலடிகள் மூலம் புலவரின், இரக்காமல் பெறுதல் வேண்டும் என்ற உணர்வும், வானில் திரண்ட முகிலைப் போல் அளவில்லாது கொடுக்கும் ஓரியின் கொடையுணர்வும் வெளிப்படுகிறது. மேலும் புலவர்,

**"முற்றிய திருவின் மூவர் ஆயினும்**
**பெட்பின்று ஈதல் யாம்வேண் டலமே"** (புறம். 205:1-2, ப. 339)

என்று விருப்பமில்லாமல் வழங்கும் கொடையை மூவேந்தரே கொடுத்தாலும் அதை விரும்பாமல் வெறுக்கும் உணர்வு கொண்டவராகத் திகழ்ந்ததையும் 'முனிதல்' என்னும் மெய்ப்பாட்டு உணர்வு கொண்டு திகழ்ந்ததையும் அறிய முடிகிறது.

புரவலர்களை நாடிச் செல்லும் புலவர்களின் மன உணர்வை, குற்றமற்ற தாயிடம் பால்பருக விரும்பும் குழந்தையைப் போல பரிசுபெறும் ஆர்வத்தால் நின்னிடம் வந்தேன் என்று கூறுவதில் புலவரின் உள்ள உணர்வை அறிய முடிகிறது. இதனை,

**"நசைதர வந்தனென் யானே; வசைஇல்**
**தாயில் தூஉம் குழவி போல"** (புறம். 379:14-15, ப. 539)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

'பரிசில் விடை' என்னும் துறையில், புறநானூற்றில் ஏழு பாடல்கள் இடம்பெற்றுள்ளன. புலவர்களுக்கு மன்னர் வழங்கும் பரிசுகளை, கொடையை எண்ணி மகிழ்ந்து, உள்ளம் உவகைபெற்று பெருமிதம் கொள்ளும் புலவர்களின் மன உணர்வும், மன்னர்களின் கொடையுணர்வும் இத்துறையில் வெளிப்படுகின்றன.

நாஞ்சில் வள்ளுவன், வளையல் அணிந்த விறலியர் தோட்டத்தில் பறித்த கீரைக்கு இடுபொருளாக சில அரிசியை வேண்டினார்கள். அவனோ பரிசிலர்க்கு வழங்கும் தகுதி

அறிந்தமையால் எம் வறுமையைப் பாராமல் அவனது மேம்பாட்டைக் கருதி மலைபோன்றதொரு யானையைக் கொடையாக அளித்தான். ஒருவற்கு ஒன்றைக் கொடுக்கும் போது ஆராயாமல் கொடுக்கும் கொடையுணர்வும் உள்ளது என அறிந்தேன், என்று பாடும் புலவரின் உள்ள உணர்வை புறம்– 140ம் பாடலடிகள் உணர்த்துகின்றன.

அலை எனும் நிலைக்களனால் தோன்றும் வெகுளிக்கு இளவெளிமானிடம் வெகுளிகொண்டு பெருஞ்சித்திரனார் பாடிய பாடல்,

**"இரவலர் புரவலை நீயுமல்லை**
**புரவல ரிரவலர் இல்லையு மல்லர்**
**இரவல ருண்மையுங் காணினி யிரவலர்க்**
**கீவோ ருண்மையுங் காணினி நின்னூர்க்**
**கடிமரம் வருந்தத் தந்தியாம் பிணித்த**
**நெடுநல் யானை யெம்பரிசில்''** (புறம். 162:1-6, ப. 283)

என்று பாடி அவனிடம் வெகுண்டது வெளிப்படுகிறது. இளவெளிமான் இரவலர்க்கு சிறிது பொருள் கொடுத்தது கண்டு அதைப் பெறாமல் குமணனிடம் சென்று பாடி யானையைப் பரிசிலாகப் பெற்று வந்து, இளவெளிமானின் காவல்மரத்தில் கட்டி அவனை இழி படுத்துகிறார், இதில் புலவர் தன் தகுதியை அறியாதவர் மேல் வெகுண்டு எழும் உணர்வு கொண்டவராகக் காணப்படுகின்றார்.

தம்பியால் நாடு கொள்ளப்பட்டுக் காடு பற்றியிருந்த குமணனைக் கண்டு பாடிய பெருந்தலைச் சாத்தனார்க்கு, பாடிப் பரிசு பெற வந்த பாவலன் பரிசு பெறுதல் இன்றி வறிதே திரும்புதல் என்நாட்டை இழந்ததனினும் கொடுமையானது என்று நினைந்து வாளை என்னிடத்துத் தந்தான்; தலையைப் பரிசாகக் கொடுப்பதற்கு, அதனிற் சிறந்தது அவனுக்கு ஒன்று இல்லாமையால். தன்னிடம் பொருளில்லாத நிலையில் இரவலர்க்கு தன் தலையையே பரிசாகக் கொடுக்கத் துணிந்த குமணனின் கொடை உணர்வை,

**"பாடுபெறு பரிசிலன் வாடினன் பெயர்தலென்**
**நாடிழந் தனினும் நனிஇன் னாதுஎன**
**வாள்தந் தனனே தலைஎனக்கு ஈயத்**
**தன்னிற் சிறந்தது பிறிதொன்று இன்மையின்"** (புறம். 165:10-14,ப. 285)

என்று பெருந்தலைச் சாத்தனார் பாடியுள்ளார். இதில் குமணன் இரவலர்க்கு பரிசு கொடுக்க முடியாத நிலைமையை இழிவாகக் கருதும் 'இளிவு' என்னும் மெய்ப்பாட்டு உணர்வினனாகவும் தன் தலையைக் கொடையாகத் தரும் துணிவுணர்வு கொண்டவனாகத் திகழ்வதையும் காணமுடிகின்றது.

இரவலர்களாகத் திகழும் அரசர்கள் மட்டும் கொடையுணர்வு கொண்டவராகத் திகழ்ந்தனர் அல்லர். இவர்களிடம் பாடிப் பெற்ற கொடையை பரிசிலாக வழங்கும் தன்மை புலவர்களிடத்தும் காணப்பட்டதை,

**"நின்நயந்து உறைநர்க்கும் நீநயந்து உறைநர்க்கும்**
**பன்மாண் கற்பின்நின் கிளைமுத லோர்க்கும்**
**கடும்பின் கடுபசி தீர யாழநின்**
**நெடுங்குறி யெதிர்ப்பை நல்கி யோர்க்கும்**
**இன்னோர்க்கு என்னாது என்னொடும் சூழாது**
**வல்லாங்கு வாழ்தும் என்னாது நீயும்**
**எல்லோர்க்கும் கொடுமதி மனைகிழ வோயே"** (புறம்.163:1-7, ப. 286)

என்று தன் மனைவியைப் பணிக்கும் பெருஞ்சித்திரனாரின் கொடையுணர்வும், இரக்க உணர்வும் இதில் வெளிப்படுவதை உணரலாம். இதில் நாளை வேண்டும் என கருதாது அனைவர்க்கும் கொடு என்பதில் பெருஞ்சித்திரனாரின் பரந்து விரிந்த உள்ள உணர்வு பெருமித மெய்ப்பாட்டுணர்வும் வெளிப்படுவதை அறிய முடிகிறது.

பாடாண் திணையின் கடைநிலை துறையில் புறநானூற்றில் பதினொரு பாடல்கள் இடம்பெற்றுள்ளன.[42] கொடையளிக்கும் உணர்வுகொண்டு எங்களுக்கு தேவையானவற்றை அளிக்கும் இரவலர்கள் உள்ளதால் இனி கவலையில்லாமல் மகிழ்ந்து இருப்போம் என்று புலவர்கள் பெருமிதம் கொள்ளும் நிலையே பரிசில் கடைநிலைத் துறையாகும்.

சோழன் நலங்கிள்ளி முன்னாளில் பரிசில் தந்ததை அறிந்து அவனிடம், ஒளி மணியையும் அழகிய நிறத்தையும், புள்ளிகளையும் கண்ணாகிய செவியையும் பிளவுற்ற நாவையும் உடைய பாம்பு தன் தோலை உரித்து நீக்கியது போல எங்களின் வறுமையைப் போக்கும் கொடையாளனே, உனது கொடையுள்ளம் வளர மேலும் மேலும் பரிசில்களை வழங்கி புகழைப் பெறுவாய் என்று மனம் மகிழ்ந்து,

தனது பெருமித மெய்ப்பாட்டு உணர்வை கோவூர்கிழார் வெளிப்படுத்துவதைக் காணமுடிகின்றது. அதியமான் மகன் பொகுட்டெழினியை,

**"ஊண்முறை ஈத்தல் அன்றியும், கோண்முறை**
**விருந்திறை நல்கி யோனே;"** (புறம். 392:18-19, ப. 561)

என்று அவனது கொடையுணர்வையும், விருந்தோம்பலையும் பாராட்டிப் புகழ்ந்து பாடியுள்ளார்.

இரவலர்கள், புலவர்களின் வறுமை அறிந்து, அவருக்குத் தேவையானவற்றை, வரிசையறிந்து வழங்குதலை விரும்பும் உணர்வினராக இருந்ததை,

**"வெஞ்சின வேழம் நல்கினன் அஞ்சி**
**யானது பெயர்த்தனென ஆகத் தானது**
**சிறிதென உணர்ந்தமை நாணிப் பிறிதுமோர்**
**பெருங்களிறு நல்கி யோனே; அதற்கொண்டு**
**இரும்பேர் ஒக்கல் பெரும்புலம் புறினும்**
**துன்னரும் பரிசில் தருமென**
**என்றும்செல் லேனவன் குன்றுகெழு நாட்டே"** (புறம்.394:12-18, ப.565)

என்று திருக்குட்டுவனைப் பாடி அவனது வரிசையறிந்து பரிசு வழங்குதலை உணர்த்தும் புலவரின் சாதுரிய உணர்வு வெளிப்படுகிறது. பரிசில் வேண்டி வந்த புலவர்க்குப் பகையை அழித்த பின்னரும் சினம் தணியாத யானையைத் தந்தான். அதனைக் கண்டு அஞ்சி அவ்வானையை அவனிடமே விடுத்தேன். அது என் தகுதிக்குத்தக்க பரிசில் இல்லை என உணர்ந்து வெட்கித் தலைகுனிந்தான். தன்னிலையை உணரும் தன்மையை உணர்த்திய புலவரின் உணர்வும், அதனை உணரும் பண்பு கொண்டவனாக அரசனும் திகழ்ந்ததை அறிய முடிகிறது. இங்கு தன்னிலையில் தாழ்தல் எனும் 'அசைவு' மெய்ப்பாட்டுணர்வு வெளிப்படுகிறது.

இங்ஙனம் பாடாண் திணை அரசர்களின் ஈகை, கொடை, புகழ் போன்ற உணர்வுகளை புலவர்களின் பாடல்களின் மூலம் கண்டறியப்பட்டுள்ளது. இரவலர்க்குத் தேவையான புகழ், பாராட்டு மொழி அளித்து அதே நேரத்தில் தேவையான நேரத்தில் வலியுறுத்தும் துணிவுள்ளம் கொண்டவராகத் திகழ்ந்ததைக் கண்டறியப்பட்டது.

பாடாண் திணையில் ஆடவர், இசைமை எனும் புகழுணர்வு, கொடையுணர்வு, ஈகையுணர்வு கொண்டு பெருமித மெய்ப்பாட்டுணர்வுடனும், முதுமை, பிணியினால் வரும் இளிவரல் மெய்ப்பாட்டுணர்வுடனும், வஞ்சினம் கொள்ளும் வெகுளிமெய்ப்பாட்டுணர்வும், தன்னை எளியானக்கி இழிவுபடுத்தும் நிலையில் இளிவு, தன்னிலையில் தாழும் அசைவு உணர்வு கொண்ட 'அழுகை' மெய்ப்பாட்டுணர்வும் கொண்டவராகக் காணப்படுகின்றனர்.

மேலும், குணத்தில் அளவின் மிகுந்து 'கைம்மிகல்' எனும் மெய்ப்பாடும், வஞ்சினத்தினால் இரவும் பகலும் உறங்காத நிலையில் 'துஞ்சல்' எனும் மெய்ப்பாடும், வெற்றி பெற்றோரை வாழ்த்தும் மெய்ப்பாடும், தனக்கு ஈயாத மன்னரை வெறுக்கும் 'முனிதல்' எனும் மெய்ப்பாடும் கொண்டவராகக் காணப்படுகின்றனர்.

**பாடாண் திணை ஆடவர் பின்வரும் உணர்வுநிலைப் பட்டவராகக் காணப்படுகின்றனர்**

- புலவர், அரசனின் வீரம், கொடையைப் புகழ்ந்து பாராட்டும் உணர்வினர். (புறம். 13, 158, 367)
- புலவர்கள் அழிவின்றி வாழ வேண்டும் என்ற உணர்வு கொண்டவர். தனக்கு சாதல் நேரிடினும் புலவனுக்குச் சாதல் நேரிடக் கூடாது என்பதில் அதிக கவனம் கொண்டவர். (புறம். 91)
- அரசர்கள் புலவரின் அறிவுரை ஏற்று, வாழ்வியல் தத்துவங்களை உணர்ந்து வாழும் உணர்வினர். (புறம். 35,367)
- திறை செலுத்தாத குறுநில மன்னரை ஒறுக்கும் உணர்வினர் (புறம். 97)
- கொடையுணர்வு, ஈகையுணர்வு கொண்டவர் (புறம். 11, 101, 108, 129, 148, 163, 164, 196, 203, 204, 399)

- அரசர்கள், நாட்டையும், நாட்டுமக்களையும், காக்கும் பொறுப்புணர்வு கொண்டவர். (புறம். 400)
- புலவர்கள், அரசரை நெறிப்படுத்தும் உணர்வினர், (புறம். 56, 58, 154, 184)
- புலவர்களின் வறுமையைப் போக்கி புலமையைக் காக்கும் பெறுப்புணர்வு கொண்டவர். (புறம். 266)
- புலவர் விருப்பமில்லாமல் தரும் கொடையை விரும்பாமல் வெறுக்கும் உணர்வினர். (புறம். 205, 140)
- இரவலர்க்கு ஈயாத நிலையை இழிவாகக் கருதும் உணர்வினர். (புறம். 165)
- புலவர்கள், அரசர்களின் ஈகையைக்கண்டு பெருமிதம் கொள்ளும் உணர்வினர். (புறம். 382, 392, 394)

**பரிபாடல் - புறம்**

இயற்கையோடு இயைந்த வாழ்க்கையை அனுபவித்தவர்கள் பண்டைத் தமிழர் அவர்களுடைய உள்ளத்தை, இயற்கைப் பொருள்கள் மிகுதியாகக் கவர்ந்தன. அவ்வியற்கைப் பொருள்களுள் தம் வாழ்க்கைக்குத் தேவையான, சூரியன், தீ, நீர், காற்று, நிலம் என்ற ஐந்தையும் கடவுள் எனக் கொண்டு வழிபட்டனர். அதன்பின் இயற்கைக் காட்சியைக் கண்டு மனம் ஒன்றிய தமிழர்கள், முல்லை நில அழகுக் காட்சியைத் திருமாலாகவும், குறிஞ்சி நிலச் சூரியனின் தோற்றத்தையும் மறைவையும் முருகனாகக் கண்டு வணங்கினர்.

இத்தகைய இயற்கை வழிபாடு காலப்போக்கில் உருவ வழிபாடாக மாறியதைச் சங்க இலக்கியங்கள் வழி அறிய முடிகிறது. பரிபாடலில் திருமால், முருகன் வழிபாடு குறித்து செய்திகளும், மக்கள் இறைவன் மீது நம்பிக்கை கொண்டு வாழ்ந்தனர் என்பதையும் பாடல்கள் வழி அறியமுடிகிறது.

இறைவனிடம் மக்கள் வையையாற்றில் வெள்ளம் வரவும், வினைவயின் சென்றுள்ள கணவன் அவனது முயற்சியில் வெற்றி பெற்ற நிரம்பிய பொருள்களோடு திரும்பி வர அருள் செய்யுமாறும், போரின் மேல் சென்றுள்ள எமது தலைவன் பகைவரைக் கொன்று போரில் வெற்றியுடன் திரும்ப வேண்டும் என்றும் இறைவனிடம் இறைஞ்சி நிற்பதைப் பரிபாடல் பாடல்கள் வழி அறிய முடிகிறது.

சங்க காலத்தில் புலவர்கள் மன்னனைப் புகழ்ந்து, பாடிப் பொன்னும், பொருளும் பெற்றனர், அதனால் இன்ப வாழ்வை அனபவித்தனர். புலவர்களைப் போற்றும் மன்னர்கள் இருந்தனர். புலவனை போற்றிப் பாடாதவர்கள் வலவன் ஏவும் வானவூர்தியை அடைய மாட்டார் என எண்ணினர். சங்கம் மருவிய காலத்தில் சமுதாயத்தில் போரும் பூசலும்

நிலவின புலவர்களைப் போற்றும் பேரரசர்கள் இல்லை. எனவே புலவர்கள் மன்னனைப் பாடி வாழ்வதைவிட இறைவனைப் பாடி மறுமை இன்பத்தைப் பெறலாம் என எண்ணி அதன் வெளிப்பாடாக, நல்லெழிசியார்,

**''மணிநிற மஞ்ஞை ஓங்கிய புட்கொடி**
**பிணிமுகம் ஊர்ந்த வெல்போர்! இறைவ!**
**பணி ஓரீஇ, நின் புகழ் ஏத்தி,**
**அணி நெடுங் குன்றம் பாடுதும்; தொழுதும்;**
**அவை யாமும் எம்சுற்றமும் பரவுதும்**
**ஏம வைகல் பெறுக, யாம் எனவே''** (பரி. 17:48-53, ப.236)

என வேண்டுகிறார். முற்பிறவியில் செய்த நல்வினைப் பயனே இப்பிறவியில் நின்னை வாழ்த்துவதற்குக் காரணமாயிற்று. எனவே,

**''... .... .... .... .... .... நின்னைத்**
**துன்னித் துன்னி வழிபடுவதன் பயம்**
**இன்னும் இன்னும் அவை ஆகுக**
**தொன்முதிர் மரபின் நின் புகழினும் பலவே''** (பரி. 4:29-31, ப. 81)

என வேண்டுகிறார் கேசவனார். குன்றம் பூதனாரோ மக்கள் தமது சுற்றத்தாரோடு தத்தமக்குரிய ஊரின் கண் உறைவதுபோல் என்றும் நினது திருவடியின்கண் பிரியாது உரிமையோடு உறைவதற்கு அருளைத் தரவேண்டும் என வேண்டுகிறார். இங்கு புலவர்கள் கல்வியில் புலமை பெற்றதோடு அல்லாமல் இறைவனை வணங்கி மறுமை இன்பதைப் பெறும் உணர்வினராகக் காணப்படுகின்றனர். இறைவனை இசையோடு பாடி வணங்கும் முறையை பரிபாடலில் காணமுடிகிறது.

இறைவனிடம் பொன், பொருள் இவ்விரண்டால் ஏற்படும் இன்பத்தை விரும்பாமல் அருளை வேண்டுவதை,

**''.... .... .... .... .... .... யாஅம் இரப்பவை**
**பொருளும் பொன்னும் போகமும் அல்ல; நின்பால்**
**அருளும் அன்பும், அறனும் மூன்றும்**
**உருள் இணர்க் கடம்பின் ஒலி தாராயே''** (பரி: 5:79-81, ப. 94)

என கடுவன் இளவெயினார் வேண்டுவதில் புலவர்கள் பொன், பொருளை விட அருளைப்பெற விழையும் பேராளர்களாக விளங்கியதை அறிய முடிகிறது.

சங்க காலத்தில் மன்னனுக்கு அரண்மனை அமைக்கும் போதே கோவிலும் அமைக்கும் முறை இருந்ததை நெடுநல்வாடை எடுத்தியம்புகிறது. அரசர் பொதுமக்கள் வழிபாடும் கோவிலுக்குச்சென்று வழிபடுவதில்லை பொதுமக்கள் வணங்கும் கோவிலுக்குச் சென்று வழிபட்ட செய்தியை பரிபாடல் **19–**ஆம் பாடலில் அறிவில் சிறந்த பாண்டியன்

மகளிரோடும், அமைச்சர்களோடும் திருப்பரங்குன்றம் சென்று முருகன் கோவிலை வலம்வந்து வணங்கியதை அறியமுடிகிறது. இதில் மன்னரின் இறையுணர்வு வெளிப்படுகிறது.

**''காமரு சுற்றமோடு ஒருங்குநின் அடியுறை**
**யாமியைந்து ஒன்றுபு வைகலும் பொலிகென,**
**ஏமுறு நெஞ்சத்தேம் பரவுதும்**
**வாய்மொழிப் புலவ! நின்தாழ்நிழல் தொழுதே''** (பரி.1:62-65,ப.50)

என்று தன் சுற்றத்தாரோடு சேர்ந்து இறைவனை வாழ்த்திப் பாடுவது பேரின்பம் தருவதாக குறிப்பிடுவதில் புலவரின் இறையுணர்வு வெளிப்படுவதை உணர முடிகிறது.

பரிபாடலில் ஆடவர் இறையுணர்வு பெற்றதோடு அல்லாமல் வீர உணர்வு மிக்கவர்களாகவும் திகழ்ந்ததை,

**''ஓடியா உள்ளமொடு உருத்து ஒருங்கு உடன்இயைந்து,**
**இடியெதிர் கழறும் கால்உறழ்பு எழுந்தவர்**
**கொடியறுபு இறுபு, செவிசெவிடு, படுபு,**
**முடிகள் அதிரப் படிநிலை தளர''** (பரி. 2:36-39, ப. 56)

என்ற பாடலடிகள் மூலம் உணரலாம். தன்னைப் போற்றினாலும் போற்றாவிடினும் அன்புடன் காக்கும் திறன் கொண்டு விளங்கியதை,

**''கொடுமையும் செம்மையும் வெம்மையும் தன்மையும்**
**உள்வழி உடையை; இல்வழி இலையே,**
**போற்றார் ஆயினும் போற்றுநர் உயிரினும்**
**மாற்றுஏ ஆற்றல் இலையே''** (பரி. 4:50-53, ப.82)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. இங்கு 'நடுவுநிலைமை' எனும் மெய்ப்பாட்டுணர்வு வெளிப்படுகிறது.

இம்மை நலத்திற்கும், இறைவன் தாள் அடைந்து வணங்குவதற்கும் தவமாகிய ஒழுக்கம் உறுதணையாய் நிற்றலை,

**''புரிமலர்த் துழாஅய் மேவல் மார்பினோய்!**
**அன்னை என நினைஇ நின் அடி தொழுதனெம்;**
**பல்மாண் அடுக்கம் இறைஞ்சினெம் வாழ்த்தினெம்**
**முன்னும் முன்னும் யாம் செய்தவப் பயத்தால்**
**இன்னும் இன்னும் எம் காமம் இதுவே''** (பரி. 13:60-64, ப. 204)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன. ஈகையில் சிறந்த பெரியோர், ஏனையோர் தன்னிடம் வந்து வறுமை கூறி இரப்பதற்கு முன்பாக விரைந்து அவர்க்கு உதவுவர். இதனை,

> ''இல்லது நோக்கி, இளிவரவு கூறாமுன்
> நல்லது வெஃகி,வினை செய்வார்'' (பரி.10:87-88, ப. 158)

என்ற பாலடிகள் உணர்த்துகின்றன. இங்கு பிறர் துன்பங் கண்டு அதனை விரைந்து போக்க அவர்களுக்கு பொருள்களைக் கொடுத்து பெருமித மெய்ப்பாட்டு உணர்வினராகத் திகழ்ந்ததை அறிய முடிகிறது.

இங்ஙனம் பரிபாடலில் ஆடவர், வீடுபேற்றை விரும்பும் உணர்வினராகவும், இறையுணர்வு கொண்டவராகவும், பிறர்க்கு உதவும் ஈகையுணர்வினராகவும், வெகுளி மெய்ப்பாட்டுணர்வினராகவும், பிறரை இகழாத நல்லொழுக்கக் முடையராகவும், பிறர் உயிரைக் கொல்லும் கொடுமைக் குணம் கொண்டவாராகவும் காணப்படுகின்றனர்.

**தொகுப்புரை**

- “புறத்திணைகளில் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வுகள்” எனும் இவ்வியலில், தொல்காப்பியம் கூறும், புறத்தினைச் செய்திகளில் புலனாகும் ஆடவரின் உணர்வுகளை, உணர்வோட்டத்தினை புறநானூறு, பதிற்றுப்பத்து, பரிபாடல் போன்ற நூல்களின் வழி கண்டறியப்பட்டுள்ளது.
- வெட்சித் திணையில் ஆடவன் போரிட்டு ஆநிரைகளைக் கவரும் திண்மை உடையவனாகவும் வீர உணர்வு கொண்டவனாகவும் காணப்படுகின்றான்.
- பதிற்றுப்பத்தில் சேரனின் முரசு, பகைவரிடம் புறங்கொடாத கொள்கையினையும், போரினை விரும்பும் வீரர்களை ஊக்கப்படுத்தும் வகையில் பெருஞ்சோறு வழங்கும் உணர்வு கொண்டவராகக் காணப்படுகின்றனர்.
- கரந்தைத் திணையில் ஆநிரை மீட்டல், சீர்சால் வேந்தனின் சிறப்புகளும், தலைத்தால் தன்னொடு பொருத்த, புணர்த்தல் போன்றவை செய்து மகிழ்வுடன் காணப்படுகின்றனர்.
- ஆடவர் போர்புரியும் வீர உணர்வினராகவும் புறமுதுகிடாமல் நேருக்கு நேர் நின்று போரிடும் உள்ளத்துணிவு பெற்று விளங்கினர். நாட்டையும் வேந்தனையும் காக்கும் கடமையுணர்வு கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.
- வஞ்சித்திணையில், போர்ச் செயல் இருவேந்தர்க்கும் உரியது. ஆனால் அவர்களின் வேட்கையும் உணர்வும் மாறுபட்டவை. ஒருவனுக்கு மண்மீது வேட்கையுணர்வும், ஒருவனுக்கு அதனைக் காக்கும் கடமை, பொறுப்புணர்வும் கொண்டு காணப்படுகின்றனர்.
- அரசர்கள் அறத்துடன் போர் புரிய, புலவர்கள் அறிவுரை கூறி நல்வழிப்படுத்தும் மறவுணர்வு கொண்டவராகக் காணப்படுகின்றனர். போரில் தோற்றால் நாணம் கொண்டு தன்னிலையைத் தானே இகழும் உணர்வினராகத் திகழ்ந்தனர்.
- உழிஞைத்திணையில் சேரமன்னன் மற்றும் படைவீரர்கள் அனைவரும் வீரஉணர்வும் நாட்டை வெல்லும் வேட்கை உணர்வும் கொண்டிருந்ததை அறியமுடிகிறது.
- நொச்சித்திணையில் ஆடவர் இரவலராக வருபவர்க்கு இரக்க உணர்வுடன் தன் நாடு, மலையைக் கொடையாக அளிப்பவராகவும், போர் எனும்போது தனது உடைமைகளைத் தக்க வைத்துக்கொள்ளும் உரமுடைய நெஞ்சுடையவராகவும் காணப்படுகின்றனர்.
- தும்பைத் திணையில் ஆடவர் போரில் சிறந்து வீரஉணர்வுடன் விளங்கினாலும் போரில் பெருந்தன்மை கொண்டவராகவும், நண்பர்க்கு உதவும் நட்புணர்வு கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.

- பகைவரின் வேல் பாய்ந்தால் நாண உணர்வு கொண்டு உயிர் துறக்கும் ஆடவரின் தன் மான உணர்வினைக் காணமுடிகிறது.
- வாகைத்திணையில் பகை அரசன் பணிந்து தரும் கப்பத்தைச் சுற்றத்தார்க்கு அளித்து அவர்களைக் காக்கும் பொறுப்புணர்வு கொண்டவராகவும் எந்நிலையிலும், எப்பருவத்திலும் நாட்டுக்காகவும் நாட்டு மக்களுக்காகப் போரிடவும், காக்கவும் தங்களை அர்ப்பணித்தும் செயல்படும் தன்மையினராகக் காணப்படுகின்றனர். மேலும் பாணர், விறலியர் போன்றோரை வரவேற்று உணவளித்து பரிசில்களை அளிக்கும் கொடை உணர்வு, கொண்டு விளங்கியதைக் காணமுடிகிறது. போர் விருப்ப உணர்வும் குடிப்பெருமை காக்கும் பொறுப்புணர்வும் கொண்டவராகக் காணப்படுகின்றனர்.
- பாடாண் திணையில் அரசர் புலவர்களின் அறிவுரையை ஏற்று வாழும் பண்பினராகக் காணப்படுகின்றனர். தன்னையே இரவலர்க்கு ஈயும் கொடையுணர்வு கொண்டவராகவும் நாட்டு மக்களைக் காக்கும் பொறுப்புணர்வு கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.
- புலவர்கள் வறுமையில் வாடினாலும் மறுமைக்கு சேர்க்காமல் பிறர்க்குக் கொடுத்துவாழும் பண்பினராகக் காணப்படுகின்றனர். அரசரைப் புகழ்ந்து வாழ்த்தும் உணர்வினராகவும் தன்னிலையில் தாழாத உணர்வினராகவும் காணப்படுகின்றனர்.
- புறத்திணைப் பாடல்களில் ஆடவர், பெருமித உணர்வு, வெகுளி உணர்வு, அழுகை உணர்வு, அச்ச உணர்வு, இளிவரல் உணர்வு, உவகைஉணர்வு, மருட்கை உணர்வு, உடைமை அரற்றுதல், நடுவுநிலைமை, குடிகோள், நாணல், அருள், நடுக்கம், இன்புறல், கைம்மிகல், துஞ்சல், வாழ்த்தல், முனிதல் போன்ற மெய்ப்பாட்டு உணர்வுகளைக் கொண்டவர் என்பதை உணரமுடிகிறது.
- இத்தகு உணர்வுகளில் பெருமிதம், வெகுளி, இளிவரல், உடைமை, வாழ்த்தல், நடுவுநிலைமை போன்ற உணர்வுகளில் மேலோங்கியும், உவகை, அழுகை, மருட்கை உணர்வுகளில் தொடர்ந்தும் வரக்காணமுடிகிறது. மேற்குறிப்பிட்ட உணர்வுகளில் அரற்றுதல், குடிகோள், நாணல், அருள், நடுக்கம், கைம்மிகல், துஞ்சல், முனிதல் போன்ற உணர்வுகள் அருகியும் இருப்பதைக் காணமுடிகிறது.



**அடிக்குறிப்புகள்**

1. Tamil Lexicon, Vol. V. Part I, University of Madras, 1934, P. 2809.
2. Natrinai - A Literary Study, S. Shunmugam, P. 32.
3. நாராயணன், ஜெ., சமூகவியலின் அடிப்படைக் கோளாறுகள், (மொ. பெ.) பாஸ்கல் கிஸ்பர்ட், தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, 1964, ப. 63.
4. இளங்குமரன், இரா., புறநானூறு–53, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 156.
5. Bowra, C.M. Heroic Poetry, Macmilan Press Ltd., 1978, P. 97.
6. வித்தியானந்தன், சு., தமிழர் சால்பு, பக். 83–86.
7. மண்ணும் மனித உறவுகளும், ப. 29.
8. அகநானூறு, 157, கோவிலூர் மடாலயப் பதிப்பு.
9. இளங்குமரன், இரா., புறநானூறு–89, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 199.
10. மேலது, 68, ப. 176.
11. மேலது, 31, ப. 124.
12. முல்லைப்பாட்டு – 67.
13. திருக்குறள், படைச்செருக்கு–6, பரிமேலழகர் உரை.
14. அரங்க இரமலிங்கம், சங்க இலக்கியத்தில் வேந்தர், ப. 150.
15. சஞ்சிவீ, ந., சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை, சென்னைப் பல்கலைக்கழகம், ப. 307.
16. புறநானூறு 249, 112, 243, 188, 255, 228, 225, 257, 258.
17. புறநானூறு 259, 260, 261, 263–265, 270, 287, 290, 291, 298.
18. Nagasamy, R., Senior on Herostones, 1974, P. 106.
19. மேலது., ப. 106.
20. புறநானூறு – 4,7,16,36,41,45,46,47,57,98,213,292.
21. சஞ்சீவி, ந., சங்க இலக்கிய ஆராய்ச்சி அட்டவணை, சென்னைப் பல்கலைக்கழகம், ப. 307.
22. இளங்குமரன், இரா., புறநானூறு–57:7, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 162.
23. சுந்தர மூர்த்தி, இ., இலக்கியச் சுடர், அன்புநூலகம், சென்னை, 1977, ப. 32.
24. புறநானூறு–80, 274, 275.
25. மேலது., 87, 88, 89, 90, 294, 300, 301.
26. மேலது., 273, 302, 303, 304.
27. மேலது., 277,278,295.
28. மேலது., 283, 284, 311.
29. பதிற்றுப்பத்து – 34, 56, 83.
30. தொல். புறத். நூற். 19, ப. 35.
31. புறநானூறு–369, 370, 371, 373.
32. மேலது., 369.
33. மேலது., 31:5, ப. 124.
34. மேலது., 81:16–17, ப. 193.

35. ஜேம்ஸ் டி. பேஜ், பிறழ்நிலை உளவியல், பக். 39–40.
36. புறநனூறு–3,161, 238, 309.
37. மேலது., 68:11–13, ப. 176.
38. பதிற்றுப்பத்து, 36,39,52,81,84,89.
39. Kailasapathy, K. OP. Cit, pp. 248-258.
40. இளங்குமரன், இரா., புறநானூறு–56:17, கோவிலூர் மடாலயப் பதிப்பு, ப. 160.
41. மேலது., 126, 135, 148, 154, 161, 200–208, 379.
42. மேலது., 127,382–384, 391–396, 398.

# முடிவுரை

- "சங்க இலக்கியத்தில் ஆடவரின் மன உணர்வு ஓட்டங்கள்" எனும் இவ்வாய்வில் நான்கு நிலைகளில் பிரிக்கப்பட்டு ஆய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது. நான்கு இயல்களில் பெறப்பட்ட ஆய்வுகளின் முடிவாக இப்பகுதி விளங்குகிறது.

- 'எட்டுத் தொகையில் ஆடவர்' என்ற இவ்வியலில் ஆண், ஆடவர் போன்ற சொற்களுக்குப் பொருள் நிகண்டுகள், அகராதிகள், களஞ்சியங்கள் துணை கொண்டு தொகுத்து தரப்பட்டுள்ளது. எட்டுத் தொகை நூல்களில் ஆண், ஆடவர், ஆண்மை போன்ற சொற்கள் இடம்பெற்ற பாடலடிகள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

- அகத்திலும், புறத்திலும், ஆடவர் வகித்த பல்வேறு பொறுப்புகள் மற்றும் ஆடவரின் பல்வேறு பரிமாணங்களையும் இவ்வியல் ஆராய்கிறது.

- "திணைகளும் உணர்வுகளும்" எனும் இவ்வியலில் திணை சார்ந்த புரிதலுக்கு, அகப்புறத் திணைகள் விளக்கமும், உணர்வுகளை வெளிப்படுத்தும் கருவிகளாகத் திகழும், தலைமைப் பாத்திரங்களான தலைவன், தலைவி மற்றும் அவர்களைத் தொடர்ந்தும், சார்ந்தும் வரும் பிற ஆடவரின் கூற்றுகள் விரிவாக எடுத்து ஆராயப்படுகிறது.

- உளவியலும் உணர்வுகளும் எனும் பகுதியில் உணர்வுகள் குறித்த உளவியலாரின் கருத்துகள் தொகுத்து தரப்பட்டுள்ளன. எட்டுத்தொகை ஆடவரின் உள்ளம் உணர்வுகள் ஆடவரின் மனதில் உண்டாகும் பல்வேறு விதமான, சிக்கல்கள், போராட்டங்கள், வேட்கைகள் குறித்து அறிய அடிப்படையாய் இப்பகுதி அமைகிறது.

- மெய்ப்பாடுகளும் உணர்வுகளும் எனும் பகுதியில் இன்றைய உளவியலார் குறிப்பிடும் உணர்வுகளை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தொல்காப்பியர் கூறியிருப்பது சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

- மனித மனதின் உணர்வுகள் அவன் பேசுகின்ற பேச்சின் மூலமும் உடலில் புலப்படுத்தும் அசைவுகளின் மூலமும் வெளிப்படுகின்றது. எட்டுத்தொகைப் பாடல்களில் இடம்பெறும் கூற்றுகள் மன உணர்வுகளைப் புலப்படுத்தும் கருவிகளாக அமைவதையும் உடலசைவுகள் போன்றவை மெய்ப்பாடுகளாக வெளிப்படுவதையும் பாடல்கள் வழி எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

- ஆடவரின் பருவ நிலைகளும் உணர்வுகளும் எனும் பகுதியில் ஆண் பிறந்தது முதல் முதுமைபெறும் வரையிலான பருவங்களை உளவியலார் துணை கொண்டும் தமிழிலக்கியங்கள் துணை கொண்டும் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. அவ்வப் பருவநிலைகளில் ஆடவருக்கு ஏற்படும் உணர்வுகளையும் செயல் வேறுபாடுகளையும்

விளக்கப்பட்டுள்ளன. எட்டுத்தொகை நூல்களில் இடம்பெற்றுள்ள சிறுவர் முதல் முதியோர் வரையிலான பருவங்கள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. சமுதாயத்தில் அவர்களின் பங்கு, சமுதாயம் அவர்களுக்கு அளித்த மதிப்பு போன்றவை தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

- அகத்திணைகளில் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வு ஓட்டங்கள்' எனும் இவ்வியலில் எட்டுத்தொகை நூல்களில் அகநூல்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு போன்றவற்றில் உள்ள திணை அடிப்படையிலான பாடல்களில் தலைவன் கூற்றாக பாடப்பட்டுள்ள பாடல்களில் வெளிப்பட்ட ஆடவரின் உணர்வுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

- குறிஞ்சித்திணையில் தலைவன், தலைவிக்கு இடையே நிகழ்ந்த களவு என்னும் திருமணத்திற்கு முந்திய காமக் கூட்டத்தில் ஆடவன் பெண்ணின் அழகைக் கண்டு உள்ளத்தைப் பறிகொடுத்து அவளை எவ்வாறேனும் அடைந்திட வேண்டும் என்பதில் உறுதி கொண்ட உணர்வுடன் காணப்படுகின்றான். பெண்ணைக் கண்டு மனம் பறிகொடுத்தபின் இருவர் உள்ளமும் கலந்த பின் இருவரின் உணர்வும் ஒன்றுபட்ட நிலையில் காணப்பட்டாலும் ஆடவன் தனது இன்ப உணர்வினைப் பாங்கனிடம் பகிர்ந்து கொள்பவனாகக் காணப்படுகிறான்.

- தோழியிடம் நட்பு கொண்டு தலைவி மீதான காதலுணர்வை எடுத்துக்கூறி தலைவியை அடைய எண்ணும் உணர்வினராகக் காணப்படுகின்றனர் என்பது கண்டறியப்பட்டுள்ளது.

- குறிஞ்சித் திணையில் ஆடவர், காதல், கடமை, பெற்றோரை மதித்தல், நட்புக்கு செவி சாய்த்தல் போன்ற உணர்வுகளைக் கொண்டவராகக் காணப்படுகின்றனர். பிற உயிர்களைக் காப்பது, பிறர் உணர்வுகளை மதிக்கும் பண்பு, எடுத்த காரியத்தை முடிக்கும் உணர்வு, இடையூறுகளை வெற்றியோடு எதிர்கொள்ளும் மன உணர்வு, முன்னோர்களின் மரபை மதிக்கும் உணர்வு, சமுதாய மரபுகளை மதிக்கும்; மீறாத உணர்வு போன்ற உணர்வுகளைக் கொண்டவராகக் காணப்படுகின்றனர்.

- குறிஞ்சித் திணையில் ஆடவர், குடும்பம் எனும் நிறுவனத்தை உருவாக்கும் தவிப்பு உணர்வு பெற்றவர். அகவாழ்வில் ஆடவர் தலைவியைத் தேர்ந்தெடுப்பதிலும், குடும்பத்தை உருவாக்குவதிலும் அதிக கவனம் செலுத்துகின்றனர். குறிஞ்சியிலிருந்து ஆடவரின் உணர்வுகள் நீண்டு முல்லைத் திணைக்கும் செல்கிறது.

- முல்லைத் திணையில் ஆடவர், களவுக்கால இன்ப உணர்வை விட கற்புக் கால இன்ப உணர்வுகளை விரும்புபவர்களாகக் காணப்படுகின்றனர். தலைவியைக் காணத் துடிக்கும் தவிப்புணர்வால் வினையை விரைந்து முடிக்கும் இயல்பினராகக் காணப்படுகின்றனர். தலைவியின் துயரைத் துடைக்க எண்ணும் இரக்க உணர்வு,

குறித்த நேரத்தில் கொண்டுவந்து சேர்த்த தேர்ப்பாகனுக்கும், மழை, பல்லி போன்றவற்றிற்கும் நன்றி கூறும் நன்றி உணர்வு கொண்டவர்களாகவும் காணப்படுகின்றனர். தலைவியை அடையப் போவதை எண்ணி உவகை மெய்ப்பாட்டை வெளிப்படுத்துபவர்களாகவும் காணப்படுகின்றனர் என்பது கண்டறியப்பட்டுள்ளது.

- முல்லைத்திணையில் ஆடவரின் உணர்வுகள், குடும்பம் எனும் நிறுவனத்தைக் காப்பதற்கான பொருள் தேடும் முயற்சியிலும், நாட்டைக் காக்கும் கடமை உணர்விலும் முழுமையாக ஈடுபடுகின்றது. குறிஞ்சித் திணையில் ஆடவர் தங்களது உணர்வுகளை குடும்ப உறுப்பினர்களிடமும் குடும்பம் சார்ந்த உறுப்பினர்களிடமும் வெளிப்படுத்துகின்றனர். முல்லைத் திணையில் அதனின்றும் நீண்டு குடும்பத்தைக் காப்பாற்ற சமூக உறுப்பினரிடம் தங்களது உணர்வுகளை வெளிப்படுத்துகின்றனர்.

- இங்ஙனம் குறிஞ்சித் திணை ஆடவனின் உள்ளம் பரிணாம வளர்ச்சியடைந்து, குடும்பத்திலிருந்து நீண்டு சமூகத்தோடு தொடர்பு கொள்கிறது. முல்லைத் திணை ஆடவன் பொருள் தேடலில் சமூக மாந்தரிடம் வெளிப்படுத்தும் உணர்வுகளும், நாட்டைக் காக்கும் கடமையுணர்விலும் தொடர்ந்து வளர்ச்சி அடைகிற நிலையைக் காண முடிகிறது.

- மருதத் திணையில் ஆடவர், பரத்தையர் பிரிந்து மீண்டும் தலைவியுடன் கூடி வாழும் உணர்வு கொண்டவராகவும், பரத்தையை நாடிச் செல்லும் பண்பினராகவும் இருந்தனர் என்பது அறியப்பட்டுள்ளது.

- பரத்தையற் சென்றதாக ஐயுற்ற தலைவியின் ஐயத்தையும், ஊடலையும் நீக்கி தன் கற்பு நிலையை மெய்ப்பிக்கத் துடிப்பவர்களாகவும், விருந்து, புதல்வன், தோழி, கனவு போன்றவற்றை வாயிலாகப் பயன்படுத்தி தலைவியோடு சேர்ந்து வாழ விரும்பும் உணர்வினராகவும் காணப்படுகின்றனர். ஊடல் தணிக்க முடியாத நேரங்களில் மனம் நொந்து தவிக்கும் உணர்வினராகவும் காணப்படுவதை இப்பகுதி எடுத்துரைக்கின்றது.

- பாலைத் திணையில், ஆடவர், பொருள் ஈட்டலுக்கும் தலைவிக்கும் இடையில் சிக்கித் தவிக்கும் தவிப்புணர்வு கொண்டவராகவும், தலைவி தன் மனதைப் புரிந்து கொள்ளாததை எண்ணி வருந்துபவராகவும் காணப்படுகின்றனர். தலைவியின் நலன் நாடும் உணர்வினராகவும், தம் நெஞ்சை இகழ்ந்தும் புகழ்ந்தும் சூழலுக்குத் தக்கவாறு மன உணர்வை மாற்றிக் கொள்ளும் இயல்பினராகவும், குடும்பத்தின் எதிர்கால தேவையைக் கருத்தில் கொண்டு பொருள் தேடத் துணிபவராகவும், பொருள் தேடும் வேட்கை மேலோங்கும் நிலையிலும் தலைவியைக் குறித்த நினைவு மாறாதவராகவும், தடுமாறாத உள்ளமும், தடம் மாறாத உறுதியும் கொண்டவராகவும் இருந்தது கண்டறியப்பட்டுள்ளது.

- மருதத் திணையில், ஆடவர் பொருள் தேட நிலம் பெயர்தல் இல்லை. பொருள் தேடும் காலம் நிலையானது. இங்கு ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழும் நிலை காணப்படுகிறது. மற்ற திணைகளில் பெண்ணைக் கண்டபின் பொருள் தேட முயல்கிறான். ஆனால் மருதத்தில் பெண்ணுடன் இருந்து கொண்டே பொருள் சேர்க்கின்றனர். எனவே மருதத்தில் செல்வம் மிகுதியாகிறது.

- அச்செல்வச் செழிப்பினால் இல்லறத்தையும் மகப் பேற்றையும் விரும்புபவனாகவும், தன் குடிக்கு வாரிசு உருவாக்குவதைக் கடமையாகவும் கொண்டு விளங்குகிறான். எனினும் மகப்பேறு காலங்களில் தலைவியுடன் சேர்ந்திருக்கும் நேரம் குறைவதாலும் அவன் தங்கி இருக்கும் இடத்திலே தொழில் அமைந்ததால் ஓய்வு நேரம் அதிக அளவு கிடைப்பதாலும் உழுதுண்டு, உழுவித்துண்டு வாழும் இருவரும் பரத்தையை நாடிச் செல்லும் நிலை மருதத்தில் உள்ளது. அவரவர் செல்வச் செழிப்பிற்குத் தக்கவாறு பரத்தை, காமக்கிழத்தி என்று தொடர்புபடுத்திக் கொள்கின்றனர்.

- தன் வாரிசான பிள்ளைச் செல்வத்திற்கும் இல்லற தர்மத்திற்கும் தலைவியைச் சார்ந்து வாழ்கிறான். அதே நேரத்தில் தலைவியின் கவனம் பிள்ளையிடம் சென்றதும், ஆடவன் தன் புலனுணர்ச்சிக்கு மட்டும் பரத்தையை நாடிச் செல்கின்றான். இத்தகைய இரு நிலைகளில் ஆடவன் காணப்படுகிறான்.

- பிற திணைகளில், போர், கல்வி, பொருள் ஈட்டல் போன்றவற்றிற்கு தலைவியைப் பிரிய வேண்டி இருப்பதால் பரத்தையை தேட இயலாத நிலை காணப்படுகின்றது. மருதத்தில் ஆடவரின் வாழ்வை செல்வ மிகுதியால் சீரழிக்கிறது. மற்ற திணைகளில் கடமையும் பொறுப்புணர்வும் ஆடவரின் வாழ்வியலை சீர்படுத்துகிறது.

- நெய்தல் திணையில், ஆடவர் தலைவியின் நலன் காக்கும் உணர்வினராகவும், தலைவியை அடைய மடலேறத் துணியும் துணிவுள்ளம் கொண்டவராகவும், பொருள் தேடுவதை விட தலைவியுடன் கூடி இன்புறும் விருப்பமுடையவராகவும், தோழி, பாங்கனின் நட்பை நாடுபவராகவும், விருந்தினை வாயிலாகப் பயன்படுத்தி ஊடலைத் தணிக்கும் உணர்வினராகவும் காணப்படுகின்றனர். தலைவிக்காக அவளது பெற்றோரைப் பணிந்தும், சார்ந்தும் வாழத் துணியும் பண்பினராகவும் இருந்ததை இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளது.

- 'ஐந்திணைகளில் பிற ஆடவரின் கூற்றுகளில் வெளிப்படும் மன உணர்வுகள்' எனும் பகுதியில் தலைவனுக்குத் தோழனாய் விளங்கும் பாங்கன் கூற்றில், தலைவனின் மன உணர்வு ஓட்டத்தினை நன்கு உணரும் தன்மை கொண்டவராகவும் தலைவனை இடித்துரைத்து நேர்வழிப்படுத்தும் உள்ளத் துணிவுள்ளவர்களாகவும் காணப்படுகின்றனர். தலைவனின் உள்ள உணர்வை மதித்துப் புரிந்து கொண்டு உதவுபவராகவும் காணப்படுவதை இப்பகுதியில் அறியப்பட்டுள்ளது.

- தேர்ப்பாகன் கூற்றில், தேர்ப்பாகன் தலைவனின் உள்ளக்குறிப்பை அறிந்து செயல்படுபவனாகவும், தலைவன் தலைவியோடு இன்புற்று வாழ வாழ்த்தும் உணர்வு

கொண்டவனாகவும் பிறர் இன்பத்தில் இன்பம் கொள்பவனாகவும், பிறர் துன்பத்தில் துன்பம் கொள்பவனாகவும் காணப்படுகிறான்.

- இங்ஙனம் ஆடவர் பிறர் உள்ளக் குறிப்பை அறியும் ஆற்றல் படைத்தவராக இருந்ததோடு, விரைந்து செயலாற்றும் செயல் வீரர்களாகவும் இருந்தனர். உள்ளதை உள்ளவாறே உரைப்பவராகவும் காணப்படுகின்றனர். அருளற்றவர் மீது சீறும் உணர்வும், அருள் வேண்டியாரிடம் இரக்கவுணர்வு கொண்டவர்களாகவும் திகழ்கின்றனர், என்பது அறியப்பட்டுள்ளது.

- சான்றோர், தலைவன், தலைவி இருவரும் சேர்ந்து வாழ வேண்டும் என்ற விருப்புணர்வும், நல்வழிப்படுத்தும் நல்லுணர்வும் கொண்டு விளங்கியதை கண்டறியப்பட்டுள்ளது.

- ஐந்திணைகளில் இடம்பெற்றுள்ள பாங்கன், தேர்ப்பாகன், பாணன், கண்டோர், உழையோர் கூற்றுகளில், ஆடவர், தம்மிலும் மேலானவனாகத் தலைவன் இருந்த போதிலும், அஞ்சாமல் அவரிடம் தம் மன உணர்வை வெளிப்படுத்தும் உணர்வினராகக் காணப்படுகின்றனர் என்பதைக் கண்டறியப்பட்டுள்ளது. தலைவன் தன்னோடு தொடர்புடைய பிற ஆடவருடன் தனது உணர்வுகளை வெளிப்படுத்துபவனாகவும், அவர்களின் உதவியைப் பெற தயங்காதவனாகவும், அவர்களை மதித்து, நன்னெறியைப் பின்பற்றும் தன்மை நிறைந்தவனாகவும், தலைவியை அடைய வேண்டும் என்ற ஒரே நோக்கோடும் ஒத்த உணர்வுடன் தலைவன் இருந்ததை இவர்களின் கூற்றுவழி அறிய முடிகிறது.

- ‘கைக்கிளைப் பெருந்திணையில் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வுகள்’ எனும் இப்பகுதியில் கைக்கிளையில் அகம் என்பது தலைமக்களிருவரிடையேயும் காதல் தோன்றுவதற்கு அமைந்த தொடக்க நிலையில் இருவருள் ஒருவரிடத்தே மட்டும் தோன்றுவதை வெளிப்படுத்துகிறது. இக்கைக்கிளைத் தலைவனின் மனதில் முதலில் தோன்றுவதால், ஒருதலைக் காமம் என கருதலாம்.

- கைக்கிளையில் தலைவன், தலைவியின் அழகையும் பேதைப் பருவத்தினையும் கண்டு வியக்கும் உணர்வினனாகக் காணப்படுகிறான். தன் ஆருயிரை வெளவிக் கொண்டதாகவும், தான் அயர்வுற்று அல்லலுறுவதாகவும் தான் அடைந்த நோயினை, துன்ப உணர்வினை வெளிப்படுத்துபவனாகவும் காணப்படுகிறான்.

- தன் காதலுணர்வைத் தலைவியிடம் வெளிப்படுத்தியும் அவளிடமிருந்து ஒரு பதிலும் வராத நிலையில் ஆடவன் தன்னிடம் இருந்து தோன்றிய ஒன்றினை எண்ணித் தானே மகிழும் மன இயல்பு கொண்டவனாகக் காணப்படுகின்றான். மேலும் சொல்லெதிர் பெறா நிலையில் ஆடவனின் மனம் உளைச்சல் அடைந்து துன்பம் எய்தி வருந்தும் உணர்வினனாகக் காணப்படுகிறான்.

- தலைவியைப் பெற தன் வீர உணர்வை மறந்து மடலேறியும் தலைவிபால் பெற்ற துன்பத்தை பாடலாகப் பாடியும், தலைவி மீது கொண்ட காதலை வெளிப்படுத்தியும், அதனை அறியாத பருவத்தினளாகத் தலைவி இருப்பதைக் கண்டு வருந்துபவனாகவும் காணப்படுகின்றான்.

- கைக்கிளை, பெருந்திணை அகப்பாடல்களில் தலைவியை நினைந்து வருந்துபவனாகவும், சிறந்த வீரனாகவும் ஈகை செய்யும் புகழையும், பெருமையும் கொண்டவனாகக் காணப்படுகிறான். அதே வேளையில் அவனது பெருமையும் புகழும் கெடுமாறு பரத்தையை நாடிச் செல்லும் உணர்வினனாகக் காணப்படுகிறான். பரத்தையை நாடும் உணர்வு கொண்டவராக இருப்பினும் சான்றோரின் அறிவுரைப்படி தலைவியை அடையும் உணர்வினராகக் காணப்படுகிறான்.

- 'புறத்திணைகளில் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வுகள்' எனும் இவ்வியலில் புறத்திணையில் இடம் பெற்றுள்ள ஆடவர் தங்களது உணர்வுகளை வெளிப்படுத்திய விதத்தினைச் சங்க புறப்பாடல்கள் மூலம் சான்று காட்டப்பட்டுள்ளது. சங்க ஆடவர் போர் புரிதலைத் தொழிலாகவும், போர்ச் சாவையே புகழுக்குரியதாகவும் கருதி வாழ்ந்தனர். போரில் வீர உணர்வை, வெளிப்படுத்துதலைக் கடமையாகக் கொண்டிருந்தனர். இத்தகைய ஆடவர் பகைவரிடம் போரிட்டு மாண்ட வீரர்களுக்கு நடுகல் எடுக்கப்பட்டு தெய்வமாகப் போற்றப்பட்டனர் என்பதை அறிய முடிகிறது. மேலும் கொடை உணர்வு, புகழுணர்வு, உள்ளத்துணிவுணர்வு, நாட்டுப்பற்றுணர்வு, கடமை உணர்வு, பொறுப்புணர்வு கொண்டவராக விளங்கினர்.

- ஒப்பிலா வலிமையும் ஆற்றலும் நிறைந்து பாசறையில் இருப்பதை விரும்பும் உணர்வினர். ஆநிரைகளைக் கவர்ந்தும் அதனைக் கொடையாக அளித்தும், கள்ளுக்கு விலையாகக் கொடுத்தும் மகிழும் உணர்வினராகக் காணப்படுகின்றனர். ஆடவர் மண்ணாசை கொண்டவராகவும், பகைவரின் மீது வஞ்சினம் கொண்டவராகவும், அறப்போர் புரிபவராகவும் திகழ்ந்தனர். மண்ணாசை கொண்ட மன்னனின் செருக்கை அடக்கும் உணர்வினராகக் காணப்பட்டனர்.

- போரில் தோற்றால் நாணும் உணர்வும், தன்னைத்தானே இகழும் உணர்வினராயும் இருந்தனர். உயிருக்கு அஞ்சாத வீரவுணர்வு, நாட்டை வெல்லும் வேட்கை உணர்வும், ஈகையுணர்வும், பகைவர் தம் அச்சுறுத்தலுக்குத் தளராத மன உணர்வும் கொண்டவராக ஆடவர் திகழ்ந்தனர். தன் பெற்றோருக்குப் பெருமை சேர்ப்பவராகவும், சுற்றத்தைக் காக்கும் உணர்வு கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.

- நாட்டுக்காகவும் நாட்டு மக்களுக்காகவும் தன்னையே அர்ப்பணிக்கும் உணர்வு கொண்டும் போரில் புறமுதுகிடும் பெரியோரைக் காக்கும் பொறுப்புணர்வு கொண்டவராகவும் விளங்கினர். இரவலராக வரும் பாணர்களைக் காக்க வைக்காமல் அவர்க்கு வேண்டும் பரிசிலை அளிக்கும் உணர்வு கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.

- இரவலர்க்கு ஈயும் போது மென்மையாகவும் பகைவரிடம் போரிடும் போது வலிமையான நெஞ்சுடையவராகவும் வாழ்ந்தனர். புலவர்களின் புகழுரை கேட்டு தலை தாழ்ந்து பணிந்தும், அவர்தம் அறிவுரை கேட்டு மதிக்கும் உணர்வினராகவும் காணப்படுகின்றனர்.

- புலவரைப் பேணிக் காக்கும் உணர்வும், தமிழைப் போற்றிக் காக்கும் உணர்வும் வாழ்வியல் தத்துவங்களை உணர்ந்து வாழும் பண்பும் கொண்டவராகவும் காணப்படுகின்றனர். புலவர்கள், வஞ்சினம் கொண்ட மன்னர்களை அறத்துடன் போரிட புலவர்கள் வழி நடத்திச் சென்றனர்.

- தங்களை மதித்துப் போற்றும் அரசர்களைப் புகழ்ந்தும், தகுந்த அறிவுரைகளைக் கூறி கொடை அளிக்காத மன்னர்களுக்கு அதன் தேவையை உணர்த்தி கொடை உணர்வை வெளிக் கொணரும் இயல்பினராகவும் விளங்கினர். வறுமையில் வாடினாலும் தன்னை மதியாதாரிடம் இரத்தலை விரும்பாதவர்.

- அரசரிடம் பெற்ற பொருள்களைத் தன் சுற்றத்தாருக்கும் அளித்து வாழும் உணர்வினர். அரசர்களைப் போற்றிப் புகழுரைகள் கூறும் புலவர்கள் அவர்களின் தீச்செயல்களைக் கண்டித்து வலியுறுத்தும் துணிவுள்ளம் கொண்டு திகழ்ந்தனர்.

- சிலசொல்லி பல செய்யும் பேராளுமைத்திறன் கொண்டவராகக் காணப்படுகின்றனர்.

- புறத்தில் காலன் அணைய கடுஞ்சினத்தராக அகத்தில் காற்றிலும் தன்னியராகக் காணப்பட்டனர்.

- புறத்தில் ஆடவர் கடைக்கங்கலால் பலர் துஞ்சவும் தான் துஞ்சாத உயர்கொள்கையினராக இருந்தனர்.

- யானைக் கோட்டிடை வைத்தக் கவளம் போல் பரிசிலர் பரிசுபெறும்படி வரையாது வழங்கும் கொடை உணர்வினர்.

- இளமையில் வீரராகவும் சூரராகவும் திகழ்ந்தவர் முதுமையில் சிக்கித் தவிக்கும் உணர்வினராகவும் காணப்படுகின்றனர்.

- இருமிடை மிளைந்த சிறுசொல் பெரு மூதாளராக இளிவரலுக்குட்பட்டு கிடக்கும் முதிய ஆடவரையும் சங்க இலக்கியம் காட்டத் தவறவில்லை.

- உள வலியும் குன்றிய சாமானிய ஆடவனைக் காண முடிகிறது. ஆடவரின் அந்தந்தப் பருவத்து உணர்வுகள் குடும்பத்தாரால் நாட்டோரால் உரிய நேரத்தில் உரிய விதத்தில் பாதுகாக்கப்பட்டு நெறிப்படுத்தப்படுமேயானால் ஆடவர் சமுதாயம் உலகச் சமுதாயத்திற்கு முதுகெலும்பாக மூளையாக இதயமாக அமைந்து பெண் சமுதாயத்தை வளர்க்கும் வாழ்விக்கும் என்பது ஒருதலை.

- வாட்டும் வறுமையில் ஆட்பட்டாலும் வறுமையிலும் செம்மையினராகத் திகழ்ந்தனர். (புலவர்கள்)
- "எல்லோர்க்கும் கொடு மனை கிழவோயே" என அறிவுறுத்திய புலவர் நாளைக்கு வேண்டும் என பூட்டி வைக்காமல் எல்லோர்க்கும் கொடுக்கச் செய்யும் கொடையுணர்வு கொண்டவராகவும் திகழ்ந்தனர்.
- பீடில் மன்னர் புகழ்ச்சி வேண்டி இல்லாததை இருப்பதாக சொல்லாத நாவினர் ஆடவர்.
- "பாடுபெறு புலவன் பரிசிலன் வாடுநர் பெயர்தலின்" நாடு இழத்தலினும் நனி இன்னாது" என்று வருந்தி பாடுபெறு புலவரின் வாட்டம் கலையத்துடித்த உள்ளம் கொண்டவர் ஆடவர் (குமணன்).
- "தலைதனைக் கொண்டு போய் தம்பி கையிற் கொடுத்து விலைதனைப் பெறுவாய்" என தமிழுக்குத் தலைகொடுக்கத் துணிந்தவன் ஆடவன் (குமணன்)
- ஆதல் தன்னகத்தடக்கி வாழ்தல் வேண்டி அமிழ்தனைய நெல்லிக்கனியைத் தமிழ் வாழ அவ்வைக்கு அளித்தவன் ஆடவன். (அதியன்)
- சங்க கால ஆடவரின் கொடை உணர்வு தங்கள் மறுமை நோக்கியது அன்று; பிறர் வறுமை நோக்கியதாகும்.
- ஆடவர் வாழ்வில் பல்வேறு சூழல்களில் தம் உணர்வுகளைப் பெரும்பான்மை நேரடியாகவும், சிறுபான்மை மறைமுகமாகவும் வெளிப்படுத்தியுள்ளனர் என அறியமுடிகிறது.
- சங்க கால ஆடவரின் உணர்வுகள் அக்காலச் சமுதாயத்தவரால், பெரிதும் மதிக்கப்பட்டு போற்றப்பட்டதை அறியமுடிகிறது.
- ஆடவர் தாங்களாகவே விரும்பி கடமை ஆற்றினர் என அறிய முடிகிறது. தங்கள் உரிமைகள் மறக்கப்பட்ட போது போராடி அவற்றைப் பெற்றனர் என்பதை அறிய முடிகிறது.
- ஆடவர், தம் உணர்வுகளுக்கு மட்டுமல்லாமல் அகத்தில் தலைவியின் உணர்வுக்கும், புறத்தில் சமுதாயத்தவர் உணர்வுகளுக்கும் உரிய மதிப்புக் கொடுத்தனர் என்பதை அறிய முடிகிறது.
- ஆடவர் குடும்பப் பொறுப்புணர்வு மிக்கவர்களாத் திகழ்ந்ததோடு பிள்ளைப் பாச உணர்வு கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.
- ஆடவர் தம் முன்னோர் பெருமையை முயன்று காக்கும் தன்மையராக விளங்கினர்.
- காதல் உணர்வும், கடமையுணர்வும் ஒரு இணை கோடுகளாக ஆடவரிடம் காணப்படுவதை எடுத்துரைக்கின்றனர்.
- போர்க்களத்தில் அறநெறிப்படி போர் புரிந்த அறவுணர்வுகொண்டவராக ஆடவர் காணப்படுகின்றனர்.

- நட்புணர்வு, புலவர்கள் மதித்துப் போற்றும் உணர்வையும் ஒருங்கே கொண்டவராகக் காணப்படுகின்றனர். அக்கால ஆடவர் மான உணர்வு மிக்கவராகத் திகழ்ந்தனர்.

- பன்முக உணர்வுக் கொண்டவர்களாக இருந்த ஆடவர் மனைவி, பெற்றோர், குழந்தை, தமையன் போன்ற குடும்ப உறுப்பினரிடம் பழகும் போது அவரவர்க்குத் தேவையான உணர்வுகளை வெளிப்படுத்தி மீண்டும் தன்னிலைக்குத் திரும்பும் உணர்வு மீட்சித்திறன் கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர்.

- அவரவர்க்கு தக்க வகையில் தம் உணர்வுகளை மாற்றிக்கொள்வதோடு பாணன், புலவர், தேர்ப்பாகன், மக்கள், பகைவர் போன்ற ஒவ்வொரு நாளும் தான் சந்திக்கின்ற வேளையில் அச்சூழலுக்கு ஏற்ப, அவரவர்க்கேற்றவாறு தனது உணர்வுகளைப் பிறர் ஏற்றும் வகையில் வெளிப்படுத்தும் உணர்வு முதிர்ச்சி பெற்றவராக விளங்குவதோடு மீண்டும் தனது இயல்பு நிலைக்குத் திரும்பும் உணர்வாளுநராகவும் (Upholding Emotions) காணப்பட்டனர்.

- எனவேதான் அவர்களால் இல்லத்தலைவனாகவும் இருக்கமுடிந்தது புறத்திலும் தலைமைப் பொறுப்பிலும் இருக்கமுடிந்தது. அகத்தில் தன்னால் விரும்பப்படுகின்ற தலைவியைக்காட்டிலும் தலைவியால் விரும்பும் தலைவனாகக் காணப்படுகின்றனர். புறத்தில் சமுதாயம் விரும்பும் தலைவனாக உயர்ந்து விளங்க முடிந்ததை அறியமுடிகிறது.

- இவ்வாய்வின் முடிவாக, ஆடவன் வாழ்க்கைப் போராட்டத்தில் நிலைத்து நிற்கும் போராட்ட உணர்வு, விழுமிய உணர்வு போன்ற உணர்வுகள் காரணமாக பரிணாமத்தில் நிலைபேறுடைய இடத்தினைப் பெறுகிறான். இந்நிலை ஆடவர் சமுதாயத்தில் இன்றளவும் நிலைத்து நிற்கின்றது. அவை கால வெள்ளத்தில் கரைந்து போகாத உணர்வுகள், வெள்ளத்தை எதிர்க்கும் உணர்வுகளாக வலிமை பெற்றவை வாழ்வு பெறும்' என்பதற்கிணங்க ஆடவரை வழிநடத்திச் செல்கிறது.

- ஆடவர், பெண்டிரைப் போல் உணர்வுகள், ஆசைகள் போன்றவை உள்ளவரே என்பதைச் சமுதாயம் உணர வேண்டும். ஆடவர்கள் எங்கிருந்தோ குதித்தவர் அல்ல. நம்மோடு சேர்ந்து வாழ்பவர்கள். அவர்களுக்கும் தேவைகள் உண்டு. அத்தேவையைத் தாமே நிறைவு செய்வதோடு பிறரின் உதவியை எதிர்பார்க்கும் நிலையும் உண்டு என்பதை இவ்வாய்வு உணர்த்துகின்றது.

- ஆடவரின் உணர்வுகள் மறுக்கப்படும் போது 'பெருமையும் உரனும் ஆடூஉ மேன' என்று கூறி மன இறுக்கம், அழுத்தம், சிதறலுக்கும் உள்ளாக நேரும் என்று ஆய்வாளர் உணர்த்த விரும்புகிறார். அவர்களின் உணர்வுகளும் பெரும்பான்மை பொதுவானவை. அவை போற்றப்படவும் காக்கப்படவும் வேண்டும் என்பதைச் சமுதாயம் உணரவேண்டும்.

- பெருமை கொண்டவன் தான் ஆண் எனினும் அப்பெருமைக்கும் பெருமை சேர்க்க பெண்மை தேவைப்படுகிறது. உரன் கொண்டவன் தான் ஆண் எனினும் அந்த உரன் உடையாமல் சிதையாமல் பாதுகாக்கப்பட வேண்டுமானால் அவனது உணர்வுகள் பாதுகாக்கப்பட வேண்டும் என்று ஆய்வாளர் சுட்டிக்காட்ட விரும்புகிறார்.

- ஆண் தன் மனம் விட்டு பேசும் போது தான் அவனது பிரச்சனைகளுக்கு முடிவு ஏற்படுகிறது. உதவி செய்யும் பெருந்தலைவனாக இருந்தாலும் உதவி பெறுபவனாகவும் இருந்துள்ளான். ஆடவருக்குத் தேவை இருக்காது என எண்ணி உதாசீனப்படுத்தும் சமுதாயம் இதனை உணர வேண்டும்.

- அகவாழ்வில் மட்டுமல்லாமல் புறவாழ்விலும் தன்மன உணர்வினை ஆடவர் வெளிப்படுத்தினால் சமுதாயத்தில் பல பிரச்சனைகள் முடிவுக்கு வரும் என்பதை ஆய்வாளர் நம்புகிறார்.

- ஆடவர், பரிந்தோடி வந்து உதவுபவர்களாகவும், தங்கள் உணர்வுகளை வெளிப்படுத்துபவர்களாகவும் கலந்து பேசுபவர்களாகவும் உணர்வுகளைப் பகிர்ந்து கொள்பவராகவும் இருந்தால் இன்று உளவியல் சார்பான பிரச்சனைகள், மன இறுக்கம், இரத்த அழுத்தம் போன்றவை குறைந்து போகும் என்று மருத்துவர்கள் பரிந்துரைக்கின்றனர்.

- ஆண்களும் பெண்களைப் போலவே அனைத்து உணர்வுகளும் நிரம்பியவர்களே. எனினும், **"குணம்நாடி குற்றமும் நாடி அவற்றுள் மிகைநாடி மிக்க கொளல்"** என்பதற்கிணங்க பரத்தையற் சென்ற குற்றத்தை ஒதுக்கி அன்னாரிடம் காணப்பட்ட வீரம், ஈரம், காதல், காமம் போன்ற குணங்களையே சங்கத் தொகுப்புப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

- எட்டுத் தொகைப் பாடல்கள் முழுவதையும் பரக்க ஆராய்ந்ததில் சங்க கால ஆடவர் இன்றையச் சமுதாய ஆடவரைப் போல ஏக்கங்கள், வேட்கைகள், தவிப்புகள் போன்ற உணர்வுகளைக் கொண்டவர்களாகவே காணப்படுகின்றனர்.

- அதுமட்டுமல்லாமல், பெண்கள் உள்ளத்தில் தோன்றுகின்ற ஏக்கங்களுக்கும் எதிர்பார்ப்புகளுக்கும் எள்ளளவும் குறைந்ததில்லை ஆடவரின் ஏக்கங்களும், எதிர்பார்ப்புகளும் என்பதை அறியமுடிகிறது. எனவே ஆடவரை உடல்வலிமை ஒன்றை மட்டுமே கருத்தில் கொண்டு அவர்களை வெகு உயரத்தில் தூக்கி நிறுத்திவிட்டு அவர்களின் அடிப்படையான சாதாரண உணர்வுகளைப் புறக்கணிப்பது ஏற்புடையது அல்ல. அவர்களின் உணர்வுகள் உணரப்பட வேண்டியவை, உணர்த்தப்பட வேண்டியவை, தணிக்கப்பட வேண்டியவை, தட்டிக் கொடுக்கப்பட வேண்டியவை என்பதை சமுதாயத்திற்கு உணர்த்தும் வகையில் இவ்வாய்வு அமைந்துள்ளது.

- அவ்வகையில் சமுதாயத்தார், குடும்பத்தார் ஆடவரின் உணர்வுகளைப் புரிந்து கொண்டு நடந்தால்; அவர்களும் சாதாரணமான மனிதர்கள்தான். அவர்களுக்கும் உணர்ச்சிகள் உண்டு என்பதைப் புரிந்து கொண்டு நடந்தால் குடும்பம் சிதைந்து சீரழிந்து போகாது, சமுதாயம் தடுமாறியும் தடம் மாறியும் போகாது, பெண்களைக் காட்டிலும் ஆண்களுக்கே பெருமளவில் ஏற்படும் இதயம் தொடர்பான நோய்கள், நரம்பியல் தொடர்பான நோய்கள், உளவியல் சார்பான நோய்கள் போன்றவை பெருமளவில் குறையும். வீடும் நாடும் நன்னிலை எய்தும்.

- ஆடவர் உளநிலை, உணர்ச்சி நிலை சீரடைந்தால் பெண்களின் பிரச்சனைகள் பெருமளவு தீர்ந்துவிடும். இத்தகைய உணர்வு சீரழிவிற்கு உள்ளான ஆடவரே, புகைப்பழக்கம், போதைப்பழக்கத்திற்கு உள்ளாகி மனைவியையும், மக்களையும் மனம் மடியச் செய்கின்றனர். எனவே ஆடவரின் உணர்வு நிலைகளைப் புரிந்து கொள்ளுதல் என்ற புரிதல் அன்னார் இளம் சிறுவர்களாக இருக்கும் நிலையிலிருந்தே குடும்பத்தாரிடம் ஏற்பட்டால் ஆடவர் சமுதாயம் தடம் மாறியும் தடுமாறியும் போகாது என ஆய்வாளர் நம்புகிறார்.

- எட்டுத்தொகைப் பாடல்களில் விதிவிலக்காக பரத்தமை ஒழுக்கம், பெண்ணடிமை குறித்த பாடல்களில் பெண்களைப் போற்றிய உணர்வுகளே காணப்படுகின்றன. இத்தகைய விதிவிலக்குகளுக்குச் சமாதானம் கூற முற்படவில்லை. அவை தவிர்க்கப்பட வேண்டும் என்பதால்தான் பரத்தமை சாடிய வள்ளுவர் போன்ற ஆண்களும் உள்ளனர். இத்தகைய உணர்வுகள் ஆடவரிடம் மேலோங்கி இருந்தாலும் உடல்வலிமையையும் பெற்றிருத்தல், தலைமைப் பொறுப்பினை தக்க வைத்துக் கொள்ளும் திறமை போன்றவை பெற்றிருந்தனர்.

- தன்னுடைய உரனை வீட்டுயர்வுக்கும் நாட்டுயர்வுக்கும் காணிக்கையாகப் பயன்படுத்தினர் என்பதையும் அறிய முடிகிறது. சங்க இலக்கியப் பாடல்கள், படிப்பவர் உள்ளத்தில் ஆடவன் என்பவன் சாமானிய உலகில் உள்ள மற்ற மனிதரைக் காட்டிலும் மீத்திறன் மனிதனாகவும், எல்லாவகையிலும் வேறுபட்டவன் என்ற எண்ணம் தோன்றும். மேலும் அத்தகு தன்மையான ஆடவனுக்குத் தலைவியும் பிறரும் கட்டுப்பட்டு அடங்கி வாழ்தல் முறையே என்றும் அப்பாடல்கள் நியாயப்படுத்தும். அவ்வாடவனின் சொற்படி இல்லத்தில் தலைவியும் புறத்தில் பிறரும் அடங்கியே நடத்தல் வேண்டும் என்றும் எண்ணத் தோன்றும்.

- ஆடவன் என்பவன் அடக்கி ஆளப்பிறந்தவன், பெண் என்பவள் அடங்கிப் போக பிறந்தவள் என்ற எண்ணம் சுவைஞர் மனதில் வேரூன்றுவதோடு பெண்ணின் உள்ளத்திலும் ஆழமாகப் பதிந்துவிடும். இங்ஙனம் ஆடவனை உயர்த்திப் பாடியதால் அவன் பிறருக்கு அந்நியனாகிப் போவதோடு பிறரும் அவனுக்கு அந்நியராகிப் போய்விடுகின்றனர்.

- ஆடவன், பெண்ணைக் காட்டிலும் உடல் அளவில் வலிமை பெற்றிருந்தாலும் பெண்ணைப் போல் உணர்வுகளுக்கு உரியவன். அவனும் சில வேளைகளில் அடங்கிப் போவதுண்டு. உள்ளம் அழிந்து நொந்து போவதும் உண்டு என்ற மறுபார்வைதான் இந்த ஆய்வாகும். மனைவியைக் காக்கவும், சமுதாயத்தைக் காக்கவும் பிறந்தவர் ஆடவர். எனினும் பெண்டிரால் ஆடவர் காக்கப்பட வேண்டும் என்பதும் அவர்களின் உணர்வுகள், சமுதாயத்தால் காக்கப்பட வேண்டியதையும், போற்றப்பட வேண்டியதையும் இவ்வாய்வு இனங்காட்டுகிறது.

- துன்பத்தில் துடிப்பவனாகவும் இன்பத்தில் திளைப்பவனாகவும், பிறர் கலங்கக் கண்டு கலங்குபவனாகவும், பிறர் புலம்பக் கண்டு புலம்புபவனாகவும் எங்கிருந்தாவது தன் இன்னல் தீர உதவி கிடைக்குமா என்று ஏங்குபவனாகவும், இடுக்கனுற்ற நேரங்களில் தவித்துத் திகைப்பவனாகவும் நெஞ்சொடு புலம்புகின்றவனுமாக பெண்களை ஒத்த அனைத்து உணர்ச்சிகளையும் ஒத்தவராக சங்கத் தொகைப் பாடல்கள் ஆடவரை வெளிப்படுத்திக் காட்டுகின்றன. இது தொகை நூல்கள் காட்டும் ஆடவரின் உணர்வு நிலைகளின் ஒரு பக்கமாகும்.

- அதே தொகை நூல்களில் ஆடவரின் மறுபக்கமாக புலி நிகர்த்த வீரம், கிலியை உதறித் தள்ளும் உள்ளம், பிறரிடம் கெஞ்சுதல் இல்லாத தீரம், வினை செய்ய விழையும்–விரையும் உள்ளம், வினை முடித்து வெற்றியோடு திரும்பும் உள்ளம், பகைவர்க்கு ஞாயிறு போன்றவனாகவும் நண்பர்களுக்கு திங்கள் போன்றவனாகவும் திகழும் தன்மை, முடியாது என்ற சொல்லே தன் அகராதியில் இல்லை என்று எண்ணுமளவிற்கு எந்த வினையையும் முடித்துக் காட்டும் இயல்பு, ‘செய் அல்லது செத்துமடி’, ‘அடங்கு அல்லது அடக்கிவிடுவேன்’ என்பன போன்ற உணர்வுகள் தொகை நூல்கள் காட்டுகின்ற ஆடவரின் மறுபக்கமாகும். இந்த ஆய்வு ஆடவரின் இருபக்கத்தையும் ஒப்ப நோக்கிக் காணும் வகையில் அமைகிறது.

- ஆடவரின் உணர்வுகள் குடும்பத்தினராலும் சமுதாயத்தாலும் முறையாக சரியாகப் போற்றப்பட வேண்டியவையே என்ற கருத்தை முன்வைப்பதோடு எந்த வகையிலும் சமுதாயத்தின் மறுபாதியாகிய பெண்ணிணத்திற்குச் சமமான இனமே இந்த ஆணினம் என்பதை எட்டுத்தொகைப் பாடல்கள் தெள்ளத்தெளிவாகக் காட்டுகின்றன. பெண்கள் எப்படி போற்றப்பட வேண்டுமோ அதுபோல் ஆண்களும் போற்றப்பட வேண்டும்.

- ஆடவர் எங்ஙனம் உயர்த்தப் பட்டிருக்கிறார்களோ அதுபோல் பெண்டிரும் உயர்த்தப்பட வேண்டும். ஆண்கள் எங்ஙனம் மதிக்கப்பட்டிருக்கின்றனரோ அதுபோல் பெண்களும் மதிக்கப்பட வேண்டும். உணர்வளவில் பெண்களோடு ஆண்களும் சரிநிகர் சமானமானவர்களே என்பதை இவ்வாய்வு முன் வைக்கிறது.

- சங்க காலத்தில் ஆடவரின் அனைத்து உணர்வுகளும் குடும்பத்தவரால் சமுதாயத்தவரால் இனங்காணப்பட்டு போற்றப்பட்டன. எனவே அவர்களிடம்

வேண்டாத மனமுறிவோ, மன இறுக்கமோ, ஏற்படவில்லை. அப்படியே ஏற்பட்டாலும் புலவர்களின் அறவுரைகள் அவற்றை மாற்றிப் போட்டன. மீண்டும் சாதாரண மனித உணர்வு நிலைக்கு அவர்களை மீட்டு வந்தன என்று பாடல்கள் வழி அறியமுடிகின்றது.

- எனவே, கடியப்பட வேண்டிய பரத்தமை ஒழுக்கத்தைத் தவிர அனைத்து நிலைகளிலும் அன்றைய ஆடவர் (சங்க கால) இன்றைய ஆடவர்க்கு வழிகாட்டிகளாக அமைகின்றனர் என்று ஆய்வாளர் கருதுகின்றார்.

- இதை உணர்ந்து நடந்தால் மனித உணர்வுகள் முழுமையாக புரிந்து கொள்ளாததால் ஏற்படுகின்ற மன இறுக்கம், மனமுறிவு, மன அழுத்தம் போன்ற உளம் சார்ந்த நோய்கள் மனித இனத்தை அணுகாது. அதிலும் குறிப்பாக ஆடவர் சமுதாயத்தை அணுகாது.

- வீரம், காதல் என்ற இரண்டு உணர்வுகளைத் தவிர ஆடவரிடம் உள்ள பிற உணர்வுகள் காலம் காலமாக குடும்பத்தால், சமுதாயத்தால் இருட்டடிப்பு செய்யப்படுகின்றன. இதனால் ஆடவரின் சாதாரண அடிப்படை உணர்வுகள் கூட புறக்கணிக்கப்படுகின்றன. கண்டு கொள்ளப்படாமல் விடப்படுகின்றன. இதனால் வீட்டிலும் சமுதாயத்திலும் ஒரு ஆண்மகனுக்கு கிடைக்க வேண்டிய தேவைகள் நிராகரிக்கப்படுகின்றன.

- இத்தகைய உணர்வு நிராகரிப்பு தொடர்ந்து நீடித்தால் அதுவே அன்னார் தம் உள்ளத்தில் மன அழுத்தமாக, மன முறிவாக உருவெடுக்கும் அல்லது அடுத்த பாலினத்தின் மேல் அடக்குமுறையாக வெளிப்படும். இந்த உணர்வுகள் போற்றிக் காக்கப்படுமானால் உடலும் உள்ளமும் உரம் மிக்க ஆடவர் உருவாவர்.

- சமுதாயத்தில், இளையவர், சளைத்தவர், உயர்ந்தோர், வழிபடுதற்குரியோர் என்ற வேறுபாடு நீங்கும். ஆடவர் இனத்தின் மேல் சமுதாயம் கொடுக்கின்ற அதிகப்படியான மதிப்பானது அவர்களின் சாதாரண உணர்வுகளைக் கூட வெளிக்காட்டவிடாமல் அவர்களைக் கட்டுப்படுத்தும் சிறைக் கம்பிகளாகி விடுகின்றன என்று ஆய்வாளர் நம்புகிறார்.

- ஈராயிரம் ஆண்டுகள் கடந்த நிலையிலும் தமிழ்ச் சமுதாயத்தில் வாழையடி வாழையென தொடர்ந்து வருகின்ற ஆடவர் இனம், வீரவுணர்வும், ஈர உணர்வும், அறிவுணர்வும், அறவுணர்வும் கொண்டிருப்பது வெள்ளிடை மலை. ஆசை, ஏக்கம், தவிப்பு, எதிர்பார்ப்பு, கோபம் போன்ற எல்லா உணர்வுகளும் பெண்களைப்போல் ஆடவருக்கும் உரியவை. அவ்வுணர்வுகள் முறையாக முழுமையாக குடும்பத்தவரால், சமுதாயத்தால் இனங்காணப்பட்டு ஆடவர் இனம் பராமரிக்கப்படவேண்டும் என்று ஆய்வாளர் தம் வேட்கையை வெளிப்படுத்துவதோடு இயல்பு இகழ்ந்தவன் தலைவன் என்பதை விட இயல்பான உணர்வுகளுக்கு உட்பட்டவனே தலைவன் என்பதைச்

சமுதாயம் ஏற்றுக்கொண்டால் சங்க காலத்தைப் போன்ற உடலும் உள்ளமும் உறுதி வாய்ந்த உரம் பெற்ற ஆடவர் சமுதாயத்தைத் தமிழகம் தொடர்ந்து பெற்று உலகில் உயரும். வாழ்க ஆடவர் இனம்! வளர்க அவர்தம் உணர்வுகள்!.

**வருங்கால ஆய்வாளர்களுக்கான ஆய்வுக் களன்கள்**

- சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள பெண்டிரின் கூற்றுகளில் வெளிப்படும் ஆடவரின் உணர்வுகள் குறித்து ஆராயலாம்.
- பத்துப்பாட்டில் வெளிப்படும் ஆடவரின் உணர்வுகள் குறித்து ஆராயலாம்.
- ஆற்றுப்படை நூல்களில் ஆடவரின் உணர்வுகள் குறித்து ஆராயலாம்.
- சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள ஆடவர் பெண்டிர் கூற்றுகளை ஒப்பிடும் வகையில் ஆராயலாம்.
- இங்ஙனம் மேற்கண்ட களன்களில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டால் ஆடவரின் அனைத்து உணர்வுகளும், பெண்டிரிடம் அவர்களுக்கு கிடைத்த மதிப்பும் வெளிக்கொணர வாய்ப்பாக அமையும் என்பதை உறுதியாக நம்பலாம். ஆடவர், தங்கள் உணர்வுகள் மதிக்கப்படும் நிலைக்கு உயர்த்தப்படும்போது அவர்கள் உள்ளம் உவகை கொள்ளும் என்பது திண்ணம்.



# துணைநூற் பட்டியல்

## முதன்மை ஆதார நூல்கள்


1. மகாதேவன். கதிர்., நற்றிணை,
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர் – 630 307.
முதற்பதிப்பு–நவம்பர், 2003.

2. தமிழண்ணல், குறுந்தொகை,
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர் – 630 307.
முதற்பதிப்பு–ஏப்ரல் 2002.

3. சிங்கார வடிவேலன், அர., ஐங்குறுநூறு,
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர் – 630 307.
முதற்பதிப்பு–ஏப்ரல் 2003.

4. அண்ணாமலை, சுப., கலித்தொகை,
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர் – 630 307.
முதற்பதிப்பு–ஏப்ரல் 2003.

5. மீனவன், நா., முருகசாமி, தெ., அகநானூறு (களிற்றியானை நிரை),
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர் – 630 307.
முதற்பதிப்பு–செப்டம்பர் 2004.

6. மீனவன், நா., அண்ணாமலை, சுப., அகநானூறு, (மணிமிடை பவளம்),
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர் – 630 307.
முதற்பதிப்பு– செப்டம்பர் 2004.

7. தமிழண்ணல், மீனவன், நா., அகநானூறு (நித்திலக்கோவை),
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர் – 630 307.
முதற்பதிப்பு–செப்டம்பர் 2004.

8. இளங்குமரன், இரா., புறநானூறு,
கோவிலூர் மடாலயம்,
கோவிலூர் – 630 307.
முதற்பதிப்பு–ஏப்ரல் 2003.

9. பரிமணம், அ.மா., — பதிற்றுப்பத்து, கோவிலூர் மடாலயம், கோவிலூர் – 630 307. முதற்பதிப்பு–ஏப்ரல் 2003.

10. சாரங்கபாணி, இரா., — பரிபாடல், கோவிலூர் மடாலயம், கோவிலூர் – 630 307. முதற்பதிப்பு–ஏப்ரல் 2003.


**துணைமை ஆதார நூல்கள்**


1. அண்ணா, சோம. — சங்க இலக்கியத்தில் குடும்பம், ராஜ செல்வி பப்ளிகேஷன்ஸ், சென்னை.

2. அப்புள்ளாச்சாரி, கி.ரா. — குழந்தை உளவியல், சாந்தா பப்ளிகேஷன்ஸ், சென்னை.

3. அறவாணன், க.ப. — அற்றைநாட் காதலும் வீரமும், பாரி நிலையம், சென்னை, பதிப்பு–1978.

4. ஆதி நாராயணன், எஸ்.பி. (தமிழாக்கம்:மு. இராசமாணிக்கம்) — மனித உள்ளம், பழனியப்பா பிரதர்ஸ், சென்னை. இரண்டாம் பதிப்பு–1977 (மு.ப.1973).

5. இராசமாணிக்கம், மு. — உளவியல் துறைகள், முதல் தொகுதி–1973

6. ” — உளவியல் துறைகள், இரண்டாம் தொகுதி–1974 தமிழ்நாட்டுப் பாடல்நூல் நிறுவனம், சென்னை, 1980.

7. ” — வேர்ப்பலா, தாமரை பப்ளிகேஷன்ஸ் (பி) லிமிடெட்., 41–பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், அம்பத்தூர், சென்னை – 98. முதற்பதிப்பு மே – 2001.

8. இராமகிருட்டிணன், அ., — அகத்திணை மாந்தர் ஓர் ஆய்வு, சர்வோதய இலக்கியப் பண்ணை, 321, மேலவீதி, மதுரை–625 001.

9. இலக்குமிதரன் பாரதி, சோ., — நமது சமூகம், பழநியப்பா பிரதர்ஸ், சென்னை, 1979

10. எங்கெல்ஸ்
மொழிபெயர்ப்பு : நா. தர்மராஜன்
மொழிபெயர்ப்பு : இ.லி. எந்திரயெவ் — குடும்பம், தனிச்சொத்து, அரசு ஆகியவற்றின் தோற்றம், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பிரைவேட் லிமிடெட், சென்னை, 4வது பதிப்பு – 1990, முன்னேற்றப் பதிப்பகம், மாஸ்கோ – 1987.

11. எட்கர்தர்ஸ்டன்
தமிழாக்கம் க. இரத்தினம் — தென்னிந்தியக் குலங்களும் குடிகளும், தொகுதி–3, தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர், 1986.

12. கல்பகம், இரா. — சமூகவியல், தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம், சென்னை, 1973.

13. காந்தி, க. — தமிழர் பழக்கவழக்கங்களும் நம்பிக்கைகளும், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், சென்னை, 1980.

14. ” — சமூகவியலும் இலக்கியமும், முதல் பதிப்பு, நியூசெஞ்சுரி புக் ஹவுஸ், சென்னை–98, 1979.

15. கார்ல் சி.காரிசன் (மூலம்)
அரங்கராஜன், தி.இரா.,
(மொழிபெயர்ப்பு) — இளையோர் உளவியல், தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, (1984).

16. கேசவன், கோ., — மண்ணும் மனித உறவுகளும், சென்னை புக் ஹவுஸ், சென்னை, 1979.

17. கோபாலகிருஷ்ணன், ம.சு. மானிடவியல், தமிழ்வெளியீட்டுக் கழகம், தமிழ்நாடு அரசாங்கம், மு.ப.1963.

18. சக்திவேல், சு. தமிழ்நாட்டுப் பழங்குடி மக்கள், மணிவாசகர் நூலகம், சிதம்பரம், மு.ப.– 1980.

19. சஞ்சீவி, ந., மங்கல மனைமாட்சி, அருள்வாழ்வு பதிப்பகம், நடேச நாராயண நிலையம், மயிலாப்பூர், சென்னை–4. 1917.

20. சந்தானம், எஸ். கல்வி உளவியலும் கல்விச் சமூக இயலும், அமுத நிலையம் பிரைவேட் லிமிடெட், தேனாம்பேட்டை, சென்னை–18, 1961.

21. சசிவல்லி, வி.சி., தமிழர் திருமணம், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், டி.டி.ஐ. தரமணி, சென்னை–113. 1985

22. ” பண்டைத் தமிழர்தம் தொழில்கள், உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம், டி.டி.ஐ. தரமணி, சென்னை–113. 1989.

23. சரளா இராசகோபாலன் சங்க இலக்கியத்தில் தோழி, ஒளிப்பதிப்பகம், சென்னை.

24. ” இலக்கியத் தேன், ஒளிப்பதிப்பகம், சென்னை–18, மு.ப. 1999.

25. சண்முகம், தா.ஏ., உளநலவியல், தமிழ் வெளியீட்டுக் கழகம், சென்னை, 1970.

26. சண்முகம், தா.ஏ., உளவியல் (முதற் பதிப்பு), சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை, 1960.

27. சிதம்பரனார், சாமி. — எட்டுத்தொகையும் தமிழர் பண்பாடும்,
இலக்கிய நிலையம்,
சென்னை.

39. சிவகாமி, ச., — காலச்சூழலில் பெண்,
மாதவி பதிப்பகம்,
சென்னை, மு.ப.1996.

40. சிவராஜ், து. — சங்க இலக்கியத்தில் உளவியல்,
சிவம் பதிப்பகம்,
வேலூர்–632 002, மு.ப.டிசம்பர்.1994.

41. சுப்புரெட்டியார், ந. — கல்வி உளவியல் கோட்பாடுகள்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.

42. ” — தொல்காப்பியம் காட்டும் வாழ்க்கை,
முதல் பதிப்பு, பழனியப்பா பிரதர்ஸ்,
சென்னை, 1864.

43. செல்வராசு, அ. — ஆண் ஆளுமையில் பெண் கற்பு,
எழில் பதிப்பகம்,
சென்னை.

44. பரிமேலழகர் — திருக்குறள்,
திருநெல்வேலி தென்னிந்திய
சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
சென்னை–1, 10–ம் பதிப்பு ஜுலை–1956.

45. பக்தவத்சல பாரதி — பண்பாட்டு மானிடவியல்,
மணிவாசகர் பதிப்பகம்,
55, லிங்கி தெரு,
சென்னை–1. 1990.

46. புலியூர் கேசிகன் — சிலப்பதிகாரம்,
பாரிநிலையம்,
சென்னை – 108, 1997.

47. மறைமலை, சி.இ. — இலக்கியமும் உளவியலும்,
மணிவாசகர் பதிப்பகம்,
சென்னை.

48. மாணிக்கம், வ.சுப., தமிழ்க் காதல்,
பாரி நிலையம், பிராட்வே,
சென்னை. 1962.

49. முத்தையா, சு. சங்க கால மறவர்,
காவ்யா பதிப்பகம்,
பெங்களூர், மு.ப.1998.

50. வித்தியானந்தன், சு., தமிழர் சால்பு,
புத்தகப் பண்ணை,
சென்னை, பதிப்பு. 1971.

**ஆய்வேடுகள்**

1. மாரப்பன், எம். தொல்காப்பியரின் உளவியல் கோட்பாடுகள்,
முனைவர் பட்ட ஆய்வேடு,
சென்னைப் பல்கலைக்கழகம்.

2. ரேணுகா, ச. சங்க இலக்கியம் காட்டும் மனித உறவுகள்,
முனைவர் பட்ட ஆய்வேடு,
சென்னைப் பல்கலைக்கழகம், 2001

3. கோகிலவாணி, சு. ஐங்குறுநூற்றில் தாயும் சேயும் – ஓர் ஆய்வு,
இளமுனைவர் பட்ட ஆய்வேடு,
சென்னைப் பல்கலைக்கழகம், 2000.

4. பொன்னுசாமி, மு., சங்க இலக்கியத்தில் மெய்ப்பாடுகள்,
முனைவர் பட்ட ஆய்வேடு,
சென்னைப் பல்கலைக்கழகம்,
சென்னை.

5. அண்ணாமலை, ஐ., சங்க இலக்கியத்தில் முல்லைத்திணை,
முனைவர் பட்ட ஆய்வேடு,
சென்னைப் பல்கலைக்கழகம், 1977.

6. குருநாதன், இராம. சங்க இலக்கியத்தில் குறிஞ்சி,
(நிலமும் வாழ்க்கையும்) எம்.லிட், ஆய்வேடு,
சென்னைப் பல்பலைக்கழகம், 1970.

**அகராதிகள்**


1. கலைக்களஞ்சியம் — பிரதம ஆசிரியர் : பெரியசாமித்தூரன், மா.பெ. தொகுதி–2, 1955, தொகுதி–8, 1961, தொகுதி–10, 1968. தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை.

2. அருணாசலம், ப. — சங்க இலக்கியப் பொருட் களஞ்சியம், (தொகுதி–3), தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர்.

3. அண்ணாமலை, வே. — சங்க இலக்கியத் தொன்மக் களஞ்சியம், மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம்.

4. மதுரைத் தமிழ் பேரகராதி — சந்தியா பதிப்பகம், சென்னை–83.

5. சுப்பிரமணியன், ச.வே. — மெய்யப்பன் தமிழ் அகராதி, மணிவாசகர் பதிப்பகம், சென்னை.

6. தமிழ் இலக்கணப் பேரகராதி — (பொருள் – அகம் – 2), தி.வை. கோபாலையர், தமிழ்மண் பதிப்பகம்.

7. கலியபெருமாள், கா. — உலகத் தமிழர் பண்பாட்டுக் களஞ்சியம் பகுதி–II, வாழ்வியல், வள்ளலார் அன்பு நிலையம், மலேசியா.


**நிகண்டுகள்**


1. இராமச்சந்திரன், எஸ்.பி., — அகஸ்தியர் ஏமத்துவம் என்னும் பஞ்ச காவிய நிகண்டு, தாமரை நூலகம், சென்னை.

2. சிவன்பிள்ளை, தி., உரை, — 'பிங்கல நிகண்டு' பிங்கல முனிவர் செய்த பிங்கலந்தை, தாமரை நூலகம், சென்னை.

3. சுப்பிரமணியன், ச.வே., (பதிப்பாசிரியர்) — தமிழ் நிகண்டுகள் தொகுதி–1, 2

4. சண்முகம் பிள்ளை, மு., சுந்தரமூர்த்தி, இ., (பதிப்பாசிரியர்கள்) — திவாகரம், முதல், இரண்டாம் தொகுதி, சென்னைப் பல்கலைக்கழகம், 1990, 1993.

| | | |
|---|---|---|
| 5. | மண்டலபுருடர் | பிங்கலந்தை என்னும் பிங்கலம், திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி, 1968. |
| 6. | கயாதரர், | உரிச்சொல் நிகண்டு, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி, 1971. |
| 7. | சண்முகம் பிள்ளை, மு., (பதிப்பாசிரியர்) | பாரதி தீபம் – திருவேங்கட பாரதி, சென்னைப் பல்கலைக்கழகம், 1980 |
| 8. | ஆறுமுக நாவலர் | சூடாமணி நிகண்டு, ஆறுமுக நாவலர் பதிப்பு. |
| 9. | இரேவண சித்தர், திரு. நாராயணையங்கார், பதிப்பாசிரியர் | அகராதி நிகண்டு, செந்தமிழ் பிரசுரம், மதுரை, 1921. |
| 10. | சொக்கலிங்கம், வீ.. (பதிப்பாசிரியர்) | ஆசிரிய நிகண்டு, சரசுவதி மகால் நூலகம், தஞ்சாவூர் – 1997. |
| 11. | மா. சற்குணம், | தமிழ் நிகண்டுகள் ஆய்வு, இளவழகன் பதிப்பகம், சென்னை–14, 2002. |

**சங்க இலக்கிய கட்டுரைகள்**

| | | |
|---|---|---|
| 1. | இலக்குமி நாராயணன், செ. | சங்க இலக்கியத்தில் குழந்தைகள் பற்றிய செய்திகள், இ.ப.த.ம. 21வது ஆய்வுக் கோவை, தொகுதி–1, அண்ணாமலை நகர், 1989. |
| 2. | கந்தசாமி, ஆ. | பழந்தமிழிலக்கியங்களில் அறக்கூறுகள், ஐந்தாம் உலகத் தமிழ் மாநாடு, தொகுதி–3, மதுரை, 1981. |
| 3. | மாதையன், பெ. | எவ்வழி நல்லவர் ஆடவர், தமிழ்ப்பொழில், தஞ்சாவூர், 1987–88. |

**ஆங்கில நூல்கள்**


| | | |
|---|---|---|
| 1. | Avasthi Rajendra | Psyche, Society and Tansions,<br>The Minerva Asosciation Limited,<br>Calcutta, 1973. |
| 2. | Coleman, James, C. | Psychololgy and Effective Behaviour,<br>D.B. Tarapore Vela Sons & Co. Private Limited<br>Bombay, First Indian Reprint,<br>1971 (1960 - U.S.A.) |
| 3. | Benneth, T.C. | The Sensory World,<br>An Introduction to Sensation and Pexception<br>Brook/Cole Publishing Co.,<br>Monterey, California, 1978. |
| 4. | Reader Digest | 1. Medical Question and Answer Book.<br>2. ABC's of the Human Mind. |
| 5. | " | How to make Psychology Work for you. |
| 6. | Dents & Sons, J.M. | The Antamy of Melenchology (P) Limited<br>London (I. Ed.) Vol.I |
| 7. | Robert, I. | The Psychology of Every day Life<br>Vol.I (1977). |
| 8. | Freud, S. | 1. Beyond the Pleasure Principle,<br>International Psychoanalytic Press<br>London, 1922.<br>2. Wit and its relation to the Unconscious<br>Mofiat, Yard and Company<br>New York, 1916. |
| 9. | Hudson, W.H. | An Introduction to the study of literature |
| 10. | Bowra, C.M. | Herioc Poetry<br>Macmilan Press Ltd., 1978 |
| 11. | Ramachandra Dikshitar, V.R. | War in Ancient India,<br>Madras University, 1944. |
| 12. | Abraham, Dr. P. Sperling | How to make Psychology work for you,<br>Fawcett Publication, Inv...<br>New York, 1956. |
| 13. | Krnjevic. K. | Hand Book of Physiology,<br>Sec. I: Vol.: II,<br>Bathasda, American Physiological Society, 1981. |
| 14. | Readers Digest | The Best of Twenty Years. |

15. Readers Digest ABC's of the Human Mind, Ist Edition, Readers Digest Association, Inc.... New York, 1990.

16. " The Human Body, Ist Edition, Readers Digest Association Ltd., London, 1964.



# பின்னிணைப்புகள்

I. ஆண், ஆடவர், ஆண்மை போன்ற சொற்களுக்கு நிகண்டுகள் அகராதிகள் குறிப்பிடும் பொருள்.

II. ஆண்மகன் தொடர்பான உறவுப் பெயர்கள்

III. ஆடவனைக் குறிக்கும் பல சொற்கள்

IV. எட்டுத் தொகையில் ஆடவர் எனும் சொல் இடம் பெறும் பாடல்கள்

V. அகத்திணைப் பாடல்களில் வெளிப்படும் ஆடவரின் பல்வேறு உணர்வுகள்

VI. புறத்திணைப் பாடல்களில் வெளிப்படும் ஆடவரின் பல்வேறு உணர்வுகள்



# பின்னிணைப்பு - I

## ஆண், ஆடவர், ஆண்மை போன்ற சொற்களுக்கு நிகண்டுகள், அகராதிகள் குறிப்பிடும் பொருள்

### I. நிகண்டுகள்,

**அ. ஆண்**

1. "ஆண்புருடன் காளை மைந்த னாடவனாடூஉக் குமரன்
மாண்புமான் பூமான் மகன்விடலை – வீண்பேடு
நஞ்சகமே சண்ட நபுஞ்சங்கி லீபமலி
யஞ்சலுறும் பெண்டகமு மாம்" (நாமதீப நிகண்டு 119)

2, ஆண்–தலைமை. (அகராதி நிகண்டு. ப,812)

**ஆ. ஆடவர்**

1. "ஆடவர் புருடரு மாணிளைஞரு மாகும்" (பொதிகை நிகண்டு – 203)
2. "ஆடவரென்ப தாண்பே ராமிளையவர்க்கு மப்பேர்" (அகராதி நிகண்டு ப–847)

### II. அகராதிகள்

**அ. ஆண்**

1. ஆண் மகன்– ஆணிற் சிறந்தோன், கணவன், மகன், மனிதன், பராக்கிரமசாலி (மதுரைத் தமிழ்ப் பேரகராதி)
2. ஆண்–ஆண்பாற் பொது, வீரியம், தலைமை, வீரன் (மெய்யப்பன் தமிழ் அகராதி)
3, ஆண்– ஆண்பாற் பொது, ஆண்மகன்.
4. ஆண்மகன்– ஆணிற் சிறந்தோன், கணவன், மகன், ஆடூஉ (கழக அகராதி)

**ஆ. ஆடவர்**

1. ஆடவர் – ஆண்மக்கள், இளையோர், பிராய முப்பத்திரண்டிற்கும் நாற்பத்தெட்டிற்கும் இடைப்பட்டவர் (மன்னர், புருடர், மாந்தர், மானுடர், மனிதர், வீரர், வென்றோர், ஆடுபவர்) (மதுரைத் தமிழ்ப்பேரகராதி)
2. ஆடவன்–ஆண்மகன், இளைஞன், நான்காம் பருவத்தினன். (மெய்யப்பன் தமிழகராதி)
3, ஆடவன் –ஆண்மகன், இளைஞன். (கழக அகராதி)

## பின்னிணைப்பு: II

## 'ஆண்மகன்' தொடர்பான உறவுப்பெயர்கள்

### I. நிகண்டுகள்

### 1. தலைவன்

“குறும்பொறைநா டன்கோன்கா னாடன்
அண்ணலுந் தோன்றலுமாகுந் தொழுவர் மள்ளர்களம
ருதர்கழ னியர்விளைஞர் பண்ணையர்கம் பளரே
யுழவர்கடை ஞோர் களைஞர் மருதநிலத் தவர்பேர்
.... ..... ..... .... ..... ..... .... ..... ..... .... ..... ..... .... ..... .....
நதியுறுகா லாட்டிகடை சியர்கிழத்தி யுழத்தி
நன்மகிழ்நன் கிழவனூரன் றலைவன் பேரே” (பொதிகை நிகண்டு)

“தலைவன் முதல்வன் தலைமகன் காதலன்
அண்ணல் அரசன் ஆர்வலன் அன்பன்
நாதன் நண்பன் நாயகன் காவலன்
கோமான் இறைவன் கொற்றவன் நாமமே” (அபிதான மணிமாலை – 363, ப–594)

“விடலையே தலைவன் பேரும் விறலோன் தன்பேரும் ஆகும்” (சூடாமணி நிகண்டு)

“தலைவன் – பத்த(ா), வேந்தன், எல்லாமுடையோன்” (அகராதி நிகண்டு ப–812)

“தோன்றல் – 'சுதனுந் தலைவனுந் தோன்றலாகும்” (பிங்கல நிகண்டு – 668)

பதி – “தலைவனு மூரும் பதியெனத் தகுமே“ (பிங்கல நிகண்டு – 744)

பொருநன் – “கொற்றவன்பெயருந் தலைவனுங் கூத்தனும் –
வீரனுந் திண்ணி யோனும் பொருநன்“ (பிங்கல நிகண்டு – 866)

மீளி – “பெருமையும் வலியுந் தலைவன் பெயரும் –
விறலோன் பெயரு மீளியாகும்” (பிங்கல நிகண்டு – 936)

வயவன் – “திண்ணியோன் பெயரும் வேட்டோன் பெயரு –
வலியோன் பெயரும் வயவனென்ப” (பிங்கல நிகண்டு – 999)

### 2. தந்தை

“அத்தனும் தாதையும் பிதாவும், ஐயனும்
அப்பனும் தந்தையின் முறைப்பெயர் ஆகும்” (திவாகர நிகண்டு – 310, ப–40)

**3. தமையன்**

“முன்பிறந் தானே, தன்னை என்று இவை
தமையன் என்னும் பெயர்க்குத் தாமே” (திவாகர நிகண்டு 313, ப–41)

“ புங்கவன்மூத் தோனையன் சேட்டனண்ணா வண்ணன்
பொறையன் முன்னோன் நம்முன்னொன் பான்றமையன்பேரா
மங்கனுட்ட னனிச்சனே பின்னிளவல் பின்னோ
னாதரங்சேர் தம்பியென்றே யிளையோன் பேராறாம்
செங்கனிவாய் மானணையாய் சோதரரே துணைவர்
சேர்சகோ தரருமுடன் பிறந்தவர் பேர்க் கணிப்பே” (பொதிகை நிகண்டு)

**4. இளைஞர்**

“வளமுருகன் குமரன் காளை சேடன் மழவன்
என்போரி ளமையரே” (உரிச்சொல் நிகண்டு – 104, ப–548)

**5. சிறாஅர்**

இளம்பிள்ளை – “குழவியும், மகவும், குட்டனும் பிள்ளையும் மழவும் சேயும், இளமைக்கு வகுத்தன” (திவாகரம் – 325, ப–41)

சிறுவர் – “சிறுவர்பன்மை சிறார் மகார் மகர்
பாலர் முதலேற்பன பகரப் படுமே” (அபிதான மணிமாலை)

**6. புதல்வன், மகன்**

“மைந்தர், புதல்வர், மதலை, புத்திரர்
சந்ததி, கான்முளை, மருமாண், பிறங்கடை
எச்சம், வழி, சேய், தோன்றல், செம்மல்
ஒத்த சிறுவன், தனயன், மகன் பெயர்” (திவாகர நிகண்டு 15 ப–41)

“சந்ததி தோன்றல், சிறுவன்சேய் புத்திரன்
மைந்தன் புதல்வன் மகன்“ (உரிச்சொல் நிகண்டு–48,ப–61)

“சந்ததி மதலை சூனுத் தனயன் காதலனே மெய்யன்
நந்தனன் சிறுவன் தோன்றல் குட்டனே நாட்டுஞ் செம்மல்
முந்திய மருமான் பிள்ளை முளைசுதன் புதல்வன் புத்திரன்
மைந்தன் கால பொருள்செய் எச்சம் வழிபிறஞ் கடைமகன்பேர்“
(சூடாமணி நிகண்டு – 173, ப–609)

"......... ..........மதலை சந்ததி தோன்றல்
வீறுசெய் செம்ம லெச்சம்
பொருந்துகால் முறைதோற்றம் மருமான் புறங்கடை
பொருள் சிறுவன் மைந்தன் சுதன்
புத்திரன் காதலன் குட்டனே நந்தனன்
புதல்வனே தனயநேயன்
தெரிந்தவழி பாலன் குமரன் மகனா மமாஞ்
செப்பும் வழி யும்பன் மருமான்
சீறிய புறங்கடை வழித்தோன்றல் மருகன்
சிறப்புடை பேரதாமே" (ஆசிரிய நிகண்டு ப–844)

"தோன்றல், புத்திரன் சேய் சுதன்மதலை பேயன்மரு
மான்றனையன் செம்மல் புதல்வன் பால – னீன்ற செல்வன்
சந்ததி குட்டன்சிறுவன் காதலன் குமாரன் மைந்தான்
நன்தனனு மாண்மகன்பேர் நாடு" (நாமதீப நிகண்டு – 20)

"மகனெனும் பெயரே மைந்தன் பெருமையும்
மகிமையிற் சிறந்தோன் பெயரும் வழங்கும்" (வடமலை நிகண்டு – 2)

"சேயெனும் பெயரே சிவப்புஞ் செவ்வேளும்
செவ்வாய்க் கிரகமும் சிறுவனும் நீளமும்" (வடமலை நிகண்டு – 7)

"பிள்ளை யெனும்பெயர் வடுகக் கடவுளுங்
காரிப் புள்ளுட னிளமரக் கன்றும்
மகவின் பெயரும் வகுத்துரைத் தனரே" (வடமலை நிகண்டு – 4)

"மகன் சுதன் தனயன் மகவு எச்சம் சேய்
தோற்றம் தோன்றல் சூநு முளை பட்டி
புதல்வன் குமரன் புத்திரன் மேயன்
மதலை சிறுவன் வழிவழித் தோன்றல்
மைந்தன் குமரன் மருமான் செம்மல்
சந்ததி குட்டன் தனுசன் நந்தனன்
காதல் பொருள்கால் காதலன் என்ப" (அபிதான மணிமாலை – 378, ப–594)

"சுதனென்ப மகளிராசன் சுதாமரம் வெற்பு மேகம்" (நாநார்த்த தீபினை)

“சேய்–செவ்வேள், புத்திரன், இளமை, சிவப்பு, அழிஞ்சில்” (சூடாமணி நிகண்டு)

“குமரனுஞ் செவ்வாய்க் கோளுஞ்செவப்புஞ் – சிறுவனு
நீளமுஞ் சேயனெலாகும்” (பிங்கல நிகண்டு – 555)

**7. புருடன் (கணவன்)**

“ஆடவன் மைந்தன் காளை ஆடூஉவே மகன்பு மான்
நீடிய குமரன் ஏழு நிருமித்த புருடபைமம்
நாடிய நம்பியோடு நங்கையென்று இரண்டு ஆண்பெண்ணைத்
தேடிய கவிகள் எல்லாஞ் சிறப்பிக்கு நாமம் ஆமே”
(சூடாமணி நிகண்டு – 150, ப–607)

“வரன் கணவ னாயகன் கொண்கண்வேட் டோன் கண்டன்
வல்லவன் பத்தாதவன் மணமகன் றலைமகன் காதலன் காந்தன்
வருங்கேள்வன் நண்பன் பதி விரும்பு துணைவன் கிழவன்
மணவாள நற்கொழுநன்
மிகுதலை எனமூன் றுமே மிக்க புருடன் பெயர்” (சூடாமணி நிகண்டு – 81)

**8. மணவாளன்**

கணவன் கொழுநன் கேள்வன் காந்தன்
மணமகன் தலைவன் மணவாளன் பெயரே (திவாகர நிகண்டு – 317, ப–41)

**9. அரசன்**

“அரசானனும் பெயர் வியாழமு மன்னனும்” (வடமலை நிகண்டு 2)

“புரவலன், கொற்றவன், பெருமான், காவலன்,
அரசன், ஏந்தல், கோவே, குருசில்,
தலைவன், மன்னவன், வேந்தன், முதல்வன்,
நிருபன், பூபாலன், நரபதி, பார்த்திபன்,
இறைவன், அண்ணல் எனப் பதினெட்டும்
அரசன் தொல்பெயர் ஆகுமென்ப” (திவாகர நிகண்டு–2366, ப.180)

“படையும் குடியும் கூழும் அமைச்சும்
அரணும் நட்பும் அரசியல் ஆறே” (திவாகர நிகண்டு–2378, ப–181)

## II. அகராதிகள்

### அ. தலைவன்

மகிழ்ணன் – மருதத் தலைவன்

சிலம்பன் – குறிஞ்சி நிலத் தலைவன்

"ஆண்டோன் – தலைவன், தேவன், மானிடன்" (மெய்யப்பன் தமிழ் அகராதி)

தலைவன் – அண்ணன், அரசன், குரு, புருடன், மூத்தோன், எப்பொருட்கும் இறைவன் (கழக அகராதி)

தலைமகன் – அதிகாரி, சாதிமான், கணவன், பெருமையிற்சிறந்தோன் வீரன் (கழக அதிகாரி)

### ஆ. ஆண் பருவம்

பாலன், காளை, குமரன், ஆடவன், மூத்தோன், விருத்தன் (மதுரைத் தமிழ்ப்பேரகராதி)

பாலன், காளை, குமரன், ஆடவன், மூத்தோன், முதியோன், காளைப் பருவம் (மெய்யப்பன் தமிழ் அகராதி)

## பின்னிணைப்பு - III

# ஆடவனைக்குறிக்கும் பல சொற்கள்

## I. நிகண்டுகள்

### அ. திவாகர நிகண்டு

இளமக்கள் – "மகாரும் சிறாரும் அவர் பன்மை வழக்கே" **(326) (ப. 41)**

துணைவன் – 'தோழனும் கணவனும் துணைவன் என்றாகும்' **(333)**

"திங்கள் இரண்டில் தெய்வக் காப்பும்,
ஐந்தாம் திங்களில் செங்கீரையும்,
ஏழாம் திங்களில் தாலப்பாட்டும்,
எட்டாம் திங்களில் இன்னமுது ஊட்டலும்,
ஒன்பதாம் திங்களில் சப்பாணியும்,
பத்தாம் திங்களில் முத்தம் கூறலும்,
ஆண்டுவரை அகவையன் ஈண்டு வருகென்றலும்,
ஈரெண் திங்களில் அம்புலி காட்டலும்,
இரண்டாம் ஆண்டில் சிறுபறை கொட்டலும்,
மூன்றாம் ஆண்டில் சிற்றில் சிதைத்தலும்,
நாலாம் ஆண்டில் சிறுதேர் உருட்டலும்,
வைத்தருந் நான்கு ஆண்டு எல்லை வரையில்
கச்சில் சுரிகை காமுறப் புனைதலும்
பெற்றி ஆண்பாற் பிள்ளைப் பாட்டே" **(468, ப–191)**

### ஆ. பொருட்டொகை நிகண்டு

துணைவன் – துணைவன் கேள்வன் சகாயன் சோதரன், தோழன் **(280, ப. 4)**

### இ. அகராதி நிகண்டு

மகவு – பிள்ளை

ஆண் – 'காளையே புருடன் பாலைக்கதியன் புங்கவமும் முப்பேர்' **(464, ப. 851)**

### ஈ. பிங்கல நிகண்டு

கூளியர் – குறவர், வீரல்

சான்றோன் – அறிஞன்

நயந்தோர் – கணவர்

| | | |
|---|---|---|
| பரதர் | – | வணிகர், நெய்தனில மக்கள் |
| பிதா | – | சிவன், பிரமன், தந்தை, பெருநாரை |
| புரவலன் | – | அரசன், ஈகையாளன் |
| புலவர் | – | அறிஞர், சாளுக்கியர், தேவர், கவிவாணர், கூத்தர், புலமையோர், இந்திரர், கம்மாளர் |
| பொருநன் | – | அரசன், தலைவன், நாடகன், படைவீரன், திண்ணியன், |
| மள்ளர் | – | வீரர், திண்ணியோர், மருதநிலமாக்கள் |
| மறவர் | – | வேடர், படைவீரர் |
| மேதை | – | புதன், அறிஞன், நரம்பு |
| வயவன் | – | வீரன், தலைவன், வலியன் |
| காளை | – | பாலைநிலத் தலைவன், இளையோன் |

**II. அகராதிகள்**

**அ. மதுரைத் தமிழ்ப்பேரகராதி**

| | | |
|---|---|---|
| ஆடவல்லான் | – | தஞ்சை நடராஜப் பெருமான் |
| ஆடவ விருத்தம் | – | வயது நாற்பத்தெட்டிற்கும் அறுபதுக்கு மூடான் பருவமுள்ளார் |
| ஆண் கடன் | – | ஆண் மக்கள் கடமை, மனிதர் |
| ஆண் சந்ததி | – | ஆண்மகவு, ஆண்வழிப் பரம்பரை |
| ஆண்டகை | – | ஆண்டன்மை, இராசா, வீரன், சிறந்தோன், முடிப்போன் |
| ஆண்டகைமை | – | ஆண்டன்மை, வீரம், வலிமை |
| ஆண்டலைக் கொடியுயர்ந்தோன் | – | குமரன் |
| ஆண்டலை | – | படைத்தலைவன் |
| ஆண்டலைக் கொடியோன் | – | குமரன் |

ஆண்டவன், ஆண்டான், அரசன், ஆள்பவன், எசமான், கடவுள், ஆண்மையும் தவமுடையவன், தலைவன், ஆள்வோன், திருமால்

| | | |
|---|---|---|
| ஆண்டொழின் மைந்தன் | – | போரில் சிறந்தவன், வீரன், மல்யுத்தக்காரன் |
| ஆண்படை | – | வீரர் படை |
| ஆண் பாடு | – | ஆண்குணம், மனிதன் செயல் |

| | | |
|---|---|---|
| ஆண் பாலெழுத்து | – | அ,ஆ,இ,ஈ,உ,ஊ,எ,ஏ,ஐ,ஒ,ஓ,ஔ என்னும் பன்னிரண்டு உயிர்கள் இதன் ஒருசாரார் உயிர் குற்றெழுத்தும் உயிர்மெய் குற்றெழுத்தும் என்பர். |
| ஆண்பால் | – | ஆண்பகுதி, ஆண்மை |
| ஆண்பிள்ளை | – | ஆண்குழந்தை, கெட்டிக்காரன், தலைவன், மனிதன், பராக்கிரமசாலி |
| ஆண்பாற் பிள்ளைக்கவி | – | காப்பு முதற் சிறுதேர் ஈறாய் சொல்லப்படும் பத்துறுப்புகளும் அமைய பப்பத்து விருத்தத்தான் முடியப் பாடுவதோர் பிள்ளைத் தமிழ் |
| ஆண்பாற் பிள்ளைத் தமிழ் | – | காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாராணை, அம்புலி, சிறுபறை, சிறுதேர், சிற்றில் |
| ஆண்பிள்ளைச் சிங்கம் | – | வீரன், பராக்கிரம சாலி |
| ஆண்மை | – | ஆண்டன்மை, திடன், மனமுயற்சி, ஆள்வினை, அகங்காரம், மெய், வலி, பராக்கிரமம் |
| ஆண்வழி | – | ஆண் சந்ததி, தந்தைவழி மரபு |
| ஐயன் | – | அரசன், அருகன், அழகுடையவன், கடவுள், சிவன், தந்தை, ஆசான், முனிவன், அப்பன், தலைவன் |
| ஐயன்மார் | – | போற்றத் தக்கார், தமையன்மார் |
| ஒற்றர் | – | தூதர், வேவுக்காரர், சாரணர்கள் |
| ஒற்றன் | – | ஒற்றான், வேய், வேவுக்காரன் |

**ஆ. மெய்யப்பன் தமிழ் அகராதி**

| | | |
|---|---|---|
| ஆண்கடன் | – | ஆண்மக்கள் கடமை |
| ஆண் சந்ததி | – | ஆண் மகவு |
| ஆண்டமை | – | ஆண் தன்மை, பெருமையிற் சிறந்தவன் |
| ஆண்டகைமை | – | வீரம் |
| ஆண்டவன், ஆண்டான் | – | உடையவன், கடவுள் |
| ஆண்டோன் | – | தலைவன், தேவன், மானிடன் |
| ஆண்டொழில் | – | வீரச்செய்கை |
| ஆண்பாடு | – | ஆண்மக்களின் முயற்சி |

| | | |
|---|---|---|
| ஆண்பால் | – | ஆண்சாதி, ஐம்பாலுள் ஒன்று |
| ஆண்பாலெழுத்து | – | அ, இ,உ,எ,ஒ என்னும் குற்றெழுத்து |
| ஆண்பிள்ளை | – | ஆண்குழந்தை, ஆண்மகன், கணவன், வீரன், கெட்டிக்காரன் |
| ஆண்மக்கட்பருவம் | – | காளைப்பருவம் |
| ஆண் மாரி | – | அடங்கா குணமுள்ளவன் |
| ஆண்மை | – | ஆளுந்தன்மை, வெற்றி, வலிமை, அகங்காரம், உடைமை, வாய்மை |
| ஆண்மையாளர் | – | வலிமையுற்றோர், வீரர் |
| ஆணழகன் | – | அழகு வாய்ந்தவன் |
| ஆணன் | – | ஆண்மையுடையவன், அன்புடையோன் |

**இ. கழக அகராதி**

| | | |
|---|---|---|
| ஆடூஉ | – | ஆண்மகன் |
| ஆண் | – | ஆண்பாற் பொது, ஆண்மகன் |
| ஆண்மை | – | ஆண்மைத் தன்மை, ஆளுந்தன்மை, வீரம், வெற்றி, மனமுயற்சி, வாய்மை, உடைமை |

## பின்னிணைப்பு - IV

# எட்டுத் தொகையில் ஆடவர் எனும் சொல் இடம்பெறும் பாடல்கள்

**அ. நற்றிணை**

“செயல்படு மனத்தர் செய்பொருட்கு
அகல்வர் ஆடவர் அதுஅதன் பண்பே” (நற்–24 8–9)

“இன்னாது ஆகிய காலை, பொருள்வயிற்
பிரியல் ஆடவர்க்கு இயல்புஎனின்” (நற்–243, 10–11)

**ஆ. குறுந்தொகை**

“வினையே ஆடவர்க்கு உயிரே வாள்நுதல்
மனைஉறை மகளிர்க்கு ஆடவர் உயிர்” (குறுந் – 135)

**இ. அகநானூறு**

“அருள்அன்று ஆக, ஆள்வினை ஆடவர்” (அகம்–75 1)

**ஈ. பதிற்றுப்பத்து**

’புலியுறை கழித்த புலவுவாய் எஃகம்
ஏவல் ஆடவர் வலன்உயர்த்து ஏந்தி” (பதிற்று 24 2–3)

“இன்னிசை இமிழ்முரசு இயம்பகக் கடிப்பு இகூஉய்
புண்தோள் ஆடவர் போர்முகத்து இறுப்ப” (பதிற்று 40 3–4)

“மெய்புதை அரணம் எண்ணாது எஃகுசுமந்து
முன்சமத்து எழுதரும் வன்கண் ஆடவர்” (பதிற்று – 52 6–7)

“வெல்போர் ஆடவர் மறம்புரிந்து காக்கும்
வில்பயில் இறும்பின் தகடூர் நூறி” (பதிற்று – 78 8–9)

**உ. பரிபாடல்**

“அரியுண்ட கண்ணாரொடு ஆடவர் கூடிப்
புரிவுண்ட பாடலொடு ஆடலும் தோன்ற” (பரி. திரட்டு – 1 4–5)

**ஊ. புறநானூறு**

“மென்மையின் மகளிர்க்கு வணங்கி வன்மையின்
ஆடவர்ப் பிணிக்கும் பீடுகெழு நெடுந்தகை” (புறம் – 68 6–7)

"குறும்பல் குறும்பில் ததும்ப வைகிப்
புளிச்சுவை வேட்ட செங்கண் ஆடவர்" (புறம்–177, 7–8)

"எவ்வழி நல்லவர் ஆடவர்
அவ்வழி நல்லை வாழிய நிலனே" (புறம் – 187)

"அனையர் வாழியோ இரவலர் அவரைப்
புரவெதிர் கொள்ளும் பெருஞ்செய் யாடவர்" (புறம் – 199, 4–5)

"ஆண்மை தோன்ற ஆடவர்க் கடந்த
வல்வேல் சாத்தன் மாய்ந்த பின்றை" (புறம் – 242 4–5)

"முறையின் உண்ணும் நிறையா வாழ்க்கை
முளவுமாத் தொலைச்சிய முழுச்சொல் ஆடவர்" (புறம்–325, 5–6)

**எட்டுத்தொகையில் தலைவன், முதல்வன் எனும் சொற்கள் இடம்பெறும் பாடல்கள்**

**அ. நற்றிணை**

"இரும்பாண் ஒக்கல் தலைவன் பெரும்புண்
ஏஎர் தழும்பர் ஊணூர் ஆஙகண்" (நற்–300 9–10)

"உலகம் படைத்த காலை தலைவ" (நற்–337 1)

**ஆ. ஐங்குறுநூறு**

"குரங்கின் தலைவன் குரூஉமயிர்க் கடுவன்" (ஐங்–275)

**இ. கலித்தொகை**

"மறம்தலைக் கொண்ட நூற்றுவர் தலைவனைக்
குறங்குஅறுத் திடுவான்போல் கூர்நுதி மடுத்து" (கலி–52 2–3)

**ஈ. பரிபாடல்**

"காஅய் கடவுள் சேஎய் செவ்வேள்
சால்வ தலைவ எனப் பேஎ விழவினுள்" (பரி.5. 13–14)

**உ. அகநானூறு**

"இசைநல் ஈகைக் களிறுவீசு வண்மகிழ்,
பாரத்துத் தலைவன், ஆர நன்னன்" (அகம் – 152 11–12)

"செல்சாத்து எறியும் பண்பில் வாழ்க்கை
வவ்வில் இளையர் தலைவர்" (அகம் – 245 6–7)

"ஆகொள் மூதூர்க் கள்வர் பெருமகன்
ஏவல் இளையர் தலைவன், மேவார்" (அகம் – 342 6–7)

"முடவுமுதிர் பலவின் குடம்மருள் பெரும்பழம்
பல்கிளைத் தலைவன் கல்லாக் கடுவன்" (அகம் – 352 1–2)

**ஊ. பதிற்றுப்பத்து**

"ஆர்அரண் கடந்த தார்அரும் தகைப்பின்
பீடுஎகொள் மாலைப் பெரும்படைத் தலைவ" (பதிற்று – 24 4–5)

**எ. புறநானூறு**

"ஓங்கிய சிறப்பின் உயர்ந்த கேள்வி
மாங்குடி மருதன் தலைவன் ஆக" (புறம் – 72 13–14)

"இல்லாயின உடன் உண்ணும்
இல்லோர் ஒக்கல் தலைவன்" (புறம்–95 7–8)

"இழுமென ஒலிக்கும் புலைம் புதலில்
பெருமா விலங்கைத் தலைவன் சீறியாழ்" (புறம்–176, 5–6)

"அலமருங்கழனித் தண்ணடை ஒழிய
இலம்பாடு ஒக்கல் தலைவற்கு ஓர்" (புறம்–285 15–16)

## பின்னிணைப்பு - V

# அகத்திணைப் பாடல்களில் வெளிப்படும் ஆடவரின் பல்வேறு உணர்வுகள் (தலைவன் கூற்றுகளில்)

### 1. வியப்புணர்வு

- குறிஞ்சி: தலைவன், தலைவியை எண்ணி வியக்கும் வியப்புணர்வு கொண்டவன். (நற்–8, ஐங்–299, அகம்–152)
- மருதம்: பரத்தையற் பிரிந்த தலைவனுக்கு வாயில் நேர்ந்த தலைவியைக் கண்டு வியந்து மகிழ்ந்தவன். (ஐங்–99)
- நெய்தல்: தலைவன், தலைவியின் அன்பைக் கண்டு வியக்கும் உணர்வினன். (நற்–155, ஐங்–171, 172, 185, 191, 197, அகம்–230)
- பாலை: தலைவன்–தலைவியின் துணிச்சலை எண்ண வியக்கும் உணர்வினன். (நற்–384, 113, 190, ஐங்–321,322)

### 2. வாழ்த்தும் உணர்வு

- குறிஞ்சி: தலைவன், தலைவியின் பெற்றோரை மதித்து அவர்களை அக்கறையுடன் வாழ்த்தும் உணர்வினன். (நற்–8)

### 3. தன்வயப்படுத்தும் உணர்வு

- குறிஞ்சி: தலைவன், தலைவியைப் புகழ்ந்து தன் இச்சைக்கு வசப்படுத்தும் உணர்வினன். (நற்–39)
- பாலை: தலைவன், தலைவியின் மனதைத் தன்வயப்படுத்தும் உணர்வினன் (குறுந்–137, அகம்–5, 245)

### 4. காதல் உணர்வு

- குறிஞ்சி: பகைவனுக்குக் கட்டுப்படாத தலைவன், தலைவியின் அழகுக்கும் அன்புக்கும் கட்டுப்பட்ட காதல் உணர்வினன். (குறுந்–72, 95, 100, 129, 139, 206, 272, 291, கலி–57, 58, அகம்–142)
- மருதம்: தலைவன், தலைவி மீதான காதல் உணர்வு மிகுதியால் வருந்துபவன் (நற்–80, அகம்–26)

**5. நட்புணர்வு**

- குறிஞ்சி: தலைவன், தலைவியை அடைய பாங்கனின் நட்பைப் பயன்படுத்தத் துணிபவன். (நற்–185, 95, 201, குறுந்–58, 132, 156, 280, 70, ஐங்–255),
- குறிஞ்சி: தலைவன், தலைவியின் நெருக்கமானவரிடம் தனக்கு நட்பு இல்லையே என ஏங்கிநிற்பவன். (நற்–6)
- நெய்தல்: தலைவன், தலைவியை அடைய தோழி, பாங்கனின் நட்பை நாடுபவன்.(நற்–349, ஐங்–174, 175, 176, 178, அகம்–130, 140)

**6. இரந்து நிற்கும் உணர்வு**

- குறிஞ்சி: தலைவன், தலைவிக்காகத் தோழியை இரந்து பின்னிற்கும் உணர்வினன். (நற்–213, 6, 44, 77, 140, 204, 209, 265, 356, 341, 377, குறுந்–29, 120, 165, ஐங்–256)

**7. ஏக்க உணர்வு**

- முல்லை: தலைவன் பாசறையிலிருந்த போது, தலைவியை அடைய முடியவில்லையே என்று ஏங்குபவன் (அகம்–24, 84, 164, 174)
- நெய்தல்: தலைவன்–தலைவியை எண்ணி தூங்காமல் ஏங்கும் உணர்வினன். (நற்–319)
- குறிஞ்சி: தலைவன் அல்ல குறியினால் ஏற்படும் ஏமாற்றத்தினால் நெஞ்சம் வருந்தி மன உளைச்சலில் உழல்பவன். (அகம்–62, 372)
- முல்லை: தலைவன் தன் உணர்வுகளை, தலைவியின் உணர்வுகளோடு சேர்த்து வெளிப்படுத்துபவன். (நற்–321)
- முல்லை: தலைவன் வினைமுடித்துத் தலைவியைக் காண விரைந்து செல்லும் மன உணர்வினன். (நற்–242, 21, 59, 371, ஐங்–422, அகம்–34)
- பாலை: தலைவன், தலைவியின் துயரை எண்ணி வருந்தி விரைந்து சென்று துயரைப் போக்குபவன். (நற்–62, 126, 141, 308, 312, 366, 42, 106, குறுந்–56, 250, 131, அகம்–43)

**8. இரக்க உணர்வு**

- பாலை: தலைவன், தலைவி மீது இரக்க உணர்வு கொண்டவன். (நற்–157, ஐங்–323, 326, 327, 328, 330)
- குறிஞ்சி: தலைவன், தலைவியின் வருத்தத்தைப் போக்கும் இரக்க உணர்வு கொண்டவன். (கலி–64)

**9. பொறுமை யுணர்வு**

- குறிஞ்சி: தலைவன், தலைவியைக் காண இயலாத நேரங்களில் அலைபாயும் உள்ள உணர்வுகளை அடக்கிப் பொறுமை காப்பவன். (நற்–77, 204, 265)
- பாலை: தலைவன், தலைவி மீதான காதலுணர்வைக் கட்டுப்படுத்திப் பொறுமை காப்பவன். (நற்–105, 284, 346, 352)

**10. தன்னிரக்க உணர்வு (SELF SYMPATHY)**

- குறிஞ்சி: தலைவன், தலைவியைக் காணாததால் ஏற்படும் மன அழுத்தத்தை தன்னெஞ்சிடம்கூறி உணர்வுகளை உணர்பவன்.(நற்–140, 209)
- குறிஞ்சி: தலைவன் தன் உள்ளத்துணர்வை இழந்த நிலையைத் தானே உணர்பவன் (நற்–160)

**12. அன்புணர்வு**

- குறிஞ்சி: தலைவன், தலைவியுடன் மறுபிறவியாலும் சேர்ந்து வாழும் ஆழ்ந்த அன்புணர்வு கொண்டவன். (குறுந்–199)
- தலைவன் செம்புலப் பெயல் நீர்போல தலைவியின் நெஞ்சம் கலந்த உணர்வினன்– (குறுந்–40)

**13. தலைவியை மகிழ்விக்கும். மதிக்கும் உணர்வு**

- குறிஞ்சி: தலைவன், தலைவியை மகிழ்விக்கவும், நெருங்கவும் கையுறையாகக் கொண்டு வந்த பூக்களைக் காட்டியும், சூட்டியும் மகிழ்பவன். (குறுந்–2)
- முல்லை: தலைவன், பறவைகள், விலங்குகள் கூடி மகிழும் காட்சியைத் தலைவிக்குக் காட்டித் தலைவியின் உணர்வைத் தூண்டி இன்பம் அடைபவன் (ஐங்–414, 416, 417)

- தலைவன், தலைவி இருவரின் இளமையும் வீணாகாமல் கூடி இன்புறும் உணர்வினன். (ஐங்–415)
- தலைவன், தலைவியை மகிழ்வித்துத் தானும் மகிழும் மனஉணர்வு கொண்டவன்.(ஐங்–419)
- முல்லை: தலைவன், தலைவியை மறக்க இயலாதவன். (நற்–42)
- தலைவன், தலைவியுடன் கூடி வாழ்ந்த நாள்களைத் தவிர மற்ற நாள்களை பதர் என எண்ணுபவன். (குறுந்–323)
- பாலை: தலைவன் பொருள் தேடும் வேட்கை மேலோங்கிய நிலையிலும் தலைவியைக் குறித்த நினைவு மாறாதவன். தடுமாறாத உள்ளமும் தடம் மாறாத உறுதியும் கொண்டவன். (குறுந்–209, 235, 237, ஐங்–365, 325, 326, அகம்–9, 261)
- குறிஞ்சி: தலைவன், தலைவியை மறந்து வாழும் உள்ளத்துணிவு இல்லாதவன் (ஐங்–259, 293, 298).
- முல்லை: தலைவன், தலைவியின் உணர்வுகளுக்கு மதிப்பளிப்பவன். (அகம்–304)
- முல்லை: வினை முடித்து திரும்பிய தலைவன், போர்ச் சூழலில் மீண்டும் தன்னைப் பிரிவான் என்று வருந்திய தலைவியை ஆறுதல் கூறித் தேற்றுபவன். (ஐங்–426, 427, 428)
- பாலை: தலைவன், தலைவியைத் தேற்றி சமாதானப் படுத்தும் உணர்வினன். (நற்–166, 256)
- முல்லை: தலைவன், தலைவியின் செயல்பாடுகளைக் கண்டு இரசிக்கும் உணர்வினன் (அகம்–34, 44, 54)
- பாலை: தலைவன், தலைவியின் களைப்பைப் போக்கும் உணர்வினன் (நற்–9, 76, 362, ஐங்–361, 395, அகம்–99, 257)
- பாலை: தலைவன், தலைவியுடன் இன்ப வாழ்வினை மேற்கொள்ளும் உணர்வினன். (நற்–202, 384, 264, 52, குறுந்–256, 267, 274)

**துணிவுணர்வு**

- குறிஞ்சி: 1. தலைவன், தலைவிக்காக எதையும் செய்யத் துணியும் திடமான மனத்திண்மைக் கொண்டவன் (குறுந்–173, 182, 222, 337)

- தலைவன், தலைவியை அடைய மடலேறித் தன் காதல் உணர்வினை வெளிப்படுத்த துணிபவன் (நற்–377, 146, குறுந்–276)
- மருதம்: 1. தலைவன், தலைவியை அவள் பெற்றோரிடம் கேட்கும் துணிவு கொண்டவன் (ஐங்–92)
- தலைவன், தலைவியின் ஊடலைத் தானே தணிக்க பொய் கூறி காலில் விழத் துணிபவன். (கலி–89)
- நெய்தல்: 1. தலைவன், தலைவியை அடைய மடலேறத் துணிபவன். (நற்–152, கலி–140, 139, 138)
- தலைவன், தலைவிக்காக அவளது பெற்றோரைப் பணிந்தும் சார்ந்தும் வாழத் துணியும் பண்பினன். (அகம்–280)

**16. நம்பிக்கை உணர்வு**

- குறிஞ்சி: தலைவன், தலைவியின் நம்பிக்கைக்கு உரியவனாகும் உணர்வினன். (குறுந்–62,300)

**17. வேட்கை உணர்வு**

- குறிஞ்சி: தலைவன், தலைவியை மணக்கும் வேட்கை உணர்வு கொண்டவன் (குறுந்–286, 312)

**20. இருவேறுபட்ட உணர்வு**

- குறிஞ்சி: தலைவன், தலைவியைக் காண இயலாத நேரங்களில் தன்னெஞ்சை உறுதிப்படுத்துபவனாகவும், சில நேரங்களில் பழிப்பவனாகவும் இருவேறு உணர்வு கொண்டவன். (அகம்–212, 258, 338, 342)
- முல்லை: தலைவன், தலைவியைப் பிரியக் காரணமான தன் நெஞ்சை நொந்து புலம்புவன். (ஐங்–491, 492, 493, 494, 495)
- பாலை: தலைவன் தன்னெஞ்சை இகழ்ந்தும், புகழ்ந்தும் கூறும் உணர்வினன். சூழலக்குத் தக்க மன உணர்வை மாற்றிக் கொள்ளும் இயல்பினன். நற்–137, ஐங்–323, 329, (அகம்–3, 21, 33, 47, 79, 83, 87, 93, 109, 123, 169, 181, 239, 279, 287, 299, 327, 335, 337, 339, 339, 343, 351, 365, 373)
- முல்லை: தலைவன் போரில் ஈடுபட்டு வெற்றியை ஈட்டும் வீரவுணர்வு, காதலுணர்வு இவற்றுக் கிடையில் சிக்கித் தவிக்கும் உணர்வினன். (ஐங்–448)

- நெய்தல்: தலைவன் பொருளுக்கும் தலைவியின் அன்பிற்கும் இடையில் சிக்கித் தவிப்பவன். (நற்–16, ஐங்–195)
- பாலை: தலைவன் பொருள்தேடும் வேட்கைக்கும் தலைவியை அடையும் உணர்வுக்கும் இடையில் சிக்கித் தவிப்பவன் (நற்–3, குறுந்–71, 151, 168, அகம்–225, 199, 29)
- பாலை: தலைவன், தலைவியின் ஊடல் தணித்து அச்சத்தைப் போக்குபவன். (நற்–250, ஐங்–97)
- மருதம் 1. தலைவன், தலைவியுடன் களவில் கூடி மகிழ்ந்ததை விட கற்பில் கூடி மகிழ்வதை விரும்புபவன் (ஐங்–94)
- தலைவன், தலைவியுடன் களவில் பெற்ற புனலாடும் இன்பத்தைக் கற்பு வாழ்விலும் பெற விரும்புபவன். (ஐங்–72, 73, 74)

**21. நன்றியுணர்வு**

- குறிஞ்சி: தலைவன், தலைவியைக் காண உதவிய விலங்கு, பறவைகளுக்கு நன்றி கூறும் உணர்வினன். (ஐங்–281, 288)
- முல்லை: தலைவன் வினைமுடித்து வரும் தன்வருகையைத் தலைவிக்கு தெரிவித்த பல்லி, மழை போன்றவற்றிற்கும், தலைவியைக் காண விரைந்து தேரை செலுத்திய தேர்ப்பாகனுக்கும் நன்றி செலுத்தும் நன்றியுணர்வு கொண்டவன். (நற்–139, 169, குறுந்–400)

**22. பெருமித உணர்வு**

- குறிஞ்சி: தலைவன், தலைவியை மணக்க பொருள் தேடி வந்து தலைவியின் வாட்டம் போக்கும் பெருமித உணர்வு கொண்டவன். (ஐங்–291)
- முல்லை: தலைவன் குறித்த பருவத்திற்கு முன்வந்து, பின்வரும் கார்காலத்தைத் தலைவிக்குக் காட்டி பெருமிதம் கொள்பவன் (ஐங்–413, 420)

**26) பொறுப்புணர்வு**

- முல்லை: தலைவன், தலைவியையும் மகனையும் குறித்த காலத்தில் வினை முடித்து மீண்டுவந்து மகிழ்விப்பவன். (நற்–221)
- தலைவன் குறித்த காலத்தில் வினையை முடித்துத் திரும்புபவன் (ஐங்–411, 412)

- பாலை: தலைவன் நினைத்ததை உறுதியாக முடிக்கும் உணர்வினன்.
- முல்லை: தலைவன் உலக இயல்பை மதிக்கும் உணர்வினன் (குறுந்–99)
- முல்லை: தலைவன், தனக்கும் தலைவிக்கும் துன்பத்தைத் தரும் மாலையில் முல்லை மொட்டு மலர்தலைச் சாடுபவன். (குறுந்–162)
- முல்லை: தலைவன், தலைவியின் நலனைக் காக்கும் பொறுப்புணர்வு கொண்டவன். (குறுந்–270, ஐங்–425, 483, 485, 486, 487, 488, 489, 490)
- குறிஞ்சி: தலைவன், தலைவியை மணக்க அவளின் பெற்றோர் இசைவு மறுத்தபோதும் எண்ணியதை எண்ணியபடி அடையும் திண்மையும் அசையாத நம்பிக்கையும் கொண்டவன். (நற்–356)
- முல்லை தலைவன் சொன்ன சொல்லைக் காப்பாற்றும் திண்ணிய உணர்வினன். (நற்–81)
- முல்லை: தலைவன் நாட்டைக் காக்கும் பொருட்டு, தலைவியைப் பிரியும் முன் அவளுக்குச் சூழலை விளக்கி அனுமதி கேட்கும் சாதுரிய உணர்வினன். (ஐங்–429)
- பாலை: குடும்பத்தின் எதிர்காலத் தேவையைக் கருத்தில் கொள்ளும் நிலையில் தலைவியைவிடப் பொருளைப் பெரிதாகக் கருதுபவன். (நற்–205, அகம்–131,75).

**30) தவிப்புணர்வு**

- முல்லை: தலைவன், தலைவியைக் காணத் துடிக்கும் தவிப்புணர்வு கொண்டவன் (ஐங்–450)
- போருக்காகத் தலைவன் பாசறையில் தங்கியிருந்தபோது, தலைவியிடம் கூறிய பருவத்தில் திரும்பி வர இயலாமல் தவிப்பவன். ஐங்–442, 443, 441, 444, 446, 447, 449)
- நெய்தல்: தலைவன், தலைவியின் ஊடலைத் தவிர்க்க தவிப்பவன். (குறுந்–128)
- தலைவன், தலைவியின் கண்வலையில் சிக்குண்டு வலிமையை இழந்து தவிப்பவன். (குறுந்–184, நற்–101 அகம்–390)
- மருதம்: தலைவன், தலைவியின் ஊடல் தணியாததால் மனம் நொந்து தவிப்பவன். (அகம்–136)

**34. நாட்டுப் பற்றுணர்வு**

- முல்லை: தலைவன் வென்றிக் காலத்து விளங்கித் தோன்றும் உணர்வினன். தலைவியை மறந்து போரில் கவனம் செலுத்தும் நாட்டுப் பற்றுணர்வு கொண்டவன். (ஐங்–484)

**35. வீர உணர்வு**

- முல்லை: தலைவன், தலைவியினால் பெறக்கூடிய இன்ப உணர்வை விட வீரத்தை வெளிப்படுத்தும் போரை விரும்புபவன். (ஐங்–445)

**37. உவகை உணர்வு**

- முல்லை: தலைவன், தலைவியைக் காண குறித்த நேரத்தில் கொண்டு வந்து சேர்த்த தேர்ப்பாகனை எண்ணி உவகை கொள்பவன். (அகம்–254)
- பாலை: தலைவன், தலைவியை அடைந் உவகை கொள்பவன். (நற்–9, குறுந்–337, ஐங்–360)

**38. பொருளைவிட காதல் உணர்வு மிகுதி**

(செலவைத் தவிர்க்கும் உணர்வு)

- நெய்தல்: தலைவன், பொருள் தேடுவதைவிட தலைவியுடன் கூடி இன்புறும் விருப்பமுடையவன். (குறுந்–376)
- பாலை: தலைவன் பொருளைவிட தலைவியுடனான இன்பத்தை விரும்பிச் செலவைத் தவிர்ப்பவன்.

**39. ஊடலைத் தவிர்க்கும் உணர்வு**

- நெய்தல்: தலைவன், தலைவியின் ஊடலைத் தணிக்க விருந்தினை வாயிலாகப் பயன்படுத்துபவன். (ஐங்–188)
- மருதம்: தலைவன், தலைவியின் ஊடலைத் தவிர்க்க விருந்து, புதல்வன், தோழி, கனவு போன்றவற்றை வாயிலாகப் பயன்படுத்தி தலைவியோடு சேர்ந்து வாழ விரும்பும் உணர்வினன். (நற்–120, 250, குறுந்–19, அகம்–86, கலி–92)

**அகத்திணைப் பாடல்களில் புலப்படும் ஆடவரின் உணர்வுகள் மெய்ப்பாடுகளில் அடங்குவதைக் காணலாம்:**

**நகை**

காதல் உணர்வு (4)

அன்பு உணர்வு (12)

தலைவியை மகிழ்விக்கும் உணர்வு (13)

இரசிக்கும் உணர்வு (36)

தலைவியின் களைப்பைப்போக்கும் உணர்வு (40)

இன்ப வாழ்வை விரும்பும் உணர்வு (42)

களவு வாழ்வைவிட கற்பு வாழ்வை விரும்பும் உணர்வு (46)

**அழுகை**

தலைவியை மறக்க இயலாத உணர்வு (14)

மன உளைச்சலில் உழலும் உணர்வு (19)

தவிப்புணர்வு (30)

இரு உணர்வுகளுக்கிடையில் சிக்கித் தவிக்கும் உணர்வு (33)

**இளிவரல்**

இரந்து நிற்கும் உணர்வு (6)

ஏக்க உணர்வு (7)

இரக்க உணர்வு (8)

தன்னிரக்க உணர்வு (10)

**மருட்கை**

வியப்புணர்வு (1)

வாழ்த்தும் உணர்வு (2)

துணிவுணர்வு (15)

நம்பிக்கை உணர்வு (16)

பிரிவுக்கு அனுமதி கேட்கும் சாதுரிய உணர்வு (32)

தலைவியைத் தேற்றும் உணர்வு (31)

காதல் – ஈதல் உணர்வு ஒருங்கே கொண்டவன் (44)

அச்சத்தைப் போக்கும் உணர்வு (45)

வேட்கை உணர்வு (17)

**பெருமிதம்**

தன்வயப்படுத்தும் உணர்வு (3)

நட்புணர்வு (5)

பொறுமையுணர்வு (9)

எண்ணியதை எண்ணியபடி முடிக்கும் உணர்வு (11)

தலைவியின் உணர்வை மதிக்கும் உணர்வு (18)

பெருமித உணர்வு (22)

விரைந்து செல்லும் மனஉணர்வு (24)

உலக இயல்பை மதிக்கும் உணர்வு (27)

பொறுப்புணர்வு (29)

நாட்டுப் பற்றுணர்வு (34)

வீர உணர்வு (35)

குடும்பத்தின் எதிர்காலத் தேவையை நிறைவேற்றும் உணர்வு (43)

**வெகுளி**

இயற்கையை சாடுதல் (28)

**உவகை**

நன்றியுணர்வு (21)

உள்ள உணர்வை வெளிப்படுத்தும் உணர்வு (23)

சொன்ன சொல்லைக் காக்கும் உணர்வு (25)

குறித்த காலத்தில் வினை முடிக்கும் உணர்வு (26)

**உவகை உணர்வு**

செலவைத் தவிர்க்கும் உணர்வு (38)

ஊடலைத் தவிர்க்கும் உணர்வு (39)

## பின்னிணைப்பு - VI

# புறத்திணைப் பாடல்களில் வெளிப்படும் ஆடவரின் பல்வேறு உணர்வுகள்

### வீர உணர்வு

- பகைவரிடம் போரிட்டு ஆநிரைகளைக் கவரும் வீர உணர்வு கொண்டவர் (புறம்.262,269,297)
- பகைவரிடம் போரிட்டு வெல்லும் வீர உணர்வு கொண்டவர். புறம்.261, 263, 264, 286, 259, 260, 335, 271, 272, 72, 80, 274, 309, 305,
  பதிற்று: 34. புறம். 17, 20–26, 53, 76–79, 31, 33, 37, 42, 51, 52, 66, 80–82, 93, 94, 98–100, 104, 125, 167, 308, பதிற்று: 39, 36, 52, 13, 158, 367.

### 2. துணிவுணர்வு

- போரில் புறமுதுகிடாமல் நேருக்கு நேர் நின்று போரிடும் துணிவுணர்வு கொண்டவர். (புறம்.270,257,258)
- வீரத்தை விஞ்சும் வியன்கலையுணர்வு கொண்டவர். கலைக்காக நாட்டை ஈயத் துணியும் துணிவுணர்வு கொண்டவர் (புறம்.109)

### 3. நாட்டுப் பற்றுணர்வு

- வீரர்களை ஊக்குவித்து பெருஞ்சோறு அளிக்கும் பண்பும் நாட்டுப்பற்றுணர்வும் கொண்டவர். (பதிற்று–30)
- ஆடவர், நாட்டுப்பற்றுணர்வுடன் நாட்டைக் காக்கும் பொறுப்புணர்வு கொண்டவர் (புறம்.287,290,400)
- ஆடவர், நாட்டுக்காக தன் உயிரைக் கொடுக்கும் துணிவுள்ளம் கொண்டவர். (புறம்.62,63,307,279,312)

### 4. மதிப்புணர்வு

- ஆடவர், வீரஉணர்வுடன் போரிட்டு வென்றதற்கு நடுகல் இட்டு தெய்வமாக மதிக்கப்படும் மதிப்புணர்வு பெற்றவர். (புறம்.259,260,335)
- ஆடவர் தங்களுக்குள் ஒருவரை ஒருவர் ஊக்கப்படுத்தி, வீரத்தை மதிக்கும் உணர்வினர். (புறம்.291)

**5. காக்கும் பொறுப்புணர்வு**

- தங்கள் குடிப்பெருமை காக்கும் பொறுப்புணர்வு கொண்டவர். (புறம்.310,17)
- சுற்றத்தைக் காக்கும் பொறுப்புணர்வு கொண்டவர் (புறம்.22)
- புறமுதுகிடும் பெரியோரைக் காக்கும் பொறுப்புணர்வு கொண்டவர். (புறம்.178)
- புலவர்களின் வறுமையைப் போக்கி புலமையைக் காக்கும் பொறுப்புணர்வு கொண்டவர். (புறம்.266)

**6) கொடையுணர்வு**

- ஆடவர், பகிர்ந்தளிக்கும் மாண்பும், கொடை உணர்வும் கொண்டவர். (புறம். 257, 258)
- ஆடவர், மிகுந்த கொடையுணர்வு கொண்டவர். (புறம். 21, 17, 20, 22, 53, 19, 23–26, 76–79, 31, 33, 37, 42, 51, 52, 66, 80–82, 93, 94, 98–100, 104, 125, 167, 308, பதிற். 39, 36, 52, புறம். 108, 129, 148)

**7) நெறிப்படுத்தும் உணர்வு**

- அரசர்களை இடித்துரைத்து நல்வழிப்படுத்தும் அறவுணர்வு கொண்டவர். (புறம்.36)
- இம்மைக்கும் மறுமைக்கும் ஏற்ற நல்லறத்தை எடுத்துரைக்கும் மற உணர்வு கொண்டவர் (புறம்.213)
- அரசரை நெறிப்படுத்தும் உணர்வு கொண்டவர். (புறம்.56,58,154,184)
- பிறருக்கு அறிவூட்டுபவராகத் திகழ்ந்தனர்.(புறம்–56)

**8. வெகுளி உணர்வு**

- வஞ்சினம் கொண்டு வளங்களைக் கவர்ந்து, பகைவரின் ஊரை எரிக்கும் உணர்வினர். (புறம்.7,16,57)
- மண்ணாசையால் உறவை மறந்து தமது வெஞ்சினத்தை நிலைநாட்டும் பண்பினர். (புறம்.213)
- தன்னை மதியாமல் இகழ்பவரை போரிட்டு அவனது செருக்கை அழிக்கும் உணர்வினர். (புறம்.73)
- கோப உணர்வு கொண்டவர். (புறம்.72,80,279,309,305, பதிற்று–34)
- திறை செலுத்தாத குறுநில மன்னரை ஒறுக்கும் உணர்வினர். (புறம்.97)

# சங்க இலக்கியத்தில் ஆடவரின் மன உணர்வு ஓட்டங்கள்

முனைவர் பட்டப்பேற்றிற்காகச்

சென்னைப் பல்கலைக்கழகத்திற்கு

அளிக்கப்பெற்ற ஆய்வேடு

ஆய்வாளர்

**தே. தேன்மொழி**, எம்.ஏ., எம்.ஃபில்.,

நெறியாளர்

முனைவர் (திருமதி) **அ. இராசேசுவரி**,

எம்.ஏ., எம்.ஃபில்., எம்.எட்., பிஎச்.டி.,




**தமிழ்த்துறை**

இராணி மேரி கல்லூரி,

சென்னை – 600 004.

**டிசம்பர் - 2013**

# முடிவுரை

- “சங்க இலக்கியத்தில் ஆடவரின் மன உணர்வு ஓட்டங்கள்” எனும் இவ்வாய்வில் நான்கு நிலைகளில் பிரிக்கப்பட்டு ஆய்வு நிகழ்த்தப்பட்டுள்ளது. நான்கு இயல்களில் பெறப்பட்ட ஆய்வுகளின் முடிவாக இப்பகுதி விளங்குகிறது.

- ‘எட்டுத் தொகையில் ஆடவர்’ என்ற இவ்வியலில் ஆண், ஆடவர் போன்ற சொற்களுக்குப் பொருள் நிகண்டுகள், அகராதிகள், களஞ்சியங்கள் துணை கொண்டு தொகுத்து தரப்பட்டுள்ளது. எட்டுத் தொகை நூல்களில் ஆண், ஆடவர், ஆண்மை போன்ற சொற்கள் இடம்பெற்ற பாடலடிகள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன.

- அகத்திலும், புறத்திலும், ஆடவர் வகித்த பல்வேறு பொறுப்புகள் மற்றும் ஆடவரின் பல்வேறு பரிமாணங்களையும் இவ்வியல் ஆராய்கிறது.

- “திணைகளும் உணர்வுகளும்” எனும் இவ்வியலில் திணை சார்ந்த புரிதலுக்கு, அகப்புறத் திணைகள் விளக்கமும், உணர்வுகளை வெளிப்படுத்தும் கருவிகளாகத் திகழும், தலைமைப் பாத்திரங்களான தலைவன், தலைவி மற்றும் அவர்களைத் தொடர்ந்தும், சார்ந்தும் வரும் பிற ஆடவரின் கூற்றுகள் விரிவாக எடுத்து ஆராயப்படுகிறது.

- உளவியலும் உணர்வுகளும் எனும் பகுதியில் உணர்வுகள் குறித்த உளவியலாரின் கருத்துகள் தொகுத்து தரப்பட்டுள்ளன. எட்டுத்தொகை ஆடவரின் உள்ளம் உணர்வுகள் ஆடவரின் மனதில் உண்டாகும் பல்வேறு விதமான, சிக்கல்கள், போராட்டங்கள், வேட்கைகள் குறித்து அறிய அடிப்படையாய் இப்பகுதி அமைகிறது.

- மெய்ப்பாடுகளும் உணர்வுகளும் எனும் பகுதியில் இன்றைய உளவியலார் குறிப்பிடும் உணர்வுகளை ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே தொல்காப்பியர் கூறியிருப்பது சுட்டிக் காட்டப்பட்டுள்ளது.

- மனித மனதின் உணர்வுகள் அவன் பேசுகின்ற பேச்சின் மூலமும் உடலில் புலப்படுத்தும் அசைவுகளின் மூலமும் வெளிப்படுகின்றது. எட்டுத்தொகைப் பாடல்களில் இடம்பெறும் கூற்றுகள் மன உணர்வுகளைப் புலப்படுத்தும் கருவிகளாக அமைவதையும் உடலசைவுகள் போன்றவை மெய்ப்பாடுகளாக வெளிப்படுவதையும் பாடல்கள் வழி எடுத்துரைக்கப்பட்டுள்ளது.

- ஆடவரின் பருவ நிலைகளும் உணர்வுகளும் எனும் பகுதியில் ஆண் பிறந்தது முதல் முதுமைபெறும் வரையிலான பருவங்களை உளவியலார் துணை கொண்டும் தமிழிலக்கியங்கள் துணை கொண்டும் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. அவ்வப் பருவநிலைகளில் ஆடவருக்கு ஏற்படும் உணர்வுகளையும் செயல் வேறுபாடுகளையும்

விளக்கப்பட்டுள்ளன. எட்டுத்தொகை நூல்களில் இடம்பெற்றுள்ள சிறுவர் முதல் முதியோர் வரையிலான பருவங்கள் சுட்டிக் காட்டப்பட்டுள்ளன. சமுதாயத்தில் அவர்களின் பங்கு, சமுதாயம் அவர்களுக்கு அளித்த மதிப்பு போன்றவை தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

- அகத்திணைகளில் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வு ஓட்டங்கள்' எனும் இவ்வியலில் எட்டுத்தொகை நூல்களில் அகநூல்களான நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு போன்றவற்றில் உள்ள திணை அடிப்படையிலான பாடல்களில் தலைவன் கூற்றாக பாடப்பட்டுள்ள பாடல்களில் வெளிப்பட்ட ஆடவரின் உணர்வுகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

- குறிஞ்சித்திணையில் தலைவன், தலைவிக்கு இடையே நிகழ்ந்த களவு என்னும் திருமணத்திற்கு முந்திய காமக் கூட்டத்தில் ஆடவன் பெண்ணின் அழகைக் கண்டு உள்ளத்தைப் பறிகொடுத்து அவளை எவ்வாறேனும் அடைந்திட வேண்டும் என்பதில் உறுதி கொண்ட உணர்வுடன் காணப்படுகின்றான். பெண்ணைக் கண்டு மனம் பறிகொடுத்தபின் இருவர் உள்ளமும் கலந்த பின் இருவரின் உணர்வும் ஒன்றுபட்ட நிலையில் காணப்பட்டாலும் ஆடவன் தனது இன்ப உணர்வினைப் பாங்கனிடம் பகிர்ந்து கொள்பவனாகக் காணப்படுகிறான்.

- தோழியிடம் நட்பு கொண்டு தலைவி மீதான காதலுணர்வை எடுத்துக்கூறி தலைவியை அடைய எண்ணும் உணர்வினராகக் காணப்படுகின்றனர் என்பது கண்டறியப்பட்டுள்ளது.

- குறிஞ்சித் திணையில் ஆடவர், காதல், கடமை, பெற்றோரை மதித்தல், நட்புக்கு செவி சாய்த்தல் போன்ற உணர்வுகளைக் கொண்டவராகக் காணப்படுகின்றனர். பிற உயிர்களைக் காப்பது, பிறர் உணர்வுகளை மதிக்கும் பண்பு, எடுத்த காரியத்தை முடிக்கும் உணர்வு, இடையூறுகளை வெற்றியோடு எதிர்கொள்ளும் மன உணர்வு, முன்னோர்களின் மரபை மதிக்கும் உணர்வு, சமுதாய மரபுகளை மதிக்கும்; மீறாத உணர்வு போன்ற உணர்வுகளைக் கொண்டவராகக் காணப்படுகின்றனர்.

- குறிஞ்சித் திணையில் ஆடவர், குடும்பம் எனும் நிறுவனத்தை உருவாக்கும் தவிப்பு உணர்வு பெற்றவர். அகவாழ்வில் ஆடவர் தலைவியைத் தேர்ந்தெடுப்பதிலும், குடும்பத்தை உருவாக்குவதிலும் அதிக கவனம் செலுத்துகின்றனர். குறிஞ்சியிலிருந்து ஆடவரின் உணர்வுகள் நீண்டு முல்லைத் திணைக்கும் செல்கிறது.

- முல்லைத் திணையில் ஆடவர், களவுக்கால இன்ப உணர்வை விட கற்புக் கால இன்ப உணர்வுகளை விரும்புபவர்களாகக் காணப்படுகின்றனர். தலைவியைக் காணத் துடிக்கும் தவிப்புணர்வால் வினையை விரைந்து முடிக்கும் இயல்பினராகக் காணப்படுகின்றனர். தலைவியின் துயரைத் துடைக்க எண்ணும் இரக்க உணர்வு,

குறித்த நேரத்தில் கொண்டுவந்து சேர்த்த தேர்ப்பாகனுக்கும், மழை, பல்லி போன்றவற்றிற்கும் நன்றி கூறும் நன்றி உணர்வு கொண்டவர்களாகவும் காணப்படுகின்றனர். தலைவியை அடையப் போவதை எண்ணி உவகை மெய்ப்பாட்டை வெளிப்படுத்துபவர்களாகவும் காணப்படுகின்றனர் என்பது கண்டறியப்பட்டுள்ளது.

- முல்லைத்திணையில் ஆடவரின் உணர்வுகள், குடும்பம் எனும் நிறுவனத்தைக் காப்பதற்கான பொருள் தேடும் முயற்சியிலும், நாட்டைக் காக்கும் கடமை உணர்விலும் முழுமையாக ஈடுபடுகின்றது. குறிஞ்சித் திணையில் ஆடவர் தங்களது உணர்வுகளை குடும்ப உறுப்பினர்களிடமும் குடும்பம் சார்ந்த உறுப்பினர்களிடமும் வெளிப்படுத்துகின்றனர். முல்லைத் திணையில் அதனின்றும் நீண்டு குடும்பத்தைக் காப்பாற்ற சமூக உறுப்பினரிடம் தங்களது உணர்வுகளை வெளிப்படுத்துகின்றனர்.

- இங்ஙனம் குறிஞ்சித் திணை ஆடவனின் உள்ளம் பரிணாம வளர்ச்சியடைந்து, குடும்பத்திலிருந்து நீண்டு சமூகத்தோடு தொடர்பு கொள்கிறது. முல்லைத் திணை ஆடவன் பொருள் தேடலில் சமூக மாந்தரிடம் வெளிப்படுத்தும் உணர்வுகளும், நாட்டைக் காக்கும் கடமையுணர்விலும் தொடர்ந்து வளர்ச்சி அடைகிற நிலையைக் காண முடிகிறது.

- மருதத் திணையில் ஆடவர், பரத்தையர் பிரிந்து மீண்டும் தலைவியுடன் கூடி வாழும் உணர்வு கொண்டவராகவும், பரத்தையை நாடிச் செல்லும் பண்பினராகவும் இருந்தனர் என்பது அறியப்பட்டுள்ளது.

- பரத்தையற் சென்றதாக ஐயுற்ற தலைவியின் ஐயத்தையும், ஊடலையும் நீக்கி தன் கற்பு நிலையை மெய்ப்பிக்கத் துடிப்பவர்களாகவும், விருந்து, புதல்வன், தோழி, கனவு போன்றவற்றை வாயிலாகப் பயன்படுத்தி தலைவியோடு சேர்ந்து வாழ விரும்பும் உணர்வினராகவும் காணப்படுகின்றனர். ஊடல் தணிக்க முடியாத நேரங்களில் மனம் நொந்து தவிக்கும் உணர்வினராகவும் காணப்படுவதை இப்பகுதி எடுத்துரைக்கின்றது.

- பாலைத் திணையில், ஆடவர், பொருள் ஈட்டலுக்கும் தலைவிக்கும் இடையில் சிக்கித் தவிக்கும் தவிப்புணர்வு கொண்டவராகவும், தலைவி தன் மனதைப் புரிந்து கொள்ளாததை எண்ணி வருந்துபவராகவும் காணப்படுகின்றனர். தலைவியின் நலன் நாடும் உணர்வினராகவும், தம் நெஞ்சை இகழ்ந்தும் புகழ்ந்தும் சூழலுக்குத் தக்கவாறு மன உணர்வை மாற்றிக் கொள்ளும் இயல்பினராகவும், குடும்பத்தின் எதிர்கால தேவையைக் கருத்தில் கொண்டு பொருள் தேடத் துணிபவராகவும், பொருள் தேடும் வேட்கை மேலோங்கும் நிலையிலும் தலைவியைக் குறித்த நினைவு மாறாதவராகவும், தடுமாறாத உள்ளமும், தடம் மாறாத உறுதியும் கொண்டவராகவும் இருந்தது கண்டறியப்பட்டுள்ளது.

- மருதத் திணையில், ஆடவர் பொருள் தேட நிலம் பெயர்தல் இல்லை. பொருள் தேடும் காலம் நிலையானது. இங்கு ஆணும் பெண்ணும் சேர்ந்து வாழும் நிலை காணப்படுகிறது. மற்ற திணைகளில் பெண்ணைக் கண்டபின் பொருள் தேட முயல்கிறான். ஆனால் மருதத்தில் பெண்ணுடன் இருந்து கொண்டே பொருள் சேர்க்கின்றனர். எனவே மருதத்தில் செல்வம் மிகுதியாகிறது.

- அச்செல்வச் செழிப்பினால் இல்லறத்தையும் மகப் பேற்றையும் விரும்புபவனாகவும், தன் குடிக்கு வாரிசு உருவாக்குவதைக் கடமையாகவும் கொண்டு விளங்குகிறான். எனினும் மகப்பேறு காலங்களில் தலைவியுடன் சேர்ந்திருக்கும் நேரம் குறைவதாலும் அவன் தங்கி இருக்கும் இடத்திலே தொழில் அமைந்ததால் ஓய்வு நேரம் அதிக அளவு கிடைப்பதாலும் உழுதுண்டு, உழுவித்துண்டு வாழும் இருவரும் பரத்தையை நாடிச் செல்லும் நிலை மருதத்தில் உள்ளது. அவரவர் செல்வச் செழிப்பிற்குத் தக்கவாறு பரத்தை, காமக்கிழத்தி என்று தொடர்புபடுத்திக் கொள்கின்றனர்.

- தன் வாரிசான பிள்ளைச் செல்வத்திற்கும் இல்லற தர்மத்திற்கும் தலைவியைச் சார்ந்து வாழ்கிறான். அதே நேரத்தில் தலைவியின் கவனம் பிள்ளையிடம் சென்றதும், ஆடவன் தன் புலனுணர்ச்சிக்கு மட்டும் பரத்தையை நாடிச் செல்கின்றான். இத்தகைய இரு நிலைகளில் ஆடவன் காணப்படுகிறான்.

- பிற திணைகளில், போர், கல்வி, பொருள் ஈட்டல் போன்றவற்றிற்கு தலைவியைப் பிரிய வேண்டி இருப்பதால் பரத்தையை தேட இயலாத நிலை காணப்படுகின்றது. மருதத்தில் ஆடவரின் வாழ்வை செல்வ மிகுதியால் சீரழிக்கிறது. மற்ற திணைகளில் கடமையும் பொறுப்புணர்வும் ஆடவரின் வாழ்வியலை சீர்படுத்துகிறது.

- நெய்தல் திணையில், ஆடவர் தலைவியின் நலன் காக்கும் உணர்வினராகவும், தலைவியை அடைய மடலேறத் துணியும் துணிவுள்ளம் கொண்டவராகவும், பொருள் தேடுவதை விட தலைவியுடன் கூடி இன்புறும் விருப்பமுடையவராகவும், தோழி, பாங்கனின் நட்பை நாடுபவராகவும், விருந்தினை வாயிலாகப் பயன்படுத்தி ஊடலைத் தணிக்கும் உணர்வினராகவும் காணப்படுகின்றனர். தலைவிக்காக அவளது பெற்றோரைப் பணிந்தும், சார்ந்தும் வாழத் துணியும் பண்பினராகவும் இருந்ததை இப்பகுதியில் விளக்கப்பட்டுள்ளது.

- 'ஐந்திணைகளில் பிற ஆடவரின் கூற்றுகளில் வெளிப்படும் மன உணர்வுகள்' எனும் பகுதியில் தலைவனுக்குத் தோழனாய் விளங்கும் பாங்கன் கூற்றில், தலைவனின் மன உணர்வு ஓட்டத்தினை நன்கு உணரும் தன்மை கொண்டவராகவும் தலைவனை இடித்துரைத்து நேர்வழிப்படுத்தும் உள்ளத் துணிவுள்ளவர்களாகவும் காணப்படுகின்றனர். தலைவனின் உள்ள உணர்வை மதித்துப் புரிந்து கொண்டு உதவுபவராகவும் காணப்படுவதை இப்பகுதியில் அறியப்பட்டுள்ளது.

- தேர்ப்பாகன் கூற்றில், தேர்ப்பாகன் தலைவனின் உள்ளக்குறிப்பை அறிந்து செயல்படுபவனாகவும், தலைவன் தலைவியோடு இன்புற்று வாழ வாழ்த்தும் உணர்வு

கொண்டவனாகவும் பிறர் இன்பத்தில் இன்பம் கொள்பவனாகவும், பிறர் துன்பத்தில் துன்பம் கொள்பவனாகவும் காணப்படுகிறான்.

- இங்ஙனம் ஆடவர் பிறர் உள்ளக் குறிப்பை அறியும் ஆற்றல் படைத்தவராக இருந்ததோடு, விரைந்து செயலாற்றும் செயல் வீரர்களாகவும் இருந்தனர். உள்ளதை உள்ளவாறே உரைப்பவராகவும் காணப்படுகின்றனர். அருளற்றவர் மீது சீறும் உணர்வும், அருள் வேண்டியாரிடம் இரக்கவுணர்வு கொண்டவர்களாகவும் திகழ்கின்றனர், என்பது அறியப்பட்டுள்ளது.

- சான்றோர், தலைவன், தலைவி இருவரும் சேர்ந்து வாழ வேண்டும் என்ற விருப்புணர்வும், நல்வழிப்படுத்தும் நல்லுணர்வும் கொண்டு விளங்கியதை கண்டறியப்பட்டுள்ளது.

- ஐந்திணைகளில் இடம்பெற்றுள்ள பாங்கன், தேர்ப்பாகன், பாணன், கண்டோர், உழையோர் கூற்றுகளில், ஆடவர், தம்மிலும் மேலானவனாகத் தலைவன் இருந்த போதிலும், அஞ்சாமல் அவரிடம் தம் மன உணர்வை வெளிப்படுத்தும் உணர்வினராகக் காணப்படுகின்றனர் என்பதைக் கண்டறியப்பட்டுள்ளது. தலைவன் தன்னோடு தொடர்புடைய பிற ஆடவருடன் தனது உணர்வுகளை வெளிப்படுத்துபவனாகவும், அவர்களின் உதவியைப் பெற தயங்காதவனாகவும், அவர்களை மதித்து, நன்னெறியைப் பின்பற்றும் தன்மை நிறைந்தவனாகவும், தலைவியை அடைய வேண்டும் என்ற ஒரே நோக்கோடும் ஒத்த உணர்வுடன் தலைவன் இருந்ததை இவர்களின் கூற்றுவழி அறிய முடிகிறது.

- 'கைக்கிளைப் பெருந்திணையில் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வுகள்' எனும் இப்பகுதியில் கைக்கிளையில் அகம் என்பது தலைமக்களிருவரிடையேயும் காதல் தோன்றுவதற்கு அமைந்த தொடக்க நிலையில் இருவருள் ஒருவரிடத்தே மட்டும் தோன்றுவதை வெளிப்படுத்துகிறது. இக்கைக்கிளைத் தலைவனின் மனதில் முதலில் தோன்றுவதால், ஒருதலைக் காமம் என கருதலாம்.

- கைக்கிளையில் தலைவன், தலைவியின் அழகையும் பேதைப் பருவத்தினையும் கண்டு வியக்கும் உணர்வினனாகக் காணப்படுகிறான். தன் ஆருயிரை வௌவிக் கொண்டதாகவும், தான் அயர்வுற்று அல்லலுறுவதாகவும் தான் அடைந்த நோயினை, துன்ப உணர்வினை வெளிப்படுத்துபவனாகவும் காணப்படுகிறான்.

- தன் காதலுணர்வைத் தலைவியிடம் வெளிப்படுத்தியும் அவளிடமிருந்து ஒரு பதிலும் வராத நிலையில் ஆடவன் தன்னிடம் இருந்து தோன்றிய ஒன்றினை எண்ணித் தானே மகிழும் மன இயல்பு கொண்டவனாகக் காணப்படுகின்றான். மேலும் சொல்லெதிர் பெறா நிலையில் ஆடவனின் மனம் உளைச்சல் அடைந்து துன்பம் எய்தி வருந்தும் உணர்வினனாகக் காணப்படுகிறான்.

- தலைவியைப் பெற தன் வீர உணர்வை மறந்து மடலேறியும் தலைவிபால் பெற்ற துன்பத்தை பாடலாகப் பாடியும், தலைவி மீது கொண்ட காதலை வெளிப்படுத்தியும், அதனை அறியாத பருவத்தினளாகத் தலைவி இருப்பதைக் கண்டு வருந்துபவனாகவும் காணப்படுகின்றான்.

- கைக்கிளை, பெருந்திணை அகப்பாடல்களில் தலைவியை நினைந்து வருந்துபவனாகவும், சிறந்த வீரனாகவும் ஈகை செய்யும் புகழையும், பெருமையும் கொண்டவனாகக் காணப்படுகிறான். அதே வேளையில் அவனது பெருமையும் புகழும் கெடுமாறு பரத்தையை நாடிச் செல்லும் உணர்வினனாகக் காணப்படுகிறான். பரத்தையை நாடும் உணர்வு கொண்டவராக இருப்பினும் சான்றோரின் அறிவுரைப்படி தலைவியை அடையும் உணர்வினராகக் காணப்படுகிறான்.

- ‘புறத்திணைகளில் வெளிப்படும் ஆடவரின் மன உணர்வுகள்’ எனும் இவ்வியலில் புறத்திணையில் இடம் பெற்றுள்ள ஆடவர் தங்களது உணர்வுகளை வெளிப்படுத்திய விதத்தினைச் சங்க புறப்பாடல்கள் மூலம் சான்று காட்டப்பட்டுள்ளது. சங்க ஆடவர் போர் புரிதலைத் தொழிலாகவும், போர்ச் சாவையே புகழுக்குரியதாகவும் கருதி வாழ்ந்தனர். போரில் வீர உணர்வை, வெளிப்படுத்துதலைக் கடமையாகக் கொண்டிருந்தனர். இத்தகைய ஆடவர் பகைவரிடம் போரிட்டு மாண்ட வீரர்களுக்கு நடுகல் எடுக்கப்பட்டு தெய்வமாகப் போற்றப்பட்டனர் என்பதை அறிய முடிகிறது. மேலும் கொடை உணர்வு, புகழுணர்வு, உள்ளத்துணிவுணர்வு, நாட்டுப்பற்றுணர்வு, கடமை உணர்வு, பொறுப்புணர்வு கொண்டவராக விளங்கினர்.

- ஒப்பிலா வலிமையும் ஆற்றலும் நிறைந்து பாசறையில் இருப்பதை விரும்பும் உணர்வினர். ஆநிரைகளைக் கவர்ந்தும் அதனைக் கொடையாக அளித்தும், கள்ளுக்கு விலையாகக் கொடுத்தும் மகிழும் உணர்வினராகக் காணப்படுகின்றனர். ஆடவர் மண்ணாசை கொண்டவராகவும், பகைவரின் மீது வஞ்சினம் கொண்டவராகவும், அறப்போர் புரிபவராகவும் திகழ்ந்தனர். மண்ணாசை கொண்ட மன்னனின் செருக்கை அடக்கும் உணர்வினராகக் காணப்பட்டனர்.

- போரில் தோற்றால் நாணும் உணர்வும், தன்னைத்தானே இகழும் உணர்வினராயும் இருந்தனர். உயிருக்கு அஞ்சாத வீரவுணர்வு, நாட்டை வெல்லும் வேட்கை உணர்வும், ஈகையுணர்வும், பகைவர் தம் அச்சுறுத்தலுக்குத் தளராத மன உணர்வும் கொண்டவராக ஆடவர் திகழ்ந்தனர். தன் பெற்றோருக்குப் பெருமை சேர்ப்பவராகவும், சுற்றத்தைக் காக்கும் உணர்வு கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.

- நாட்டுக்காகவும் நாட்டு மக்களுக்காகவும் தன்னையே அர்ப்பணிக்கும் உணர்வு கொண்டும் போரில் புறமுதுகிடும் பெரியோரைக் காக்கும் பொறுப்புணர்வு கொண்டவராகவும் விளங்கினர். இரவலராக வரும் பாணர்களைக் காக்க வைக்காமல் அவர்க்கு வேண்டும் பரிசிலை அளிக்கும் உணர்வு கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.

- இரவலர்க்கு ஈயும் போது மென்மையாகவும் பகைவரிடம் போரிடும் போது வலிமையான நெஞ்சுடையவராகவும் வாழ்ந்தனர். புலவர்களின் புகழுரை கேட்டு தலை தாழ்ந்து பணிந்தும், அவர்தம் அறிவுரை கேட்டு மதிக்கும் உணர்வினராகவும் காணப்படுகின்றனர்.

- புலவரைப் பேணிக் காக்கும் உணர்வும், தமிழைப் போற்றிக் காக்கும் உணர்வும் வாழ்வியல் தத்துவங்களை உணர்ந்து வாழும் பண்பும் கொண்டவராகவும் காணப்படுகின்றனர். புலவர்கள், வஞ்சினம் கொண்ட மன்னர்களை அறத்துடன் போரிட புலவர்கள் வழி நடத்திச் சென்றனர்.

- தங்களை மதித்துப் போற்றும் அரசர்களைப் புகழ்ந்தும், தகுந்த அறிவுரைகளைக் கூறி கொடை அளிக்காத மன்னர்களுக்கு அதன் தேவையை உணர்த்தி கொடை உணர்வை வெளிக் கொணரும் இயல்பினராகவும் விளங்கினர். வறுமையில் வாடினாலும் தன்னை மதியாதாரிடம் இரத்தலை விரும்பாதவர்.

- அரசரிடம் பெற்ற பொருள்களைத் தன் சுற்றத்தாருக்கும் அளித்து வாழும் உணர்வினர். அரசர்களைப் போற்றிப் புகழுரைகள் கூறும் புலவர்கள் அவர்களின் தீச்செயல்களைக் கண்டித்து வலியுறுத்தும் துணிவுள்ளம் கொண்டு திகழ்ந்தனர்.

- சிலசொல்லி பல செய்யும் பேராளுமைத்திறன் கொண்டவராகக் காணப்படுகின்றனர்.

- புறத்தில் காலன் அணைய கடுஞ்சினத்தராக அகத்தில் காற்றிலும் தன்னியராகக் காணப்பட்டனர்.

- புறத்தில் ஆடவர் கடைக்கங்கலால் பலர் துஞ்சவும் தான் துஞ்சாத உயர்கொள்கையினராக இருந்தனர்.

- யானைக் கோட்டிடை வைத்தக் கவளம் போல் பரிசிலர் பரிசுபெறும்படி வரையாது வழங்கும் கொடை உணர்வினர்.

- இளமையில் வீரராகவும் சூரராகவும் திகழ்ந்தவர் முதுமையில் சிக்கித் தவிக்கும் உணர்வினராகவும் காணப்படுகின்றனர்.

- இருமிடை மிளைந்த சிறுசொல் பெரு மூதாளராக இளிவரலுக்குட்பட்டு கிடக்கும் முதிய ஆடவரையும் சங்க இலக்கியம் காட்டத் தவறவில்லை.

- உள வலியும் குன்றிய சாமானிய ஆடவனைக் காண முடிகிறது. ஆடவரின் அந்தந்தப் பருவத்து உணர்வுகள் குடும்பத்தாரால் நாட்டோரால் உரிய நேரத்தில் உரிய விதத்தில் பாதுகாக்கப்பட்டு நெறிப்படுத்தப்படுமேயானால் ஆடவர் சமுதாயம் உலகச் சமுதாயத்திற்கு முதுகெலும்பாக மூளையாக இதயமாக அமைந்து பெண் சமுதாயத்தை வளர்க்கும் வாழ்விக்கும் என்பது ஒருதலை.

- வாட்டும் வறுமையில் ஆட்பட்டாலும் வறுமையிலும் செம்மையினராகத் திகழ்ந்தனர். (புலவர்கள்)
- "எல்லோர்க்கும் கொடு மனை கிழவோயே" என அறிவுறுத்திய புலவர் நாளைக்கு வேண்டும் என பூட்டி வைக்காமல் எல்லோர்க்கும் கொடுக்கச் செய்யும் கொடையுணர்வு கொண்டவராகவும் திகழ்ந்தனர்.
- பீடில் மன்னர் புகழ்ச்சி வேண்டி இல்லாததை இருப்பதாக சொல்லாத நாவினர் ஆடவர்.
- "பாடுபெறு புலவன் பரிசிலன் வாடுநர் பெயர்தலின்" நாடு இழத்தலினும் நனி இன்னாது" என்று வருந்தி பாடுபெறு புலவரின் வாட்டம் கலையத்துடித்த உள்ளம் கொண்டவர் ஆடவர் (குமணன்).
- "தலைதனைக் கொண்டு போய் தம்பி கையிற் கொடுத்து விலைதனைப் பெறுவாய்" என தமிழுக்குத் தலைகொடுக்கத் துணிந்தவன் ஆடவன் (குமணன்)
- ஆதல் தன்னகத்தடக்கி வாழ்தல் வேண்டி அமிழ்தனைய நெல்லிக்கனியைத் தமிழ் வாழ அவ்வைக்கு அளித்தவன் ஆடவன். (அதியன்)
- சங்க கால ஆடவரின் கொடை உணர்வு தங்கள் மறுமை நோக்கியது அன்று; பிறர் வறுமை நோக்கியதாகும்.
- ஆடவர் வாழ்வில் பல்வேறு சூழல்களில் தம் உணர்வுகளைப் பெரும்பான்மை நேரடியாகவும், சிறுபான்மை மறைமுகமாகவும் வெளிப்படுத்தியுள்ளனர் என அறியமுடிகிறது.
- சங்க கால ஆடவரின் உணர்வுகள் அக்காலச் சமுதாயத்தவரால், பெரிதும் மதிக்கப்பட்டு போற்றப்பட்டதை அறியமுடிகிறது.
- ஆடவர் தாங்களாகவே விரும்பி கடமை ஆற்றினர் என அறிய முடிகிறது. தங்கள் உரிமைகள் மறக்கப்பட்ட போது போராடி அவற்றைப் பெற்றனர் என்பதை அறிய முடிகிறது.
- ஆடவர், தம் உணர்வுகளுக்கு மட்டுமல்லாமல் அகத்தில் தலைவியின் உணர்வுக்கும், புறத்தில் சமுதாயத்தவர் உணர்வுகளுக்கும் உரிய மதிப்புக் கொடுத்தனர் என்பதை அறிய முடிகிறது.
- ஆடவர் குடும்பப் பொறுப்புணர்வு மிக்கவர்களாத் திகழ்ந்ததோடு பிள்ளைப் பாச உணர்வு கொண்டவராகவும் காணப்படுகின்றனர்.
- ஆடவர் தம் முன்னோர் பெருமையை முயன்று காக்கும் தன்மையராக விளங்கினர்.
- காதல் உணர்வும், கடமையுணர்வும் ஒரு இணை கோடுகளாக ஆடவரிடம் காணப்படுவதை எடுத்துரைக்கின்றனர்.
- போர்க்களத்தில் அறநெறிப்படி போர் புரிந்த அறவுணர்வுகொண்டவராக ஆடவர் காணப்படுகின்றனர்.

- நட்புணர்வு, புலவர்கள் மதித்துப் போற்றும் உணர்வையும் ஒருங்கே கொண்டவராகக் காணப்படுகின்றனர். அக்கால ஆடவர் மான உணர்வு மிக்கவராகத் திகழ்ந்தனர்.

- பன்முக உணர்வுக் கொண்டவர்களாக இருந்த ஆடவர் மனைவி, பெற்றோர், குழந்தை, தமையன் போன்ற குடும்ப உறுப்பினரிடம் பழகும் போது அவரவர்க்குத் தேவையான உணர்வுகளை வெளிப்படுத்தி மீண்டும் தன்னிலைக்குத் திரும்பும் உணர்வு மீட்சித்திறன் கொண்டவர்களாகக் காணப்படுகின்றனர்.

- அவரவர்க்கு தக்க வகையில் தம் உணர்வுகளை மாற்றிக்கொள்வதோடு பாணன், புலவர், தேர்ப்பாகன், மக்கள், பகைவர் போன்ற ஒவ்வொரு நாளும் தான் சந்திக்கின்ற வேளையில் அச்சூழலுக்கு ஏற்ப, அவரவர்க்கேற்றவாறு தனது உணர்வுகளைப் பிறர் ஏற்றும் வகையில் வெளிப்படுத்தும் உணர்வு முதிர்ச்சி பெற்றவராக விளங்குவதோடு மீண்டும் தனது இயல்பு நிலைக்குத் திரும்பும் உணர்வாளுநராகவும் (Upholding Emotions) காணப்பட்டனர்.

- எனவேதான் அவர்களால் இல்லத்தலைவனாகவும் இருக்கமுடிந்தது புறத்திலும் தலைமைப் பொறுப்பிலும் இருக்கமுடிந்தது. அகத்தில் தன்னால் விரும்பப்படுகின்ற தலைவியைக்காட்டிலும் தலைவியால் விரும்பும் தலைவனாகக் காணப்படுகின்றனர். புறத்தில் சமுதாயம் விரும்பும் தலைவனாக உயர்ந்து விளங்க முடிந்ததை அறியமுடிகிறது.

- இவ்வாய்வின் முடிவாக, ஆடவன் வாழ்க்கைப் போராட்டத்தில் நிலைத்து நிற்கும் போராட்ட உணர்வு, விழுமிய உணர்வு போன்ற உணர்வுகள் காரணமாக பரிணாமத்தில் நிலைபேறுடைய இடத்தினைப் பெறுகிறான். இந்நிலை ஆடவர் சமுதாயத்தில் இன்றளவும் நிலைத்து நிற்கின்றது. அவை கால வெள்ளத்தில் கரைந்து போகாத உணர்வுகள், வெள்ளத்தை எதிர்க்கும் உணர்வுகளாக வலிமை பெற்றவை வாழ்வு பெறும்' என்பதற்கிணங்க ஆடவரை வழிநடத்திச் செல்கிறது.

- ஆடவர், பெண்டிரைப் போல் உணர்வுகள், ஆசைகள் போன்றவை உள்ளவரே என்பதைச் சமுதாயம் உணர வேண்டும். ஆடவர்கள் எங்கிருந்தோ குதித்தவர் அல்ல. நம்மோடு சேர்ந்து வாழ்பவர்கள். அவர்களுக்கும் தேவைகள் உண்டு. அத்தேவையைத் தாமே நிறைவு செய்வதோடு பிறரின் உதவியை எதிர்பார்க்கும் நிலையும் உண்டு என்பதை இவ்வாய்வு உணர்த்துகின்றது.

- ஆடவரின் உணர்வுகள் மறுக்கப்படும் போது 'பெருமையும் உரனும் ஆடூஉ மேன' என்று கூறி மன இறுக்கம், அழுத்தம், சிதறலுக்கும் உள்ளாக நேரும் என்று ஆய்வாளர் உணர்த்த விரும்புகிறார். அவர்களின் உணர்வுகளும் பெரும்பான்மை பொதுவானவை. அவை போற்றப்படவும் காக்கப்படவும் வேண்டும் என்பதைச் சமுதாயம் உணரவேண்டும்.

- பெருமை கொண்டவன் தான் ஆண் எனினும் அப்பெருமைக்கும் பெருமை சேர்க்க பெண்மை தேவைப்படுகிறது. உரன் கொண்டவன் தான் ஆண் எனினும் அந்த உரன் உடையாமல் சிதையாமல் பாதுகாக்கப்பட வேண்டுமானால் அவனது உணர்வுகள் பாதுகாக்கப்பட வேண்டும் என்று ஆய்வாளர் சுட்டிக்காட்ட விரும்புகிறார்.

- ஆண் தன் மனம் விட்டு பேசும் போது தான் அவனது பிரச்சனைகளுக்கு முடிவு ஏற்படுகிறது. உதவி செய்யும் பெருந்தலைவனாக இருந்தாலும் உதவி பெறுபவனாகவும் இருந்துள்ளான். ஆடவருக்குத் தேவை இருக்காது என எண்ணி உதாசீனப்படுத்தும் சமுதாயம் இதனை உணர வேண்டும்.

- அகவாழ்வில் மட்டுமல்லாமல் புறவாழ்விலும் தன்மன உணர்வினை ஆடவர் வெளிப்படுத்தினால் சமுதாயத்தில் பல பிரச்சனைகள் முடிவுக்கு வரும் என்பதை ஆய்வாளர் நம்புகிறார்.

- ஆடவர், பரிந்தோடி வந்து உதவுபவர்களாகவும், தங்கள் உணர்வுகளை வெளிப்படுத்துபவர்களாகவும் கலந்து பேசுபவர்களாகவும் உணர்வுகளைப் பகிர்ந்து கொள்பவராகவும் இருந்தால் இன்று உளவியல் சார்பான பிரச்சனைகள், மன இறுக்கம், இரத்த அழுத்தம் போன்றவை குறைந்து போகும் என்று மருத்துவர்கள் பரிந்துரைக்கின்றனர்.

- ஆண்களும் பெண்களைப் போலவே அனைத்து உணர்வுகளும் நிரம்பியவர்களே. எனினும், **"குணம்நாடி குற்றமும் நாடி அவற்றுள் மிகைநாடி மிக்க கொளல்"** என்பதற்கிணங்க பரத்தையற் சென்ற குற்றத்தை ஒதுக்கி அன்னாரிடம் காணப்பட்ட வீரம், ஈரம், காதல், காமம் போன்ற குணங்களையே சங்கத் தொகுப்புப் பாடல்கள் எடுத்துரைக்கின்றன.

- எட்டுத் தொகைப் பாடல்கள் முழுவதையும் பரக்க ஆராய்ந்ததில் சங்க கால ஆடவர் இன்றையச் சமுதாய ஆடவரைப் போல ஏக்கங்கள், வேட்கைகள், தவிப்புகள் போன்ற உணர்வுகளைக் கொண்டவர்களாகவே காணப்படுகின்றனர்.

- அதுமட்டுமல்லாமல், பெண்கள் உள்ளத்தில் தோன்றுகின்ற ஏக்கங்களுக்கும் எதிர்பார்ப்புகளுக்கும் எள்ளளவும் குறைந்ததில்லை ஆடவரின் ஏக்கங்களும், எதிர்பார்ப்புகளும் என்பதை அறியமுடிகிறது. எனவே ஆடவரை உடல்வலிமை ஒன்றை மட்டுமே கருத்தில் கொண்டு அவர்களை வெகு உயரத்தில் தூக்கி நிறுத்திவிட்டு அவர்களின் அடிப்படையான சாதாரண உணர்வுகளைப் புறக்கணிப்பது ஏற்புடையது அல்ல. அவர்களின் உணர்வுகள் உணரப்பட வேண்டியவை, உணர்த்தப்பட வேண்டியவை, தணிக்கப்பட வேண்டியவை, தட்டிக் கொடுக்கப்பட வேண்டியவை என்பதை சமுதாயத்திற்கு உணர்த்தும் வகையில் இவ்வாய்வு அமைந்துள்ளது.

- அவ்வகையில் சமுதாயத்தார், குடும்பத்தார் ஆடவரின் உணர்வுகளைப் புரிந்து கொண்டு நடந்தால்; அவர்களும் சாதாரணமான மனிதர்கள்தான். அவர்களுக்கும் உணர்ச்சிகள் உண்டு என்பதைப் புரிந்து கொண்டு நடந்தால் குடும்பம் சிதைந்து சீரழிந்து போகாது, சமுதாயம் தடுமாறியும் தடம் மாறியும் போகாது, பெண்களைக் காட்டிலும் ஆண்களுக்கே பெருமளவில் ஏற்படும் இதயம் தொடர்பான நோய்கள், நரம்பியல் தொடர்பான நோய்கள், உளவியல் சார்பான நோய்கள் போன்றவை பெருமளவில் குறையும். வீடும் நாடும் நன்னிலை எய்தும்.

- ஆடவர் உளநிலை, உணர்ச்சி நிலை சீரடைந்தால் பெண்களின் பிரச்சனைகள் பெருமளவு தீர்ந்துவிடும். இத்தகைய உணர்வு சீரழிவிற்கு உள்ளான ஆடவரே, புகைப்பழக்கம், போதைப்பழக்கத்திற்கு உள்ளாகி மனைவியையும், மக்களையும் மனம் மடியச் செய்கின்றனர். எனவே ஆடவரின் உணர்வு நிலைகளைப் புரிந்து கொள்ளுதல் என்ற புரிதல் அன்னார் இளம் சிறுவர்களாக இருக்கும் நிலையிலிருந்தே குடும்பத்தாரிடம் ஏற்பட்டால் ஆடவர் சமுதாயம் தடம் மாறியும் தடுமாறியும் போகாது என ஆய்வாளர் நம்புகிறார்.

- எட்டுத்தொகைப் பாடல்களில் விதிவிலக்காக பரத்தமை ஒழுக்கம், பெண்ணடிமை குறித்த பாடல்களில் பெண்களைப் போற்றிய உணர்வுகளே காணப்படுகின்றன. இத்தகைய விதிவிலக்குகளுக்குச் சமாதானம் கூற முற்படவில்லை. அவை தவிர்க்கப்பட வேண்டும் என்பதால்தான் பரத்தமை சாடிய வள்ளுவர் போன்ற ஆண்களும் உள்ளனர். இத்தகைய உணர்வுகள் ஆடவரிடம் மேலோங்கி இருந்தாலும் உடல்வலிமையையும் பெற்றிருத்தல், தலைமைப் பொறுப்பினை தக்க வைத்துக் கொள்ளும் திறமை போன்றவை பெற்றிருந்தனர்.

- தன்னுடைய உரனை வீட்டுயர்வுக்கும் நாட்டுயர்வுக்கும் காணிக்கையாகப் பயன்படுத்தினர் என்பதையும் அறிய முடிகிறது. சங்க இலக்கியப் பாடல்கள், படிப்பவர் உள்ளத்தில் ஆடவன் என்பவன் சாமானிய உலகில் உள்ள மற்ற மனிதரைக் காட்டிலும் மீத்திறன் மனிதனாகவும், எல்லாவகையிலும் வேறுபட்டவன் என்ற எண்ணம் தோன்றும். மேலும் அத்தகு தன்மையான ஆடவனுக்குத் தலைவியும் பிறரும் கட்டுப்பட்டு அடங்கி வாழ்தல் முறையே என்றும் அப்பாடல்கள் நியாயப்படுத்தும். அவ்வாடவனின் சொற்படி இல்லத்தில் தலைவியும் புறத்தில் பிறரும் அடங்கியே நடத்தல் வேண்டும் என்றும் எண்ணத் தோன்றும்.

- ஆடவன் என்பவன் அடக்கி ஆளப்பிறந்தவன், பெண் என்பவள் அடங்கிப் போக பிறந்தவள் என்ற எண்ணம் சுவைஞர் மனதில் வேரூன்றுவதோடு பெண்ணின் உள்ளத்திலும் ஆழமாகப் பதிந்துவிடும். இங்ஙனம் ஆடவனை உயர்த்திப் பாடியதால் அவன் பிறருக்கு அந்நியனாகிப் போவதோடு பிறரும் அவனுக்கு அந்நியராகிப் போய்விடுகின்றனர்.

- ஆடவன், பெண்ணைக் காட்டிலும் உடல் அளவில் வலிமை பெற்றிருந்தாலும் பெண்ணைப் போல் உணர்வுகளுக்கு உரியவன். அவனும் சில வேளைகளில் அடங்கிப் போவதுண்டு. உள்ளம் அழிந்து நொந்து போவதும் உண்டு என்ற மறுபார்வைதான் இந்த ஆய்வாகும். மனைவியைக் காக்கவும், சமுதாயத்தைக் காக்கவும் பிறந்தவர் ஆடவர். எனினும் பெண்டிரால் ஆடவர் காக்கப்பட வேண்டும் என்பதும் அவர்களின் உணர்வுகள், சமுதாயத்தால் காக்கப்பட வேண்டியதையும், போற்றப்பட வேண்டியதையும் இவ்வாய்வு இனங்காட்டுகிறது.

- துன்பத்தில் துடிப்பவனாகவும் இன்பத்தில் திளைப்பவனாகவும், பிறர் கலங்கக் கண்டு கலங்குபவனாகவும், பிறர் புலம்பக் கண்டு புலம்புபவனாகவும் எங்கிருந்தாவது தன் இன்னல் தீர உதவி கிடைக்குமா என்று ஏங்குபவனாகவும், இடுக்கனுற்ற நேரங்களில் தவித்துத் திகைப்பவனாகவும் நெஞ்சொடு புலம்புகின்றவனுமாக பெண்களை ஒத்த அனைத்து உணர்ச்சிகளையும் ஒத்தவராக சங்கத் தொகைப் பாடல்கள் ஆடவரை வெளிப்படுத்திக் காட்டுகின்றன. இது தொகை நூல்கள் காட்டும் ஆடவரின் உணர்வு நிலைகளின் ஒரு பக்கமாகும்.

- அதே தொகை நூல்களில் ஆடவரின் மறுபக்கமாக புலி நிகர்த்த வீரம், கிலியை உதறித் தள்ளும் உள்ளம், பிறரிடம் கெஞ்சுதல் இல்லாத தீரம், வினை செய்ய விழையும்–விரையும் உள்ளம், வினை முடித்து வெற்றியோடு திரும்பும் உள்ளம், பகைவர்க்கு ஞாயிறு போன்றவனாகவும் நண்பர்களுக்கு திங்கள் போன்றவனாகவும் திகழும் தன்மை, முடியாது என்ற சொல்லே தன் அகராதியில் இல்லை என்று எண்ணுமளவிற்கு எந்த வினையையும் முடித்துக் காட்டும் இயல்பு, 'செய் அல்லது செத்துமடி', 'அடங்கு அல்லது அடக்கிவிடுவேன்' என்பன போன்ற உணர்வுகள் தொகை நூல்கள் காட்டுகின்ற ஆடவரின் மறுபக்கமாகும். இந்த ஆய்வு ஆடவரின் இருபக்கத்தையும் ஒப்ப நோக்கிக் காணும் வகையில் அமைகிறது.

- ஆடவரின் உணர்வுகள் குடும்பத்தினராலும் சமுதாயத்தாலும் முறையாக சரியாகப் போற்றப்பட வேண்டியவையே என்ற கருத்தை முன்வைப்பதோடு எந்த வகையிலும் சமுதாயத்தின் மறுபாதியாகிய பெண்ணிணத்திற்குச் சமமான இனமே இந்த ஆணினம் என்பதை எட்டுத்தொகைப் பாடல்கள் தெள்ளத்தெளிவாகக் காட்டுகின்றன. பெண்கள் எப்படி போற்றப்பட வேண்டுமோ அதுபோல் ஆண்களும் போற்றப்பட வேண்டும்.

- ஆடவர் எங்ஙனம் உயர்த்தப் பட்டிருக்கிறார்களோ அதுபோல் பெண்டிரும் உயர்த்தப்பட வேண்டும். ஆண்கள் எங்ஙனம் மதிக்கப்பட்டிருக்கின்றனரோ அதுபோல் பெண்களும் மதிக்கப்பட வேண்டும். உணர்வளவில் பெண்களோடு ஆண்களும் சரிநிகர் சமானமானவர்களே என்பதை இவ்வாய்வு முன் வைக்கிறது.

- சங்க காலத்தில் ஆடவரின் அனைத்து உணர்வுகளும் குடும்பத்தவரால் சமுதாயத்தவரால் இனங்காணப்பட்டு போற்றப்பட்டன. எனவே அவர்களிடம்

வேண்டாத மனமுறிவோ, மன இறுக்கமோ, ஏற்படவில்லை. அப்படியே ஏற்பட்டாலும் புலவர்களின் அறவுரைகள் அவற்றை மாற்றிப் போட்டன. மீண்டும் சாதாரண மனித உணர்வு நிலைக்கு அவர்களை மீட்டு வந்தன என்று பாடல்கள் வழி அறியமுடிகின்றது.

- எனவே, கடியப்பட வேண்டிய பரத்தமை ஒழுக்கத்தைத் தவிர அனைத்து நிலைகளிலும் அன்றைய ஆடவர் (சங்க கால) இன்றைய ஆடவர்க்கு வழிகாட்டிகளாக அமைகின்றனர் என்று ஆய்வாளர் கருதுகின்றார்.

- இதை உணர்ந்து நடந்தால் மனித உணர்வுகள் முழுமையாக புரிந்து கொள்ளாததால் ஏற்படுகின்ற மன இறுக்கம், மனமுறிவு, மன அழுத்தம் போன்ற உளம் சார்ந்த நோய்கள் மனித இனத்தை அணுகாது. அதிலும் குறிப்பாக ஆடவர் சமுதாயத்தை அணுகாது.

- வீரம், காதல் என்ற இரண்டு உணர்வுகளைத் தவிர ஆடவரிடம் உள்ள பிற உணர்வுகள் காலம் காலமாக குடும்பத்தால், சமுதாயத்தால் இருட்டடிப்பு செய்யப்படுகின்றன. இதனால் ஆடவரின் சாதாரண அடிப்படை உணர்வுகள் கூட புறக்கணிக்கப்படுகின்றன. கண்டு கொள்ளப்படாமல் விடப்படுகின்றன. இதனால் வீட்டிலும் சமுதாயத்திலும் ஒரு ஆண்மகனுக்கு கிடைக்க வேண்டிய தேவைகள் நிராகரிக்கப்படுகின்றன.

- இத்தகைய உணர்வு நிராகரிப்பு தொடர்ந்து நீடித்தால் அதுவே அன்னார் தம் உள்ளத்தில் மன அழுத்தமாக, மன முறிவாக உருவெடுக்கும் அல்லது அடுத்த பாலினத்தின் மேல் அடக்குமுறையாக வெளிப்படும். இந்த உணர்வுகள் போற்றிக் காக்கப்படுமானால் உடலும் உள்ளமும் உரம் மிக்க ஆடவர் உருவாவர்.

- சமுதாயத்தில், இளையவர், சளைத்தவர், உயர்ந்தோர், வழிபடுதற்குரியோர் என்ற வேறுபாடு நீங்கும். ஆடவர் இனத்தின் மேல் சமுதாயம் கொடுக்கின்ற அதிகப்படியான மதிப்பானது அவர்களின் சாதாரண உணர்வுகளைக் கூட வெளிக்காட்டவிடாமல் அவர்களைக் கட்டுப்படுத்தும் சிறைக் கம்பிகளாகி விடுகின்றன என்று ஆய்வாளர் நம்புகிறார்.

- ஈராயிரம் ஆண்டுகள் கடந்த நிலையிலும் தமிழ்ச் சமுதாயத்தில் வாழையடி வாழையென தொடர்ந்து வருகின்ற ஆடவர் இனம், வீரவுணர்வும், ஈர உணர்வும், அறிவுணர்வும், அறவுணர்வும் கொண்டிருப்பது வெள்ளிடை மலை. ஆசை, ஏக்கம், தவிப்பு, எதிர்பார்ப்பு, கோபம் போன்ற எல்லா உணர்வுகளும் பெண்களைப்போல் ஆடவருக்கும் உரியவை. அவ்வுணர்வுகள் முறையாக முழுமையாக குடும்பத்தவரால், சமுதாயத்தால் இனங்காணப்பட்டு ஆடவர் இனம் பராமரிக்கப்படவேண்டும் என்று ஆய்வாளர் தம் வேட்கையை வெளிப்படுத்துவதோடு இயல்பு இகழ்ந்தவன் தலைவன் என்பதை விட இயல்பான உணர்வுகளுக்கு உட்பட்டவனே தலைவன் என்பதைச்

சமுதாயம் ஏற்றுக்கொண்டால் சங்க காலத்தைப் போன்ற உடலும் உள்ளமும் உறுதி வாய்ந்த உரம் பெற்ற ஆடவர் சமுதாயத்தைத் தமிழகம் தொடர்ந்து பெற்று உலகில் உயரும். வாழ்க ஆடவர் இனம்! வளர்க அவர்தம் உணர்வுகள்!.

**வருங்கால ஆய்வாளர்களுக்கான ஆய்வுக் களன்கள்**

- சங்க இலக்கியத்தில் இடம்பெற்றுள்ள பெண்டிரின் கூற்றுகளில் வெளிப்படும் ஆடவரின் உணர்வுகள் குறித்து ஆராயலாம்.
- பத்துப்பாட்டில் வெளிப்படும் ஆடவரின் உணர்வுகள் குறித்து ஆராயலாம்.
- ஆற்றுப்படை நூல்களில் ஆடவரின் உணர்வுகள் குறித்து ஆராயலாம்.
- சங்க இலக்கியங்களில் இடம்பெற்றுள்ள ஆடவர் பெண்டிர் கூற்றுகளை ஒப்பிடும் வகையில் ஆராயலாம்.
- இங்ஙனம் மேற்கண்ட களன்களில் ஆய்வு மேற்கொள்ளப்பட்டால் ஆடவரின் அனைத்து உணர்வுகளும், பெண்டிரிடம் அவர்களுக்கு கிடைத்த மதிப்பும் வெளிக்கொணர வாய்ப்பாக அமையும் என்பதை உறுதியாக நம்பலாம். ஆடவர், தங்கள் உணர்வுகள் மதிக்கப்படும் நிலைக்கு உயர்த்தப்படும்போது அவர்கள் உள்ளம் உவகை கொள்ளும் என்பது திண்ணம்.

